ய், அந்தரிக்ஷாதிலோகங்களுக்குக் கீழ்லோகமாகிய பூலோகத்திலிருப்பவனாயிருக்கிற, ஜரைமுதலியவையோடு கூடியமனுஷ்யன், எப்படி நீசொல்லியவண்ணம், அவிவேகிகளால் வேண்டப்படுகிற பிள்ளை, பொருள், பொன் முதலிய அநித்யங்களைவிரும்புவான், பிள்ளைமுதலியவைகளைக்காட்டிலும் சிறந்ததாய், அடையக்கூடாததாயிருக்கிற உத்தமபுருஷார்த்தத்தையடைய விரும்பினவன், அவைகளிலெப்படி ஆஸ்தையுடையவனாவான். இவைகளஸாரங்களென்றறிந்த ஒருவனும், இவைகளிலாசையுடையவனாகான். உலகத்திலுள்ள எல்லோரும் மேலானவையையே விரும்புகிறார்களன்றோ; ஆகையால், பிள்ளை, மணம், என்று, எனக்கு ஆசைகாட்டவேண்டாம். மேலும், அப்ஸரஸ்ஸுக்களின், காந்திபோகஸந்தோஷங்கள், நிலையில்லாத அநித்யங்களென்றறிந்த எந்தவிவேகி, அத்யல்பமான ப்ராணனை விரும்புவான்.

ரா-ஹா—இன்னமும் நசிகேதஸ்ஸு சொல்லுகிறான்:—ஓய்யமதேவா முக்தர்கள் ஜராமரணங்களின்றி சுகமாய்வாழ்வதையும், இங்குள்ளோர் ஜராமரணங்களால் துன்பப்படுகையையுமாராய்ந்தறிந்தவன், அநித்யங்களான அப்ஸரஃப்ரப்ருதிவிஷயபோகங்களிலெப்படி விருப்பமுடையவனாவான். மேலும், "ஷூதி த்வண்ணூ" என்றுகொண்டாடப்படுகிற அப்ராக்ருததிவ்யமங்கள விக்ரகத்தையும் அப்படிப்பட்ட விக்ரஹாநுபவத்தாலுண்டாகிற போகஸந்தோஷங்களையும் நிரூபித்தறிந்தவன், அத்யல்பமான ப்ராணனில் ஆசையுடையவனாவான்,

உகூ. யஸ்மிந்நிதம் விசிகித்ஸந்தி ம்ருத்யோ யத்ஸாம்பராயே மஹதி ப்ரூஹி நஸ்தத் | யோ(அ)யம் வரோ கூடமநுப்ரவிஷ்டோ நாந்யம் தஸ்மாந் நசிகேதா வ்ருணீதே ||

౨౯. యస్మిన్నిదం విచికిత్సంతి మృత్యో యత్సాంపరాయే మహతి బ్రూహి నస్తత్ ।
యోऽయం వరో గూఢమనుప్రవిష్టో నాన్యం తస్మాన్నచికేతా వృణీతే ॥

(ப-ம்) ம்ருத்யோ-ஓயமதேவா, மஹதி-பெரியதான, ஸாம்பராயே-பரலோகத்தில், யஸ்மிந்-எந்தமோக்ஷமடைந்த ஆத்மஸ்வரூபவிஷயத்தில், யதிதம்-யாதொரு என்னால் கேழ்கப்பட்ட விஷயத்தைப்பற்றி, விசிகித்ஸந்தி-ஸந்தேகப்படுகிறார்களோ, தத்-அந்தவிஷயத்தை, ந:-என்பொருட்டு, ப்ரூஹி-சொல்லும், யோ(அ)யம்வர:-யாதொருவரமானது, கூடம்-அதிகாகஸ்யத்தை, அநுப்ரவிஷ்ட:-அடைந்திருக்கிறதோ, தஸ்மாத்-அத்தைக் காட்டிலும், அந்யம்-வேறான, வரம்-வரத்தை, நசிகேதா:-நசிகேதஸ்ஸானவர், நவ்ருணீதே-வரிக்கவில்லை.

ஸூ-ஹா.—ஓய்யமதேவனே, நான்கீழ்ச்சொல்லியபடிமற்றஎல்லாவிஷயங்களுமுபயோகமில்லாத அநித்தியப்பொருள்களாகையால், அவைகளையிட்டு, என்னைவஞ்சியாமல், என்னால் "யோ(அ)யம்வரோ" என்கிற ச்லோகததில் கேழ்க்கப்பட்ட வரத்தை எனக்குத்தாரும். இவ்வாத்மா ப்ரேதனாகிய பிறகு, உளனோ இலனோவென்றுண்டாகிய ஸம்சயம் நீங்கும்படி, மிகவுமுயர்ந்ததாகிய பரலோக ஸுகத்தையடைவதற்கு, இவ்வாத்ம ஸ்வரூபத்தினுண்மையை வெளியாக்கும். இப்படி நசிகேதஸ்ஸு சொன்னான். இக்கருத்து, அவனுக்கு உண்மையாய்பிறந்தது. இதனாலும், பலராலும் கேட்டறியக்கூடாத ஆத்மஸ்வரூபத்தையே கேழக்க விரும்பினபடியாலும், அவிவேகி மோசம்போகிற அநித்தியமான பொருள் முதலியவற்றில் நெஞ்சு கொஞ்சமும்

செல்லாமையாலும், இந்த நசிகேதஸ்ஸைப்போன்ற முமுக்ஷு ஒருவருமில்லை என்று, ச்ருதி, நசிகேதஸ்ஸைக் கொண்டாடியிருக்கிறது.

ரா-பா.—இந்த ச்லோகத்தில் முன்னயிரண்டும் நசிகேதஸ்ஸால் சொல்லப்பட்டது. பின்னடி இரண்டும் வேதபுருஷனால் சொல்லப்பட்டது. பெரியதாகிய பரலோகத்திலிருக்கிற யாதொரு மோக்ஷமடைந்த ஆத்மஸ்வரூபவிஷயத்தில் ஸந்தேகப்படுகிறார்களோ; அதையே உனக்குச்சொல்லும். எது மிகவுமுள்பொருளாகிய ஆத்மஸ்வரூபத்தைப்பற்றியிருக்கிறதோ; அதைவிட வேறுவரத்தை, நசிகேதஸ்ஸு வேண்டிக்கொள்ளவில்லை,

கடோபநிஷத் முதல் அத்தியாயம் முதல்வல்லி முடிந்தது.

ஸ்ரீ த்விதீயவல்லீ ப்ராரம்ப:.

க. அந்யச்ச்ரேயோऽந்யதுதைவ ப்ரேயஸ்தே உபே நாநார்த்தே புருஷம் ஸிநீத: । தயோ: ச்ரேய ஆததாநஸ்ய ஸாது பவதி ஹீயதேऽர்த்தாத்ய உ ப்ரேயோ வ்ருணீதே ॥

౧. అన్యచ్ఛ్రేయోన్యదుతైవ ప్రేయస్తే ఉభే నానార్థే పురుషగ్ం సినీతః |
తయోశ్శ్రేయ ఆదదానస్య సాధు భవతి హీయతేర్థాద్య ఉ ప్రేయో వృణీతే ॥

(ப-ம்) ச்ரேய:-உத்தமசுபமானது, அந்யத்-வேறு, ப்ரேய: - ப்ரியமானது, அந்யதுதைவ-வேறுதான், தே உபே-அவையிரண்டும், நாநார்த்தே-வெவ்வேறு ப்ரயோஜநத்தையுடையனவாய்க்கொண்டு, புருஷம்-புருஷனை, ஸிநீத:-கட்டுகின்றன, தயோ:-அவைகளுக்குள், ச்ரேய:-உத்தமசுபத்தை, ஆததாநஸ்ய-கிரகிப்பவனுக்கு, ஸாது - நன்மையானது, பவதி-உண்டாகிறது. ய:உ-யாதொருவன், ப்ரேய:-ப்ரியத்தை, வ்ருணீதே-விரும்புகிறானோ; (ஸ:-அவன்,) அர்த்தாத்-பிரயோஜநத்தில் நின்றும், ஹீயதே-நீங்கினவனாகிறான்.

ரங்-பா.—சிஷ்யனைப்பரீக்ஷித்து, வித்யாயோக்யதையைத் தெரிந்துகொண்டு, யமன் சொல்லுகிறான். நிச்ரேயஸமென்னப்படுகிற ச்ரேயஸ்ஸு வேறு; ப்ரியதரமென்னப்படுகிற ப்ரேயஸ்ஸு வேறு; இவ்விரண்டும் பின்ன ப்ரயோஜநங்கள். வர்ணாச்ரம தர்மங்களோடு கூடியிருக்கு மதிகாரமுள்ள புருஷனை, இவைகள் கட்டுகின்றன. அதாவது, வித்யா வித்யா ரூபங்களாயிருக்கிற வவைகளாலே, புருஷன், தங்களைப்பெற முயலும்படி ஏவப்படுகிறானென்கை. ச்ரேயஸ்ஸு ப்ரேயஸ்ஸு என்று சொல்லப்படுகிற விவையிரண்டிலுமன்றோ; அப்யுதயம், அம்ருதத்வம், என்று சொல்லப்படுகிற ப்ரயோஜநங்களை விரும்பினவன் ப்ரவர்த்திக்கிறான். ஆகையால் எல்லாப் புருஷர்களும், அவைகளால், தங்களைப்பெற முயன்று நடக்கும்படி கட்டப்பட்டார்களென்கிறது. இவ்விரண்டும், வெவ்வேறு ப்ரயோஜநங்களையுடைத்தாயிருந்தாலும், வித்யை, அவித்யை, உருவங்களாகையால் விருத்தங்களாயிருப்பதுபற்றி, ஒன்றைவிட்டல்லது, மற்றொன்றை யநுஷ்டிப்பது, ஒருபுருஷனால் கூடாதானதால், அவைகளிலொன்றாகிய அவித்யாரூபமான ப்ரேயஸ்ஸைவிட்டு, வித்யாரூபமான ச்ரேயஸ்

ஸை விரும்பிக்கொண்டவனுக்கு, மிகுந்த சுபமுண்டாகிறது. யாதொருவன், வித்யாரூபமான ச்ரேயஸ்ஸைவிட்டு, அவித்யாரூபமான ப்ரேயஸ்ஸை விரும்பிக்கொள்ளுகிறானோ; அப்படிப்பட்ட புத்தி ஆலோசனையில்லாதமூடனானவன், பாரமார்திகமாய், நித்யமாய், ஸுகஸ்வரூபமாயிருக்கிற உத்தம புருஷார்த்தத்தில் நின்றும் நீங்கினவனாகிறான் அத்தை யிழந்தவனாகிறானென்றபடி.

ஸா-ஹா.—இனியிப்படி நல்விவேகமுடைய சிஷ்யனாகிய நசிகேதஸ்ஸைக்கண்டு, பலவாறாய் அவன் நெஞ்சைப்பரீக்ஷித்து, இவனுக்கு, மோக்ஷத்தில், மிகவும்ஸ்திரமான விருப்பமுண்டாயிருக்கிறதென்று நிச்சயித்து, இவனுக்கு தத்வோபதேசம்பண்ணத் தகுமென்றெண்ணி, இவனுக்கு மோக்ஷத்தில் மிகவும் ஸ்திரமான விருப்பமுண்டானதைப்பற்றி, யமனிவனை விசேஷமாய்க்கொண்டாடுகிறான். மிகவும் சிறந்த மோக்ஷமார்க்கம் வேறு: ப்ரியமான போகமார்க்கம் வேறு, இவ்விரண்டும், புருஷனை, தந்தம்வழியிலிழுத்துக்கொள்ளும் தன்மையுள்ளன. இவ்விரண்டும் பிந்நப்ரயோஜநங்கள். இவ்விரண்டினுள், மோக்ஷமார்க்கத்தை விரும்பிக்கொள்ளுகிறவனுக்கு, மிகுந்த நன்மையுண்டாகிறது, யாதொருவன் போகத்தை விரும்பிக்கொள்ளுகிறானோ; அவன், உத்தமபுருஷார்த்தத்தை இழந்தவனாகிறான். இது நிச்சயமே.

௨. ஶ்ரேயஶ்ச ப்ரேயஶ்ச மநுஷ்யமேதஸ்தௌ ஸம்பரீத்ய விவிநக்தி தீர: । ஶ்ரேயோ ஹி தீரோऽபி ப்ரேயஸோ வ்ருணீதே ப்ரேயோ மந்தோ யோகக்ஷேமாத் வ்ருணீதே ॥

௨. శ్రేయశ్చ ప్రేయశ్చ మనుష్యమేత స్తౌ సంపరీత్య వివినక్తి ధీరః ।
శ్రేయో హి ధీరోఽభి ప్రేయసో వృణీతే ప్రేయో మందో యోగక్షేమాద్వృణీతే ॥

(ப-ம்) ஶ்ரேயஶ்ச-ச்ரேயஸ்ஸும், ப்ரேயஶ்ச - ப்ரேயஸ்ஸும், மநுஷ்யம்-மனிதனை, ஏத:-அடைகின்றன, தீர:-தைர்யமுள்ளவன், தௌ-அவைகளை, ஸம்பரீத்ய-நன்றாயாலோசித்து, விவிநக்தி - விவேகித்தறிகிறான். தீர: - அப்படியறிந்த தீரனானவன், ப்ரேயஸ:-ப்ரேயஸ்ஸைக்காட்டிலும், அபி-சிறந்ததான, ஶ்ரேய:-ச்ரேயஸ்ஸையே, வ்ருணீதே - வரித்துக்கொள்ளுகிறான். மந்த: - புத்தியில்லாதவன், யோகக்ஷேமாத் - யோகம், க்ஷேமம், இவைகளைவிரும்பி, ப்ரேய:-ப்ரேயஸ்ஸை, வ்ருணீதே - வேண்டுகிறான்.

ஸம-ஹா.—இப்படி, ச்ரேயஸ்ஸு, ப்ரேயஸ்ஸு, இரண்டும் புருஷனுலனுட்டிக்கக்கூடினவையாகில், ஸாரமான ச்ரேயஸ்ஸைவிட்டு, பலரும், ப்ரேயஸ்ஸையே விரும்பிக்கொள்வதென்கொண்டு, என்று கேட்பாயாகில் சொல்லுகிறேன். இவ்விரண்டும், புருஷனாலடையக் கூடுமாகில், புத்தியில்லாத மூடர்களுக்கு தங்களுண்மையை வெளிப்படுத்தாமல் கிட்டுகின்றனவாகையால், புத்தியுடையவனே இவைகளினுண்மையை யறிந்து, சாரமான ச்ரேயஸ்ஸை, அன்னம், பாலையறிந்துகொள்வதுபோல், பிறித்து விரும்பிக்கொள்ளுகிறான். புத்தியில்லாதவன், இப்படிவகுத்தறிய சக்தியில்லாமல், சரீரரக்ஷணத்தின் பொருட்டு அஸாரமான ப்ரேயஸ்ஸை யடைகிறான். ச்ரேயஸ்ஸென்பது மோக்ஷம். ப்ரேயஸ்ஸென்பது புத்திரமித்திராதிகள்.

ஸா-ஹா.—ச்ரேயஸ்ஸு. ப்ரேயஸ்ஸு, என்கிற விரண்டில், மனுஷ்யன், எத்தை வேண்டினால், அத்தைக்கொள்ளலாம்; ஆகிலும், அன்னமானது, நீரும், பாலும்

ஒன்றாய்க்கலந்திருக்கும்போது, எதைவேண்டினாலதைக்கொள்ளலாயிருக்க, அவை களில் ஸாரவஸ்துவான பாலையறிந்து, பிறித்துப், பாலையே க்ரஹிப்பதுபோல், புத்தி யுடைய தீரபுருஷன், ச்ரேயஸ்ஸு, ப்ரேயஸ்ஸு, என்கிற இவைகளில் ஸாரமான ச்ரேயஸ்ஸையே பிறித்தறிந்து, அதையே அநுஷ்டித்துக்கொள்ளுகிறான், புத்தியில் லாத மூடபுருஷன், உடலைத்தடிக்கச்செய்து, நன்றாய் இரக்ஷித்துக்கொள்ளவேண் டுமென்று, அஸாரமான ப்ரேயஸ்ஸையே வேண்டுகிறான்.

௩. ஸ த்வம் ப்ரியான் ப்ரியரூபாம்ஶ்ச காமான் அபித்யாயன் நசிகேதோ(அ)த்யஸ்ராக்ஷீ: । நைதாம் ஸ்ருங்காம் வித்தமயீமவாப்தோ யஸ்யாம் மஜ்ஜந்தி பஹவோ மநுஷ்யா: ॥

3. సత్వంప్రియాన్ప్రియరూపాంశ్చకామానభిధ్యాయన్నచికేతోత్యస్రాక్షీః ।
నైతాగ్ంసృఙ్కాంవిత్తమయీమవాప్తోయస్యాంమజ్జన్తిబహవోమనుష్యాః ॥

(ப-ம்) ஹே நசிகேத: - ஓய்நசிகேதஸ்ஸே, ஸ: - அப்படிப்பட்ட, த்வம்-நீ, ப்ரியாந் - இஷ்டங்களையும், ப்ரியரூபாம்ஶ்ச - ப்ரியஸ்வரூபங்க ளான, காமாந்-போகங்களையும், அபித்யாயந் - விமர்சித்து, அத்யஸ்ரா க்ஷீ: - விரும்பாமல்விட்டாய், யஸ்யாம் - யாதொருமார்க்கத்தில், பஹவ: மநுஷ்யா:-அனேகமநுஷ்யர்கள், மஜ்ஜந்தி - முழுகிப்போகிறார்களோ ; ஏதாம்-அப்படிப்பட்டவித்த. வித்தமயீம்-பொருள்ரூபமாயிருக்கிற, ஸ்ருங்காம்- தப்புவழியை, நஅவாப்த:-அடையவில்லை.

ஸ௦-ஹா.—அப்படிப்பட்ட நீ, அடிக்கடி என்னால் வஞ்சிக்கப்பட்டபோதிலும், மோசம்போகாமல், நான் சொல்லிய காமபோகங்களிலிருக்கிற அநித்யத்வம், அஸா ரத்வம், முதலிய தோஷங்களைக் கண்டுபிடித்து, அவைகளை விட்டுவிட்டாய், உன்னு டைய புத்திமகிமையை, நானென்ன சொல்லுவேன்; மேலும், மூடர்களிழிகிற தப்பு வழியாகிய பணம் முதலியவற்றில் ஆசைவைய்யாமல் நீக்கிவிட்டாய்.

ரா-ஹா.—நசிகேதஸ்ஸை, யமன் கொண்டாடுகிறான். வாசாமகோசரமான வைபவத்தையுடைய நீ, ஸ்வரூபத்தாலும், ஸ்வபாவத்தாலும், அழகாக ஏற்பட்டிரு க்கிற, ஆசையை உண்டுபண்ணுகிற ஸ்திரீ முதலிய போகங்களை, நிரூபித்து, அவைக ளிலிருக்கிற, பிற்காலத்தில் துக்கத்தை யுண்டுபண்ணுகிற தன்மையையும், துச்சம் கலந்திருக்கையையும், இன்னமும் பலதோஷங்களையும், நன்றாயறிந்து, அவைகளைத்ய ஜித்தாய், குத்ஸித ஜநங்களாலடையப்படுகிற பணம் முதலியவைகளை, நீ, அடைய விரும்பவில்லை.

௪. தூரமேதே விபரீதே விஷூசீ அவித்யா யா ச வித்யேதி ஜ்ஞாதா । வித்யாபீப்ஸிநம் நசிகேதஸம் மந்யே ந த்வா காமா பஹவோ(அ)லோலுபந்த ॥

४. దూరమేతేవిపరీతేవిషూచీఅవిద్యాయాచవిద్యేతిజ్ఞాతా ।
విద్యాభీప్సినంనచికేతసంమన్యేనత్వాకామాబహవోలోలుపన్త ॥

(ப-ம்.) யா-யாதொன்று, வித்யேதி-வித்யையென்று, ஜ்ஞாதா-அறியப்பட்டதோ; யா ச-யாதொன்று, அவித்யேதி-அவித்யையென்று, ஜ்ஞாதா-அறியப்பட்டதோ, ஏதே-இவைகள், விபரீதே-சேராதவைகள். தூரம்-விஷூசீ-மிகவும் விருத்தமார்க்கத்தையுடையவைகள். இவைகளில், நசிகேதஸம்-நசிகேதஸ்ஸென்று பெயரையுடைய உன்னை, வித்யாபீப்ஸினம்-வித்யையில்விருப்பமுடையவனாக, மந்யே-எண்ணுகிறேன். ஏனெனில், த்வா-உன்னை, பஹவ:-அநேகங்களாயிருக்கிற, காமா:-போகங்கள், நஅலோலுபந்த-லோலுபனாக்கவில்லையன்றோ.

ஸம்-ஹா.—“தயொஶ்ரேய ஆததாநஸ்ய ஸாது பவதி ஹீயதேர்த்தாத்ய உப்ரேயொவ்ருணீதே” என்கிற ஸ்லோகத்தில் சொல்லிய காரணத்தால், வித்யை என்றும், அவித்யை என்றும் சொல்லப்படுகிற ச்ரேயஸ்ஸு, ப்ரேயஸ்ஸு, இவைகள், ஒன்றுக்கொன்று விபரீதங்கள், விருத்தமான கதியையுடையவைகள். இப்படிப்பட்ட இவைகளில், ச்ரேயஸ்ஸென்கிற வித்யையை விரும்பினவனாக உன்னை நினைக்கிறேன். ஏனென்றால், உன்னை, பலவித போகங்களும், கொஞ்சமுங்கூட சலிப்பிக்க சக்தியில்லாதவைகளாயினவன்றோ.

ஸா-ஹா.—வித்யை என்றும், அவித்யை என்றும், சொல்லப்படுகிற இழ்ச்சொல்லியவைகள், இருளும் வெளிச்சமும்போல், ஜ்ஞாநாஜ்ஞாந ரூபங்களாகையாலே விருத்தங்கள். இவைகள், க்ரமமாய், மோக்ஷத்தையும், ஸம்ஸாரத்தையும், அடைவிப்பிக்கின்றன வாகையால், பிந்நமார்க்கங்களாயிருக்கின்றன. இவை யிரண்டனுள், உன்னை, வித்யை யடையவேண்டுகிறவனாய் நினைக்கிறேன். உலகத்திலுள்ள ஒருபோகமும், உன்னை மயக்கவில்லையன்றோ. விரக்தனாகையாலே, நீ, மோக்ஷமார்க்கத்தை யடையத்தகுந்த சிஷ்யனே என்று, நசிகேதஸ்ஸைப்பார்த்து, யமன் சொன்னான்,

௫. அவித்யாயாமந்தரே வர்த்தமாநா: ஸ்வயம்தீரா: பண்டிதம்மந்யமாநா: | தந்த்ரம்யமாணா: பரியந்தி மூடா அந்தேநைவ நீயமாநா யதாந்தா: ||

౫. అవిద్యాయామంతరేవ ర్తమానాః స్వయంధీరాః పండితంమన్యమానాః ।
దంద్రమ్యమాణాః పరియంతి మూఢా అంధేనైవ నీయమానా యథాంధాః ।

(ப-ம்) அவித்யாயாம்-அவித்யையென்கிற ப்ரேயஸ்ஸில், அந்தரே-நடுவில், வர்த்தமாநா:-இருப்பவர்களாய், ஸ்வயம்-தங்களை, தீரா:-ப்ரஜ்ஞையுடையவர்களாயும், பண்டிதம்மந்யமாநா:-சாஸ்திரங்களில் வல்லமையுடையவர்களாயும், எண்ணிக்கொண்டிருக்கிற, மூடா:-மூடர்கள், தந்த்ரம்யமாணா:-பீடிக்கப்பட்டவர்களாய், அந்தேந-குருடனால், நீயமாநா:-அழைத்துக்கொண்டுபோகப்பட்ட, அந்தா யதா-குருடர்களைப்போல், பரியந்தி-சுழலுகிறார்கள்.

ஸம்-ஹா.—யாவர் சிலர், இருள்போன்ற அவித்யையின் நடுவில், அந்த அவித்யையினால் சுற்றப்பட்டு, புத்திரன், பசு, அன்னம், முதலியவற்றில் ஆசையிருந்தவ

ராய்; தங்களை, நல்லறிவுடையோரென்றும், சாஸ்திரங்களில் புலவரென்றும் நினைத்துக்கொண்டு திரிகிறார்களோ; அவர்கள், ஜன்மம், ஜ்வரை, மரணம், ரோகம்முதலியவற்றால், மீடிக்கப்பட்டு குருடனால் வழிகாட்டப்பட்டு நடக்கும் குருடர்களைப்போல், வழியல்லா வழிகளிலிழிந்து கெட்டுப்போவார்கள்.

ரா-ஹா.—இப்போது, யமன், தன்னால் சொல்லப்பட்ட வித்யை, அவித்யை, என்கிற விரண்டுவழிகளுக்குள்; அவித்யையை நிந்திக்கிறான்.—காமகர்மங்களை லக்ஷணமாகவுடைய அவித்யையாகிற பேரிருளின் நடுவில் முழுகியிருக்கிறஜநங்கள், தங்களை, மிகவும் அறிவுள்ளவர்களாயும் பண்டிதர்களாயும் நினைத்துக்கொண்டு, மிகுந்த துக்கங்களினால் வருத்தமடைந்தவர்களாய், கண்ணில்லாதவர்கள் வழிகாட்ட நடக்கிற கண்ணில்லாத ஜநங்கள்போல், வழிதப்பிப் படுகுழியில் விழுந்து நாசமடைகிறார்கள். சிலர், "𑌜𑌙𑍍𑌘𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌃" என்கிற பாடமிருப்பதாய்க்கொண்டு, காமங்களினாலுருக்கப்பட்ட நெஞ்சினையுடையவர்களாய் என்று, அதற்குப் பொருள் கூறுகின்றனர். என்று இராமாநுஜபாஷ்யத்தில் சொல்லியிருக்கிறது. இந்த பாடம், சங்கரபாஷ்யத்தில் சொல்லப்படவில்லை,

௬. 𑌨 𑌸𑌾𑌮𑍍𑌪𑌰𑌾𑌯𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌾𑌤𑌿 𑌬𑌾𑌲𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑍋𑌹𑍇𑌨 𑌮𑍂𑌢𑌮𑍍 । 𑌅𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌪𑌰 𑌇𑌤𑌿 𑌮𑌾𑌨𑍀 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌰𑍍𑌵𑌶𑌮𑌾𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌮𑍇 ॥

౬. నసాంపరాయః ప్రతిభాతి బాలం ప్రమాద్యంతం విత్తమోహేన మూఢమ్ ।
అయంలోకో నాస్తి పర ఇతి మానీ పునః పునర్వశమాపద్యతే మే ॥

(ப்-ம்) 𑌬𑌾𑌲𑌮𑍍-சிறியவனையும், 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍍 - ஏமாந்தவனையும், 𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑍋𑌹𑍇𑌨 - பணத்திலாசையில், 𑌮𑍂𑌢𑌮𑍍 - அறிவழிந்தவனுயுமிருக்கிறவனைக்குறித்து, 𑌸𑌾𑌮𑍍𑌪𑌰𑌾𑌯𑌃-பரலோகமானது, 𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌭𑌾𑌤𑌿 - தோற்றுகிறதில்லை. 𑌅𑌯𑌮𑍍-𑌲𑍋𑌕𑌃 இந்தலோகமானது, (𑌅𑌸𑍍𑌤𑌿-இருக்கிறது), 𑌪𑌰𑌃-இதைக்காட்டிலும் வேறான, (𑌲𑍋𑌕𑌃 - லோகமானது), 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿-இல்லை, 𑌇𑌤𑌿-இப்படி எண்ணங்கொண்டபுருஷன், 𑌮𑍇-என்னுடைய, 𑌵𑌶𑌮𑍍-வசமாயிருக்கையை, 𑌪𑍁𑌨𑌃𑌪𑍁𑌨𑌃-அடிக்கடி, 𑌆𑌪𑌦𑍍𑌯𑌤𑍇-அடைகிறான்.

ரங்-ஹா.—அறிவில்லாதமூடனாய், ஸாதநானுஷ்டாநமில்லாத பொருளில் மோகங்கொண்ட புருஷன், பரலோகத்தை யறிவதில்லை. இப்படி, கண்ணால் காணப்படுகிற இந்த லோகமேயுள்ளது; காணப்படாத பரலோகமில்லை என்றெண்ணுகிற புத்தியில்லாதவன். ஸ்திரீ முதலிய ஸுகாபாஸங்களில் விழுந்து பாபியாய், மகாகோர துக்கமயமான நரகத்தை யடைவான்.

ரா-ஹா.—அவிவேகியாய், முன்பின் னாலோசனையில்லாத, விஷய ஸுகாபாஸங்களால் மயக்கப்பட்டவனுக்கு, பரலோக ஸாதநமானது புலப்படாது. இந்தப்படி, பரலோகத்தை இல்லை என்று சொல்லி, இந்தலோகத்திலவையாகிய ஸுகாபாஸங்களை யநுபவித்துக்கொண்டிருக்கிறமூடன், நரகத்தையடைகிறான். ஸ்ருதப்ரகாசிகையில், "𑌸𑌂𑌯𑌮𑍇 𑌤𑍍𑌵𑌨𑍁𑌭𑍂𑌯" என்கிற ஸூத்திரத்தில், "𑌅𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌪𑌰 𑌇𑌤𑌿 𑌮𑌾𑌨𑍀" என்று பாடத்தை யாச்ரயித்து, இந்தலோகமும், பர

லோகமும், இல்லை யென்று வ்யாஸாசார்யரால் பொருள் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தபக்ஷத்தில் "தஸ்ய" என்று கூட்டிக்கொண்டு பொருள் சொல்லவேண்டும். அப்படியாகில், கீழ்ச்சொல்லியபடி மூடனானவனுக்கு, சிஷ்டர்களின் பரிக்ரகமில்லாத்தால், இந்தலோக ஸுகமுமில்லை; பரலோக ஸுகம் கொஞ்சமுமில்லை; என்று கருத்து.

பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில், "அயம்லோகோ நாஸ்தி பர இதி மாநீ" என்கிற பாடமிருப்பதாய்ச் சொல்லப்படவில்லை.

எ. ஶ்ரவணாயாபி பஹுபிர்யோ ந லப்ய: ஶ்ருண்வந்தோऽபி பஹவோ யம் ந வித்யு: । ஆஶ்சர்யோ வக்தா குஶலோऽஸ்ய லப்தாऽऽஶ்சர்யோ ஜ்ஞாதா குஶலாநுஶிஷ்ட: ॥

౭. శ్రవణాయాపిబహుభిర్యో నలభ్యఃశృణ్వంతోఽపి బహవోయంనవిద్యుః।
ఆశ్చర్యోవక్తాకుశలోఽస్య లబ్ధాఆశ్చర్యోజ్ఞాతాకుశలానుశిష్టః॥

(ப-ம்) பஹுபி:-அநேகங்களால், ய:-யாதொருஆத்மா, ஶ்ரவணாயாபி-கேழ்ப்பதற்கும், ந லப்ய: - அடையக்கூடாதவனோ, ஶ்ருண்வந்தோऽபி-நன்றாய்க்கேட்டிருக்கிற, பஹவ:-பலரும், யம்-யாதொரு ஆத்மாவை, ந வித்யு:-அறிகிறார்களில்லையோ, அஸ்ய-அப்படிப்பட்ட இந்த-ஆத்மாவின் விஷயத்தில், வக்தா-உபதேசிப்பவனும், ஆஶ்சர்ய:-அருமையானவன், குஶல:-ஸமர்த்தனாயிருக்கிற, லப்தா-பெறுகிறவனும், ஆஶ்சர்ய: - அருமையானவன்; குஶலாநுஶிஷ்ட:-ஸமர்த்தனாலுபதேசிக்கப்பட்டவனாய், ஜ்ஞாதா-ஆத்மாவையறிந்துக் கொள்ளுகிறவனும், ஆஶ்சர்ய:-அருமையானவன்.

ஶம்ஹா.—பெரும்பாலும், உலகத்தில் கீழ்ச்சொல்லியபடி, அறிவில்லாதவர்களாய் பரலோகசிந்தை கொஞ்சமுமில்லாதவர்களே இருக்கிறார்கள்.—ஆயிரத்திலொருவன், உன்னைப்போல்; ச்ரேயஸ்ஸை விரும்பி, ஆதமஸ்வரூபத்தை யறிந்தவனாகிறான். ஏனென்றால், அந்த ஆத்மஸ்வரூபத்தை, அநேகர், கேழ்க்கப்பெறாமலிருக்கிறார்கள்; பலர், கேட்டும் அறிந்துக்கொள்ள சக்தியில்லாதவர்களாகிறார்கள்; பாக்கியமில்லாத ஸம்ஸ்காரஹீநர், ஆத்மாவை யறியமாட்டார்களன்றோ; இந்த ஆத்மாவைச்சொல்பவன், ஆச்சரியம்போல் ஒருகாலத்திலுண்டாகிறான்; அப்படி, கேட்டாலும், உள்ளபடி தெரிந்துக்கொள்ளுகிறவனும், ஆச்சரியமாய் பலரில் எவனோ ஒருவன் ஏற்படுகிறான்; ஆகையால், ஆத்மஸ்வரூபத்தை யுள்ளபடி யறிதலும், அறிந்தபடி சொல்லுகலும், மிகவும் அருமையான விஷயம். இந்த விசாரத்தில், ஓ நசிகேதஸ்ஸே, நீ, ப்ரவேசித்தது, மிகவும் கொண்டாடத்தக்கதென்று, யமன், நசிகேதஸ்ஸை நோக்கிச் சொல்லுகின்றான்.

ரா.ஹா.—தத்வவித்துக்கள் திரளில் ப்ரஸித்தனான பரமாத்மா, அனேகர்களால் கேழ்க்கப்பட்டுள்ளவனன்று, அந்த பரமாத்மாவைக் கேழ்க்கப்பெருதலும், மிகுந்த புண்யத்தாலேயேயாகும். கேட்டிருந்தோரும், அருமையானவர்கள்; கேட்டாலும், பரமாத்மாவை யறிவது, ஸுலபமாகாதன்றோ; இந்த ஆத்மாவை யுள்ளபடியுபதேசிப்பானும், அப்படி யுபதேசத்தின்படி யறிவானுமில்லை. ஸமர்த்தர்களான சிஷ்யாசார்யர்கள் கூடுவது அச்சரியம். (ந்யாஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்)

ததிவிஷயே | யததாஸ்வேவிஷயாணாம் ச்ருதிநாம் வேத்தி ந கச்சந:" என்று பகவத்கீதையிலும் சொல்லப்பட்டது.

௮. ந நரேணாவரேண ப்ரோக்த ஏஷ ஸுவிஜ்ஞேயோ பஹுதா சிந்த்யமாந: | அநந்யப்ரோக்தே கதிரத்ர நாஸ்த்யணீயாந் ஹ்யதர்க்யமணுப்ரமாணாத் ||

౮. నన రేణావ రేణ ప్రోక్త ఏషః సువిజ్ఞేయో బహుధా చింత్యమానః।
అనన్యప్రోక్తే గతిరత్ర నాస్తి అణీయాన్ హ్యతర్క్యమణుప్రమాణాత్॥

(ப-ம்) பஹுதா-அனேகப்ரகாரமாக, சிந்த்யமாந:- ஸந்தேகிக்கப்பட்ட, ஏஷ:-இந்த ஆத்மா, அவரேண-தாழ்ந்தவனாயிருக்கிற, நரேண-மநுஷ்யனால், ப்ரோக்த: - உபதேசிக்கப்பட்டவனைக்கொண்டு, ந ஸுவிஜ்ஞேய:-நன்றாயறியக்கூடாதவன், அநந்யப்ரோக்தே-வேறாகாதவனால் சொல்லப்பட்டபோது, (யா-யாதொரு) கதி:-ஜ்ஞாநமானது, (அஸ்தி-இருக்கிறதோ, ஸா-அந்த) கதி:-ஜ்ஞானமானது, அத்ர-தாழ்ந்தமனுஷ்யனுபதேசித்தபோது, நாஸ்தி-இல்லை, அணுப்ரமாணாத்-அணுபரிமாணத்தைக்காட்டிலும், அணீயாந்-அணுவாயிருக்கிற ஆத்மாவானவன், அதர்க்யம் ஹி- தர்க்கிக்கத்தகாதவனன்றோ.

ஸா०-ஹா.—யாதொரு ஆத்மஸ்வரூபத்தைப்பற்றி, என்னைக் கேழ்க்கிருயோ, இந்த ஆத்மஸ்வரூபமானது, ஸாதாரண மநுஷ்யனால் சொல்லப்பட் டறியப்படாது. ஏனென்றால், இந்தவிஷயத்தில் உண்டென்றும், இல்லையென்றும், பலவிதமான விவாதமுண்டா யிருக்கிறதன்றே; நான் பரமாத்மாவே யாகிறேன் என்று எண்ணமுள்ள ஆசாரியனுலுபதேசிக்கப்பட்டால், அதின்பிறகு, இந்த ஆத்மஸ்வரூப விஷயத்தில், சந்தேகமான கதியில்லை ஆத்மஸ்வரூபம் விகல்பதூராமா யிருப்பதன்றே; அன்றியில் ஜீவாத்மாவைக் காட்டிலும் வேறல்லாத பரமாத்மா சொல்லப்பட்டால், வேருென்றுமென்று மறியவேண்டியதில்லை. ஏனென்றால் வேறறியவேண்டிய பொருளில்லையன்றே; ஜீவாத்மா, பரமாத்மா, இவ்விரண்டுமொன்றென்றறிவதிற்காட்டில், நிஷ்டைவேருென்று மில்லையன்றே; ஆகையால், வேருெரு சிந்தையில்லை. இப்படியறிந்தவனுக்கு மோக்ஷம் தப்பாதன்றே; அன்றியிலே, அபேதஜ்ஞானமுடைய ஆசாரியனுலே உபதேசிக்கப்பட்டால், அறியப்படாமல் போகாது. கேழ்க்கிற சிஷ்யனுக்கும்; பரமாத்மாவைக்காட்டிலும், நான் வேருனவனன்று என்கிற ஜ்ஞாநமுண்டாகும். ஆசாரியனுக்கு மிப்படியுண்டாகும். இப்படி ஆசாரியனுல், வேதங்கொண்டு அறியப்படவேண்டும். ஏனென்றால், அந்த ஆத்மா, அணுபரிமாணத்தைக் காட்டிலு மணுவாயிருக்கிறது. அணுபரிமாணமானது, தர்க்கயுக்தியாலே, ஊஹிக்கக்கூடாதது. ஒருவன், ஒருவிதமாய் ஊஹிக்க மற்ருெருவன், மற்ருெருவிதமாய் ஊஹிக்க வேருெருவன், வேருெருவிதமாய் ஊஹிப்பான். ஆகையா லிப்படி, தர்க்கத்திற்கு நிலையில்லை. அணுவென்பது ப்ரத்யக்ஷமாயிராததுபற்றி, இன்ன யமன் நசிகேதஸ்ஸோடு சொன்னுனென்று இந்த ச்லோகத்திற்குப் பொருள்.

ரா-ஹூ.—அனேக வாதிகளால் அனேகவிதமாய், சொல்லப்படுகிற இந்த ஆத்மாவானவன், பண்டிதனென்று பெயர் பெறுதற்குமாத்திரம் வேதாந்தம்படித்த தாழ்ந்த மனுஷ்யனுலே (அதாவது தேஹாத்வாபி மாநமுடைய மநுஷ்யனுலே) சொல்

லப்பட்டறியப்படான். பரப்ரஹ்மமானது ஜீவாத்மாவை சரீரமாகவுடையது, என்கிற ஜ்ஞாநமுடைய ஆசாரியனால் உபதேசிக்கப்பட்டால்; எப்படி அறியப்படுமோ; அப்படி, வேறொருவனால் சொல்லப்பட்டறியப்படாது. அன்றியில், அப்படி ஸதாசாரியனா லுபதேசிக்கப்பட்டால், ஸம்ஸாரத்தில் ஸஞ்சரிப்பது விட்டுப்போம். அன்றியில், அர்யனால் சொல்லப்படாமல் தானே யூஹியப்பார்த்தா லறியப்படாது. உபதேசிப்பவனாராயிருந்தாலும், சிஷ்யன் புத்திசாலியாய் ஊஹித்துக்கொள்ளுகிறவனாயிருந்தால், தானே அறிந்துகொள்ளப்படுகிறது? இதற்கு ஸதாசார்யன் உபதேசிக்க வேண்டிய நிர்ப்பந்தம், ஏனென்றால், இந்த ஆத்மா, அணுவிலு மணுவாயிருப்பதால், தர்க்கயுக்தியைக்கொண்டு ஊஹிக்கமுடியாததன்றோ. ஆகையால் ஸதாசார்யோபதேசத்தாலே அறியவேணும்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில், "அநந்யப்ரோக்தே" என்கிற பதத்திற்கு, அநந்யேந, ப்ரோக்தே, என்று விக்ரஹித்து, ஒருபொருளும். அநந்யே, ப்ரோக்தே என்று விக்ரகித்து, மற்றொருபொருளும், அப்படியே "கதிः" என்கிறவிடத்தில் அகதிः, கதிः, என்றிரண்டுவிதமாய்ப்பிரித்து, இரண்டுபொருளும்சொல்லப்பட்டிருக்கிறது. இராமாநுஜபாஷ்யத்தில், "அநந்யப்ரோக்தே" என்கிறவிடத்தில், ந, அந்யப்ரோக்தே, என்றுவிக்ரகித்து, ஒருபொருளும், அநந்யேந, ப்ரோக்தே, என்று, விக்ரகித்து, மற்றொருபொருளும், "அத்ர" என்கிறபதத்திற்கு, ஆத்மஸ்வரூபத்தில் என்று சங்கரபாஷ்யத்தில்போலவொரு பொருளும், ஸம்ஸாரத்தில் என்று ஒருபொருளும், "கதிः" என்கிறதற்கு, ஜ்ஞாநம். என்று ஒருபொருளும். ஸஞ்சரித்தல், என்று ஒருபொருளும், கொள்ளப்பட்டிருக்கிறது. அன்றியில் "அநந்யப்ரோக்தே" என்று ஒருபாடமிருப்பதாய்ச்சொல்லி, அதற்கு, ஸதாசார்யனல்லாதவனாலேசொல்லப்பட்டால், என்றுபொருள்சொல்லப்பட்டிருக்கிறது. இந்தபாடாந்தரமிருப்பதாய், சங்கரபாஷ்யத்தில், சொல்லப்படவில்லை.

௯. நைஷா தர்கேண மதிராபநேயா ப்ரோக்தாந்யேநைவ ஸுஜ்ஞாநாய ப்ரேஷ்ட। யாம் த்வமாபः ஸத்யத்ருதிர்பதாஸி த்வாத்ருங்நோ பூயாந்நசிகேதः ப்ரஷ்டா॥

౯. నైషా తర్కేణ మతిరాపనేయా ప్రోక్తాన్యేనైవ సుజ్ఞానాయ ప్రేష్ఠ।
యాం త్వమాపః సత్యధృతిర్బతాసి త్వాదృఙ్నో భూయాన్నచికేతః ప్రష్టా॥

(ப-ம்.) ஹே ப்ரேஷ்ட இஷ்டனான நசிகேதஸ்ஸே, த்வம்-நீ, யாம் - யாதொருவித்யையை, ஆபः-அடைந்தாயோ, ஏஷா-இந்த, மதிः-வித்தையயானது, தர்கேண-ஊகத்தினால், ந ஆபநேயா - அடையத்தக்கதன்று, அந்யேந - இதரனால், ப்ரோக்தைவ - உபதேசிக்கப்பட்டதாய்க்கொண்டு, ஸுஜ்ஞாநாய- நல்லறிவின்பொருட்டு, பவதி- ஆகிறது, த்வம்-நீ, ஸத்யத்ருதிः-ஸத்யத்தில்தைர்யமுள்ளவனாய், அஸி-ஆகிறாய், பத-ஆச்சரியம், ஹே

𑌨𑌾𑌚𑌿𑌕𑍇𑌤𑌃-ஓ நசிகேதஸ்ஸே, 𑌨𑌃-எங்களுக்கு, 𑌤𑍍𑌵𑌾𑌦𑍃𑌕𑍍-உன்னைப்போலிருக்கிற, 𑌪𑍍𑌰𑌷𑍍𑌟𑌾-ப்ரசனம்பண்ணுகிறவன், 𑌭𑍂𑌯𑌾𑌤𑍍-ப்ரார்த்திக்கத்தக்கவன்.

𑌶𑌂-𑌭𑌾.—ஆகமத்தாலாகவேண்டிய ஸதாசார்யனுலுபதேசிக்கப்பட்ட ஆத்மவித்யையானது, தர்க்கத்தினுல் வரக்கூடியதன்று. ஆகமந்தெரியாத தார்க்கிகன், தனக்குத்தோற்றியபடி, ஏதையோ ஒன்றைச்சொல்லுகிருன். அது பாமார்த்தமன்று. ஆகையாலிப்படி ஆகமாதீநமாயிருக்கிற ஆத்மவித்யையானது, தார்க்கிகனுக்காத வேதவித்தாயிருக்கிற ஆசார்யனுலே உபதேசிக்கப்பட் டறியப்படத்தக்கது. யாதொரு ஆத்மவித்யையை, நீ அறிய நிச்சயித்தாயோ; அவன் ஸ்வரூபமப்படிப்பட்டது. நீ, இதில் ஸத்யதிரனுயிருக்கிருய், ஆகையால் எனக்குன்னிடத்தில் அருளுண்டாயிருக்கிறது. உன்னைப்போலவே, நமக்கு, சிஷ்யன், உண்டாகவேணும்.

𑌰𑌾-𑌭𑌾.—அந்த தேவதாவிஜ்ஞாநம் தர்க்கத்தால் வருகிறதில்லை. தர்க்கத்தில், மிகவும் ஸமர்த்தனுயிருக்கிற புருஷனும், ஆசார்யோபதேச மில்லாமல், அறிந்துக்கொள்ளான். நீ, ஸமயவானுன தீரனுயிருக்கிருய். உன்னைப்போல சிஷ்யன், எங்களுக்கு ஸித்திக்கவேணும், சிஷ்யலக்ஷணத்திற்கு, நீ, முதலிலக்கியமாயிருக்கிருய்.

௧௦. 𑌜𑌾𑌨𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌶𑍇𑌵𑌧𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌹𑍍𑌯𑌧𑍍𑌰𑍁𑌵𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌤𑌤𑍍 । 𑌤𑌤𑍋 𑌮𑌯𑌾 𑌨𑌾𑌚𑌿𑌕𑍇𑌤𑌶𑍍𑌚𑌿𑌤𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑌨𑌿𑌤𑍍𑌯𑍈𑌰𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

౧౦. జానామ్యహగ్ం శేవధిరిత్యనిత్యం నహ్యధ్రువైః ప్రాప్యతే హి ధ్రువం తత్ ।
తతో మయా నాచికేతశ్చితోఽగ్నిరనిత్యైర్ద్రవ్యైః ప్రాప్తవానస్మి నిత్యమ్॥

(ப-ம்) 𑌅𑌹𑌮𑍍-நான், 𑌶𑍇𑌵𑌧𑌿𑌰𑌿𑌤𑌿-நிதிஎன்பதையும், 𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍-அஸ்திரமென்று, 𑌜𑌾𑌨𑌾𑌮𑌿-அறிவேன், 𑌅𑌧𑍍𑌰𑍁𑌵𑍈𑌃-அநித்யங்களாலே, 𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍-நித்யமான, 𑌤𑌤𑍍-அந்தபரப்ரஹ்மமானது, 𑌨𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇𑌹𑌿-அடையப்படமாட்டாதன்றோ, 𑌤𑌤𑌃-ஆகையால், 𑌮𑌯𑌾-என்னால், 𑌨𑌾𑌚𑌿𑌕𑍇𑌤𑌃-நசிகேதசம்பந்தமான; 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃-நாசிகேதாக்நியானது, 𑌚𑌿𑌤𑌃-சயனம்பண்ணப்பட்டது. 𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑍈𑌃-அஸ்திரங்களாயிருக்கிற, 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑍈𑌃-த்ரவ்யங்களாலே, 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍-நித்யமானதை, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿-அடைந்தவனாகிறேன்.

𑌶𑌂-𑌭𑌾.—நானிப்படிகளை எல்லாமறிந்தும், அநித்யமான யாம்ய பதத்திற்கு வேண்டிய அக்நிசயநம் முதலிய அநித்யகர்மங்களைச்செய்தேன். நீ, என்னால் கொடுக்கப்பட்டாலும் மவைகளைவேண்டாமென்று, நித்யத்தையே விரும்புகிருய். ஆகையால் உன்விஷயத்தில, எனக்கு, ஸந்தோஷமா யிருக்கிறது, என்று யமன் சொன்னன்.

𑌰𑌾-𑌭𑌾.—குபேரைஸ்வர்யம் முதலிய எல்லாவற்றையு மநித்யமென்றறிவேன்; அநித்யங்களாலே, நித்யபரமாத்மா, 'அடையப்படமாட்டானென்றறிவேன், ஆகையால், நித்யமான பரமாத்மா'வை அடைவதற்கு, ஸாதகமான ஜ்ஞாநத்தை, அக்நிசயநம் முதலியதால் ஸம்பாதித்தேன்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

நித்யம், என்பதற்கு, ஆபேக்ஷிகநித்யமென்று சங்கர பாஷ்யத்திலும், நித்யாத்மப்ராப்திஸாதகம்என்று இராமாநுஜபாஷ்யத்திலும், பொருள்கொள்ளப்பட்டிருக்கிறது.

கக. காமஸ்யாப்திம் ஜகத: ப்ரதிஷ்டாம் க்ரதோராநந்த்யமபயஸ்ய பாரம் | ஸ்தோமம் மஹதுருகாயம் ப்ரதிஷ்டாம் த்ருஷ்ட்வா த்ருத்யா தீரோ நசிகேதோ(அ)த்யஸ்ராக்ஷீ: ||

౧౧. కామస్యాప్తింజగతః ప్రతిష్ఠాం క్రతోరానంత్యమభయస్యపారమ్।
స్తోమ(మ్)మహదురుగాయం ప్రతిష్ఠాందృష్ట్వాధృత్యాధీరోనచికేతోఽత్యస్రాక్షీః॥

(ப-ம்) ஹே நசிகேத:-ஓநசிகேதஸ்ஸே, க்ரதோ:- யாககர்மத்திற்கு, ப்ரதிஷ்டாம்- பலரூபமாயிருக்கிற, ஜகத: - லோகத்தினுடைய, காமஸ்ய--இஷ்டங்களினுடைய, ஆப்திம் - ப்ராப்தியையும், ஆநந்த்யம் - நாசமில்லாததாயும், அபயஸ்ய - பயமில்லாமலிருக்கைக்கு, பாரம் - கரையாயும் ஸ்தோமம்-ஸ்துதிக்கத்தக்கினதாயும், மஹத்-பெரிதாயும், உருகாயம் - பெருங்கீர்த்திபொருந்தியதாயுமிருக்கிற, ப்ரதிஷ்டாம் - நிலையையும், த்ருஷ்ட்வா-பார்த்து, த்ருத்யா-தைர்யத்தால், தீர:-தீரமாயிருக்கிற; (த்வம்-நீ, காமாநு-காமபோகங்களை) அத்யஸ்ராக்ஷீ:-விட்டாய்.

ரு0-ஹா.—எல்லாகாமங்களும் நிறைந்ததாய், அத்யாத்மம், அதிபூதம், அதிதைவதம், என்கிற ஜகத்திற்கு, ஸ்திதிஹேதுவாய், எல்லாயாகங்களுக்கும் பலமாய், ஸம்ஸாரஸாகரத்தின் கரையாய், ஸ்துத்யமாய், பெரிதாய், உத்தகதியாய், உத்தமஸ்திதியாயிருருக்கிற பரமபதத்தை ஆலோசித்து மகாதீரனான நீ, அநித்யங்களான காமபோகங்களைவிட்டாய். பரப்ரம்மமேயன்றோ இந்தப்படி ஸகல காமாவாப்தியையு முண்டுபண்ணிவைக்கும் என்று நசிகேதஸ்ஸைப்பார்த்து, யமன், சொன்னனென்ற இந்தச்லோகத்திற்குப் பொருள்.

ரா-ஹா.—முன், நசிகேதஸ்ஸுக்குச் சொல்லியிருந்த ச்ரவணாதிகாரத்தை, இப்போது உபபாதிக்கிறது.—யாகாதிபலங்களை யுணர்ந்து, அவைகளைவிட்டு, நித்யாநந்தஸ்வரூபமான ப்ரம்மத்தையே, நீ விரும்புகிறாய். ப்ரம்மலோக பர்யந்தமுள்ள எல்லாபோகங்களும் அழிந்துபோமவையேயன்றோ, ஆத்மஸ்வரூபமே இவைகளுக்கு, விருத்தமாய் எல்லாகுணங்களு மொன்றாய்ச்சேர்ந்த கூட்டமாய், நித்யமாயிருப்பது என்று, நீ யறிந்தாய். என்று, யமன், நசிகேதஸ்ஸைப்பார்த்து, சொன்னான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இராமாநுஜபாஷ்யத்தில், "காமஸ்யாப்திம் ஜகத: ப்ரதிஷ்டாம் க்ரதோ:" என்கிறபர்யந்தம், காமபோகஸ்வரூபத்தைச்சொல்லி, மேல், ஆத்மஸ்வரூபத்தைச்சொல்லுகிறதென்று, ஒருயோஜனையும், ச்லோகமெல்லாம் ஆத்மஸ்வரூபத்தையே சொல்லுகிறதென்று, சங்கரபாஷ்யத்தில் போல்மற்றொருயோஜனையும் சொல்லப்பட்டிருக்கிறது.

கஉ. தம் துர்தர்சம் கூடமநுப்ரவிஷ்டம் குஹாஹிதம் கஹ்வரேஷ்டம் புராணம் | அத்யாத்மயோகாதிகமேந தேவம் மத்வா தீரோ ஹர்ஷசோகௌ ஜஹாதி ||

౧౨. తం దుర్దర్శం గూఢమనుప్రవిష్టం గుహాహితం గహ్వరేష్ఠం పురాణం।
అధ్యాత్మయోగాధిగమేన దేవం మత్వా ధీరో హర్షశోకౌ జహాతి॥

(ப-ம்.) து³ர்த³ர்ஶம்-காணக்கூடாதவனாய், கூ³ட⁴ம்- மறைக்கப்பட்டவனாய், அநுப்ரவிஷ்டம்-எல்லாவற்றிலு மிருப்பவனாய். கு³ஹாஹிதம் - நெஞ்சால் நினைக்கப்படுவானாய், க³ஹ்வரேஷ்ட²ம் - அந்தர்யாமியாய், புராணம்-நித்யனாயிருக்கிற, தம்-உன்னால் கேழ்க்க விரும்பப்படுகிறவந்த, தே³வம்-பரமாத்மாவை, அத்⁴யாத்மயோகா³தி⁴க³மேந- ஜீவாத்ம ஜ்ஞாநத்தாலே, மத்வா - அறிந்து. தீ⁴ர:, ஜ்ஞானி, ஹர்ஷஶோகௌ - ஸுகதுக்கங்களை, ஜஹாதி-விடுகிறான்.

ஸ॰-ஹா:—யாதொருவனை நீ, அறியவிரும்புகிறாய்; அவன், அதிஸூக்ஷ்மஸ்வரூபியாகையாலே, மிகவும் வருத்தத்துடன் கண்டறியத்தக்கவன். ப்ராக்ருத விஷய விகார விஜ்ஞாநங்களால் மறைக்கப்பட்டவன். நெஞ்சாலறியப்படுதலா லங்குளனு யுரைக்கப்பட்டவன். விஷமமாயுள்ள வநேகாநர்த்த ஸங்கடத்திலிருப்பதுபோ லிக்காரணங்களால், அறியப்படாதவன், இப்படிப்பட்ட அநாதி புருஷனை, விஷயங்களில் நின்றும், நெஞ்சைமாற்றி, ஆத்மாவினிடத்தில் சேர்த்ததனாலுண்டாகிற ஜ்ஞாநத்தாலே, தெளிவாயறிந்து, இப்படியறிதலா லுயர்வு, தாழ்வு நீங்குகையால், அதுகாரணமாய் வருகிற சுகதுக்கங்களை, விட்டவனாகின்றான்.

ரா-ஹா.—மூன்றாவதுசேள்விக்கு, விடையளிக்கிறார்.—இந்த ஆத்மஸ்வரூபமானது, "ஶ்ரவணாயாபி ப³ஹுபி⁴ர்யோ ந லப்⁴ய:" என்கிறவிடத்தில் சொன்னபடி, அறிவதற்குக்கூடாதலாய், தத்வங்களை மறைத்துவிடுகிற பாபகர்மங்களாகிய அவித்யையினாலே, மறைக்கப்பட்டதாய், எல்லாப்பூதங்களிலு மிருப்பதாய், ஹ்ருதயகுகையிலிருப்பதாய், உள்ளிருந்து நியமிப்பதால், அநாதியாயிருக்கிற தேவனென்று சொல்லப்படுகிறபொருள்- "யதை³வைஷ ஜநவிவ்ருத:" "யதா³பஞ்சாவதிஷ்ட²ந்தே ஜ்ஞாநாநி மநஸாஸஹ" இதுமுதலிய மந்திரங்களினால் சொல்லப்போகிற ஆத்மவிஜ்ஞாநத்தாலே, அந்தப்பொருளை [அதாவது பரமாத்மாவை] அறிந்து, ஸுகதுக்கங்களை விடுகிறான்.

௧௩. ஏதச்ச்²ருத்வா ஸம்பரிக்³ருஹ்ய மர்த்ய: ப்ரவ்ருஹ்ய த⁴ர்ம்யமணுமேதமாப்ய | ஸ மோத³தே மோத³நீயம் ஹி லப்³த்⁴வா விவ்ருதம் ஸத்³ம நசிகேதஸம் மந்யே ||

౧౩. ఏతచ్ఛ్రుత్వా సంపరిగృహ్య మర్త్యః ప్రవృహ్య ధర్మ్యమణుమేతమాప్య।
స మోదతే మోదనీయం హి లబ్ధ్వా వివృతం సద్మ నచికేతసం మన్యే॥

(ப-ம்.) மர்த்ய:-மனுஷ்யன், ஸ:-அப்படிப்பட்டவனாய், ஏதத்-இந்த ஆத்மஸ்வரூபத்தை, ஶ்ருத்வா-கேட்டு, ஸம்பரிக்³ருஹ்ய- க்ரஹித்துக்கொண்டு, த⁴ர்ம்யம்-தர்மத்தாலாகிய சரீரத்தை, ப்ரவ்ருஹ்ய - விட்டு, ஏதம்-இந்த முன்சொல்லப்பட்ட அணும் - ஸூக்ஷ்மரூபமான பரமாத்மாவை, ஆப்ய-அடைந்து, மோத³நீயம்-ஸந்தோஷவஸ்துவை, லப்³த்⁴வா-பெற்று. மோ

மோததே-ஸந்தோஷப்படுகிறான். ஆகையால், நசிகேதஸம்-நசிகேதஸ்ஸெ ன்கிற உன்னைப்பற்றி, ஸத்ம-ப்ரமயஸ்தானமானது, விவ்ருதம்-திறக்கப்பட் டதாய், மந்யே-எண்ணுகிறேன்.

ஸ௦-ஹா.—இப்போதென்னால் சொல்லப்படுகிற ஆத்மதத்வத்தை, ஆசாரிய னிடத்தில் நன்றாய்க்கேட்டு, தானேயாக க்ரஹித்து, இந்த சரீரத்தைவிட்டு, அணுஸ் வரூபத்தை யடைந்து, ஸந்தோஷமான ஆத்மாவைப்பெற்று, ஸுகிக்கிறான் ஆகை யா லிப்படிப்பட்ட உன்விஷயத்திலந்த ஆத்மஸ்தானம் திறந்து வைக்கப்பட்டிருக்கிற தாய் நினைக்கிறேன்.

ர௦-ஹ.—இந்த ஆத்மவிஷயத்தில், ச்ரவணம், மநநம் நிதித்யாஸநம், முதலிய வற்றால், கர்மத்தாலாகிய சரீரத்தைநீக்கி, தனக்கந்தராத்மாவா யிருக்கிற ‹‹அணீயாந் ஹ்யப்ரதர்க்யமணுப்ரமாணாத்›› என்கிற விடத்தில்ச் சொல்லியபடி அணுரூபியான பர மாத்மாவை, பரமபதத்தில் கிட்டி இந்த வித்வானான மனுஷ்யனும், அபஹதபாப்ம த்வம் முதலிய எட்டுகுணங்களைப்பெற்று மகாஸந்தோஷத்தோடு வாழுகிறான். ‹‹ஏ ஷ ஸம்ப்ரஸாதோऽஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரஞ்ஜ்யோதி ருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே›› இதுமுதலான ப்ரமாணங்களை இங்கு நினை ப்பது.

௧௪. அந்யத்ர தர்மாதந்யத்ராதர்மாதந்யத்ராஸ்மாத்க்ருதாக்ருதாத்।
அந்யத்ர பூதாச்ச பவ்யாச்ச யத்தத்பஶ்யஸி தத்வத॥

౧౪. అన్యత్రధర్మాదన్యత్రాధర్మాదన్యత్రాస్మాత్కృతాకృతాత్।
అన్యత్రభూతాచ్చభవ్యాచ్చయత్తత్పశ్యసితద్వద॥

(ப்-ம்.) தர்மாத் - தர்மத்தைக்காட்டிலும், அந்யத்ர - வேறானதும் அதர்மாத்-அதர்மத்தைக்காட்டிலும், அந்யத்ர-வேறானதும், அஸ்மாத்-இந் த, க்ருதாக்ருதாத்-கார்யகரணத்திலும், அந்யத்ர-வேறானதும், பூதாத்-முன்காலத்தியதைக்காட்டிலும், பவ்யாத்-வருங்காலத்தியதைக் காட்டி லும்; அந்யத்ர-வேறானதுமாகிய, யத்-யாதொன்றை, பஶ்யஸி-பார்க்கி றாயோ; தத்-அதை, வத-சொல்லவேணும்.

ஸ௦-ஹா.—இப்படி சொன்ன யமன் வார்த்தையைக்கேட்டு, நசிகேதஸ்ஸு, மறுபடியும் சொல்லுகின்றான்.—நான், மோக்ஷத்திற்கு யோக்யனாயிருப்பதும், நீ, எ ன்விஷயத்தில் ப்ரஸந்நனாயிருப்பதும், வாஸ்தவமானால், தர்மம், அதர்மம் முதலிய எல்லாவஸ்துக்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தை எனக் குச் சொல்லவேணுமென்று கேட்கிறேன்.

ரா-ஹா.—புண்யம், பாபம், இவைகளில் வேறாயிருக்கிற, உபாஸநமென்கிற, மோக்ஷோபாயமான பக்திஸ்வரூபத்தையும், ஸகலேதரவிலக்ஷணமா யிருக்கிற, ப்ரா ப்யமென்கிற, ப்ரம்மரூபமான உபேயஸ்வரூபத்தையும், ப்ராப்தாவான ஜீவாத்மஸ்வ ரூபத்தையும், தெளிவாய்த் தெரிந்துக்கொள்ளும்பொருட்டு, இவைகளை நன்றாயுப தேசிக்கும்படி, நசிகேதஸ்ஸு, யமனைக்கேட்டார்.

கரு. ஸர்வே வேதா யத்பதமாமநந்தி தபாꣳஸி ஸர்வாணி ச யத்வதந்தி। யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதꣳ ஸங்க்ரஹேண ப்ரவீம்யோமித்யேதத்॥

౧౫. సర్వేవేదాయత్పదమామనంతితపాంసిసర్వాణిచయద్వదంతి।
యదిచ్ఛంతోబ్రహ్మచర్యంచరంతితత్తేపదగ్ంసంగ్రహేణబ్రవీమ్యోమిత్యేతత్॥

(ப்-ம்.) யத்பதம் - யாதொரு ப்ராப்யஸ்ரூபத்தை ; ஸர்வே வேதா:- எல்லாவேதங்களும், ஆமநந்தி-சொல்லுகின்றனவோ, யச்ச-யாதொன்றை, ஸர்வாணி தபாꣳஸி எல்லாதவங்களும், வதந்தி - சொல்லுகின்றனவோ; யத்-யாதொன்றை, இச்சந்த:-விரும்பினவர்கள், ப்ரஹ்மசர்யம் - ப்ர்ம்மசர்யத்தை, சரந்தி-செய்கிறார்களோ, தே-உனக்கு, தத்பதம்-அந்தப்ராப்யஸ்வரூபத்தை, ஸங்க்ரஹேண-சுருக்கமாய், ப்ரவீமி-சொல்லுகிறேன். ஏதத்-இதானது, ஓமிதி-ஓமென்பதே.

ஸா-ஹா.—இப்படிகேட்ட நசிகேதஸ்ஸைக்குறித்து, யமன் சொல்லுகிறான்.— எல்லாவேதங்களுக்கு முட்பொருளாய், தபஸ்ஸு முதலியவற்றால் அடையத்தக்கதாய், குருகுல வாஸத்தாலே யறியத்தக்கதாயிருக்கிற ப்ரம்மஸ்வரூபத்தை உன்னுடைய இஷ்டப்படி சுருங்கச் சொல்லுகிறேன். இது, ஓமென்பதேயாகும்.

ரா-ஹா.—வேதங்களும், வேதாந்தங்களும், எந்தப்ராப்யஸ்வரூபத்தைச் சொல்லுகின்றனவோ; யாதொன்றை விரும்பி வைராக்கியத்தையடைகிறார்களோ; அந்த ப்ராப்யஸ்வரூபத்தை சுருக்கமாய்ச் சொல்லுகிறேன். அப்படி இந்தப்ராப்ய ஸ்வரூபத்தை நன்றாய்ச்சொல்லுகிற சுருங்கின சப்தமானது ப்ரணவமே என்று, ப்ரணவத்தைக்கொண்டாடிக்கொண்டு, மேலே விஸ்தரமா யுபதேசிப்பதாய் நிச்சயித்து, இப்படி சுருங்க, நசிகேதஸ்ஸுக்கு, யமன் சொன்னான்.

கசா. ஏதத்த்யேவாக்ஷரம் ப்ரஹ்ம ஏதத்த்யேவாக்ஷரம் பரம்।
ஏதத்த்யேவாக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யதிச்சதி தஸ்ய தத்॥

౧౬. ఏతద్ధ్యేవాక్షరంబ్రహ్మఏతద్ధ్యేవాక్షరంపరం।
ఏతద్ధ్యేవాక్షరంజ్ఞాత్వాయోయదిచ్ఛతితస్యతత్ ॥

(ப்-ம்.) ஏதத்த்யேவாக்ஷரம்-இந்தப்ரணவமே, ப்ரஹ்ம-ப்ரம்மம், ஏதத்த்யேவாக்ஷரம்-இந்தப்ரணவமே, பரம்-ச்ரேஷ்டம், ஏதத்த்யேவாக்ஷரம்-இந்தப்ரணவத்தையே, ஜ்ஞாத்வா-அறிந்தால், ய:யதிச்சதி-யவனெதை விரும்புகிறானோ, தஸ்ய தத்-அவனதையடைகிறான்.

ஸா-ஹா.—அபரப்ரம்மம், பரப்ரம்மம் இவ்விரண்டு ப்ரணவாக்ஷரமே; இதை ப்ரதீகமாய், அல்லது, அப்ரதீகமாய், உபாஸித்தால், அபரப்ரம்மத்தை, அல்லது பரப்ரமத்தை விரும்பினபடி யடைகிறான்.

ரா-ஹா.—இந்த ப்ரணவாக்ஷரமே, பர்ப்ரம்மப்ராப்தி ஸாதகமான உபாஸநாவிஷயம், இதுவே எல்லா மந்திரங்களிலும், சிறந்து. இப்படி யறிந்தால் எதைவே

ண்டிருலதை, இந்த உபாஸகனடையலாகும், என்று இம்மந்திரத்தில், ப்ரணவ த்தைக்கொண்டாடியிருக்கிறது. மேல்மந்திரத்திலும், ப்ரணவத்தையேகொண்டாடு கிறது.

கஎ. ஏத஦ாலம்பநம் ஶ்ரேஷ்டமேத஦ாலம்பநம் பரம்।
ஏத஦ாலம்பநம் ஜ்ஞாத்வா ப்ரஹ்மலோகே மஹீயதே॥

౧౭. ఏతదాలంబనగ్ శ్రేష్ఠ మేతదాలంబనంపరమ్।
ఏతదాలంబనంజ్ఞాత్వా బ్రహ్మలోకేమహీయతే॥

(ப்-ம்.) ஏதத்-இந்த, ஆலம்பநம்-ஆலம்பநமானது, ஶ்ரேஷ்டம்-ஶ்லாக்கியமானது, பரம்-சிறந்தது, ஜ்ஞாத்வா - அறிந்துக்கொண்டால், ப்ரஹ்மலோகே-ப்ரம்மலோகத்தில், மஹீயதே - பூஜிக்கப்படுகிறான்.

ஸம-ஹா.—யோகத்தில் ஜ்ஞாநத்தை நிலைபெறும்படி செய்கிற பொருளுக்கு, ஆலம்பனமென்றுபெயர். இப்படிப்பட்ட ஆலம்பநங்களுக்குள், இது மிகவும் சிறந்தது. அபர ப்ரம்மம், பரப்ரம்மம்,இவை இரண்டையும் விஷயமாகவுடையது.இந்த ஆலம்பநத்தையறிந்தவன் பராபரப்ரம்மலோகங்களில்,ப்ரம்மம்போலாய்விடுகிறான்

ரா-ஹா.—த்யாகம் முதலியதற்கு,ச்ரேஷ்டமான ஆலம்பனமாயிருக்கிற ப்ரணவத்தை யறிந்து.உபாஸிக்கிறவன், ப்ரம்மலோகத்தை யடைந்து ஸந்தோஷிக்கிறான.

பதாந்வயார்த்தபேதங்கள்.

"பரம்" என்கிற பதத்திற்குமுன்னும், "ஏத஦ாலம்பநம்" என்று கூட்டிக்கொள்க. அப்படியே. "ஜ்ஞாத்வா" என்கிற பதத்திற்கு முன்னும் கூட்டிக்கொண்டு, இரண்டாம் வேற்றுமையாய்க்கொள்க. இராமாநுஜபாஷ்யத்தில். "பரம்" என்கிற பதத்திற்கு முன்னிருக்கிற, "ஏத஦ாலம்பநம்" என்கிற பதத்திற்கு. பகுவ்ரீஹிஸமாஸங்கொண்டு இதை ஆலம்பனமாகவுடைய உபாஸநமென்று பொருளுரைக்கப்பட்டதென்றுணர்க.

கஅ. ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சிந் நாயம் குதஶ்சிந் ந பபூவ கஶ்சித்। அஜோ நித்ய: ஶாஶ்வதோऽயம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே॥

౧౮. నజాయతేమ్రియతేవావి పశ్చిన్నాయంకుతశ్చిన్నబభూవకశ్చిత్।
అజోనిత్యశ్శాశ్వతోఽయం పురాణోనహన్యతేహన్యమానేశరీరే॥

(ப்-ம்.) அயம்-இந்த, விபஶ்சித்-ஜ்ஞாதாவான ஆத்மா, ந ஜாயதே - பிறப்பதில்லை, ந ம்ரியதே-மரிப்பதில்லை. குதஶ்சித் - ஒருகாரணத்தால். ந-உண்டாகிறவனில்லை. கஶ்சித்-ஒருவனாய், ந பபூவ - பிறந்தவனன்று, ஏனென்றால், அஜ:-பிறப்பில்லாதவன், நித்ய:- எப்போதுமுள்ளவன், ஶாஶ்வத:-காரணமில்லாதவன்,புராண:-முன்காலத்திலும்புதுயமனாயிருப்பவன், ஶரீரே-தேகமானது, ஹந்யமாநே - கொல்லப்பட்டாலும், ந ஹந்யதே-கொல்லப்பட்டான்.

ஶா.—பேதமொன்றுமில்லாத ஆத்மஸ்வரூபத்திற்கு ஆலம்பநமாய்ச்சொ ப்ரணவமானது, அபரப்ரம்மத்திற்கு, ப்ரதீகமாய் மந்தாதிகாரிகளுக்குச் சொல்லப்பட்டது. இனி அந்த ப்ரணவத்திற்கு ஆலம்பனமாகிய ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்தாய்ச் சொல்லத்தொடங்கி, இப்படி சொல்லப்படுகிறது ஜந்மஜராமரணம் முதலிய விகாரங்களொன்றுமில்லாததாய், ஒருகாரணத்தாலுமொருவிதமாய் மாறுத லில்லாததாயிருக்கிற ஆத்மஸ்வரூபமானது, சரீரத்துக்கு, மரணம்முதலியவிகாரங்க ளுண்டானாலும் மாறுபாடின்றி ஒரேரூபமாயிருக்கிறது.

ரா-ஸா.—பிறப்பில்லாதவனுகையால், பிறப்பரல்லை. நித்யனுகையால், மரிப்பதி ல்லை. சாச்வதனுகையால், ஒருகாரணமுமுடையவனன்று முக்காலத்திலு முளனுகையா ல் முன்னொருகாலத்திலொழிவனுய்ப்பிறந்தவனன்று. அழியுந்தன்மையுள்ள சரீரத்தி லிருக்கிற இவனைஎவ்வாறு நித்யனென்றுசொல்லதென்று ஸந்தேஹிக்கவேண்டாம்; சரீரமழிந்தாலு மிவனழிகிறதில்லை.

௧௯. ஹந்தா சேந் மந்யதே ஹந்தும் ஹதஶ்சேந் மந்யதே ஹதம்।
உபௌ தௌ நவிஜாநீத: நாயம் ஹந்தி நஹந்யதே॥

௧௯. హంతా చేన్మన్యతే హంతుంగ్ హతశ్చేన్మన్యతే హతమ్ ।
ఉభౌ తౌ నవిజానీతః నాయగ్ హంతి నహన్యతే ॥

(ப்-ம்.) ஹந்தா-அடிப்பவன், (ஏநம்-இந்த ஆத்மாவை) ஹந்தும்-அ டிப்பதற்கு, மந்யதே சேத்-நினைப்பானேயானல், ஹத: - அடியுண்டவன், (ஆத்மாநம்-தன்னை) ஹதம் - அடிக்கப்பட்டவனுய், மந்யதே சேத்-நினை ப்பானேயானுல். தௌ உபௌ - அவர்களிருவரும், (ஆத்மஸ்வரூபம் - ஜீ வாத்மஸ்வரூபத்தை) நவிஜாநீத: அறியவில்லை, ஏனென்றல், அயம்-இ ந்தஅடிப்பவன். (ஏநம் - இந்தஜீவாத்மாவை) நஹந்தி - அடிப்பதில்லை. (அயம்-இந்த ஆத்மாவானவன்) நஹந்யதே - அடிக்கப்படுகிறதில்லை.

ஶா-ஸா.—இப்படியுள்ள ஆத்மாவை, சரீரத்தையே ஆத்மாவாகநினைத்திருக்கி ற ஹந்தாவானவன். இவனையடிப்பேனென்று, அடிப்பதற்கு நினைப்பானுகில; அந்த மூடனும், அவனுலடியுண்டவனுய் நினைக்கப்பட்ட மற்றொருவன், நானடியுண்டே னென்று, தன்னை, அடியுண்டவனுய்நினைப்பானுகில்; அந்தமூடனும், ஆகியஇவ்வி ருவரும், ஆத்மஸ்வரூபத்தை யுணர்ந்தவரில்லை. அவிகாரமாகிய இவ்வாத்மாவை, ஒ ருவனுமடிப்பதில்லையன்றே; ஆகையாலாகாசம்போலிருக்கிற ஆத்மா அடியுண்பதுமி ல்லையன்றே; அகையால் தர்மம், அதர்மம், இவைகளைலக்ஷணமாகவுடைய ஸம்ஸா ரமானது, ஆத்மஸ்வரூபமறியாதமூடனுக்கேயுள்ளது; வேதப்ரமாணத்தாலும், அது பற்றிவருகிற ந்யாயத்தாலும், ஆத்மஸ்வரூபமறிந்தவனுக்கு, ஸம்ஸாரமில்லை.

ரா-ஸா.—ஆகவிப்படி எல்லாப்ரகாரத்தாலு மாத்மஸ்வரூப மழிவில்லாதது. ஸ்ருதிகளிலும் பாஞ்சராத்திரத்திலுமிப்படியே சொல்லியிருக்கிறது, பரமாத்மாவை ப்போலவே, ஜீவாத்மாவுக்கும் ஸ்வரூபவிகாரமில்லை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

அந்வயார்த்தங்களெல்லாம் சங்கரபாஷ்யத்திலும், இராமாநுஜ பாஷ் யத்திலும், ஒருவிதமாகவே கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையா லிராமாநு

ஜபாஷ்யத்தியபதார்த்தம், தனியாய்ச்சொல்லவில்லை. இங்கு, இராம
நுஜபாஷ்யத்திலுள்ள எல்லாவிஷயங்களையும் சொல்லில் பெருகுமென்று
ஸாராம்சஸங்க்ரகம் செய்யப்பட்டது.

உ௦. 𑌅𑌣𑍋𑌰𑌣𑍀𑌯𑌾 𑌨𑍍𑌮𑌹𑌤𑍋 𑌮𑌹𑍀𑌯𑌾 𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌤𑍋𑌰𑍍 𑌨𑌿𑌹𑌿
𑌤𑍋 𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌮𑍍 । 𑌤𑌮𑌕𑍍𑌰𑌤𑍁𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑍋 𑌧𑌾𑌤𑍁𑌃 𑌪𑍍𑌰𑌸𑌾
𑌦𑌾𑌨𑍍𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃॥

౨౦. అణోరణీయాన్మహతో మహీయా నాత్మాస్యజంతోర్నిహితో గుహాయాం ।
తమక్రతుఃపశ్యతి వీతశోకో ధాతుఃప్రసాదాత్ మహిమానమాత్మనః ॥

(ப-ம்.) 𑌅𑌣𑍋𑌃 𑌅𑌣𑍀𑌯𑌾𑌨𑍍-அணுவிலுமணுவாய், 𑌮𑌹𑌤𑌃 𑌮𑌹𑍀𑌯𑌾𑌨𑍍-பெரியதிலும் பெரியதாய், 𑌅𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌤𑍋𑌃 - இந்தசேதநநுக்கு, 𑌆𑌤𑍍𑌮𑌾, நியமிப்பதாயிருக்கிற ஆத்மஸ்வரூபமானது, 𑌅𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌤𑍋𑌃-இந்தசேதநனுடைய, 𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌮𑍍-ஹ்ருதயகுஹையில், 𑌨𑌿𑌹𑌿𑌤𑌃 - வைக்கப்பட்டிருக்கிறது. 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 - தன்னுடைய, 𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑍍-மகிமைக்கி ஹேதுவாயிருக்கிற, 𑌤𑌮𑍍-அந்தஸ்வரூபத்தை, 𑌅𑌕𑍍𑌰𑌤𑍁𑌃 - காமாகர்மங்களை யநுஷ்டியாத சேதனன், 𑌧𑌾𑌤𑍁𑌃 - தாரகனா யிருக்கிறவனுடைய, 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍 - அநுக்ரகத்தால், 𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑌸𑍍𑌸𑌨𑍍 - துக்கமற்றவனாய்க்கொண்டு, 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 - காண்கிறான்.

ஸா-ஹா —இந்தமந்திரத்தில் ஆத்மாவைக்காண்கிற வழி சொல்லப்படுகிறது. உலகத்திலுள்ள எல்லாப்பொருளும், சிறிதாயினும், பெரிதாயினும்,நித்யனாயிருக்கிற ஆத்மாவினால் ஆத்மாவையுடையதாகின்றது. இந்த ஆத்மாவின் ஸம்பந்த மில்லாதது, அஸத்தாய்விடுகிறது. இந்த ஆத்மஸ்வரூபமானது, ப்ரம்மாதி ஸ்தம்ப பர்யந்தமுள்ள எல்லாப்ராணிகளுடைய ஹ்ருதயகுஹையிலுமிருக்கின்றது.இந்த ஆத்மஸ்வரூபத்தை நிஷ்காமனாய், கர்ம மூலமாய்வருகிற விருத்தி, க்ஷயம், இவைகளைநீக்கி, விளங்கும்போது; ப்ரத்யக்ஜ்ஞாநத்தாலே காண்கிறான். அப்போது எல்லாதுக்கங்களும் நீங்கி ஸுகமாய் ப்ரகாசிக்கிறான். இதைவிட, ஆத்ம ஸ்வரூபத்தைக் காண்பதற்கு வேறுவழியில்லை ஆகையால், காமிகளாயிருக்கிற ப்ராக்ருத புருஷர்களாலே ஆத்ம ஸ்வரூபம் காணப்பட்டது.

ரா-ஹா —இரண்டுமந்திரங்களாலே ஜீவாத்மஸ்வரூபத்தை சோதித்து, இனி அந்தஜீவாத்மாவுக்கு மந்தராத்மாவாகிய, பரமாத்மா இப்படிப்பட்டவனென்று, அவன்ஸ்வரூபத்தைஜ்வலிக்கிறது. அணுக்களில்சிறந்த அணுவாய்,மகத்தில் மகத்தரமாயிருக்கிறதும், ஸகலஜந்துக்களுக்கு மந்தராத்மாவானதும், எல்லாருடைய ஹ்ருதய குஹையிலிருப்பதும், இந்த ஜீவாத்மாவுக்கு, அபகதபாப்மத்வம், முதலிய அஷ்டகுணங்களுண்டாகும்படி, கடாக்ஷித்து, இவனைமுக்தனுக்குகிறதும், ஆகிய இந்தகுணங்களுக்கு, இருப்பிடமானது பரமாத்மஸ்வரூபம். இந்த பரமாத்ம ஸ்வரூபத்தைக் கண்டால், எல்லாதுக்கங்களும் நீங்கி, ஸுகமாயிருப்பான். இப்படி அவனைக்காண்பது; அவனுடைய அநுக்ரகத்தினாலே வரவேணுமல்லது வேறுமார்க்கத்தால், வராது.

உக. 𑌆𑌸𑍀𑌨𑍋 𑌦𑍂𑌰𑌂 𑌵𑍍𑌰𑌜𑌤𑌿 𑌶𑌯𑌾𑌨𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 ।
𑌕𑌸𑍍𑌤𑌂 𑌮𑌦𑌾𑌮𑌦𑌂 𑌦𑍇𑌵𑌂 𑌮𑌦𑌨𑍍𑌯𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌤𑌿 ॥

౨౧. ఆసీనో దూరం వ్రజతి శయానో యాతి సర్వతః ।
కస్తం మదామదం దేవం మదన్యో జ్ఞాతుమర్హతి ॥

(ப-ம்.) ஆஸீந:-இருந்துக்கொண்டே, தூரம்.- தூரத்தில், வ்ரஜதி- போகிறான், ஶயாந:-படுத்துக்கொண்டே, ஸர்வத: - எல்லாவிடங்களிலும்,யாதி - போகிறான். மதாமதம் - ஸுகதுக்கங்களின் நடுவிலிருக்கிற, தம்- தேவம்-அந்தபரமாத்மாவை. மதந்ய:-என்னைக்காட்டிலும் வேறுயிருக்கிற, க:-எவன், ஜ்ஞாதும்-அறிவதற்கு, அர்ஹதி-தக்கவன்.

ஸ0-ஹா.—இந்த ஆத்மஸ்வரூபமானது, விருத்தங்களா யிருக்கிற தர்மங்களை யடைந்ததுபோல் தோற்றுகின்றது. இவைகளுக்கு சிற்சிலவழிகளாலே பரிகாரம் சொல்லிக்கொள்ளவேணும். ஆகையால், என்னைப்போல், கல்லறிவுடையதீரனால் அறியப்படுமேயன்றி, மற்றொருவராலுமறியப்படாது. ஆகையால், ஜாகரூகனை யிருந்து அந்த பரமாத்மஸ்வரூபத்தை யறிந்துக்கொள்.

ரா-ஹா.—அந்த பரமாத்மாவினுடைய அனுக்கிரகமன்றியில் அந்த பரமாத்மாவைக்காண்பது, கூடாததென்றுசொன்னதை ஸ்திரப்படுத்துகிறது. எல்லாப்பொருளுக்கு மந்தராத்மாவாகையாலே, இதரமான விடங்களில் விருத்தமாயிருக்கிற எல்லாதர்மங்களும், ஜீவாத்மாவின் வழியாய்சேர்ந்து விடுகின்றனவாகையால், விருத்தங்களாயிருக்கிற ஆஸீநத்வம்முதலியவைகளுக்கு பரமாத்ம ஸ்வரூப மாதாரமாகிறது. இப்படிப்பட்ட பரமாத்மஸ்வரூபத்தை, என்னைப்போலே பண்டிதனை யிருக்கிறவனே அறிவான், மற்ற எவனு மறியமாட்டான்.

௨௨. அஶரீரம் ஶரீரேஷு அநவஸ்தேஷு அவஸ்திதம் ।
மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரோ ந ஶோசதி ॥

౨౨. అశరీరగ్ శరీరేష్వనవస్థేష్వవస్థితం ।
మహాంతంవిభుమాత్మానం మత్వాధీరో నశోచతి ॥

(ப-ம்.) அஶரீரம்-சரீரமில்லாததும் ,ஶரீரேஷு - சரீரங்களிலே அவஸ்திதம்- இருப்பதும், அநவஸ்தேஷு-அநித்யங்களிலே, அவஸ்திதம் - நித்யமாயிருப்பதும், மஹாந்தம்-பெரியதும், விபும்-வ்யாபித்திருப்பதுமான, ஆத்மாநம்-ஆத்மஸ்வரூபத்தை, மத்வா - அறிந்திருக்கிற, தீர: - தீரன், ந ஶோசதி-சோகத்தையடையான்.

ஸ0-ஹா.—அந்தபரமாத்மாவை யறிந்தவனுக்கு சோகமில்லையென்று சொல்லுகிறது ஆகாசம்போல் ரூபமில்லாமல், பெரும்பொருளாய் வ்யாபித்திருக்கிற ஆத்மாவைக்கண்டால், பின்புசோகமில்லை. பெரும்பொருளென்றால், எல்லாப் பொருளும், தன்னைக்காட்டிலும் சிறியனவாயிருக்கிற பொருள்களில் பெரிதேயானதால், இங்கு, வ்யாபியென்று தோற்றுகைக்காக, 'விபும்'என்று சொல்லப்பட்டது. ஆத்மாநம் என்கையால்,ஜீவாத்மா, பரமாத்மா, இவைகளுக்கு பேதமில்லையென்று சொல்லப்பட்டது. ஆத்மசப்தமானது, ஜீவாத்மாவிஷயத்தில் ப்ரஸித்தமன்றோ, ஆகையால், இப்படிப்பட்ட ஆத்மாவை யறிந்தவனுக்கு சோகம்வர வழியில்லை.

𑌰𑌾-𑌭𑌾.—கர்மத்தாலாகிய சரீரமில்லாதவனும் நித்யனும் அப்ராக்ருத ஸ்வாஸாதாரண திவ்யமங்கள விக்ரகயுக்தனுமிருக்கிற பரமாத்மாவை யறிந்தவனுக்கு சோகமில்லை.

௨௩. 𑌨𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑍋 𑌨 𑌮𑍇𑌧𑌯𑌾 𑌨 𑌬𑌹𑍁𑌨𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨 । 𑌯𑌮𑍇𑌵𑍈𑌷 𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍 𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑌨𑍂𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑍍 ॥

౨౩. నాయమాత్మాప్రవచనేనలభ్యో నమేధయానబహునాశ్రుతేన ।
యమేవైషవృణుతేతేనలభ్యస్తస్యైష ఆత్మావివృణుతేతనూగ్ంస్వామ్॥

(ப-ம்.) 𑌅𑌯𑌮𑍍-இந்த ஆத்மாவானவன், 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇𑌨 - மநநத்தாலும், 𑌮𑍇𑌧𑌯𑌾-புத்தியாலும், 𑌬𑌹𑍁𑌨𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨 - அதிகமாய்க்கேட்டதாலும், 𑌲𑌭𑍍𑌯𑌃-அடையத்தக்கவனன்று, 𑌯𑌮𑍍-யாதொருவனை, 𑌏𑌷𑌃 - இந்தபரமாத்மா, 𑌵𑍃𑌣𑍁𑌤𑍇-வேண்டுகிறானோ, 𑌤𑍇𑌨 - அவனால், 𑌲𑌭𑍍𑌯𑌃 - அடையத்தக்கவன், 𑌤𑌸𑍍𑌯 - அவனுக்கு, 𑌏𑌷𑌃 - இந்தபரமாத்மா, 𑌸𑍍𑌵𑌾𑌮𑍍 - 𑌤𑌨𑍂𑌮𑍍-தன் ஸ்வரூபத்தை, 𑌵𑌿𑌵𑍃𑌣𑍁𑌤𑍇-காட்டுகிறார்.

𑌶𑌂-𑌭𑌾.—இப்படி ஆத்மா அடையக்கூடாதவனாயினும், உபாயத்தாலே அடையத்தக்கவனென்று செல்லுகிறது. அந்த உபாயமானது, அத்யயநம், தாரணம், ப்ரவசநம், முதலிய இவைகள்மாத்திரமன்று. நிஷ்காமனாகிய ஆத்மாவை விரும்புதலே இதற்கு முக்யோபாயம். அப்படி விரும்புகிறவனுக்கே, இந்த ஆத்மஸ்வரூபம் ப்ரகாசிக்கிறது.

𑌰𑌾-𑌭𑌾.—கேவலச்ரவண,மநந,நிதித்யாஸநங்களால்,இந்த ஆத்மா அடையப்படான். அந்தபரமாத்மாவின் ப்ரீதியைப்பெற்றால், அவனையடையலாகும். அவன் ப்ரீதியைப்பெறுதல்,அவனிடத்தி லிவனுக்கு ப்ரீதியுண்டானலேயாகும் ஆகையால், பரமாத்மாவினிடத்தில் நிரதிசயப்ரீதியைப்பண்ணி யவனையுபாஸித்தால் அவனுடைய வநுக்ரகத்தாலே அவனுடைய நித்யவிபூதியில், நித்யாநந்த ஸ்வரூபமா யிருக்கிற திவ்யமங்கள விக்ரக விசிஷ்ட திவ்யாத்மஸ்வரூபத்தை கண்டு மகிழலாகும்.

௨௪. 𑌨𑌾𑌵𑌿𑌰𑌤𑍋 𑌦𑍁𑌶𑍍𑌚𑌰𑌿𑌤𑌾𑌨𑍍𑌨𑌾𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌨𑌾𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 ।
𑌨𑌾𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑌾𑌨𑌸𑍋 𑌵𑌾𑌪𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨𑍈𑌨𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 ॥

౨౪. నావిరతోదుశ్చరితాన్నాశాన్తోనాసమాహితః ।
నాశాన్తమానసోవాపి ప్రజ్ఞానేనైనమాప్నుయాత్ ॥

(ப-ம்.) 𑌦𑍁𑌶𑍍𑌚𑌰𑌿𑌤𑌾𑌤𑍍-நிஷித்தங்களில் நின்றும், 𑌅𑌵𑌿𑌰𑌤𑌃 - நீங்காதவனும், 𑌅𑌶𑌾𑌨𑍍𑌤𑌃-சாந்தியில்லாதவனும், 𑌅𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌃 - நிலையில்லாதவனும், 𑌅𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 - மநச்சாந்தியில்லாதவனும், 𑌏𑌨𑌮𑍍 - இந்த ஆத்மாவை, 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨-உபாஸநத்தால், 𑌨𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍-அடையமாட்டான்.

𑌶𑌂-𑌭𑌾.—𑌶𑍍𑌰𑍁𑌤𑌿ஸ்ம்ருதி முதலியவற்றில் நிஷேதிக்கப்பட்டக்ருத்யங்களைச் செய்துகொண்டு, உபசாந்தியில்லாமலிருக்கிற புருஷன் ஆத்மாவைப் பெறமாட்டான். சாஸ்திரப்படி இருப்பவனேபெறுவான்.

—உபாஸநாங்கமாயிருக்கிற நிஷித்தநிவ்ருத்தியில்லாதவனுக்கு. அங்க நாசம், உபாஸநாஸாத்குண்யமில்லாமையாலே, பரமாத்மப்ராப்திகிடையாமையால், துச்சரிதங்களைவிட்டு, ஸதநுஷ்டானங்களோடு கூடிய புருஷனே, பரமாத்மாவை யடைவான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்தச்லோகத்தில், 'க' என்கிறபதம், நாலிடங்களிலிருக்கிறபடியால், இதை நாலுவாக்யங்களாக்கி அந்வயித்துக்கொள்க.

௨௫. 𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌚 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌂 𑌚 𑌉𑌭𑍇 𑌭𑌵𑌤 𑌓𑌦𑌨𑌃 ।
𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌯𑌸𑍍𑌯𑍋𑌪𑌸𑍇𑌚𑌨𑌂 𑌕 𑌇𑌤𑍍𑌥𑌾 𑌵𑍇𑌦 𑌯𑌤𑍍𑌰 𑌸𑌃 ॥

౨౫. యస్యబ్రహ్మచక్షత్రంచ ఉభేభవతఓదనః ।
మృత్యుర్యస్యోపసేచనం కఇత్థావేదయత్రసః ॥

(ப்-ம்.) 𑌯𑌸𑍍𑌯-யாதொருபரமாத்மாவுக்கு, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮-ப்ராம்மணர்களும், 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌂-க்ஷத்திரியர்களும், 𑌓𑌦𑌨𑌃-அந்நமாய், 𑌭𑌵𑌤𑌃-ஆகிறார்களோ, 𑌯𑌸𑍍𑌯-எந்தபரமாத்மாவுக்கு, 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 யமன், 𑌉𑌪𑌸𑍇𑌚𑌨𑌂-வ்யஞ்சனமோ; 𑌸𑌃-அந்தபரமாத்மா, 𑌯𑌤𑍍𑌰-யாதொரு ப்ரகாரத்தி லிருக்கிறானோ, அந்தப்ரகாரத்தை, 𑌕𑌃-எவன், 𑌇𑌤𑍍𑌥𑌾-இப்படிப்பட்டதென்று, 𑌵𑍇𑌦-அறிவான்.

ஸ°-ஹா.—இந்தஸாதகனைப்போல், ஸகலசராசரங்களையும் ம்ருத்யுவை உபஸேசநமாக்கிக்கொண்டு, ஸம்ஹரிக்கிற (அதாவது, ம்ருத்யுமுதலான சகலத்தையுமழிக்கிற) பரமாத்மாவை, மற்றொருவன்காணமாட்டான்.

ஏா-ஹா.—ப்ராம்மணன், க்ஷத்ரியன், என்கிறஜாதியோடு குடிகொண்டிருக்கிற சராசரங்களெல்லாவற்றையும், எவன், அந்நமாக்கிக் கொள்ளுகிறானோ; அதாவது, எவனாலழிக்கப்படுகிறதோ; யாதொருவன், ம்ருத்யுவைக்கொண்டு, அந்யங்களை புசித்து, ம்ருத்யுவையும் புசிக்கிறானோ; ஸகலஜகத்தையுமழிக்கிற அந்த பரமாத்மா, எப்படிப் பட்டவரா யிருக்கின்றாரோ; அந்த உண்மையை, இப்படிப் பட்டதென்று எவனறிவான்.

கடோபநிஷத் த்விதீயவல்லி முடிந்தது.

---

𑌤𑍃𑌤𑍀𑌯𑌵𑌲𑍍𑌲𑍀 𑌪𑍍𑌰𑌾𑌰𑌂𑌭𑌃.

௧. 𑌋𑌤𑌂 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍌 𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯 𑌲𑍋𑌕𑍇 𑌗𑍁𑌹𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑍌 𑌪𑌰𑌮𑍇 𑌪𑌰𑌾𑌰𑍍𑌧𑍇 । 𑌛𑌾𑌯𑌾𑌤𑌪𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍋 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑌯𑍋 𑌯𑍇 𑌚 𑌤𑍍𑌰𑌿𑌣𑌾𑌚𑌿𑌕𑍇𑌤𑌾𑌃 ॥

౧. ఋతంపిబంతౌసుకృతస్యలోకే గుహాంప్రవిష్టౌపరమేపరార్ధే ।
ఛాయాతపౌబ్రహ్మవిదోవదంతి పంచాగ్నయోయేచత్రిణాచికేతాః ॥

(ப்-ம்.) 𑌋𑌤𑌂-கர்மபலத்தை, 𑌪𑌿𑌬𑌨𑍍𑌤𑍌-அநுபவிக்கிறவர்களாய், 𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯-புண்யத்தாலுண்டாகிய, 𑌲𑍋𑌕𑍇-இந்தலோகத்திலிருப்பவர்களாய், 𑌗𑍁𑌹𑌾𑌂-ஹ்ருதயகுகையில், 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑍌-ப்ரவேசித்திருப்

பவர்களாய், பரமே வ்யோமந் - ஹார்தாகாசத்திலிருக்கிற, தௌ - ஜீவன், பரமாத்மா இவர்களை, பஞ்சாக்நய: - க்ருஹஸ்தர்களாயும், த்ரிணாசிகேதா: - த்ரிணாசிகேதர்களாயுமிருக்கிற, ப்ரஹ்மவித: - ப்ரமவித்துக்கள், வதந்தி - சொல்லுகிறார்கள்.

ஸம்-ஸா.—நன்றாய் ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரியப்படுத்தச் சொல்லுகிறது. தன்னால்செய்யப்பட்ட கர்மபலத்தை யநுபவித்துக்கொண்டு, இந்தசரீரத்தில் ஹ்ருதயகுகையிலிருந்து, ஹார்தபரமாகாசத்தில் தோற்றுகிறஜீவன், பரமாத்மா, இவர்களை, பஞ்சாக்நிகளும் அதாவது க்ருகஸ்தர்களும் த்ரிணாசிகேதர்களும், ப்ரம்மவித்துக்களும், சொல்லுகிறார்கள். இவர்களில், ஒழிவன், ஸம்ஸாரி ஒருவன் அஸம்ஸாரி ஆகையால், அஸம்ஸாரியான பரமாத்மாவுக்கு, கர்மபலாநுபவ மெப்படியென்றால்; கூடியிருக்கையால், சத்திரிந்யாயத்தால் இருவரையும் கர்மபலத்தை யநுபவிக்கிறவர்களாகச்சொல்லுகிறது. கார்கபத்யம், தக்ஷிணாக்நி, ஆகவநீயம், ஸப்யம், ஆவஸத்யம், என்கிறவிவைகள், பஞ்சாக்நிகள்.

ஸா-ஸா.—"குஹாம் ப்ரவிஷ்டௌ" என்று ஒருவனாலுமறியப்படாததாய், ஆத்மஸ்வரூபம் சொல்லப்படுகையால், நாமுபாஸித்துப்பெறுவ தெப்படி என்று ஸந்தேகிக்க வேண்டாம்; ஜீவபரமாத்மாக்கள், ஒரிடத்தில் சேர்ந்திருக்கையால், நாம, ஸுகமாயுபாஸிக்கலாகுமென்று சொல்லுகிறது. புண்யம், பாபம், இவைகளின்பலத்தை யநுபவித்துக்கொண்டு, புண்யத்தாலாகிய இந்தலோகத்தில் ஹ்ருதயகுகையில் பரமாகாசத்தில், அதாவது ஹார்தாகாசத்தில் சேர்ந்திருக்கிற, அஜ்ஞ ஸர்வஜ்ஞர்களாகிய ஜீவாத்மா, பரமாத்மா, இவர்களை த்ரிணாசிகேதர்களாயும், பஞ்சாக்நிகளாயு மிருக்கிற ப்ரம்மவித்துக்கள், சொல்லுகிறார்கள். இப்படி கூடியிருக்கும்போது, பரமாத்மாவை ஜீவாத்மா அறியாமலிருப்பதற்குக் காரணம், அந்தபரமாத்மாவின் ஸங்கல்பத்தாலுண்டாயிருக்கிற கர்பமென்கிற அவித்யையினால் மறைக்கப்பட்டிருக்கிற ஸ்வஸ்வரூபத்தை யுடைத்தாயிருக்கை. இங்கு, பரமாத்மாவுக்கு கர்மபலாநுபவம், ப்ரயோஜக கர்த்ருத்வத்தாலே சொல்லப்பட்டது.

௨. யஸ்ஸேதுரீஜாநாநாமக்ஷரம் ப்ரஹ்ம யத்பரம் |
அபயம் திதீர்ஷதாம் பாரம் நாசிகேதம் சகேமஹி ||

౨. యస్సేతురీజానానామక్షరం బ్రహ్మయత్పరం ।
అభయంతితీర్షతాం పారంనాచికేతగ్ంశకేమహి ॥

(ப-ம்.) ஈஜாநாநாம் - யஜ்ஞாதிகர்மங்களை யநுஷ்டிப்பவர்களுக்கு, ஸேது: - பலத்தைக்கொடுப்பது, ய: - எதுவோ, அக்ஷரம் - அருவில்லாமலிருக்கிற, பரம் ப்ரஹ்ம - பரப்ரம்மமானது, யத் - எதுவோ, தத் - அந்த, திதீர்ஷதாம் - முமுக்ஷுக்களுக்கு, அபயம் பயமில்லாத, பாரம் - கரையாய், (அதாவது ப்ராப்யமாய்) நாசிகேதம் — நாசிகேதாக்நியினாலடையப்படுகிற பரமாத்மாவை; (உபாஸிதும் - உபாஸிப்பதற்கு,) சகேமஹி - சக்தர்களாயிருக்கிறோம்.

ஸம்-ஸா.—வேண்டினபலத்தைத் தருகிற நாசிகேதாக்நியையும், பயமில்லாத மோக்ஷத்தைத்தருகிற ப்ரம்மத்தையும், அறிந்துக்கொள்ள நாம் சக்தர்களாயிருக்கிறோம்.

ரா-ஹா.—எல்லா பலங்களையும் விரும்பினபடி, அவ்வோஸாதநங்களை யநுஷ்டித்தபேர்களுக்கு, கொடுப்பதாய், முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தைத் தருவதான அக்ஷரபரப்ரம்மத்தை, நாமுபாஸிப்பதற்கு சக்தர்களாயிருக்கிறோம். ஆகையால், எப்படி, உபாஸிக்கப்போகிறோமென்று பயப்படவேண்டாம்.

௩. ஆத்மாநஂ ரதிநஂ வித்தி ஶரீரஂ ரதமேவது ।
புத்திஂ து ஸாரதிஂ வித்தி மந: ப்ரக்ரஹமேவ ச ॥

3. ఆత్మానగ్ంరథినంవిద్ధి శరీరగ్ంరథమేవతు ।
బుద్ధింతుసారథింవిద్ధి మనఃప్రగ్రహమేవచ ॥

(ப-ம்.) ஆத்மாநம்-ஆத்மாவை, ரதிநம் – தேராளியாய், வித்தி - அறி, ஶரீரம் - தேகத்தை, ரதமேவ - தேராய், வித்தி - அறி, புத்திம் - புத்தியை, ஸாரதிம் - ஸாரதியாய், வித்தி-அறி, மந: - மனஸ்ஸை, ப்ரக்ரஹம்-ஏவச-கடிவாளமாய், வித்தி-அறி.

ஸம்-ஹா.—உபாதியாலேற்பட்ட ஸம்ஸாரியாகியஜீவன், வித்யை, அவித்யை, என்கிற இரண்டினையும் தன்னிச்சைப்படி, யநுஷ்டித்து, மோக்ஷம், ஸம்ஸாரம் இவைகளையடைவதற்கு ஸாதகமாக இரதம் முதலியவைகள் ஏற்படுத்தப் படுகின்றன. ஆத்மா தேராளிஎன்றும், சரீரம் இரதமென்றும் அத்யவஸாய மென்னப்படுகிற புத்தியை ஸாரதிஎன்றும், மனதைக் கடிவாளமென்றும், நீயறிந்துக்கொள். அதாவது, புத்தியினுலேவப்பட்ட நெஞ்சுபோகிற வழியில், சரீரம்முதலியவைகள் செல்லுகின்றன என்கை.

ரா-ஹா.—இந்த மந்திரம் முதல் "ஸோத்வந: பாரமாப்நோதி" என்கிற மந்திரகண்ட பர்யந்தம், ஸம்ஸாரத்திற் கக்கரையாகிய மோக்ஷத்தை யடைவதற்கு, பரிகரங்களைச்சொல்லிக்கொண்டு, ப்ராப்தாவான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை யுபதேசிக்கிறது. ஆகையாலிப்படி யறிந்து தேகேந்திரியாதிகளை வசப்படுத்திக்கொள்ள வேணும்.

௪. இந்த்ரியாணி ஹயாநாஹுர் விஷயாம்ஸ்தேஷு கோசராந் ।
ஆத்மேந்த்ரியமநோயுக்தம் போக்தேத்யாஹுர் மநீஷிண: ॥

౪. ఇంద్రియాణిహయానాహు ర్విషయాగ్ంస్తేషుగోచరాన్ ।
ఆత్మేంద్రియమనోయుక్తం భోక్తేత్యాహుర్మనీషిణః॥

(ப-ம்.) இந்த்ரியாணி-இந்திரியங்களை, ஹயாந்- குதிரைகளாக, ஆஹு: சொல்லுகிறார்கள், தேஷு, அவைகளுக்குள், விஷயாந் - விஷயங்களை, கோசராந்-மார்க்கங்களாக, ஆஹு:-சொல்லுகிறார்கள், மநீஷிண: - மண்டிதர்கள், ஆத்மேந்த்ரியமநோயுக்தம்-சரீரம், இந்த்ரியம், மனஸ்ஸு, இவைகளோடு கூடிக்கொண்டிருக்கிற புருஷனை, போக்தா-போக்தாவென்று ஆஹு:-செல்லுகிறார்கள்.

ஸம்-ஹா.—சரீரத்தை இழுக்கிறபடியால் இந்திரியங்களைக் குதிரைகளென்றும் இந்திரியங்கள் செல்லுகிறவிடம்சப்தாதிவிஷயங்களாகையால், சப்தாதிவிஷயங்களை

மார்கமென்றும் சொல்லுகிறுர்கள. அறிவுடையோர், கேவலாத்மாவுக்குபோக்த்ருத்வ மில்லாமையால் சரீரம் முதலியவற்ருேடு கூடியிருக்கிற ஆத்மாவையே போக்தாவென்று சொல்லுகிறுர்கள்.

ஸா-ஹா.—இரதம்முதலியவையாசரூபிக்சப்பட்ட சரீரம் முதலியவைகளோடு கூடாதபோது ஆத்மாவுக்குகர்த்ருத்வம், போக்த்ருத்வம், இவைகளில்லாமையால்சரீராதிகளோடு குடியிருக்கிற ஆத்மாவையே, பண்டிதர்கள், போக்தாவென்று சொல்லுகிறுர்கள்.

ரு. யஸ்த்வவிஜ்ஞாநவாந்பவத்யயுக்தேந மநஸா ஸதா|
தஸ்யேந்த்ரியாண்யவஶ்யாநி து³ஷ்டாஶ்வா இவ ஸாரதே²꞉||

ரு. యస్త్వవిజ్ఞానవాన్భవత్యయుక్తేనమనసాసదా।
తస్యేంద్రియాణ్యవశ్యానిదుష్టాశ్వాఇవసారథేః॥

(ப-ம்.) யஃ-து-யாதொருவன், ஸதா-எப்போதும், அயுக்தேந-நியமிக்கப்படாமலிருக்கிற, மநஸா-மனஸ்ஸாலே, அவிஜ்ஞாநவாந் - புத்தியில்லாதவனுய், பவதி-ஆகிருனே; தஸ்ய-அவனுக்கு, இந்த்ரியாணி, இந்த்ரியங்கள், ஸாரதே꞉-ஸாரதிக்கு, துஷ்டாஶ்வா꞉இவ - யெல்லாக்குதிரைகள்போல், அவஶ்யாநி-அஸ்வாதீநங்களாய், (பவதி-ஆகின்றன.)

ஸம்-ஹா—புத்தியென்கிறஸாரதி, மனஸ்ஸாகிற கடிவாளத்தைக்கொண்டு, குதிரைகளென்கிற இந்திரியங்களை, நன்ருய் நியமிக்கசத்தியில்லா மூடனுகிறபக்ஷத்தில், துஷ்டக்குதிரைகள்போல் அவனுக்கு, இந்திரியங்கள்வசப்படுவதில்லை.

ஸா-ஹா—இம்மந்திரத்தாலும், மேலுள்ள ஒருமந்திரத்தாலும் சரீரம்முதலியவை, தேர்முதலியதாய் ரூபித்ததற்கு ப்ரயோஜநம்சொல்லப்படுகிறது. உலகத்தில் ஸாரதிமுதலியது, நன்ருயிருந்தால், குதிரைகள் வசப்பட்டிருப்பதுபோல், சாரதிமுதலானதாய் ரூபிக்கப்பட்டபுத்திமுதலியது நன்ருயிருக்கிறபக்ஷத்தில், இந்திரியங்கள் வசப்பட்டிருக்கும் இல்லாவிட்டால், ஸ்வாதீநங்களாயிரா.

சு. யஸ்து விஜ்ஞாநவாந்பவதி யுக்தேந மநஸா ஸதா|
தஸ்யேந்த்ரியாணி வஶ்யாநி ஸத³ஶ்வா இவ ஸாரதே²꞉||

சு. యస్తువిజ్ఞానవాన్భవతియుక్తేనమనసాసదా|
తస్యేంద్రియాణివశ్యానిసదశ్వాఇవసారథేః॥

(ப-ம்.) யஸ்து-யாதொருவன், ஸதா- எப்போதும், யுக்தேந-வசம் செய்துகொள்ளப்பட்ட, மநஸா-மனஸ்ஸோடு, விஜ்ஞாநவாந்-புத்தியுடையவனுய், பவதி-ஆகிருனே; தஸ்ய-அவனுக்கு, இந்த்ரியாணி - இந்திரியங்கள், ஸாரதே꞉-ஸாரதிக்கு, ஸதஶ்வா꞉இவ-நல்லகுதிரைகள்போல், வஶ்யாநி-வசங்களாய், பவந்தி-ஆகின்றன.

ஸம்-ஹா—யாதொருவன், முன்சொன்னபடியில்லாமல், நெஞ்சை வசப்படுத்திறபுத்திமானுயிருக்கிருனே; அவனுக்கு, இந்திரியங்கள், ஸாரதிக்குநல்லகுதிரைகள் போல் வசங்களாயிருக்கும்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்தமந்திரத்தின் கருத்தும் இராமாநுஜபாஷ்யத்தில், முன்ச்லோகத்திலேயே, சொல்லப்பட்டது ஆகையால் இந்த ச்லோகத்திற்கு,இராமாநுஜமுநி, பாஷ்யம் செய்யவில்லை.

ஏ. யஸ்த்வவிஜ்ஞாநவாந்பவத்யமநஸ்கஸ்ஸதாऽஶுசி:|
நஸதத்பதமாப்நோதி ஸம்ஸாரஞ்சாதிகச்சதி||

౭. యస్త్వవిజ్ఞానవాన్భవత్యమనస్కస్సదాఽశుచిః ।
నసతత్పదమాప్నోతిసంసారంచాధిగచ్ఛతి ॥

(ப-ம்) யஃ-யாதொருவன், அவிஜ்ஞாநவாந்-புத்தியில்லாமல், அமநஸ்க:-வசப்படாத மனஸ்ஸையுடையவனாய், ஸதா - எப்போதும், அஶுசி:-சுத்தியில்லாதவனாய், பவதி-ஆகிறானோ; ஸ:-அவன், தத்பதம்-அந்த ஸ்தாநத்தை, நாப்நோதி-அடைகிறதில்லை, ஸம்ஸாரஞ்ச-ஸம்ஸார துக்கத்தையும், அதிகச்சதி-அநுபவிக்கிறான்.

ஸம்-ஸா—நெஞ்சைவசப்படுத்திக்கொள்ளாத புத்தியாகிற ஸாரதிக்கு வருகிற அநிஷ்டத்தைச் சொல்லுகிறது. யாதொருவன், நெஞ்சைவசப்படுத்தாமல், அசுத்தனாயிருக்கிறானோ; அவன், அந்த அக்ஷரப்ரஹ்மஸ்தாநத்தை அடைகிறதில்லை;மேலும், ஸம்ஸாரதுக்கத்தையே அநுபவிக்கிறான்.

ரா-ஸா—எந்தமூடன், அஸ்வாதீநமானமனஸ்ஸையுடையவனாய், அசுசியாயிருக்கிறானோ; அவன், அந்தபரமபதத்தைஅடைகிறதில்லை. துக்கத்தையடைகிறான். எவந்தீரன் இப்படியில்லாமல் புத்திமானாயிருக்கிறானோ; அவன், அந்தபதத்தை அடைகிறான், என்று, இரண்டுமந்திரங்களாலே, இந்திரியங்களை, ஸ்வாதீநமாக்கிக் கொள்ளுகையிலும், அப்படியில்லாமலிருப்பதிலும், வருகிறஸுகதுக்கங்கள் சொல்லப்படுகிறன.

அ. யஸ்துவிஜ்ஞாநவாந்பவதிஸமநஸ்கஸ்ஸதாஶுசி:|
ஸதுதத்பதமாப்நோதியஸ்மாத்பூயோநஜாயதே||

౮. యస్తువిజ్ఞానవాన్భవతిసమనస్కస్సదాశుచి !
సతుతత్పదమాప్నోతియస్మాద్భూయోనజాయతే॥

(ப-ம்) யஸ்து-யாதொரு, விஜ்ஞாநவாந் - புத்திமானானவன், ஸதா - எப்போதும், ஸமநஸ்க:-ஸ்வாதீநமானநெஞ்சையுடையவனாய், ஶுசி:-பரிசுத்தனாய், பவதி-ஆகிறானோ; ஸது-அவன், யஸ்மாத்-யாதொருபதத்தில் நின்றும், பூய:-மறுபடியும், நஜாயதே-பிறப்பதில்லையோ; தத்பதம்-அந்தஸ்தாநத்தை, ஆப்நோதி-அடைகிறான்.

ஸம்-ஸா—இந்திரியங்களை வசமாகவுடையவன் புநராவ்ருத்தியில்லாத பதத்தையடைகிறான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கும், முன் ச்லோகத்திலேயே, இந்த ச்லோகத்தின் தாத்பர்யம் சொன்னபடியால், இதற்கு இராமானுஜமுனி, பாஷ்யம் செய்யவில்லை.

௯. 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌰𑌥𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌤𑍁 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌗𑍍𑌰𑌹𑌵𑌾𑌨𑍍𑌨𑌰𑌃।
𑌸𑍋𑌽𑌧𑍍𑌵𑌨𑌃 𑌪𑌾𑌰𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍॥

౯. విజ్ఞానసారథిర్యస్తుమనః ప్రగ్రహవాన్నరః।
సోఽధ్వనః పారమాప్నోతి తద్విష్ణోః పరమంపదమ్॥

(ப-ம்) 𑌯𑌃-எந்த, 𑌨𑌰𑌃-மநுஷ்யன், 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌰𑌥𑌿𑌃-விவேகத்தை ஸாரதியாக்கிக்கொண்டு, 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌗𑍍𑌰𑌹𑌵𑌾𑌨𑍍-மனஸ்ஸை வசப்படுத்திக்கொள்ளுகிறானோ; 𑌸𑌃-அவன், 𑌅𑌧𑍍𑌵𑌨𑌃-ஸம்ஸார மார்க்கத்திற்கு, 𑌪𑌾𑌰𑌮𑍍-அக்கரையாயிருக்கிற, 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃-வாசுதேவனுடைய, 𑌤𑌤𑍍-அந்த, 𑌪𑌰𑌮𑌮𑍍-ச்லாக்யமான, 𑌪𑌦𑌮𑍍-ஸ்தானத்தை, 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿-அடைகிறான்.

𑌸𑌂-𑌹𑌾—கீழ்ச்சொல்லியஸ்தானம் இன்னதென்று சொல்லுகிறது. யாதொருவன் விவேகியாய்நெஞ்சை ஸ்வாதீநம்செய்து கொள்ளுகிறானோ; அவன், விஷ்ணுவினுடைய பரமஸ்வரூபத்தை அடைகிறான்.

𑌭𑌾-𑌹𑌾—முன்சொன்ன ரூபணத்திற்கு பலம்சொல்லிமுடிக்கிறது. யவன், நல்லஞ்ஞானத்தோடு மநஸ்ஸைஸ்வாதீநப்படுத்திக்கொண்டிருக்கிறானோ; அவன விஷ்ணுஸ்தானத்தையடைகிறான்.

௧௰. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌾 𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾 𑌅𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃।
𑌮𑌨𑌸𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌹𑌾𑌨𑍍𑌪𑌰𑌃॥

౧౦. ఇంద్రియేభ్యః పరాహ్యర్థా అర్థేభ్యశ్చ పరంమనః।
మనసస్తు పరాబుద్ధిర్బుద్ధేరాత్మా మహాన్పరః॥

(ப-ம்) 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃-இந்திரியங்களைக்காட்டிலும், 𑌅𑌰𑍍𑌥𑌾𑌃-விஷயங்கள், 𑌪𑌰𑌾 𑌹𑌿-உயர்ந்தவைகள், 𑌅𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃-விஷயங்களைக்காட்டிலும், 𑌮𑌨𑌃-மனஸ்ஸானது, 𑌪𑌰𑌮𑍍-உயர்ந்தது, 𑌮𑌨𑌸𑌃 - மநஸ்ஸைக்காட்டிலும், 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃-புத்தியானது, 𑌪𑌰𑌾-உயர்ந்தது, 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃-புத்தியைக்காட்டிலும, 𑌮𑌹𑌾𑌨𑍍-பெரியவனான, 𑌆𑌤𑍍𑌮𑌾-ஆத்மாவானவன், 𑌪𑌰𑌃-உயர்ந்தவன்.

𑌸𑌂-𑌹𑌾—ஆத்மாவையடைவதற்கு, புத்தி முதல் இந்திரியபர்யந்தமுள்ளவைகளைச்சேர்ந்து, அந்தந்தநாமங்களையடைகிற ஆத்மாவுக்கு உண்டாயிருக்கிற ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது. ஸ்தூலங்களான இந்திரியாதிகளைக்காட்டிலும், மகானான ஆத்மாசிறந்தவன்.

𑌭-𑌹𑌾—வசப்படுத்திக் கொள்ளவேண்டியவைகளில் முக்யாமுக்யங்கள் சொல்லப்படுகிறன. ஆகையாலிதையறிந்துக்கொண்டு அப்படி [illegible]

௧௧. 𑌮𑌹𑌤𑌃 𑌪𑌰𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌰𑌃।
𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍍𑌨 𑌪𑌰𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌸𑌾 𑌕𑌾𑌷𑍍𑌠𑌾 𑌸𑌾 𑌪𑌰𑌾 𑌗𑌤𑌿𑌃॥

౧౧. మహతః పరమవ్యక్తమవ్యక్తాత్పురుషః పరః।
పురుషాన్న పరం కించిత్సా కాష్ఠా సా పరా గతిః॥

(ப-ம்) மஹத:-மஹத்தைக்காட்டிலும், அவ்யக்தம்-அவ்யக்தமானது, பரம்-சிறந்தது. அவ்யக்தாத்-அவ்யக்தத்தைக்காட்டிலும், புருஷ:-புருஷனானவன், பர:-சிறந்தவன். புருஷாத்-புருஷனைக்காட்டிலும், பரம்-சிறந்தது, நகிஞ்சித்-ஒன்றுமில்லை. ஸா-அவன், காஷ்டா- எல்லாவற்றிலுமுயர்ந்தவன், ஸா-அவன், பராகதி:-உத்தமமாகியகதியாயிருப்பவன்.

ஸா-ஸா:—கீழ்மந்திரத்தாலும், இம்மந்திரத்தாலும், உண்மையாயுள்ள (பரமார்த்தமான) ஆத்மஸ்வரூபத்தை அறியப்படுத்துகைக்கு, உலகத்தில், தூரத்திலிருக்கிற ஒருநல்லநகரத்தை, நடக்கைக்குச்சோம்பின மனிதனுக்குக்காட்டவிரும்பினவன், ஸமீபத்திலிருக்கிற சோலையைக்காட்டி, இதுநல்லநகரம்; இங்குபோவோமென்றுமுன்னே, அடுத்தநகரத்திற்கு அழைத்துக்கொண்டுபோய், இதைக்காட்டிலும் சிறந்த நகரம், இதற்குச்சமீபத்தி லிருக்கிறதென்றுசொல்லி, அங்கு அழைத்துக்கொண்டுபோய், அவன், முன்கண்டநகரத்திலுமிது சிறந்ததாயிருக்கிறதென்று ஸந்தோஷித்தபிறகு, இதிலும் சிறந்தநகரம், இதற்குச் சமீபத்திலிருக்கிறதென்றுசொல்லி, அங்கழைத்துக்கொண்டுபோய், இவ்வண்ணமே, மேன்மேலுமழைத்துக்கொண்டுபோய் உத்தமோத்தமமாயிருக்கிற நகரத்தைக்காட்டி, இதற்குமேலானதொன்றுமில்லை; இதைக்காட்டிலும் சிறந்ததொன்றுமில்லை; இதையே, நான், உனக்குக்காட்டவிரும்பினேனென்றுசொல்வதுபோல், அதிஸூக்ஷ்மமாயிருக்கிற அந்த ஆத்மஸ்வரூபத்தை அறிவதில், அதிகப்ரயாஸமிருக்கையாலிழியாதபுத்தி, ஸுகமாயிழியும்படி, ஸ்தூலங்களான இந்திரியங்களை, ஆத்மாவென்றுசொல்லி, ஸ்தூலமாகையால், புத்தி, அதில்ழியவே; அர்த்தங்களை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலிழியவே; அவைகளைக்காட்டிலும் ஸூக்ஷ்மமானமனஸ்ஸை ஆத்மாவென்றுசொல்லி, அதிலிழியவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமானபுத்தியை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலிழியவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான மஹானை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலிழியவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமான அவ்யக்தத்தை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலிழியவே; எல்லாவற்றிலும் ஸூக்ஷ்மமாயிருக்கிற பரமார்த்தமான ஆத்மஸ்வரூபத்தை, ஆத்மாவென்றுசொல்லி, அதிலிழியச்செய்து, இதைக்காட்டிலும் மேலானபொருளொன்றுமில்லை; வேறுபொருளுமில்லை, இதுவேபராகதி: பராகாஷ்டை; என்றுசொல்லி, இவ்விதம் பெறயத்நம்செய்யவேணுமென்றுபதேசிக்கிறது. ஸ்தூலங்களை, க்ரமமாயறிந்தாலன்றோ; ஸூக்ஷ்மங்களை அறியதுகூடும். சிலர், மனதையே, பரமார்த்தமாகிய ஆத்மாவென்பர் ஒருவிதபூதஸூக்ஷ்மமே மனதென்னப்படுகிறதாதலாலது பொருந்தாது, "[illegible]" என்கிற ஶ்ருதியால், மனது; பூதஸூக்ஷ்மமேயெனவிளங்குகிறதன்றோ. சிலர், புத்தியை, பரமார்த்தமான ஆத்மாவென்பர். புத்தியென்பது கரணமாகையாலிதுவும் சேராது. இது, மனதில்வேருயதும், மனதினாகிய ஸங்கல்பவிகல்பங்களுக்குக் காரணமானது மென்றறிக, மஹானென்பது, எல்லாவற்றிலும் பெரியதும், அவ்யக்தமென்கிற தத்வத்திலிருந்து பிறந்ததும், ஸூத்ரமென்று பெயர்பெற்றது, மென்றுணர்க. அவ்யக்தமென்பது, எல்லாவுலகத்திற்கும்காரணமானதும், அவ்யாக்ருதமென்னப்படுவதும், பீஜத்திலும் விருக்ஷம்போல பரமார்த்தமான ஆத்மாவைப்பற்றி யொட்டிக்கொண்டுகிடப்பது மென்றுகொள்க. இப்படி, எல்லாவற்றிலும் சிறந்த ஆத்மாவையறிந்துக்கொண்டால், அந்த ஆத்மஸ்வ

ரூபத்தையடையலாகும். இந்த ஆத்மஸ்வரூபமே'பத'மென்கிற சப்தத்தால், ப்ராப்ய ஸ்தானமாய், முன் சொல்லப்பட்டது.

ரா-ஹூ—இம்மந்திரத்தாலும், முன்மந்திரத்தாலும், மோக்ஷத்தைப் பெருகிறவன், வசப்படுத்திக்கொள்ளவேண்டிய இந்திரியம்முதலியவற்றில், இன்னது, இன்னதைக்காட்டிலும், முக்யமாய், வசப்படுத்தக்கடவதென்று சொல்லப்படுகிறது. இப்படி, முக்யம், அமுக்யம், அறிந்துகொள்வதற்கே, இவைகளை குதிரைமுதலானவைகளாய் ரூபித்தது. குதிரைகளாய் ரூபிக்கப்பட்ட இந்திரியங்களைக்காட்டிலும், வழிகளாய் (மார்க்கஙகளாய்) ரூபிக்கப்பட்டபொருள்களை (விஷயஙகளை) முக்யமாய்வசப்படுத்திக்கொள்ளவேண்டும். இந்திரியங்களை ஜயித்தவனும், விஷயங்களைக்கண்டு, இந்திரியங்கள்மேல்விழும்போது மீழ்க்கவருத்தப்படுகிருனன்ரே; அவைகளைக்காட்டிலும் கடிவாளமாய்ரூபிக்சப்பட்ட நெஞ்சைமுக்யமாய்வசப்படுத்திக் கொளளவேண்டும். நெஞ்சுவிஷயங்களில்சென்றபோது, விஷயங்களை நீக்கிப் பயனில்லையன்ரே; அதைக்காட்டிலும், ஸாரதியாய் ரூபிக்கப்பட்டபுத்தியை முக்யமாய் வசப்படுத்திக்கொள்ளவேண்டும். இதைக்காட்டிலும்,கர்தாவாகிய ஆத்மாவைமுக்யமாய்வசப்படுத்திக்கொள்ளவேண்டும். இவன், ப்ரதாசுஞையாலே, மகான், என்றுசொல்லப்படுகிருன் இவனிச்சித்தபடி மற்றவைகள்நிற்கிறனவன்ரே; இவனைத் தேராளியாய்ருபித்துச்சென்னதமிது பற்றியன்ரே, தேராளிவிரும்பினபடியன்ரே, ஸாரதிமுதலானோர் நடப்பது. இந்த ஆத்மாவைக்காட்டிலும்' தேராய்ரூபிக்கப்பட்ட சரீரத்தை, முக்யமாய்வசப்படுத்திக்கோள்ளவேண்டும். இந்த ஆத்மா,எல்லாபுருஷார்த்தங்களை ஸாதிப்பதும் சரீரத்தாலன்ரே; இந்தஜீவனைக்காட்டிலும், இவனுக்குமந்திராத்மாவாயிருந்துகொண்டு ஸம்ஸாரதநில்நின்றுமிவனைக் கரையேற்றுகிற பரமபுருஷனை, முக்யமாய்வசப்படுத்திக்கொள்ளவேண்டும். கீழ்ச்சொன்ன ஆதமபர்யந்தமாயுளள எல்லாவற்றின் ப்ரவ்ருத்தியமந்த பரமபுருஷன் ஸங்கல்பித்தபடியன்ரே; அவனேயன்ரே அந்தர்யாமியாயிருந்து உபாஸநத்தையும் நிறைவேற்றிவைப்பவன். ஜீவாத்மாவுக்கு, கர்த்ருத்வம், பரமாத்மாவின் ஸ்வாதீநமாயிருக்கிறதென்று "பராத்தூ தச்ச்ருதே:" என்கிறவதிகரணத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இந்தபரமபுருஷனே, உபாயம். இவனேஉபேயம். (பலம்) என்றுணர்க. "ஸோऽத்வந: பாரமாப்நோதி" என்கிறவாக்யதாத்பர்யம்,இதுவேயாகும். இந்த அர்த்தம், ஆநுமாநிகாதிகரணத்தில், பகவத்பாஷ்யகாரரால் அருளிச்செய்யப்பட்டது. விஷயங்களென்பது; சந்தநம், குஸுமம். தாம்பூலம், ஸ்த்ரீ, முதலியவைகள். வசப்படுத்துகிற கிரமத்தின்படி, எல்லாவற்றையும் வசமாக்கிக்கொள்ளவேண்டியது. சரீரமானது அவ்யக்தசப்தத்தாலிங்கு சொல்லப்படிருக்கிறது. இது பலங்யாயங்களாலும் ஏற்படுகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு பாஷ்யத்தில் சொல்லியபடி, சுருக்கமாயுரைக்கிலறியப்படாதென்றுதாகரணங்களுடன் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டது. சங்கரபாஷ்யத்திற்கும், இராமாநுஜ பாஷ்யததிற்கும், ஸ்வயமாகவேபேதமறியப்படுகிறது. இராமாநுஜபாஷ்யத்தில், பரமபுருஷனை வசப்படுத்திக்கொள்வது, அவனைச் சரணமடைந்த மாத்திரத்தில் கூடுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

௧௨. ஏஷ ஸர்வேஷு பூதேஷு கூடோ(அ)த்மா ந ப்ரகாஶதே ।
த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்த்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்ஶிபி:॥

౧౨. ఏష సర్వేషు భూతేషు గూఢోత్మా న ప్రకాశతే।
దృశ్యతే త్వగ్ర్యయా బుద్ధ్యా సూక్ష్మయా సూక్ష్మదర్శిభిః॥

(ப-ம்) ஸர்வேஷு பூதேஷு - எல்லாப்ராணிகளிடத்திலும், ஆத்மா - ஆத்மாவாயிருக்கிற, ஏஷ:- இவன், கூட: - மறைந்தவனாய், ந ப்ரகாஶதே - ப்ரகாசிப்பதில்லை. ஸூக்ஷ்மதர்ஶிபி:- ஸூக்ஷ்மத்தையறிகிற புத்திமான்களாலே, அக்ர்யயா ஸூக்ஷ்மயா புத்த்யா - கூர்மையுடைய ஸூக்ஷ்மமான புத்தியைக்கொண்டு, த்ருஶ்யதே - காணப்படுகிறான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

எல்லா ப்ராணிகளுக்கு மாத்மாவாயிருக்கிற இந்த ஆத்மா, அவித்யையினால் மறைக்கப்பட்டிருப்பதாலனைவராலு மறியப்படுகிறதில்லை, ஸூக்ஷ்மத்தையறிகிற புத்திமான்களால், நன்றாயாராய்ந்தறியப்படுகிறான். என்று சங்கரபாஷ்யத்திலு மிராமானுஜபாஷ்யத்திலு மொருவிதமாகவே சொல்லப்பட்டிருக்கிறது. இராமானுஜபாஷ்யத்தில், அவித்யையினாலென்கிறவிடத்தில், 'த்ரிகுணங்களோடுகூடிய மாயையென்கிற ப்ராக்ருதியினால்' என்று ஹேதுபேதமே விசேஷம்.

௧௩. யச்சேத்வாங்மனஸீ ப்ராஜ்ஞஸ்தத்யச்சேஜ்ஜ்ஞான ஆத்மனி ।
ஜ்ஞானமாத்மனி மஹதி நியச்சேத்தத்யச்சேச்சாந்த ஆத்மனி॥

౧౩. యచ్ఛేద్వాఙ్మనసీ ప్రాజ్ఞస్తద్యచ్ఛేజ్జ్ఞాన ఆత్మని।
జ్ఞానమాత్మని మహతి నియచ్ఛేత్తద్యచ్ఛేచ్ఛాన్త ఆత్మని॥

(ப-ம்) ப்ராஜ்ஞ:- விவேகியானவன், வாக் - வாக்கை, மனஸீ - மனஸ்ஸில், யச்சேத் - சேர்க்கக்கடவன். தத் - அதை, ஆத்மனி, ஆத்மாவிலிருக்கிற, ஜ்ஞானே, ஜ்ஞானத்தில். யச்சேத் - சேர்க்கக்கடவன். ஜ்ஞானம் - ஜ்ஞானத்தை, மஹதி - பெரியதான, ஆத்மனி - ஆத்மாவினிடத்தில், நியச்சேத் - சேர்க்கக்கடவன், தத் - அந்த ஆத்மாவை, ஶாந்தே - சாந்தமாயிருக்கிற, ஆத்மனி - பரமாத்மாவினிடத்தில், யச்சேத் - சேர்க்கக்கடவன்.

ஶ0-ஸா.— இவ்வாத்மாவை யறியும்வழி சொல்லுகிறது.—வாக்குமுதலிய எல்லா இந்த்ரியங்களையும், மனஸ்ஸில்சேர்த்து, மனஸ்ஸை, ப்ரகாசமான புத்தியில்சேர்த்து, புத்தியை, மகானென ஆத்மாவில்சேர்த்து, இதை பேதங்களொன்றுமில்லாத சின்மாத்ரஸ்வரூபத்தில் சேர்க்கக்கடவன்.

ரா-ஸா.—"அத்யாத்மயோகாதிகமேன" என்கிறவிடத்தில் சொன்ன ஜீவாத்மஜ்ஞானத்தின் ப்ரகாரத்தை க்ரமமாய்ச்சொல்லுகிறது. குதிரைமுதலியதாய் ரூபிக்கப்பட்ட இந்திரியங்கள் முதலியவற்றை வசம்செய்துகொள்ளுகிறவழிஇதாகும்.கர்மேந்திரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் இவற்றை மனஸ்ஸில் நியமித்து, மனஸ்ஸைஜ்ஞா

நத்திலும்,ஜ்ஞாநத்தை கர்த்தாவான ஆத்மாவிலும் நியமித்து, ஆத்மாவை, ஸர்வாந்தர்யாமியாயிருக்கிற பரப்ரம்மத்தில் நியமிக்கக்கடவன். இப்படிப்பட்டவனுல், விஷ்ணுஸ்தாநமடையத் தக்கதாகும். இந்திரியங்கள் போனவழிவிடாமல் நிறுத்துகை - மனஸ்ஸில் நியமிக்கை. தான்செய்த நிச்சயத்திற்கு மாறுதலின்றி யிருக்கை - மநஸ்ஸை புத்தியில் நியமிக்கை. இங்கு புத்தி என்பது வைராக்ய புத்தியை. புத்தியை ஆத்மாவில் நியமிக்கையாவது - ஆத்மஸாக்ஷாத்காரம் செய்ய நினைக்கை. ஆத்மாவை, ப்ரம்மத்தில் நியமிக்கையாவது. பரப்ரம்மத்திற்கு சேஷமென்றறிகை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஆத்மநி, ஜ்ஞாநே, என்கிற பதங்களுக்கு, ஸாமாநாதிகாண்யம் சங்கர பாஷ்யத்தில், வையதிகாண்ய மிராமாநுஜபாஷ்யத்தி லென்றறிக.

௧௪. 𑌉𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌵𑌰𑌾𑌨𑍍𑌨𑌿𑌬𑍋𑌧𑌤। 𑌕𑍍𑌷𑍁𑌰𑌸𑍍𑌯 𑌧𑌾𑌰𑌾
𑌨𑌿𑌶𑌿𑌤𑌾 𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾 𑌦𑍁𑌰𑍍𑌗𑌂 𑌪𑌥𑌸𑍍𑌤𑌤𑍍𑌕𑌵𑌯𑍋 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿॥

౧౪. ఉత్తిష్ఠత జాగ్రత ప్రాప్య వరాన్నిబోధత।
క్షురస్య ధారా నిశితా దురత్యయా దుర్గం పథస్తత్కవయో వదన్తి॥

(ப்·ம்) 𑌉𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤-எழுந்திருங்கோள், 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤 - உறக்கத்தைவிடுங்கோள். 𑌵𑌰𑌾𑌨𑍍-வரங்களை, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯-பெற்று, 𑌨𑌿𑌬𑍋𑌧𑌤-அறியுங்கோள 𑌕𑌵𑌯𑌃-பண்டிதர்கள், 𑌤𑌤𑍍-அந்த ஆத்மஸ்வரூபத்தை, 𑌦𑍁𑌰𑍍𑌗𑌂𑌪𑌥𑌃-கஷ்டமானவழியாய், 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 - சொல்லுகிறார்கள். 𑌕𑍍𑌷𑍁𑌰𑌸𑍍𑌯 - வாளினுடைய, 𑌧𑌾𑌰𑌾-நுனியானது, 𑌨𑌿𑌶𑌿𑌤𑌾-கூர்மையுடைய தாகையால், 𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾 - அடையக்கூடாததன்றோ.

𑌶𑌂 - ஸா.—மித்யாஜ்ஞாநத்தை நீக்கி, ஆத்மஸ்வரூபத்தை யறிந்தால், இரஜ்ஜுஸர்தம், கானல் தண்ணீர், ஆகாயத்திலழுக்கு, இவைகள் உண்மையறிந்தபிறகு நீங்கிப்போகிறுப்போலே இந்த ஜகத்து இல்லையாய்விடும். அப்போது க்ருதக்ருத்யராகலாம். ஆகையா லெழுந்திருங்கோள். அநேகஸங்கடங்களுக்குக்காரணமாய், கோரமாய் ' அவித்யை, என்று சொல்லப்படுகிறஅஜ்ஞாநத்தில்உரக்கத்தைநீக்கிஆத்மஸ்வரூபத்தை யறியப்பாருங்கோள். ஆசாரியர்களைக்கிட்டி அவர்கள் கொடுத்த ஜ்ஞாநத்தைக்கொண்டு, நானே, எல்லாப்பொருளுக்கு மந்தராத்மாவாயிருக்கிற பரமாத்மாவென்றறியிங்கோள்- உபேக்ஷிக்கவேண்டாமென்று,தாய்,ஹிதஞ்சொல்லுகிறுப்போலே, அது வாளின் கூர்மையைப்போல்ஸூக்ஷ்மமாகையாலே, ஶ்ருதி உபதேசிக்கிறது, ஆகையாலே வருத்தப்பட்டு அறிந்துகொள்ளவேணுமென்று பண்டிதர்கள்சொல்லுகிறுர்கள்.

𑌰𑌾-ஹா.—இப்படி வசப்படித்துகிற வழியைச்சொல்லி அதிகாரமுள்ளவர்களுக்கு அறிவிக்கிறது. பகவானுல், அல்லது, ப்ரம்மவித்துக்களால், வரங்களைக்கொள்ளுங்கோள்; எழுந்திருங்கோள்; உறக்கம்வேண்டாம்;கூராயிருக்கிறவாளின்நுனையில் நடக்கிறபோது கொஞ்சம் தப்பினுலு மெப்படி மோசம்வருமோ; அப்படியேகொஞ்சம் பிழைவந்தாலுமாத்மஸ்வரூபத்தையறிவது கஷ்டமென்று பண்டிதர்கள் சொல்லுகிறுர்கள், ஆகையால் தக்கபடியே அறியுங்கோள்.

௧௫. 𑌅𑌶𑌬𑍍𑌦𑌮𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌮𑌰𑍂𑌪𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌤𑌥𑌾𑌽𑌰𑌸𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌗𑌨𑍍𑌧𑌵𑌚𑍍𑌚 𑌯𑌤𑍍 ।
𑌅𑌨𑌾𑌦𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌂 𑌮𑌹𑌤𑌃 𑌪𑌰𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌨𑌿𑌚𑌾𑌯𑍍𑌯 𑌤𑌨𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍁𑌖𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥

౧౫. అశబ్దమస్పర్శమరూపమవ్యయంతథారసంనిత్యమగంధవచ్చయత్।
అనాద్యనంతంమహతఃపరంధ్రువంనిచాయ్యతంమృత్యుముఖాత్ప్రముచ్యతే॥

(ப-ம்) யத்-எந்தபரம்மமானது, அசப்தம், அஸ்பர்சம், அரூபம், அரஸம், அகந்தவத்-சப்தம, ஸ்பர்சம், ரூபம், இரஸம, கந்தம்,இவைகளில்லாததாய், அநாதி, அநந்தம் - ஆத்யந்தமில்லாததாய், அவ்யயம்-வ்யயமில்லாததாய், த்ருவம்-அசையாததாய், நித்யம்-எப்போதுமுள்ளதாய், மஹத: - மகானை ஜீவனைக்காட்டிலும், பரம்-வேறாயிருக்கிறதோ; தம்-அந்த பரப்ரம்மமான பரமபுருஷனை, நிசாய்ய-ஸாக்ஷாத்கரித்து, ம்ருத்யுமுகாத்-ஸம்ஸாரத்தில் நின்றும், ப்ரமுச்யதே-விடப்படுகிறான்.

ஶா - ஹா.—கீழ்ச்சொல்லியபடி ப்ரம்மம் ஸூக்ஷ்மமென்பதற்குக் காரணங்கள் சொல்லப்படுகின்றன.—சப்தம்முதல், கந்தபர்யந்தமான ஐந்து குணங்களுமுள்ள பூமி, ஸ்தூலமாயிருக்கிறது. ஜலமானது, கந்தமொன்று குறையவே; அதைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. தேஜஸ்ஸானது, கந்தம், இரஸம்; இரண்டுகுறையவே ஜலத்தைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருக்கிறது. வாயுவானது, கந்தம், இரஸம், உரூபம், மூன்றுகுறையவே; தேஜஸ்ஸிலும்ஸூக்ஷ்மமாயிருக்கிறது.ஸ்பர்சமுங்கூட நான்கு குறையவே: ஆகாசம் எல்லாபூதங்களிலும்ஸூக்ஷ்மமாயிருக்கிறது. இப்படியே;இந்த குணங்களொன்றுமில்லாத ப்ரம்மம் ஸர்வ ஸூக்ஷ்மமாயிருக்கிறது. இப்படிப்பட்ட நித்யமான ப்ரம்மத்தையறிந்தால், ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபடுகிறான்.

ரா-ஹா.—குணபஞ்சகவிஹீநமாய்,அந்யந்தமில்லாதவனாய்,பரிணாமவிகாரசூந்யமாய், சலநரஹிதமாய், நித்தியமாய்,ஜீவாத்மாவில்வேறுபட்டதாயுள்ளபரப்ரம்மமாயிருக்கின்ற பரமபுருஷனை உபாஸநத்தாலேஸாக்ஷாத்கரித்தால்,ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடப்படுகிறான். உரூபமுடையபொருளே அழியுமாகையால் உரூபம்முதலிய குணமில்லாத பொருளழியமாட்டாது. ஒருகாரணமுண்டாயிருந்தால் கார்யம் காரணத்தில் லயத்தையடையலாகும். காரணமில்லாத ப்ரம்மத்திற்கு நாசமெப்படிகூடும். காலம்போலே, ப்ரஹ்மம் நித்யமாயிருக்கும். மஹத: என்கிற பதத்திற்குஜீவனென்றபொருள், 'ஜ்ஞாநமாத்மநிமஹதி' என்கிற முன் ச்லோகத்தால், ஸ்பஷ்டமாகிறது. 'நித்ய' என்பதை, எல்லாவிசேஷணங்களோடும்கூட்டி அந்வயித்துக்கொள்க.

௧௬. நாசிகேதமுபாக்2யாநம்ம்ருத்யுப்ரோக்தம் ஸநாதநம்।
உக்த்வா ச்ருத்வா ச மேதா4வீ ப்3ரஹ்மலோகே மஹீயதே॥

౧౬. నాచికేతముపాఖ్యానంమృత్యుప్రోక్తగ్ం సనాతనమ్।
ఉక్త్వాశ్రుత్వాచమేధావీబ్రహ్మలోకేమహీయతే॥

(ப-ம்.) நாசிகேதம் - நசிகேதஸ்ஸாலடையப்பட்டதாய், ம்ருத்யுப்ரோக்தம்-யமனால் சொல்லப்பட்டதாய், ஸநாதநம் - நித்யமாயிருக்கிற, உபாக்2யாநம்-வ்ருத்தாந்தத்தை, உக்த்வா-சொல்லியும், ச்ருத்வா-கேட்டும், மேதா4வீ-புத்திமானாய்க்கொண்டு, ப்3ரஹ்மலோகே-ப்ரம்மலோகத்தில் மஹீயதே-கொண்டாடப்படுகிறான்.

ஸா-ஷா.—யமனால் ப்ரவசநம் செய்யப்பட்டநித்யமான இந்தநாசிகேதோபாக்யாநத்தை, ஆசார்யரிடத்தில் கேட்டு, ப்ராம்மணர்களுக்குச் சொல்லுகிற புத்திமான், ப்ரம்மஸ்வரூபத்தை யடைகிறான்.

ஸா-ஷா. ஸநாதநம்-ப்ரவாஹரூபத்தாலே நித்யமான.

௧௭. ய இமம் பரமம் குஹ்யம் ச்ராவயேத் ப்ரஹ்மஸம்ஸதி । ப்ரயத: ச்ராத்தகாலே வா ததானந்த்யாய கல்பதே ததானந்த்யாய கல்பத இதி ॥

౧౭. య ఇమం పరమం గుహ్యం శ్రావయేద్బ్రహ్మసంసది।
ప్రయతః శ్రాద్ధకాలే వా తదానంత్యాయ కల్పతే తదానంత్యాయ కల్పత ఇతి॥

(ப்-ம்.) ய:-எவன், பரமம் குஹ்யம் - மிகவும் மறைக்கத்தக்கதான, இமம்-இந்தவ்ருத்தாந்தத்தை, ப்ரஹ்மஸம்ஸதி - ப்ராம்மணஸபையில், ச்ராவயேத்-கேழ்க்கச்செய்வானோ; ஸ:-அவன், ப்ரயத:-சுத்தனாகிறான். ச்ராத்தகாலே வா-ச்ராத்தஸமயத்தில், ச்ராவயேத் - கேழ்க்கச்செய்வானாகில், தத்-அந்தச்ராத்தமானது, ஆநந்த்யாய - எல்லாபலங்களையும் கொடுப்பதாய், கல்பதே-ஆகிறது.

ஸா-ஷா-ஸா.ஷா —இப்படி கிழ்ச்சொல்லிய அதிகுஹ்யமாயிக்கிற விதை,ப்ராம்மணர்களுடைய திரளில், அவர்களறியும்படி அர்த்தத்தோடு பாராயணம்பண்ணி அவர்களை ஸந்தோஷிப்பிக்கிறவன், அதி பரிசுத்தனாகிறான். இதை இப்படியே, ச்ராத்தகாலத்தில், ப்ராம்மணர்கள் போஜநம் செய்யும்போது, அவர்கள் கேழ்க்கும்படி பாராயணம்பண்ணினால் அந்தஸ்ராத்தமானது, அந்தமில்லாமல் வேண்டிபலங்களையெல்லாங்கொடுக்கும், "ததானந்த்யாய கல்பதே" என்பது, அத்யாயபூர்த்தியை யறிவிப்பதற்காக விரட்டிக்கப்பட்டது.

கடோபநிஷத் முதலத்யாயம் மூன்றாவதுவல்லிமுடிந்தது.

முதலாத்யாயம்முற்றும்.

---

கடோபநிஷத்இரண்டாமத்யாயத்தில் நான்காம்வல்லிதொடங்கப்படுகிறது.

அத சதுர்த்தவல்லீப்ராரம்ப:

௧. பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வயம்பூஸ் தஸ்மாத் பராங் பச்யதி நாந்தராத்மந் । கச்சித் தீர: ப்ரத்யகாத்மானமைக்ஷத் ஆவ்ருத்தசக்ஷுரம்ருதத்வமிச்சந் ॥

౧. పరాంచి ఖాని వ్యతృణత్స్వయంభూస్తస్మాత్పరాఙ్పశ్యతి నాంతరాత్మన్।
కశ్చిద్ధీరః ప్రత్యగాత్మానమైక్షదావృత్తచక్షురమృతత్వమిచ్ఛన్॥

(ப்-ம்) ஸ்வயம்பூ:-ஈச்வரன், கானி-இந்திரியங்களை, பராஞ்சி - ஆத்மேதரவஸ்துவிஷயங்களாக, வ்யத்ருணத்-ஸ்ருஷ்டித்தான், தஸ்மாத்-ஆகையால், பராங்-இதரவிஷயங்களை, பச்யதி-பார்க்கிறது, அந்தராத்மந்-அந்தராத்மாவை, ந பச்யதி-பார்க்கிறதில்லை, தீர:-தைர்யமுள்ள, கச்சித் - ஒருவன், ஆவ்ருத்தசக்ஷு:-இந்திரியங்களைத்திருப்பிக்கொண்டு, அம்ருதத்வம்

ஐக்ஷத்-மோக்ஷத்தை விரும்பினவனாய், ப்ரத்யகாத்மாநம்-ப்ரத்யக்ரூபியாயிருக்கிற ஆத்மாவை, ஐக்ஷத்-பார்க்கிறான்.

ஶம்-ஹா.—ஆத்மஸ்வரூபத்தை அறியவொட்டாமல், தடைசெய்கிற ப்ரதிபந்தகங்களைச்சொல்வதற்கு, இந்தவல்லிதொடங்கப்படுகிறது. ப்ரதிபந்தகத்தையறிந்தாலன்றோ; அதைநீக்கிக்கொள்ளயத்நம்செய்யலாகும். அறியப்படாமலே நீக்கிக்கொள்வது சக்யமில்லையன்றோ, ஈச்வரன், இந்திரியங்களையெல்லாம் ஆத்மாவைக்காண்கிறசக்தியோடுஸ்ருஷ்டித்திருந்தால், ஆத்மஸ்வரூபத்தை யதனால் ஸுலபமாயறிந்து எல்லாரும் மோக்ஷமடையலாகும். அப்படிசெய்யாமல், ஸ்தூலவஸ்துக்களைக்காட்டுகிறசக்தியோடுமாத்திரம் இந்திரியங்களைவைத்தால்: அந்தஇந்திரியங்கள், ஆத்மஸ்வரூபவிஷயத்தில் ப்ரவேசமில்லாதவையாயின. ஆகிலுமிவைகளைஸ்தூலவிஷயங்களில் செலுத்தாமல், மோக்ஷத்தையேவிரும்பி, எந்ததீரபுருஷன், நியமிக்கிறானோ, அவன், ப்ரத்யகாத்மாவைக்காண்கிறான்.

ரா-ஹா.—ஸ்வதந்த்ரனானஸர்வேச்வரன், இந்திரியங்களை பராக்விஷயங்களாக ஏற்படுத்துகையாலே, சப்தாதிவிஷயங்களிலேயே செல்லாநிற்கின்றன. ஆகிலும், விவேகியானதீரன், ஆறுவெள்ளமோடுகிறபோது. எதிர்நீஞ்சுவதுபோல், வருத்தப்பட்டு, விஷயங்களில்நின்றும், மீட்டு, ஆத்மவிஷயத்தில்சேர்த்து தயாநித்து, மோக்ஷத்தைஅடையவேணுமென்று விரும்புகிறான்.

உ. பராச꞉ காமாநநுயந்தி பாலாஸ்தே ம்ருத்யோர்யந்தி விததஸ்ய பாஶம் | அத தீரா அம்ருதத்வம் விதித்வா த்ருவமத்ருவேஷ்விஹ ந ப்ரார்த்தயந்தே ||

౧. పరాచః కామానసుయంతి బాలాస్తే మృత్యోర్యంతి వితతస్య పాశమ్। పரிணாம.
అథధీరా అమృతత్వం విదిత్వా ధ్రువమధ్రువేష్విహ న ప్రార్థయంతే॥ யுள்ளபரப்ப-

(ப-ம்.) பாலா꞉-அஜ்ஞர்கள், பராச꞉-பாஹ்யங்களான ஸம்ஸாரபந்தத்துக்கு காரணமாயுள்ள காமங்களை, அநுயந்தி-அநுஸரிக்கிறார்கள், தே-அவர்கள், விததஸ்ய-விஸ்தரிக்கப்பட்ட, ம்ருத்யோ꞉-ஸம்ஸாரத்தினுடைய, பாஶம்-கயிற்றை, யந்தி-அடைகிறார்கள், அத-இவர்களில்வேறாயிருக்கிற தீரா꞉-தீரர்கள், த்ருவம்-ஸ்திரமான, அம்ருதத்வம்-மோக்ஷத்தை, விதித்வா-அறிந்து, இஹ-இந்தஜகத்தில், அத்ருவேஷு- அநித்யங்களிலொன்றையும். ந ப்ரார்த்தயந்தே -விரும்பமாட்டார்கள்.

ஶம்-ஹா.—அவித்யையினால் மறைக்கப்பட்டஆத்மஸ்வரூபத்தையறியாமையாலும், அவித்யையினால் காட்டப்பட்டபொருள்களில் விருப்பத்தாலும், ப்ரத்யகாத்மாவை ப்ராபிக்க, எல்லோரும், யத்நம்செய்கிறதில்லை. சிலதீரர்களே, நித்யமான மோக்ஷத்தையறிந்து, அநித்யமான விஷயங்களைவிரும்புகிறதில்லை.

ரா-ஹா.—அஜ்ஞர்கள், அநித்யங்களைவிரும்பி, பரமாத்மாவை ப்ராபியாமல் போகிறார்கள். புத்திமான்கள், நித்யனானவனையறிந்து மோக்ஷத்தைவிரும்பி, அநித்யங்களைவிடுகிறார்கள்.

௩. யேந ரூபம் ரஸம் கந்தம் ஶப்தாந் ஸ்பர்ஶாம்ஶ்ச மைதுநாந் |
ஏதேநைவ விஜாநாதி கிமத்ர பரிஶிஷ்யதே || ஏதத்வை தத் ||

3. యేనరూపంరసంగంధంశబ్దాన్ స్పర్శాంశ్చమైథునాన్ ।
ఏతేనైవవిజానాతికిమత్రపరిశిష్యతే॥

(ப்-ம்.) யேந-யாதொரு, ஏதேநைவ-இந்த ப்ரம்மரூபஜ்ஞாநத்தாலே, ரூபம்-ரஸம்-கந்தம் - ஶப்தாந்-ஸ்பர்ஶாந் - மைதுநாந்-வ-ரூபம், ரஸம், கந்தம், சப்தம், ஸ்பர்சம், மைதுநம், இவைகள் முதலான எல்லாவற்றையுமுண்டாகிற ஜ்ஞாநத்தை. விஜாநாதி-அறிகிறானோ, அத்ர-இந்தப்ரம்மத்தில், கிம்பரிஶிஷ்யதே-இல்லாமல்போனதென்ன.ஆகையால், தத்-ப்ராப்யமாய்ச்சொன்ன அந்தவஸ்துவானது ஏதத்வை-இந்தப்ரம்மமே,

ஶங்-ஹா.—எல்லாஜ்ஞாநங்களுமாத்மாவினுலறியப்படுகிறனவாகையால்இதுவே பரமஸ்தாநம். அகில்சரீரமேபரமஸ்தாநம், சரீரத்தாலன்றே; ஜ்ஞாநம்முதலியதறியப்படுகிறது, என்றுநிக்கவேண்டாம். ரூபம்முதலியவற்றோடு கூடினசரீரத்திற்கு, அறிகிறசக்திஇல்லையன்றே; இருந்தால் சுவர்முதலியவற்றுனுமெல்லாமறியப்படலாமன்றே; ஆகையால் ரூபாதிகளில்லாத ஆத்மா, ரூபம்முதலியவற்றோடுகூடின சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்டதே. அதுவேபரமஸ்தாநம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இராமானுஜபாஷ்யத்தில், எல்லாம்பரமாத்பரமாய் யோஜிக்கப்பட்டிருருக்கிறது. பதப்பொருள்கருத்தில்பேதமில்லை.

௪. ஸ்வப்நாந்தம்ஜாகரிதாந்தம்சோபௌயேநாநுபஶ்யதி।மஹாந்தம் விபுமாத்மாநம்மத்வாதீரோநஶோசதி॥ ஏதத்வைதத்॥

౪. స్వప్నాంతంజాగరితాంతంచోభౌయేనానుపశ్యతి ।
మహాంతంవిభుమాత్మానంమత్వాధీరోనశోచతి॥ఏతద్వైతత్॥

(ப்-ம்.) ஸ்வப்நாந்தம்-ஸ்வப்நமத்யத்தையும், ஜாகரிதாந்தம்-ஜாகரமத்யத்தையும், உபௌ-இரண்டையும், யேந - யாதொருப்ரம்மத்தால், அநுபஶ்யதி-பார்க்கிறானோ, (தம்-அந்த.)

ஶங்-ஹா.—அரும்பொருளென்று தோற்றுகைக்காகவும், ஒருக்கால்சொன்னமாத்திரத்தாலறியப்படாதென்றும், மறுத்துச்சொல்லுகிறது.

ரங-ஹா.—இந்திரியம்முதலியரூபத்தை யடைந்திருக்கிற பரமபுருஷனாலே, உறக்கம், உணர்ச்சி, இவைகளில் எல்லாவற்றையும்காண்கிறான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்தச்லோகத்தில் பின்னடிகளின்பதப்பொருள்முதலிய விசேஷங்களை, இரண்டாம்வல்லி, உஉ-வது ச்லோகத்தில்காண்க.

௫. யஇமம்மத்வதம்வேதஆத்மாநம்ஜீவமந்திகாத்।
ஈஶாநம்பூதபவ்யஸ்யநததோவிஜுகுப்ஸதே॥

౫. య ఇమం మధ్వదం వేద ఆత్మానం జీవమంతికాత్ ।
ఈశానం భూతభవ్యస్య న తతో విజుగుప్సతే ॥

(ப்-ம்) ய꞉-எவன், மத்⁴வத³ம்-கர்மபலத்தையநுபவிக்கிற, ஜீவம்-ஜீவனும், ஆத்மாநம்-இந்தஜீவாத்மாவையும், அந்திகாத்- அவனுக்குஸமீபத்திலிருப்பவனாய், பூ⁴தப⁴வ்யஸ்ய-ஸமஸ்தவஸ்துக்களுக்கும், ஈஶாநம்-ப்ரபுவாயிருக்கிற பரமாத்மாவையும், வேத³-அறிகிறானோ, தத꞉ - அந்தபுருஷனை, ந விஜுகு³ப்ஸதே-நிந்திக்கக்கடவனல்லன்.

ஸ0-ஹா.—யவன், கர்மங்களின் பலத்தையநுபவித்துக்கொண்டு,ப்ராணாதிகளை தரித்திருக்கிற இந்த ஜீவாத்மாவை, எல்லாவற்றிற்கு மீசனான பரமாத்மாவென்றறிகிறானோ; அவன், பயமடைந்து, தன்னை,இரக்ஷித்துக்கொள்ள, யத்நம்செய்யான். இந்தஜீவாத்மா, பரமாத்மாவேயாகையால், நித்யனாயிருக்கிற இந்தஆத்மாவுக்கு, ஒரு காரணத்தாலுமழிவில்லையென்றறிந்தபின், பயப்படவேண்டமன்றோ.

ரா-ஹா.—மூன்றாம் வல்லி முதல் ச்லோகத்தில்ச்சொல்லியபடி, ஒருசரீரத்தில் ஸமீபத்தில், சேர்ந்திருக்கிற, ஜீவன், பரமாத்மா, இவர்களையறிந்தபுருஷன், தோஷங்களோடு கூடியிருந்தாலும், அவனை, நிந்திக்கைதகாதது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

“ஏதத்³வை தத்” என்கிறவாக்கியத்திற்கு, முன்போலவே, பதப்பொருள் முதலியவையுணர்க. “யஇமம்” என்றும்பாடம்.

௬. ய꞉ பூர்வம் தபஸோ ஜாதமத்³ப்⁴ய꞉ பூர்வமஜாயத| கு³ஹாம் ப்ரவிஶ்ய திஷ்ட²ந்தம் யோ பூ⁴தேபி⁴ர்வ்யபஶ்யத|| ஏதத்³வை தத்||

౬. యః పూర్వం తపసో జాతమద్భ్యః పూర్వమజాయత ।
గుహాం ప్రవిశ్య తిష్ఠంతం యో భూతేభిర్వ్యపశ్యత । ఏతద్వైతత్ ॥

(ப்-ம்) ய꞉-எவன், அத்³ப்⁴ய꞉ - ஜலத்திலநின்றும, பூர்வம் - முன்னே அஜாயத-பிறந்தானோ, தம்-அந்த, தபஸ꞉-ஸங்கல்பத்தினால், பூர்வம்-தேவர்களுக்குமுன், ஜாதம்-உண்டானவனாய், கு³ஹாம்-ஹ்ருதயகுஹையை, ப்ரவிஶ்ய-அடைந்து, திஷ்ட²ந்தம்-இருப்பவனாய், பூ⁴தேபி⁴꞉-சரீரேந்திரியங்களோடு கூடியிருக்கிற ஹிரண்யகர்பனென்கிற சதுர்முகப்ரம்மாவை, ய꞉-எந்தபரமாத்மா, வ்யபஶ்யத-கடாக்ஷித்தானோ, அவனே பரப்ரம்மமாகிய பரமபுருஷன.

ஸ0-ஹா.—எவன்ப்ரத்யகாத்மாவென்றுசொல்லப்பட்டானோ;அவனே,எல்லாவற்றிற்கு மாத்மாவென்று சொல்லுகிறது. ஜ்ஞாநஸ்வரூபமாகிய ப்ரம்மத்திலிருந்து தோற்றுகிற ஜலம்முதலிய பஞ்சபூதங்களுக்கும் முன்னேயுண்டான ஹிரண்யகர்பனென்கிற, ஸகலஹ்ருதயகுஹாவாஸியாய், சப்தாதிகளையறிவதாய், கார்யகாரணபூதங்களோடுகூடியிருக்கிற ஸ்வரூபத்தையறிந்தவன், ப்ரம்மத்தையறிந்தவனாகிறான்.

ரா-ஹா.—வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்குமுன், ஜலதத்வத்தில், தன்னுடையஸங்கல்பத்தாலே, சதுர்முகப்ரம்மதேவனை, எல்லாதேவதைகளுக்கும் முதல்வனாய் ஸ்ருஷ்டித்து, சரீரேந்திரியங்கள்முதலிய எல்லாவற்றையுங்கொடுத்து; இவன், எல்லாஜகத்தை

யும் ஸ்ருஷ்டிக்கிறசக்தியுள்ளதனுகக்கடவன்; என்று, எவன்கடாக்ஷித்தானே. அந்த பரமபுருஷனே பரப்ரம்மம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு, இரண்டுபாஷ்யங்களையும் நன்றாயறிந்து, பேதஸ்வாரஸ்யங்களைக்காண்க. "ஏதத்வைதத்" என்கிறவாக்யத்திற்கு முன்போலேபொருள்கண்டுகொள்க.

எ. யா ப்ராணேந ஸம்பவத்யதிதிர்தேவதாமயீ । குஹாம் ப்ரவிஶ்ய திஷ்டந்தீ யா பூதேபிர்வ்யஜாயத ॥ ஏதத்வைதத் ॥

౭. యా ప్రాణేన సంభవత్యదితిర్దేవతామయీ।
గుహాం ప్రవిశ్య తిష్ఠంతీ యా భూతేభిర్వ్యజాయత॥ ఏతద్వై తత్ ॥

(ப்-ம்) யா - எந்தஜீவனானவன், ப்ராணேந ஸம்பவதி - ப்ராணங்களோடே கூடியிருக்கிறானே, அதிதிः - கர்மபலங்களை யநுபவிக்கிறானே, தேவதாமயீ-இந்திரியங்களால் போகத்தையடைகிறானே, யா-எந்தஜீவனானவன், குஹாம், ப்ரவிஶ்ய, திஷ்டந்தீ - ஹ்ருதயகுஹையை ப்ரவேசித்திருக்கிறானே, பூதேபிः- ப்ருதிவ்யாதி பூதங்களை சரீரமாக்கிக்கொண்டு, வ்யஜாயத-நாநாரூபனாய் பிறக்கிறானே; ஏதத்வைதத்॥

ஶம்-பா.—இந்தஜீவனே பரப்ரம்மம்.

ரா-பா.—இந்தஜீவனை சரீரமாகவுடையது, பரப்ரம்மம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

கர்மத்தின்படி, தேவஜாதி, மநுஷ்யஜாதி, ம்ருகஜாதிமுதலியவற்றில் தேகேந்திரியாதிகளோடு கூடிக்கொண்டு பிறக்கிறஜீவனே, பரப்ரம்மம். அல்லது, அந்தஜீவனைசரீரமாகவுடையதே, பரப்ரம்மம். என்றுகருத்து.

அ. அரண்யோர்நிஹிதோ ஜாதவேதா கர்ப இவ ஸுப்ருதோ கர்பிணீபிः । திவே திவ ஈட்யோ ஜாக்ருவத்பிர்ஹவிஷ்மத்பிர்மநுஷ்யேபிரக்நிः॥ ஏதத்வைதத்॥

౮. అరణ్యోర్నిహితో జాతవేదా గర్భ ఇవ సుభృతో గర్భిణీభిః।
దివేదివ ఈడ్యో జాగృవద్భిర్హవిష్మద్భిర్మనుష్యేభిరగ్నిః॥ ఏతద్వై తత్॥

(ப்-ம்) கர்பிணீபிः-கர்பஸ்த்ரீகளால், கர்ப இவ-கர்பம்போல், அரண்யோः-கீழும்மேலுமாய்ச்சேர்க்கப்பட்ட அரணிக்கட்டைகளில், நிஹிதः-வைக்கப்பட்டதாய், திவேதிவே - நாள்தோறும், ஜாக்ருவத்பிः, ஹவிஷ்மத்பிः மநுஷ்யேபிः - ஜாகரூகர்களாய் ஹவிஸ்ஸைக்கொடுக்கிற மநுஷ்யர்களாலே, ஈட்யः-ஸ்துதிக்கத்தக்கதாயிருக்கிற, ஜாதவேதாः-ஜாதவேதஸ்ஸென்கிற, அக்நிः - அக்கியானது, ஏதத்வைதத் - இந்தப்ராம்மமே, அல்லது இந்தப்ராம்மத்திற்குசரீரமே.

ஶம்-பா.—யஜ்ஞத்தில், அரணி, என்கிறகட்டைகளின் நடுவில், வைக்கப்பட்ட அக்கியும், இந்தப்ரம்மமே.

ரா-ஹா.—எல்லோரும், எந்த அக்நியையாகத்தில்பூஜித்து, ஹவிஸ்ஸுக்களைக் கொடுக்கிறார்களோ அந்த அக்நியும், பகவானுடையசரீரமே.

௯. யதஶ்சோதே³தி ஸூர்யோऽஸ்தம் யத்ர ச க³ச்ச²தி।
தம் தே³வாஸ்ஸர்வே அர்பிதாஸ்தது³ நாத்யேதி கஶ்சந॥

౯. యతశ్చోదేతిసూర్యోఽస్తంయత్రచగచ్ఛతి।
తందేవాస్సర్వేర్పితా స్తదునాత్యేతికశ్చన॥

(ப-ம்) யதஶ்ச-எந்தவஸ்துவிலிருந்து, ஸூர்ய:-ஸூர்யன், உதே³தி-உதிக்கிறானோ; யத்ர-யாதொருவஸ்துவில், அஸ்தம் - லயத்தை, க³ச்ச²தி- அடைகிறானோ; தம் - அந்தவஸ்துவை, ஸர்வே தே³வா: - எல்லாதேவர்களும், அர்பிதா:-அடைந்திருக்கிறார்கள், தது³ - அதை, கஶ்சந - ஒருவனும், ந அத்யேதி - அதிக்ரமிப்பதில்லை, ஏதத்வைதத் - இப்படிப்பட்ட வஸ்து அந்தப்ரம்மமே.

ஶாம்-பா.—ஸூர்யோதயம் முதலியவற்றுக்கு, ஹேதுவாய், அத்யாத்மம், அதிதைவதம், என்றுசொல்லப்படுகிற எல்லாப்பொருளுக்கு மாதாரமாயிருக்கிறப்ரம்மத்தை அதிக்ரமித்ததில்லை. அதாவது, ப்ரம்பத்தில்வெறாய் பொருளொன்று மில்லை என்கை.

ரா-ஹா.—ஸர்வாதாரமாய், ஸர்வகாரணமாயிருக்கிற ப்ரம்மமெல்லாப்பொருளுக்கு மந்தர்யாமியாயிருப்பதாதலால், ப்ரமத்தையொருவனு மதிக்ரமிக்கமாட்டான். தன்னைவிட்டுநீங்காத பொருளைத்தானதிக்ரமிப்பதுகூடததன்றோ; தனது நிழலைத்தானதிக்ரமிக்கமாட்டானன்றோ.

௧௦. யதே³வேஹ தத³முத்ர யத³முத்ர தத³ந்விஹ।
ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி॥

౧౦. యదేవేహతదముత్రయదముత్రతదన్విహ,
మృత్యోస్సమృత్యుమాప్నోతియఇహనానేవపశ్యతి॥

(ப-ம்) இஹ-இவ்விடத்தில், யதே³வ - யாதொருவஸ்து இருக்கிறதோ; தத்- அந்தவஸ்துவே, அமுத்ர-பரலோகத்திலுமிருக்கிறது, யத்- யாதொருவஸ்து, அமுத்ர-பரலோகத்திலிருக்கிறதோ; தத³ந்வ - அந்தவஸ்துவே, இஹ-இந்தலோகத்திலுமிருக்கிறது, இஹ- இந்தவஸ்துவிஷயத்தில், நாநா இவ-பேதமிருப்பதாய், ய:-எவன், பஶ்யதி-நினைக்கிறானோ, ஸ:- அவன், ம்ருத்யோ: - ஸம்ஸாரத்திலிருந்து, ம்ருத்யும் - ஸம்ஸாரத்தை, ஆப்நோதி- அடைகிறான்.

ஶாம்-ஹா.—பிரமன்தொடங்கி,ஸ்தாவரங்களீறாகவுள்ள ஸமஸ்தப்ராணியிலுமாத்மாவாயிருந்துகொண்டு அந்தந்தஉபாதிஸம்பந்தத்தால், பரப்ரம்மத்தில் வேறாயது போல்தோற்றுகிற ஸம்ஸாரீயானஜீவாத்மா, பரப்ரம்மத்தில் வேறுபட்டதென்று, அறிவில்லாதரும் நினையாமலிருக்கும்படி, பரப்ரம்மத்திற்கும், ஜீவாத்மாவுக்கும், பேதமில்லையென்பதை ஸ்பஷ்டமாய்ச்சொல்லுகிறது. இங்கு, கார்யகாரணோபாதி ஸம்பந்தத்தால், ஸம்ஸாரிபோல் அவிவேகிகளுக்குத் தோற்றுகிறஜீவனே, அங்கு, நி

த்யவிஜ்ஞாநஸ்வரூபியாய், ஸம்ஸாரதர்மங்களொன்று மில்லாதாயிருக்கிற ப்ரம்மம். அந்த சுத்தப்ரம்மமே, நாமரூபவ்யாகரணத்தாலுண்டாகிய உபாதியையநுபவிக்கிற ஜீவன் ஜீவாத்மா, பரமாத்மா, இரண்டுமொன்றேயன்றோ; இப்படியிருக்கவிதையறியாமல், எந்தமூடன், உபாதிபேதத்தைக்காட்டுகிற அவித்யையினலழிக்கப்பட்டவிவேகத்தையுடையவனாய், பேதசூந்யமானப்ரம்மத்தை, பரமாத்மாவாகிய ப்ரம்மம் வேறானது; ஜீவாத்மாவாகியவன்வேறானவன்; இருவருமொருவரன்றென்கிற பேதமுடையதென்று நினைக்கிறானோ; அவன்மரணமடைந்தடைந்து ஸம்ஸாரியாகிறான். ஆகையாலப்படிநினையாமல், ஆகாயம்போல் பூர்ணமாய், விஜ்ஞாநஸ்வரூபமானப்ரம்மம், நானேயாகிறேனென்று வாக்யார்த்தம்.

ரா-ஹா.—பரமாத்மா, எல்லாப்ராணிகளுக்கு மந்தராத்மாவாயிருப்பதுகூடாது நானென்றுதோற்றுகிறவனன்றோ; ஆத்மாவென்று சொல்லப்படுவான். அப்படிநானென்று தோற்றுகிற ஆத்மாவோ; நானிங்கேயேயிருக்கிறேன், என்று, ஓரிடத்திலளவுபட்டிருப்பவனாய் தோற்றுகிறான்; ஆதலால், எல்லாப்ராணிகளுக்கும், பரமாத்மா ஒருவனே யந்தராத்மாயிருப்பது எப்படிகூடும்; என்கிறசங்கையைநீக்குகிறது. இவ்வுலகத்தில் நானென்றுதோற்றுகிற ஆத்மாவுக்கு, எந்தபரமாத்மா அந்தராத்மாவாயிருக்கிறானோ; அவனேலோகாந்தரதிலுள்ள நானென்றுதோற்றுகிற ஆத்மாக்களுக்குமந்தராத்மாவாயிருக்கிறான். பரமாத்மபேதமில்லையென்கை. தத்வவித்துக்களுக்குண்டாகிற நானென்கிறதோற்றம் கொண்டு, பரமாத்மாவை அளவுபட்டவனாய்ச்சொல்லவொண்ணாது. அவர்களுக்கு, எல்லாக்காலத்திலுமெந்ததேசத்திலும், நானென்கிற தோற்றமுண்டாகையாலே, அறிவில்லாதாருடைய நானென்கிறதோற்றம், ஜீவாத்மாவையேபற்றி நிற்பதானதால், இந்தமூடர்களின்தோற்றம் பரமாத்மா, எல்லாப்பொருளுக்கு மந்தராத்மாவாயிருப்பதைத் தடைப்படுத்துகிறவலிவுற்றதன்று. ஆகையால், ஆத்மாக்களெல்லோர்க்கும்பரமாத்மா, அந்தராத்மாவாயிருக்கையிலொருவிரோதமுமில்லை. இந்தஸர்வாந்தர்யாமியாயிருக்கிற பரமாத்மாவை, நானாவாகநினைப்பவன் ஸம்ஸாரத்தையடைகிறான். ஜீவாத்மாக்களைப்போல பரமாத்மாவும், சரீரந்தோறும்வேறுபட்டவனன்று. ஆதலால், பரமாத்மாவுக்கு பேதத்தைநினைப்பவன், ஸம்ஸாரியாவானென்றுகருத்து.

௧௧. 𑌮𑌨𑌸𑍈𑌵𑍇𑌦𑌮𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂𑌚𑌨 |
𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌸𑍍𑌸 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌯 𑌇𑌹 𑌨𑌾𑌨𑍇𑌵 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ||

౧౧. మనసైవేదమాప్తవ్యం నేహనానాస్తికించన |
మృత్యోస్సమృత్యుంగచ్ఛతియఇహనానేవపశ్యతి ||

(ப்-ம்) 𑌇𑌦𑌮𑍍-இந்தபரமாத்மஸ்வரூபமானது, 𑌮𑌨𑌸𑍈𑌵-நெஞ்சினாலேயே, 𑌆𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍-அறியத்தக்கது, 𑌇𑌹-இந்தஸ்வரூபத்தில், 𑌨𑌾𑌨𑌾-வேறுபாடானது, 𑌕𑌿𑌂𑌚𑌨-ஒன்றும், 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿-இல்லை, 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿- (அடைகிறான்.

ஶ௦-ஹா.—இந்தப்ரம்மத்தை யொன்றாயறிவதற்குமுன், ஜ்ஞாத்ரு ஜ்ஞேய, பேதம்தோற்றுகிறது. பின்னில்லை. இந்தஸ்வரூபத்தை மனதினலறியவேணும். இப்படியொருவிதத்தாலும், பேதமில்லாதப்ரம்மத்தில் கிஞ்சித்தாகிலும் பேதத்தை எவன்நினைக்கிறானோ; அவன், ஸம்ஸாரத்தையடைகிறான்.

ரா-ஹா—இப்படி எல்லாவற்றிற்கு மாத்மாவாகிய பரமாத்மாவை சுத்தமான நெஞ்சாலறியலாகும், இதில்விரோதமில்லை. இப்படிகீழ்ச்சொல்லியதை, நிலைநிறுத்துகைக்கு, மறுபடியும் 'ம்ருத்யோஸ்ஸம்ருத்யும்கச்சதியஇஹநாநேவபச்யதி" என்கிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

உத்தரார்த்தத்திற்கு, அடுத்தமுன் ச்லோகத்தில் பதப்பொருள் முதலியதுசொல்லப்பட்டிருக்கிறது. அதுபோலிங்குமுணர்க.

கஉ. 𑌅𑌂𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌮𑌧𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿।
𑌈𑌶𑌾𑌨𑍋 𑌭𑍂𑌤𑌭𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌤𑌤𑍋 𑌵𑌿𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌤𑍇। 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍॥

൧൨. അംഗുഷ്ഠമാത്രഃ പുരുഷോ മദ്ധ്യ ആത്മനി തിഷ്ഠതി।
ഈശാനോ ഭൂതഭവ്യസ്യ ന തതോ വിജുഗുപ്സതേ॥ ഏതദ്വൈ തത്॥

(ப-ம்) 𑌭𑍂𑌤𑌭𑌵𑍍𑌯𑌸𑍍𑌯-எல்லாப்பொருளுக்கும், 𑌈𑌶𑌾𑌨𑌃-ஈச்வரனாயிருக்கிற, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 - விஷ்ணுவானவர், 𑌆𑌤𑍍𑌮𑌮𑌧𑍍𑌯𑍇 - சரீரத்தின்நடுவில், 𑌅𑌂𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃-பெருவிரலளவிள்ளவராய், 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿-இருக்கிறார், 𑌤𑌤𑌃 அந்தசரீரத்தில், 𑌨𑌵𑌿𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌤𑍇 - ஜுகுப்ஸைப்படுகிறதில்லை, 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍-இதுவேமுன்சொன்னப்ரம்மம்.

*ஸ0-ஹா*—அந்தப்ரம்மஸ்வரூபத்தையேசொல்லுகிறது. பெருவிரளளவுள்ளஹ்ருதயபுண்டரீகமத்யத்தில் அங்கஉபாதிஞவளவுபட்டிருக்கிற பூர்ணபுருஷனே அதாவது ஆகாயம் வ்யாபிவஸ்துவாகினும், சிறியவிரந்திரத்தால் சிறுத்தக் காட்டுவது போல், அளவுபட்டிருக்கிற ஸம்ஸாரி ஜீவனேயே, எல்லாப்பொருளுக்கு மீசனுகியபரமாத்மாவென்றறிந்தால், பின்பு ஒருவஸ்துவிலும்ஜுகுப்ஸையடையான்.

*ரா-ஹா*—காலத்ரயத்திலுமுள்ள எல்லாப்பொருளுக்கு மீசனுயிருக்கிற விஷ்ணுஹ்ருதயபுண்டரீகத்தில், அங்குஷ்டமாத்ரராய் எழுந்தருளியிருக்கிறார். இந்தவஸ்துக்களோடுதனக்குண்டான ஸம்பந்தத்தாலாகிய வாத்ஸல்யத்தால், சரீரம்முதலியவற்றிலிருக்கிறதோஷங்களையும் போக்யமாய்க்கொள்ளுகிறார். இவரேமுன்சொன்னலக்ஷணமுள்ள ப்ரப்ரம்மம்.

கங. 𑌅𑌂𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌿𑌵𑌾𑌧𑍂𑌮𑌕𑌃।
𑌈𑌶𑌾𑌨𑍋 𑌭𑍂𑌤𑌭𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸 𑌏𑌵𑌾𑌦𑍍𑌯 𑌸 𑌉 𑌶𑍍𑌵𑌃। 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍॥

൧൩. അംഗുഷ്ഠമാത്രഃ പുരുഷോ ജ്യോതിരിവാധൂമകഃ।
ഈശാനോ ഭൂതഭവ്യസ്യ സ ഏവാദ്യ സ ഉ ശ്വഃ॥ ഏതദ്വൈ തത്॥

(ப-ம்) 𑌅𑌧𑍂𑌮𑌕𑌃-புகையில்லாத, 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃𑌇𑌵- தேஜஸ்ஸைப்போல் ப்ரகாசஸ்வரூபியாய்க்கொண்டு, 𑌸𑌃𑌏𑌵- அவரே, 𑌅𑌦𑍍𑌯 - இப்போதினும், 𑌸𑌃𑌉-அவரே, 𑌶𑍍𑌵𑌃-வருங்காலத்திலும், (𑌅𑌸𑍍𑌤𑌿 - இருக்கிறார்) மற்றப்பதங்களுக்குமுன் ச்லோகத்திலேசொன்னபடிபொருளுணர்க.

*ஸ0-ஹா*—இப்படிபுகையில்லாத ஜ்யோதிஸ்ஸாய் விளங்குகிற மேற்சொல்லியபடியோகிகளால் த்யானிக்கப்படுகிறவனை பரமாத்மா, எக்காலத்திலு மிப்படிப்பட்டவனுயிருக்கிறான். இவனையொப்பாரொருவருமில்லை. ஆகையால், இந்தஆத்மாஅநித்யனென்கிறபக்ஷமும், க்ஷணபங்கபக்ஷமும் நிரஸிக்கப்பட்டது.

*ரா-ஹா*—ஸமஸ்தபதார்த்தங்களுக்கு மந்தராத்மாவாயிருக்கிற பரமாத்மா ஜ்யோதிஸ்வரூபியாய் ப்ரகாசிக்கிறார்.

௧௪. 𑌯𑌥𑍋𑌦𑌕𑌂𑌦𑍁𑌰𑍍𑌗𑍇𑌵𑍃𑌷𑍍𑌟𑌂𑌪𑌰𑍍𑌵𑌤𑍇𑌷𑍁𑌵𑌿𑌧𑌾𑌵𑌤𑌿 ।
𑌏𑌵𑌂𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑌶𑍍𑌯𑌂𑌸𑍍𑌤𑌾𑌨𑍇𑌵𑌾𑌨𑍁𑌵𑌿𑌧𑌾𑌵𑌤𑌿 ॥

౧౪. యథోదకందుర్గేవృష్టం పర్వతేషువిధావతి ।
ఏవంధర్మాన్పృథక్ పశ్యం స్తానేవానువిధావతి ॥

(ப-ம) 𑌦𑍁𑌰𑍍𑌗𑍇 - துர்க்கப்ரதேசத்தில், 𑌵𑍃𑌷𑍍𑌟𑌮𑍍 - வர்ஷிக்கப்பட்ட, 𑌉𑌦𑌕𑌮𑍍-ஜலமானது, 𑌯𑌥𑌾-எப்படி, 𑌪𑌰𑍍𑌵𑌤𑍇𑌷𑍁-மலைகளில், 𑌵𑌿𑌧𑌾𑌵𑌤𑌿-பிரிந்தோடுகிறதோ; 𑌏𑌵𑌮𑍍-இப்படியே, 𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 - தர்மங்களை, 𑌪𑍃𑌥𑌕𑍍 வேறுபட்டவைகளாய், 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍-நினைப்பவன், 𑌤𑌾𑌨𑍇𑌵 - அவைகளையே, 𑌅𑌨𑍁𑌵𑌿𑌧𑌾𑌵𑌤𑌿 - அநுஸரிக்கிறான்.

ஸ0-ஸா—மறுபடியும், ப்ரம்மத்தில் பேததர்சநம்செய்யத் தகாதென்று, சொல்லுகிறது. துர்க்கமாய்உயர்ந்திருக்கிற தேசத்தில், பெய்தமழையானது பள்ளங்கிலங்களில்விழுந்து பிரிந்துசிதறியோடி அழிகின்றதோ; இப்படியே ஆத்மாவின்தர்மங்களில் பேதத்தைப்பார்க்கின்றவன், அடிக்கடிபிறந்து துன்பப்பட்டழிகிறான்.

ரா ஸா—நாநாசரீரங்களிலு மந்தர்யாமியாயிருக்கிறவந்தவொருவனுடைய, தேவாந்தர்யாமித்வம், மநுஷ்யாந்தர்யாமித்வம், முதலியதர்மங்களை, வேறுவேறிடத்தனவாகநினைப்பவன், மலையருவியை யொற்றவனாய் சிதறியழிந்துவிடுகிறான்.

௧௫. 𑌯𑌥𑍋𑌦𑌕𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑍇𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑌾𑌸𑌿𑌕𑍍𑌤𑌂𑌤𑌾𑌦𑍃𑌗𑍇𑌵𑌭𑌵𑌤𑌿 ।
𑌏𑌵𑌂𑌮𑍁𑌨𑍇𑌰𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑌤𑌆𑌤𑍍𑌮𑌾𑌭𑌵𑌤𑌿𑌗𑍌𑌤𑌮 ॥

౧౫. యథోదకంశుద్ధేశుద్ధమాసిక్తంతాదృగేవభవతి ।
ఏవంముని ర్విజానతఆత్మాభవతిగౌతమ ॥

(ப-ம்) 𑌗𑍌𑌤𑌮 - ஓ கௌதமனே, 𑌶𑍁𑌦𑍍𑌧𑍇 - சுத்தமாயிருக்கிற, (𑌉𑌦𑌕𑍇 - ஜலத்தில்) 𑌆𑌸𑌿𑌕𑍍𑌤𑌮𑍍-சேர்த்திருக்கிற, 𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑍍-சுத்தமான, 𑌉𑌦𑌕𑌮𑍍-ஜலமானது, 𑌯𑌥𑌾-எப்படி, 𑌤𑌾𑌦𑍃𑌗𑍇𑌵-அப்படிப்பட்டதாயே, 𑌭𑌵𑌤𑌿-ஆகிறதோ, 𑌵𑌿𑌜𑌾𑌨𑌤:-ஜ்ஞாநியான, 𑌮𑍁𑌨𑍇:-முனிக்கு, 𑌆𑌤𑍍𑌮𑌾-ஆத்மாவானது, 𑌏𑌵𑌮𑍍-இப்படி, 𑌭𑌵𑌤𑌿-ஆகிறது.

ஸ0-ஸா—உபாத்தியினுலாகிய பேதத்ருஷ்டியைநீக்கி, விசுத்தமும், விஜ்ஞாநரூபமும், பேதமில்லாததுமான ப்ரஹ்மத்தை, அறிந்துமநநம் செய்பவனுக்கு, ஜீவாத்மா பரமாத்மா, இவ்விரண்டும், நீருடன்கலந்த நீர்போல், ஒருய்விளங்குகிறது. ஆகையால் குதார்க்கிகர்கள்சொல்லுகிற பேதத்தையும், நாஸ்திகன் செய்கிறகுத்ருஷ்டியையும் விட்டு, ஆயிரம் தாய்தந்தைகளினும் சிறந்ததான வேதம் சொன்னபடி, ஆத்மா, ஒன்றே என்றறிதல், சாந்தியுடையோர்க்குத் தக்கது.

ரா-ஸா-பரமாத்மா, ஒருவனே, எல்லோருக்கு மந்தராத்மாவா யிருக்கிறான். என்றுணர்ந்தவன், பரமாத்மாவையொற்ற ஸ்வரூபத்தைப் பெறுகிறான்.

கடோபநிஷத் இரண்டாமத்தியாயத்தில்
காலாம்வல்லி முற்றும்.

---

## 𑌪𑌞𑍍𑌚𑌮𑌵𑌲𑍍𑌲𑍀𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

௧. 𑌪𑍁𑌰𑌮𑍇𑌕𑌾𑌦𑌶𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑌜𑌸𑍍𑌯𑌾𑌵𑌕𑍍𑌰𑌚𑍇𑌤𑌸𑌃|
𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌯 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌶𑍍𑌚 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇|| 𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍||

౧. పురమేకాదశద్వారమజస్యావక్రచేతసః।
అనుష్ఠాయనశోచతివిముక్తశ్చవిముచ్యతే॥ఏతద్వైతత్ ॥

(ப-ம்) 𑌅𑌜𑌸𑍍𑌯-நித்யனாய், 𑌅𑌵𑌕𑍍𑌰𑌚𑍇𑌤𑌸𑌃 - பரிசுத்தமானநெஞ்சையுடைய, ஜீவாத்மாவுக்கு, 𑌏𑌕𑌾𑌦𑌶𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑍍 - பதினொரு வாசலையுடைய, 𑌪𑍁𑌰𑌮𑍍-நகரமானது, (𑌭𑌵𑌤𑌿-இருக்கிறது) இதை, 𑌅𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌯 - அறிந்துகொண்டு, 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿-சோகிக்கிறதில்லை, 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌶𑍍𑌚-விடுபட்டவனாகி, 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇-முக்தனாகிறான்.

𑌶𑌂-𑌭𑌾-𑌰𑌾-𑌭𑌾. பதினொருவாசல்களாவது, பதினொரு இந்த்ரியங்கள் நகரமென்பது - சரீரத்தை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

“𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍” என்பதற்குமுன்போல சங்கரபாஷ்யத்தில், இந்த ஜீவன், பரமாத்மாவேயென்றும், இராமாநுஜபாஷ்யத்தில், இந்தஜீவனும் பரமாத்ம சரீரமேயென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

௨. 𑌹𑌂𑌸𑌃 𑌶𑍁𑌚𑌿𑌷𑌦𑍍𑌵𑌸𑍁𑌰𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌸𑌦𑍍𑌧𑍋𑌤𑌾 𑌵𑍇𑌦𑌿𑌷𑌦𑌤𑌿𑌥𑌿𑌰𑍍𑌦𑍁𑌰𑍋𑌣𑌸𑌤𑍍 | 𑌨𑍃𑌷𑌦𑍍𑌵𑌰𑌸𑌦𑍃𑌤𑌸𑌦𑍍𑌵𑍍𑌯𑍋𑌮𑌸𑌦𑌬𑍍𑌜𑌾 𑌗𑍋𑌜𑌾 𑌋𑌤𑌜𑌾 𑌅𑌦𑍍𑌰𑌿𑌜𑌾 𑌋𑌤𑌂 𑌬𑍃𑌹𑌤𑍍||

౨. హంసశ్శుచిషద్వసురంతరిక్షసద్ధోతా వేదిషదతిథిర్దురోణసత్ ।
నృషద్వరసదృతసద్వ్యోమసదబ్జాగోజాఋతజాఅద్రిజాఋతంబృహత్ ।

(ப-ம்) 𑌶𑍁𑌚𑌿𑌷𑌤𑍍-க்ரீஷ்மகாலத்திலிருக்கிற, 𑌹𑌂𑌸𑌃-ஸூர்யனும், 𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌸𑌤𑍍-ஆகாயத்திலிருக்கிற, 𑌵𑌸𑍁𑌃-வாயுவும், 𑌵𑍇𑌦𑌿𑌷𑌤𑍍-வேதிகையிலிருக்கிற, 𑌹𑍋𑌤𑌾 - ஹோமம்பண்ணுகிறவனும், 𑌦𑍁𑌰𑍋𑌣𑌸𑌤𑍍-க்ருகத்திலிருக்கிற, 𑌅𑌤𑌿𑌥𑌿𑌃-அதிதியும், 𑌨𑍃𑌷𑌤𑍍-மநுஷ்யர்களிலிருப்பதும், 𑌵𑌰𑌸𑌤𑍍 - தேவதைகளிடத்திலிருப்பதும், 𑌋𑌤𑌸𑌤𑍍 - யஜ்ஞத்திலிருப்பதும் 𑌵𑍍𑌯𑍋𑌮𑌸𑌤𑍍-ஆகாசத்திலிருப்பதும், 𑌅𑌬𑍍𑌜𑌾𑌃-ஜலத்தி லுண்டானவைகளும், 𑌗𑍋𑌜𑌾𑌃-பூமியிலுண்டானவைகளும், 𑌋𑌤𑌜𑌾𑌃-ஸ்வர்க்கத்தி லுண்டானவைகளும், 𑌅𑌦𑍍𑌰𑌿𑌜𑌾𑌃 - மலையிலுண்டானவைகளும், 𑌬𑍃𑌹𑌤𑍍-பெரிதாயிருக்கிற 𑌋𑌤𑌮𑍍-ஸத்யஸ்வரூபமான ப்ரம்மமே.

𑌶𑌂-𑌭𑌾.—இவைகளுக்கும் ப்ரம்மத்திற்கும் பேதமில்லை எல்லாம் ப்ரம்மம்.

𑌰𑌾-𑌭𑌾.—எல்லாவற்றிற்கு மந்தராத்மாவாயிருப்பது ப்ரம்மம் - ஜீவப்ரக்ருதிகள், பராபரசரீரங்களன்றோ.

௩. 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑍁𑌨𑍍𑌨𑌯𑌤𑍍𑌯𑌪𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌸𑍍𑌯𑌤𑌿 |
𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌾𑌮𑌨𑌮𑌾𑌸𑍀𑌨𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇||

౩. ఊర్ధ్వం ప్రాణమున్నయత్యపానం ప్రత్యగస్యతి!
మధ్యేవామనమాసీనం విశ్వేదేవా ఉపాసతే॥

(ப-ம்) ப்ராணம்-ப்ராணவாயுவை, ஊர்த்வம்-மேலே, உந்நயதி-தள்ளு கிறான், அபாநம் - அபாநவாயுவை, ப்ரத்யக் - கீழே, அஸ்யதி - தள்ளுகி றான், இப்படி செய்துகொண்டு, மத்யே - நடுவில், ஆஸீநம்- எழுந்தருளியி ருக்கிற, வாமநம்-அங்குஷ்டப்ரமாணனுயிருக்கிற,பரமாத்மாவை,விஶ்வே தேவா:-எல்லாத்தேவர்களும், உபாஸதே - உபாஸநஞ்செய்கிறார்கள்.

ஸம்-ஹா.—ப்ராணபாநாதி வாயுக்கள் நியமமாய் ஸஞ்சரிக்கையால், இதற்குக் காரணமான ஆத்மா, சரீரத்தில் வேறாயவனொருவனுளனென்றறியலாகும். அவனே ஜீவாத்மா, அவனே, பரமாத்மா, என்று இதற்குபாவம்.

ஸா-ஹா.—ஸத்வகுணமுடையவர்களுக்கு, இந்த பரமாத்மா உபாஸநத்தால் தோற்றுகிறான்,

௪. அஸ்ய விஸ்ரம்ஸமாநஸ்ய ஶரீரஸ்தஸ்ய தேஹிந:।
தேஹாத்விமுச்யமாநஸ்ய கிமத்ர பரிஶிஷ்யதே॥ ஏதத்வை தத்॥

౪. అస్యవిస్రంసమానస్యశరీరస్థస్య దేహినః !
దేహాద్విముచ్యమానస్య కిమత్రపరిశిష్యతే ॥

(ப-ம்) அஸ்ய- இந்தஉபாஸநஸித்தியுடைய, தேஹிந:-ஜீவனுக்கு,ஶரீரஸ்தஸ்ய-த் நடசரீரனுயிருக்கும்போதும்,விஸ்ரம்ஸமாநஸ்ய-பலஹீனனு யிருக்கும்போதும், தேஹாத் - தேகத்திருந்து, விமுச்யமாநஸ்ய - மரண த்தையடையும்போதும், அத்ர -இந்தசரீரத்தில், கிம்பரிஶிஷ்யதே - என் செய்யத்தக்கதுண்டு.

ஸம்-ஹா.—இந்த ஆத்மா, இந்த சரீரத்தின் வலிவுகுறையவே, இதைவிட்டுநீங் கிப்போகும்போது, இந்த சரீரத்தில் ப்ராணம், இந்திரியங்கள் முதலானவை யொ ன்றும் நிற்பதில்லை. ஒரு நகரத்தில், அரசனில்லாதபோது, நரகத்து வேலைக்காரர்க ளெல்லாம் நரகத்தைவிட்டுப்போவதுபோல் ஆத்மா இதைவிட்டவுடனே, எல்லாமி தை விடுகின்றன. ஆகையால் சரீரத்தில் வேறாய் ஆத்மா ஒருவனுளன்.

ஸா-ஹா.—இங்கு, பரமாத்மாவை உபாஸித்து, அவனுடைய அநுக்ரஹம்பெற்ற வன், ப்ராரப்தகர்மம் நீங்கிய உடனே, முக்தனாகிறான். பின்பவனுக்கு செய்யத்தக்க வைக ளொன்றுமில்லை.

பதாங்யார்தபேதங்கள்.

"ஏதத்வை தத்" என்பதற்கு முன்போலவேபொருள்.

௫. ந ப்ராணேந நாபாநேந மர்த்யோ ஜீவதி கஶ்சந।
இதரேண து ஜீவந்தி யஸ்மிந்நேதாவுபாஶ்ரிதௌ॥

౫. న ప్రాణేనా నాపానేన మర్త్యో జీవతి కశ్చన ।
ఇతరేణ తు జీవంతి యస్మిన్నేతావుపాశ్రితౌ ॥

(ப்-ம்) ந மர்த்ய:, மநுஷ்யன், கஶ்சந - ஒருவனும், ப்ராணேந - ப்ராணவாயுவினால், நஜீவதி - ஜீவித்திருப்பதில்லை, ந அபாநேந - அபாநவாயுவினாலும், நஜீவதி - ஜீவித்திருப்பதில்லை. யஸ்மிந் - யாதொரு ஆத்மாவில், ஏதௌ - இந்தவாயுக்கள், உபாஶ்ரிதௌ - நிற்கின்றனவோ, (தேந - அந்த) இதரேண து - சரீரத்தில்வேறான ஆத்மாவினால், ஜீவந்தி - ஜீவித்திருக்கிறார்கள்.

ஶம்-ஹா.—ப்ராணாபாநவாயுக்கள் ஆத்மாவல்ல - இவைகளில் வேறானவனே ஆத்மா. இவைகளவனால் சேர்க்கப்பட்டவை. ஆகையால் சேர்ந்தவனன்யன். இவைகள் ஸ்வயமாய்ச்சேரா. சேர்ந்தவையெல்லா மொருவனால் சேர்க்கப் பட்டவைகளாயே காணப்படுகின்றன. ஆதலால், ஆத்மாவேறானவன்.

ரா-ஹா.—எல்லா ஜீவாத்மாக்களும் ஜீவித்திருப்பது பரமாத்மாவினாலேயாகையால் ஜீவாத்மாக்களை ஜீவிக்கப்பண்ணுகிறவன், ஜீவாத்மாக்களில்வேறாய் பரமாத்மா. ஆகையால் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஐக்யமில்லை. இப்படிப்பட்ட மகிமையுடையவன் பரமாத்மா - ப்ராணன். அபானன், என்கிற வாயுக்கள் முதலான எல்லாமவனாலாகியது.

௬. ஹந்த த இதம் ப்ரவக்ஷ்யாமி குஹ்யம் ப்ரஹ்ம ஸநாதநம் ।
யதா ச மரணம் ப்ராப்ய ஆத்மா பவதி கௌதம ॥

౬. హంతతఇదంప్రవక్ష్యామిగుహ్యంబ్రహ్మసనాతనమ్।
యథాచమరణంప్రాప్య ఆత్మాభవతిగౌతమ ॥

(ப்-ம்) ஹே கௌதம - கௌதமனே, ஆத்மா - ஆத்மாவானவன், மரணம், ப்ராப்ய - முக்தனானபிறகு, யதா ச - எப்படி, பவதி - ஆகிறானோ, இதம் இந்த, குஹ்யம் - இரகஸ்யத்தையும், ஸநாதநம் - நித்யமான, ப்ரஹ்ம - ப்ரம்மத்தையும், ஹந்த - ஆச்சரியமாய், ப்ரவக்ஷ்யாமி - சொல்லுகிறேன்.

ஶம்-ஹா.—எந்த ப்ரம்மத்தை யறிந்துகொண்டு முக்தனாகிறானோ எதை யறியாமல் ஸம்ஸாரியாகிறானோ; அந்த ப்ரம்மஸ்வரூபத்தை உனக்குச் சொல்லுகிறேன் கௌதமனே கேள்.

ரா-ஹா.—பரமாத்மஸ்வரூபத்தையும் நிஷ்க்ருஷ்ட ஜீவாத்மஸ்வரூபத்தையும் யோக்யனயிருக்கிற சிஷ்யனை கௌதமனே உனக்குச்சொல்லுகிறேன்.

௭. யோநிமந்யே ப்ரபத்யந்தே ஶரீரத்வாய தேஹிந: ।
ஸ்தாணுமந்யேநுஸம்யந்தி யதாகர்ம யதாஶ்ருதம் ॥

౭. యోనిమన్యేప్రపద్యన్తే శరీరత్వాయదేహినః ।
స్థాణుమన్యేనుసంయన్తి యథాకర్మయథాశ్రుతమ్ ॥

(ப்-ம்) அந்யே - முக்திபெறாத, தேஹிந: - ஜீவர்கள், யோநிம் - யோனியை, ஶரீரத்வாய - சரீரப்ராப்தியின்பொருட்டு, ப்ரபத்யந்தே - அடைகிறார்கள். அந்யே தேஹிந: - மற்றுள்ளசிலஜீவர்கள், யதாஶ்ருதம் - சாஸ்த்ர

ப்படி, யதாகர்ம-கர்மத்திற்குத்தக்கபடி, ஸ்தாணும் - ஸ்தாவரசரீரத்தை, அநுஸம்யந்தி-அநுஸரிக்கிறார்கள்.

ஸம்-ஹா-ரா-ஹா.—ப்ரம்மஜ்ஞானமில்லாத ஜீவர்கள் தங்கள் கர்மத்திற்குத்தக்க படி ஸ்தாவர சரீரத்தையும் ஜங்கமசரீரத்தையும் அடைகிறார்கள் ஆகையால்ப்ரம்மத்தை யறியவேணும்.

௮. ய ஏஷ ஸுப்தேஷு ஜாகர்தி காமம் காமம் புருஷோ நிர்மிமாண: | ததேவ சுக்ரம் தத் ப்ரஹ்ம ததேவாம்ருதமுச்யதே தஸ்மிம்ல்லோகா: ச்ரிதாஸ்ஸர்வே தது நாத்யேதி கச்சந|| ஏதத்வை தத்||

౮. యఏషసుప్తేషుజాగర్తికామంకామంపురుషోనిర్మిమాణః ।
తదేవశుక్రంతద్బ్రహ్మతదేవామృతముచ్యతే ।
తస్మిఁల్లోకాశ్శ్రితాస్సర్వే తదునాత్యేతికశ్చన॥ ఏతద్వైతత్ ॥

(ப-ம்) ய:, ஏஷ:, புருஷ:-யாதொருபுருஷன், ஸுப்தேஷு-உறங்கும்போதும், காமம்காமம்-ஸங்கல்பித்துஸங்கல்பித்து, நிர்மிமாண:-ஸ்ருஷ்டிபண்ணிக்கொண்டு, ஜாகர்தி-உணர்ந்திருக்கிறானோ, ததேவ-அந்தபரமபுருஷனே, சுக்ரம்-ப்ரகாசஸ்வரூபி, தத்- அந்தபரமபுருஷனே, ப்ரஹ்ம-பரப்ரம்மம், ததேவ-அந்தபரமபுருஷனே, அம்ருதம் - மோக்ஷஸ்வரூபி, உச்யதே-இப்படிசொல்லப்படுகிறான், தஸ்மின்-அந்தபரமபுருஷனிடத்தில், ஸர்வே லோகா:-எல்லாலோகங்களும், ச்ரிதா:-இருக்கின்றன, தத்- அந்தபரமபுருஷனை, கச்சந-ஒருவனும், நாத்யேதி-அதிக்ரமிக்கிறதில்லை, ஏதத்வைதத்-இந்தபரமபுருஷனே பரப்ரம்மம்.

ஸம்-ஹா.—ப்ரம்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறேனென்றுமுன் ப்ரதிஜ்ஞைசெய்தபடி சொல்லத்தொடங்குகிறது.

ரா-ஹா.—இப்படி சிஷ்யனை ப்ரரோசனைசெய்து அபிமுகனாக்கிக்கொண்டு ப்ரக்ருதத்தை யநுஸரிக்கிறது. இந்த ச்லோகதாத்பர்யத்தால், முக்தாத்மாவுக்கும் ப்ரம்மத்திற்கும் பேதமில்லை என்கிற பக்ஷம் தள்ளப்பட்டது.

௯. அக்நிர்யதைகோ புவநம் ப்ரவிஷ்டோ ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ | ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பஹிச்ச||

౯. అగ్నిర్యథైకోభువనంప్రవిష్టో రూపంరూపంప్రతిరూపోబభూవ ।
ఏకస్తథాసర్వభూతాంతరాత్మా రూపంరూపంప్రతిరూపోబహిశ్చ ॥

(ப-ம்) ஏக:-ஒருவனாயிருக்கிற, அக்நி:-அக்நியானவன், புவநம்-லோகத்தை, ப்ரவிஷ்ட:- ப்ரவேசித்தவனாய், ரூபம்ரூபம் - ரூபங்கள்தோறும் ப்ரதிரூப:-வேறுபட்டரூபத்தையுடையவனாய், யதா-எப்படி, பபூவ ஆனானோ, ததா-அப்படி, ஏக:-ஒருபரமபுருஷனே, ஸர்வபூதாந்தராத்மா - எல்லா ஜீவர்களுக்கு மந்தராத்மாவாய், ரூபம்ரூபம் . வ்யக்திகள்

தோறும், வ்யதிரூவை:-வேறுபட்டவளுய் ஸஹிஸ்ச உள்ளும்வெளியிலும் வ்யாபித்திருக்கிறுன்,

ஸம்-ஹா—அநேகர்களான தார்க்கிகர்களாலே கலக்கப்பட்ட நெஞ்சினையுடைய வர்களுக்குக் கலக்கம் நீங்கி ஆத்மஸ்வரூபஜ்ஞாந முண்டாகவேணுமென்று, ஆதாரமு டைய ச்ருதி, அநேகவாரம் சொல்லுகிறது. எல்லா சரீரத்திலிருக்கிற ஆத்மாவு மொ ன்றே வேறல்ல.

ரா-ஹா.—சரீரந்தோறும் வேறுபட்டிருக்கிற எல்லா ஜீவர்களுக்கு மந்தராத்மா வாகிய பரமாத்மா ஒருவரே. இந்த அர்த்தம் நெஞ்சில் படும்படி த்ருஷ்டாந்தம் சொ ல்லி இசைவிக்கிறது

கo. வாயுயதைகொ ஹுவநம் வவிஷ்ட ரூவம் ரூவம் வரதிரூவொ வலூவ | ஏகஸ்ததா ஸவ்வஹூதாந்தராத்மா ரூவம் ரூவம் வரதிரூவொ வஹிஸ்ச॥

१०. वायुर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥

(ப-ம்) வாயு:-காற்றானது.

ஸம்-ஹா-ரா-ஹா.—கீழுதாகரணம்போல் உதாகரணாந்தரம்காட்டப்படுகிறது.

பதார்வயார்த்தபேதங்கள்.

பதார்தம்பாவர்தம், எல்லாம்முன்போலவே கண்டுகொள்க.

கக. ஸூர்யொ யயா ஸவ்வலொகஸ்ய சக்ஷு: ந லிப்யதெ சாக்ஷுஷைர்பாஹ்யதொஷை: | ஏகஸ்ததா ஸவ்வஹூதாந்தராத்மா ந லிப்யதெ லொகது:கேந பாஹ்ய:॥

११. सूर्यो यथा सर्वलोकस्य चक्षुर्न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा न लिप्यते लोकदुःखेन बाह्यः ॥

(ப-ம்) ஸவ்வலொகஸ்ய-எல்லாலோகத்திற்கும், சக்ஷு:-கண்ணுயிரு க்கிற, ஸூர்ய:- ஸூர்யன், யயா-எப்படி, சாக்ஷுஷை:-கண்ணுக்குத் தோற்றுகிற, பாஹ்யதொஷை:-பஹிர்தோஷங்களாலே, நலிப்யதெ- ஆக்ரமிக்கப்படுகிறதில்லையோ, ததா-அப்படியே,ஏக:-ஒருவனுயிருக்கிற, பாஹ்ய:-விலக்ஷணனை பரமாத்மா, ஸவ்வஹூதாந்தராத்மா - எல்லாஜீவர் களுக்கு மந்தராத்மாவாயிருந்தாலும், லொகது:கேந-உலகத்தின் துன்ப த்தால், நலிப்யதெ-ஸ்ப்ருசிக்கப்படான்.

ஸம்-ஹா.—ஜீவாத்மா, பரமாத்மா, என்கிற இருவருமென்றுயிருந்தாலும் ஜீவா த்மாவின் துக்கம் பரமாத்மாவுக்குத் தட்டாது.

ரா-ஹா—இந்த சரீரத்தில், ஜீவாத்மாவைப்போல் ப்ரவேசித்திருந்தாலும் ஜீவ னுக்குண்டாகிற துக்கங்கள் பரமாத்மாவுக் குண்டாகிறதில்லை, என்பதற்கு த்ருஷ்டா ந்தம் சொல்லப்பட்டது. பரமாத்மா அகர்மவச்யனன்றோ,

௧௨. ஏகோ வஶீ ஸர்வபூதாந்தராத்மா ஏகம் பீஜம் பஹுதா யஃ கரோதி । தமாத்மஸ்தம் யே(அ)நுபஶ்யந்தி தீராஃ தேஷாம் ஸுகம் ஶாஶ்வதம் நேதரேஷாம்॥

౧౨. ఏకో వశీ సర్వభూతాన్తరాత్మా ఏకం బీజం బహుధా యః కరోతి ।
తమాత్మస్థం యేఽనుపశ్యన్తి ధీరాస్తేషాం సుఖం శాశ్వతం నేతరేషామ్ ॥

(ப்-ம்) வஶீ - ஸ்வாதீனனாயும், ஸர்வபூதாந்தராத்மா - எல்லாஜீவர்களுக்குமாத்மாவாயும், ஏகஃ ஒருவனாயுமிருக்கிற, யஃ-எவன், ஏகம்-ஒன்றாயிருக்கிற, பீஜம்-பிஜஸ்தாநீயமானமூலப்ராக்ருதியை, பஹுதா-அநேகப்ராகாரமாக, கரோதி-பண்ணுகிறானோ, தம் - அந்தகாரணஸ்வரூபியான பரமாத்மாவை, யே தீராஃ-எந்ததீரர்கள், ஆத்மஸ்தம்-ஆத்மாவிலிருப்பவனாய் அநுபஶ்யந்தி-அறிகிறார்களோ, தேஷாம்-அவர்களுக்கு, ஶாஶ்வதம்-நித்யமான, ஸுகம்-ஸுகமானது, (பவதி-உண்டாகிறது) இதரேஷாம்-மற்றவர்களுக்கு, ந-இல்லை.

ஶம்-ஹா.—பிறருயர்ச்சி காண்பதும், ஒருவனுக்கு பாரதந்த்ர்ய மிருக்கையும் துன்பத்தைத் தருமவைகளாய்ப் ப்ரஸித்தங்கள். இவைகளில்லாத ஆத்மாவுக்கு துன்பமென்பதில்லை யாகையால், அவனை யடைவது புருஷார்த்த மாகின்றது என்று பாவார்த்தம்.

ரா-ஹா.—பரமாத்மாவை ஜீவாத்மாவுக்கு அந்தராத்மாவாய், அறியாமல் அபேதத்தை நினைப்பவர் முக்தியடையமாட்டார்.

௧௩. நித்யோ(அ)நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம் ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந் । தமாத்மஸ்தம் யே(அ)நுபஶ்யந்தி தீராஸ்தேஷாம் ஶாந்திஃ ஶாஶ்வதீ நேதரேஷாம்॥

౧౩. నిత్యోఽనిత్యానాం చేతనశ్చేతనానాం ఏకో బహూనాం యో విదధాతి కామాన్ ।
తమాత్మస్థం యేఽనుపశ్యన్తి ధీరాస్తేషాం శాన్తిః శాశ్వతీ నేతరేషామ్ ॥

(ப்-ம்) நித்யாநாம்-பஹூநாம்-சேதநாநாம் - நித்யர்களாய், அநேகர்களாயிருக்கிற சேதநர்களுக்குள், யஃ நித்யஃ-ஏகஃ-சேதநஃ-நித்யனாய் ஒருவனாயிருக்கிற எந்த சேதநன், காமாந் - விஷயாதி- இஷ்டங்களைத் தருகிறானோ, தம் - அந்தபரமாத்மாவை, ஆத்மஸ்தம் - ஜீவாத்மாவிலிருப்பவனாய், யே - தீராஃ - அநுபஶ்யந்தி - எந்ததீரர்களறிகிறார்களோ, தேஷாம் - ஶாஶ்வதீ - ஶாந்திஃ - அவர்களுக்கு சாச்வதமான சாந்தியுண்டாகிறது, இதரேஷாம் - ந - மற்றோர்க்கில்லை.

பதார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில் "நித்யோ நித்யாநாம்" என்கிறவிடத்தில், நித்யஃ அநித்யாநாம், என்றுபிரித்து அநித்யங்களில் நித்யனென்றுபொருள்சொ

ல்லியிருக்கிறது. மற்ற பாவார்தம்முதலியவை,பதவுரையின்படியேஇரண்டு பாஷ்யங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

௧௪. 𑌤𑌦𑍇𑌤𑌦𑌿𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌽𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌸𑍁𑌖𑌮𑍍 |
𑌕𑌥𑌂 𑌨𑍁 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌂 𑌕𑌿𑌮𑍁 𑌭𑌾𑌤𑌿 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 𑌵𑌾 ||

౧౪. తదేతదితిమన్యన్తేనిర్దేశ్యంపరమంసుఖం ।
కథన్నుతద్విజానీయాంకిముభాతివిభాతివా ॥

(ப-ம்) 𑌪𑌰𑌮𑌂-உயர்ந்ததான, 𑌅𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍍𑌯𑌂 - வாசாமகோசரமான, 𑌸𑍁𑌖𑌂-சுகஸ்வரூபமான, ப்ரம்மத்தை,(யோகிகள்) 𑌤𑌦𑍇𑌤𑌦𑌿𑌤𑌿-இது அந்தப்ரம்மமென்று, 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇-ஸாக்ஷாத்கரிக்கிறார்கள். 𑌤𑌤𑍍 - அந்தப்ரம்மத்தை, 𑌕𑌥𑌂 𑌨𑍁-எவ்வழியாலே, 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌯𑌾𑌂-அறியலாகும், 𑌕𑌿𑌮𑍁, 𑌭𑌾𑌤𑌿, 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿, 𑌵𑌾,—அந்தப்ராம்மம் ஸ்பஷ்டமாய் ப்ரகாசிக்கிறதா.

𑌶𑌂-𑌭𑌾-𑌰𑌾-𑌭𑌾.—இந்த ப்ரம்மஸ்வரூபம் மந்தமதியானவன்போல்வரால் அறியும்படி நன்றாய் விளங்குமா.

௧௫. 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌂 𑌨𑍇𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍋 𑌭𑌾𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌤𑍋𑌽𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌃 | 𑌤𑌮𑍇𑌵 𑌭𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑍁𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ||

౧౫. నతత్రసూర్యోభాతినచంద్రతారకంనేమావిద్యుతోభాంతికుతోయమగ్నిః ।
తమేవభాంతమనుభాతిసర్వం తస్యభాసాసర్వమిదంవిభాతి

(ப-ம்) 𑌤𑌤𑍍𑌰-அந்தப்ராம்மம் ப்ரகாசிக்கும்போது, 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 - சூர்யனும், 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌂-சந்திரன், நக்ஷத்ரம், முதலியஜ்யோதிர் வஸ்துக்களும், 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑌃-மின்னல்களும், 𑌇𑌮𑌾𑌃-இவைகள், 𑌨, 𑌨, 𑌨, 𑌭𑌾𑌤𑌿, 𑌭𑌾𑌤𑌿, 𑌭𑌾𑌨𑍍𑌤𑌿,-ப்ரகாசிப்பதில்லை. 𑌅𑌯𑌂-𑌅𑌗𑍍𑌨𑌿𑌃- இந்தஅக்நியானது, 𑌕𑍁𑌤𑌃-எப்படிப்ரகாசிக்கும், 𑌸𑌰𑍍𑌵𑌂-எல்லாம், 𑌭𑌾𑌨𑍍𑌤𑌂-ப்ரகாசியாநிற்கிற, 𑌤𑌮𑍇𑌵 - அவனையே, 𑌅𑌨𑍁𑌭𑌾𑌤𑌿-அநுஸரித்து ப்ரகாசிக்கின்றன, 𑌇𑌦𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌂-இந்த சூர்யன்முதலானவெல்லாம், 𑌤𑌸𑍍𑌯, 𑌭𑌾𑌸𑌾, 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿-அந்தபரப்ராம்மத்தின், ப்ரகாசத்தினால், ப்ரகாசிக்கின்றன

𑌶𑌂·𑌭𑌾.—எல்லாவற்றையும் விளங்கச்செய்கிற ஸூர்யாதி தேஜஸ்ஸுகள் அந்தப்ரம்மத்தின் ப்ரகாசத்தால், ப்ரகாசிப்பதுபோல்தோற்றுகிறது. இவைகளுக்கு வாஸ்தவமான ப்ரகாசமில்லை. அக்நிதப்தமான வஸ்துவிலிருக்கிற அக்நிசுட்டாலும் அந்தவஸ்துவே சுடுகிறதென்று சொல்வதுபோல், இவைகளை ப்ரகாசிக்கிற பொருள்களாகச் சொல்வது, அதிஷ்டான ஸம்பந்தத்தாலாகும்.

𑌰𑌾-𑌭𑌾,—யோகிகள் த்யானம் செய்வதற்கு ஆலம்பநமாகிய, பகவானுடைய, ஜ்யோதிஸ் ஸ்வரூபமாய், "ஆதித்யவர்ணம்தமஸ பரஸ்தாத்" என்பது முதலான ப்ரமாணங்களில் சொல்லிய, சுபாச்ரயமாயிருக்கிற திவ்யமங்கள விக்கிரக ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. ஸூர்யன், ப்ரகாசிக்கும்போது, மின்மினியின் ப்ரகாசம் அட

ங்கிப்போலவும்போல் அந்த திவ்யமங்களவிக்ரஹஜ்யோதிஸ்ஸைக்கண்டபோது ஸூரியன் முதலானவைகளின் தேஜஸ்ஸு அடங்கிப்போகிறது. இந்த ஸ்வஸ்ப தாக்தியும் அந்த பரமாத்மாவினருளா விலைகளுக்குண்டாயிருக்கிறது.

பஞ்சமவல்லீ முற்றும்.

---

## ஷஷ்டவல்லீப்ராரம்ப:

க. ஊர்த்⁴வமூலோऽவாக்ஶாக² ஏஷோऽஶ்வத்த²ஸ்ஸநாதந: | ததே³வ ஶுக்ரம் தத்³ப்³ரஹ்ம ததே³வாம்ருதமுச்யதே | தஸ்மிம்ல்லோகா: ஶ்ரிதா: ஸர்வே தது³ நாத்யேதி கஶ்சந || ஏதத்³வை தத் ||

౧. ఊర్ధ్వమూలోఽవాక్ శాఖఏషోఽశ్వత్థస్సనాతనః ।
తదేవశుక్రంతద్బ్రహ్మతదేవామృతముచ్యతే॥
తస్మిఁల్లోకాశ్శ్రితాస్సర్వేతదునాత్యేతికశ్చన। ఏతద్వైతత్।

(ப-ம்) ஏஷ:-இந்த ஸம்ஸாரமாகிற, அஶ்வத்த²:-அரசமரமானது, ஊர்த்⁴வமூல:-மேல்வேருடையது, அவாக்ஶாக²:-கீழ்கிளைகளையுடையது, ஸநாதந:-ப்ரவாஹரூபத்தாலே நித்யமானது.

ஸாரம்—உலகத்தில், ஒரு விருக்ஷத்தைக்கண்டவுடன், அதற்குக்காரணமாயிருக்கிற பீஜத்தை யூகிப்பதுபோல் இந்த ஸம்ஸாரமாகிற விருக்ஷத்திற்கு, பரப்ரம்மமாகிற பீஜத்தையூகித்துக்கொள்ளலாகுமென்றும் கருத்தினால், ஶ்ருதியானது, இந்த ஸம்ஸாரத்தை ஒரு விருக்ஷமாய் ரூபித்துச்சொல்லுகிறது. இந்த ஆறும்வல்லியின் முக்யப்ரயோஜநம் இதுவேயாகும். இந்தஸம்ஸாரம், வ்ருக்ஷமாக ரூபிக்கப்படுகைக்குக் காரணம், வ்ருக்ஷசப்தத்தின் பொருளாகிய சேதநகர்மத்வம், ஸம்ஸாரத்திலுமிருக்கை. அதாவது-அறுக்கத்தக்கதாயிருக்கை அப்படியிருக்கைக்கு நிதானம்; மாயாவைபவத்தால், கானல் ஜலம்போலவும், ஆகாயத்தில் தோற்றுகிற கந்தர்வநகரம்போலவும், தோற்றி மறைகிற தன்மையுடையதாய்க்கொண்டு, ஜந்மஜராமரணம் முதலிய சோகங்களுக்குக் காரணமாய், க்ஷணந்தோறும் மாறுகிற ஸ்வபாவத்தையுடையதாயிருக்கை. அன்றியிலே, வ்ருக்ஷத்திலிருக்கிறதர்மங்கள், இந்த ஸம்ஸாரத்திலிருக்கை என்றும் சொல்லலாகும். அப்படி வ்ருக்ஷத்திற்கும், ஸம்ஸாரத்திற்கும், ஸாதாரணமாயுள்ளதர்மங்களாவன-அந்தமுடைத்தாயிருக்கை, நிஸ்ஸாரமாயிருக்கை, வ்ருக்ஷம், புருஷனோ, அல்லது வ்ருக்ஷமோ; என்று ஸந்தேகத்திற்கிடமாகிறாப்போலே, இந்த ஸம்ஸாரமும், ஸத்யமோ; பரிணாமமோ; ஸத்தோ; அஸத்தோ; என்றிப்படிப்பட்ட அநேகமான பாஷண்டிகள் புத்திதோஷங்களால் வந்த ஸம்சயங்களுக்கிடமாயிருக்கை, இதனுண்மை இன்னதென்று, அறியக்கூடாதாயிருக்கை, முதலியவைகள், இந்த ஸம்ஸாரவ்ருக்ஷம் வேதாந்தத்தால் நிச்சயிக்கப்பட்ட பரப்ரம்மத்தை மூலமாகவுடையதாய், விஜ்ஞாநக்ரியாசக்தி ரூபமான ஹிரண்யகர்பனை அங்குரமாகவுடையதாய், ஸ்த்ரீபுருஷபேதத்தையுடைய எல்லாவகைப்பட்ட ப்ராணிகளையும், சாகைகளாகவுடையதாய் ஆசை என்கிற தண்ணீர்வார்த்து வளர்க்கப்பட்டதாய், புத்தி, இந்திரியம், முதலிய இதழ்களையுடையதாய் ச்ருதி, ஸ்ம்ருதி, ந்யாயம், [illegible], யஜ்ஞம், தானம், தபஸ்ஸு, இவைகளை, புஷ்பமாகவுடையதாய், ஸுகதுக்கங்களைப் பல

மாகவுடையதாய், சதுர்முகப்ரம்மாமுதலிய பக்ஷிகளால் ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட ஸத்யலோகம்முதலிய கூடுகளையுடையதாய், அவரவர்களுக்குண்டாகிய ஸுகதுக்கங்களுக்குத் தக்கபடி வுண்டான ஹாஹாகாரம், வாத்யம்முதலியவைகளின் கோலாகலமுடையதாய், இப்படி விசித்திரமாயிருக்கிறது. இந்த ஸம்ஸாரவ்ருக்ஷம் ஆசாரியனிடத்தில் கேட்ட வேதாந்த விஜ்ஞாநத்தா லறுக்கப்பட்டழியும், இதை அரசமரமென்று சொன்னது, எம்போதும் சஞ்சலமாயிருப்பதுபற்றி இப்படிப்பட்ட ஸம்ஸார வ்ருக்ஷத்திற்கு மூலமாயிருப்பது ப்ரம்மமேயன்றி வேறன்று.

ரா-ஹா.—இப்படி விசித்திரமா யிருக்கிற ஜகத்தைக் காட்டிலும் வேறானது ப்ரம்மம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு பதப்பொருள் சொல்லாத மந்த்ரகண்டத்திற்கு, பஞ்சமவல்லி எட்டாம் மந்திரத்தில் பதப்பொருள் முதலியன சொல்லப்பட்டிருக்கின்றன. அங்குபோ லிங்குமுணர்க.

௨. 𑌯𑌦𑌿𑌦𑌂𑌕𑌿𑌞𑍍𑌚𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌏𑌜𑌤𑌿𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑌮𑍍 ।
𑌮𑌹𑌦𑍍𑌭𑌯𑌂𑌵𑌜𑍍𑌰𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌂𑌯𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍁𑌰𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑌏𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ॥

౨. యదిదంకించజగత్సర్వంప్రాణఏజతినిస్సృతమ్ ।
మహద్భయంవజ్రముద్యతంయఏతద్విదురమృతాస్తేభవంతి॥

(ப-ம்) 𑌕𑌿𑌞𑍍𑌚 மேலும், 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇 - பரமாத்மாவினிடத்தில், 𑌸𑌤𑌿-இராநிற்கிற, 𑌨𑌿𑌃𑌸𑍃𑌤𑌂-அந்தபரமாத்மாவினிடத்திலிருந்து வெளிப்பட்ட, 𑌯𑌦𑌿𑌦𑌂𑌸𑌰𑍍𑌵𑌂𑌜𑌗𑌤𑍍-இந்த ஜகத்தெல்லாம், 𑌉𑌦𑍍𑌯𑌤𑌂-𑌵𑌜𑍍𑌰𑌂-எடுக்கப்பட்ட வஜ்ராயுதம்போலிருக்கிற பரமாத்மாவினிடத்தில், 𑌮𑌹𑌤𑍍, 𑌭𑌯𑌂-அதிகபயத்தால், 𑌏𑌜𑌤𑌿-நடுங்குகிறது. 𑌯𑍇, 𑌏𑌤𑌤𑍍𑌵𑌿𑌦𑍁𑌃-𑌤𑍇 இதையறிந்தவர்கள், 𑌅𑌮𑍃𑌤𑌾𑌃-𑌭𑌵𑌨𑍍𑌤𑌿-முக்தர்களாகிறார்கள்.

ஶம்-ஹா.—பரப்ரம்மமே தன்னுடைய சாஸநத்திலிருக்கும்படி எல்லாவஸ்துக்களையும் நடத்துகிறது.

ரா-ஹா.—இந்தஜகத்தெல்லாம் பரப்ரம்மமாகிய பரமபுருஷனால் சாஸிக்கப்படுகிறது. இதனுடைய ஆஜ்ஞையை ஒருவனுமதிக்ரமிக்கமாட்டான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

"𑌏𑌜𑌤𑌿" என்பதற்கு, நடுங்கும்படி செய்கிறது என்று பொருள் கொண்டு, ஜகத்வாசி சப்தங்களை இரண்டாம் வேற்றுமை என்றும், மகத்பயம் என்பதை பஞ்சம் யந்தமாக்காமலே யோஜிப்பாருமுளர்.

௩. 𑌭𑌯𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌸𑍍𑌤𑌪𑌤𑌿𑌭𑌯𑌾𑌤𑍍𑌤𑌪𑌤𑌿𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 ।
𑌭𑌯𑌾𑌦𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚𑌵𑌾𑌯𑍁𑌶𑍍𑌚𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑌾𑌵𑌤𑌿𑌪𑌞𑍍𑌚𑌮𑌃 ॥

3. భయాదస్యాగ్నిస్తపతిభయాత్తపతిసూర్యః ।
భయాదింద్రశ్చవాయుశ్చమృత్యుర్ధావతిపంచమః॥

(ப்-ம்) அஸ்ய-இந்தபரமாத்மாவினிடத்தில், ப⁴யாத்-பயத்தினால், அக்³நி:-அக்கினியானவன், தபதி - தபிக்கிறான், பஞ்சம: - ஐந்தாமவனான, ம்ருத்யு:-ம்ருத்யுவானவன், தா⁴வதி-ஓடுகிறான்.

ஸம்-ஹா-ரா-ஸா.—அக்கி, ஸூர்யன்' சந்த்ரன். வாயு, ம்ருத்யு, இவர்கள்முதலிய எல்லோரும், பரமாத்மாவுக்கு பயந்து தங்களுக்கிட்ட வேலையை, ஜாகருகர்களாய்ச் செய்கிறார்கள்,

பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்த்³ரஶ்ச-இந்திரனும், வாயுஶ்ச - வாயுவும், என்று, ச, காரத்தோடு கூட்டிக்கொள்க. மற்ற பதங்களுக்கு, முதல் வாக்யம்போலன்வயார்த்த முணர்க.

௪. இஹ சேத³ஶகத்³ போ³த்³து⁴ம் ப்ராக் ஶரீரஸ்ய விஸ்ரஸ: ।
தத: ஸர்கே³ஷு லோகேஷு ஶரீரத்வாய கல்பதே ॥

౪. ఇహ చేదశకద్బోద్ధుం ప్రాక్శరీరస్య విస్రసః।
తతస్సర్గేషు లోకేషు శరీరత్వాయ కల్పతే॥

(ப்-ம்) ஶரீரஸ்ய-சரீரத்தினுடைய, விஸ்ரஸ:-நாசத்திற்கு, ப்ராக்-முன்னே, இஹ-இந்தப்ரம்மஸ்வரூபவிஷயத்தை, போ³த்³து⁴ம்-அறிந்துகொள்ளுகைக்கு, அஶகத்-சக்தியற்றவனாகில், தத:-அந்தகாரத்தால் ஸர்கே³ஷு லோகேஷு - ப்ருதிவ்யாதிலோகங்களிலே, ஶரீரத்வாய கல்பதே-ஜந்மத்தை யடைகிறான்.

ஸம்-ஹா-ரா-ஸா.—இந்த பரப்ரம்மத்தை அறிகிறபர்யந்தம் ஜந்மபரம்பரை விடாது.

ரு. யதா²த³ர்ஶே ததா²த்மநி யதா² ஸ்வப்நே ததா² பித்ருலோகே। யதா²ப்ஸு பரீவ த³த்³ருஶே ததா² க³ந்த⁴ர்வலோகே சா²யாதபயோரிவ ப்³ரஹ்மலோகே ॥

౫, యథాదర్శే తథాత్మని యథా స్వప్నే తథా పితృలోకే।
యథాప్సు పరీవ దదృశే తథా గన్ధర్వలోకే ఛాయాతపయోరివ బ్రహ్మలోకే॥

(ப்-ம்) ஆத³ர்ஶே-கண்ணாடியிலே, யதா² - எப்படியோ, ஆத்மநி-ஆத்மவிஷயத்தில், ததா²-அப்படியே, ஸ்வப்நே - ஸ்வப்நத்தில், யதா² - எப்படியோ, பித்ருலோகே-பித்ருலோகத்தில், ததா²-அப்படியே, அப்ஸு - ஜலங்களில், யதா²-எப்படி, பரீவ த³த்³ருஶே - காணப்பட்டதுபோலிருக்கிறதோ, க³ந்த⁴ர்வலோகே - கந்தர்வலோகத்தில், ததா² - அப்படியே, ப்³ரஹ்மலோகே-ப்ரம்மலோகத்தில், சா²யாதபயோரிவ - நிழல் வெய்யில்களிலேபோல விளங்குகிறது.

ஸம்-ஸா,—ப்ரம்மஸ்வரூபத்தை அறிந்து கொள்வதில் இந்த ஜந்மத்திலேயே யத்னம்செய்யவேணும் என்று சொல்லுகிறது. இந்த லோகத்திலேயே நிர்மலமான புத்தியால் கண்ணாடியில் முகம்போலே, ஆத்மஸ்வரூபம் அறியப்படுகிறது, பித்ரு

லோகம், கந்தர்வலோகம் இவைமுதலான லோகங்களில், கர்மபலங்களாகிய ஸுகபாஸங்களை யநுபவிக்க வாசைப்பட்ட காலமாகையால், அப்போது, ஆத்மஸ்வரூபத்தில் நெஞ்சு நன்றாய்ப்ரவேசிப்பதில்லை. ஆகையால் ஆத்மஸ்வரூபமக்கு நன்கு ப்ரகாசியாது. ப்ரம்மலோகத்தில் நன்றாய் விளங்குமாகிலும் அந்தப்ரம்மலோகத்தை யடைவது ஸுலபமன்று. ஆகையால் இந்தலோகத்தில் இந்த ஜந்மத்திலேயே நெஞ்சை நிர்மலமாக்கி ஆத்மஸ்வரூபத்தை யறியம்வழி தேடவேணும்.

ரா-ஹா-ஆத்மஸ்வரூபத்தையறிவது துர்லபமென்கிறது. கண்ணுடியில் எப்படியோ, அப்படியே இவ்வுலகத்தில், ஆத்மவிஷயத்தில். அதாவது. தனது முகத்தை, நேரில், தான், பார்த்தபோது, நன்றாய் உள்ளபடியேதெரிவதுபோல்,கண்ணுடிமுதலியவற்றில் தன் முகம் முதலியவற்றைக் கண்டால், ஸ்பஷ்டமாய் தெரிகிறதில்லை. கண்ணுடியின் கோணல் முதலியதோஷங்களெல்லாம், முகத்திலிருப்பதுபோல விபரீதமாய் தோற்றுகிறதன்றோ? அப்படியே ஆத்மஸ்வரூபமானது, இந்தலோகத்தில் ஸ்பஷ்டமாய் விளங்குகிறதில்லை. லோகதோஷத்தால், விபரீதமாய் தோற்றுகிறது, ஆகையாலிந்தலோகத்தில், ஆத்மஸ்வரூபத்தையறிவது சக்யமன்று. மிகவருத்தமே என்கை. அப்படியே, ஸ்வப்நத்திலே போல, பித்ருலோகத்தில், ஆத்மவிஷயத்தில். அதாவது-லோகாந்தரமாகிய பித்ருலோகத்திலும், ஸ்வப்நத்தில்கண்ட விஷயமானது, ஜாக்ரத்தசையில் (உறக்கமில்லாத காலத்தில்) கண்டவிஷயம்போல், ஸ்பஷ்டமாய் அறியப்படாததுபோல, ஆத்மஸ்வரூபம் நன்றாய்ப்ரகாசிப்பதில்லை. ஆகையால் பித்ருலோகத்திலு மாத்மஸ்வரூபத்தை யறிவது ஸுலபமல்லவென்கை. அப்படியே ஜலத்திலேபோல, கந்தர்வலோகத்தில் ஆத்மவிஷயத்தில். அதாவது-கந்தர்வலோகமென்கிற லோகாந்தரத்திலும், ஜலத்துக்குள்ளிருக்கிற விஷயமானது, வெளியிலிருக்கிறவஸ்துபோல், ஸ்பஷ்டமாய் அறியப்படாததுபோல், ஆத்மஸ்வரூபம் நன்றாய் ப்ரகாசிப்பதில்லை. ஆகையால், கந்தர்வலோகத்திலும் ஆத்மஸ்வரூபம் நன்றாயறியப்படுகிறதில்லை. அறியலாம்போலே தோன்றுகிறதொழிய, ஸ்பஷ்டமாய் அறியப்படாதென்கை. இப்படியே, நிழல் வெய்யில்களிலே போல, ப்ரம்மலோகத்தில் ஆத்மவிஷயத்தில். அதாவது-ப்ரம்மலோகத்திலும், நிழல் வெய்யில்கள் கலந்தவிடத்திலிருக்கிறவஸ்துவானது, நல்லவெய்யிலிலிருக்கிறவஸ்துப்ரகாசமாய்தோன்றுவதுபோல் தோற்றுதாப்போலே, ஆத்மஸ்வரூபம் ஸ்புடமாய்தோற்றுகிறதில்லை. ஆகையால் ப்ரம்மலோகத்திலும், ஆத்மஸ்வரூபத்தையறிகை, சக்யமல்லவென்கை. ஆகையால் எவ்விடத்திலு மாத்மஸ்வரூபம் வருத்தமின்றி யறியக்கூடியதல்ல, ஆகையால் இந்தலோகத்திலிருக்கும்போதே, எவ்வகையிலாவது ஆத்மஸ்வரூபத்தை யறிந்துகொள்ள யத்நம் செய்யவேணும்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பித்ருலோகம் முதலிய லோகாந்தரங்களைப் பின்வாக்கியத்தில் சொல்லியிருக்கையால், முதல் வாக்யத்தில் இந்தலோகத்தில் என்று கூட்டிக் கொள்ளப்பட்டது. "நிழல் வெய்யில்களிலேபோல ஆத்மஸ்வரூபவிஷயத்தில் ப்ரம்மலோகத்தில், என்று பொருளுடைய "சாயாதபயோரிவப்ரஹ்மலோகே" என்கிற வாக்யத்திற்கு, 'ப்ரம்மலோகத்தில்' நிழலும் வெய்யிலும், பிரிந்து தெரிகிறாப்போல், ஆத்மஸ்வரூபம், அநாத்மஸ்வரூபம், இவைகள்பிரிந்து ஸ்பஷ்டமாய் விளங்கினாலும், ஆத்மஸ்வரூபம் நன்றாயறியப்பட்டாலும், இங்குள்ள மற்ற லோகத்தாருக்கு ஆத்மஸ்வரூபம் நன்றாய்

விளங்காது, என்றுமொருகருத்து, இராமாநுஜபாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

௬. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑌾𑌵𑌮𑍁𑌦𑌯𑌾𑌸𑍍𑌤𑌮𑌯𑍌𑌚𑌯𑌤𑍍 ।
𑌪𑍃𑌥𑌗𑍁𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌾𑌂𑌮𑌤𑍍𑌵𑌾𑌧𑍀𑌰𑍋𑌨𑌶𑍋𑌚𑌤𑌿 ॥

౬. ఇంద్రియాణాంపృథగ్భావముదయా స్తమయౌచయత్।
పృథగుత్పద్యమానానాంమత్వాధీరోనశోచతి॥

(ப-ம்) 𑌪𑍃𑌥𑌗𑍁𑌤𑍍𑌪𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 - வேறாயுண்டாகிற, 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 இந்த்ரியங்களுக்கு, 𑌪𑍃𑌥𑌗𑍍𑌭𑌾𑌵𑌂-பேதத்தையும், 𑌯𑌤𑍍,𑌉𑌦𑌯𑌾𑌸𑍍𑌤𑌮𑌯𑍌,𑌚- உண்டாகை, அழிகை, என்கிற விந்த விகாரங்களையும், 𑌮𑌤𑍍𑌵𑌾-அறிந்தவனாயிருக்கிற, 𑌧𑍀𑌰𑌃-விவேகியானவன், 𑌨𑌶𑍋𑌚𑌤𑌿-துக்கப்படுகிறதில்லை.

ஶம்-ஸா.—இவ்வாத்மாவையறியும்வழியும், அறிதாலுண்டாகியபயனையும், சொல்லுகின்றது இந்த்ரியஸ்வரூப ஸ்வபாவங்களை யறிந்து, இந்தஸ்வபாவம் ஆத்மாவுக்கில்லையென்று தெளிந்தவன், துக்கத்தையடையான்.

ரா-ஸா—ஜ்ஞாநஸ்வரூபியான ஆத்மாவில், தேகேந்த்ரிய விகாரங்களொன்று மில்லை யென்றறிந்தவன் சோகியான்.

௭. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃𑌪𑌰𑌂𑌮𑌨𑍋𑌮𑌨𑌸𑌸𑍍𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌧𑌿𑌮𑌹𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌮𑌹𑌤𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥

౭. ఇన్ద్రియేభ్యఃపరంమనోమనసస్సత్త్వముత్తమమ్।
సత్త్వాదధిమహానాత్మామహతో౽వ్యక్తముత్తమమ్॥

(ப-ம்) 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃-இந்த்ரியங்களைக்காட்டிலும், 𑌮𑌨𑌃 - மநஸ்ஸானது, 𑌪𑌰𑌮𑍍-சிறந்தது. 𑌮𑌨𑌸𑌃-மநஸ்ஸைக்காட்டிலும், 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍 - புத்தியானது, 𑌉𑌤𑍍𑌤𑌮𑌮𑍍-சிறந்தது, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌧𑌿-புத்தியைக்காட்டிலும், 𑌆𑌤𑍍𑌮𑌾-ஆத்மாவானவன், 𑌮𑌹𑌾𑌨𑍍,சிறந்தவன், 𑌮𑌹𑌤𑌃-ஆத்மாவைக்காட்டில், 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍍-சரீரமானது,𑌉𑌤𑍍𑌤𑌮𑌮𑍍-சிறந்தது.

௮. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌤𑍁𑌪𑌰𑌃𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑍋𑌽𑌲𑌿𑌙𑍍𑌗𑌏𑌵𑌚 ।
𑌯𑌂𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇𑌜𑌨𑍍𑌤𑍁𑌰𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌂𑌚𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

౮. అవ్యక్తాత్తుపరఃపురుషోవ్యాపకో౽లింగఏవచ।
యంజ్ఞాత్వాముచ్యతేజంతురమృతత్వంచగచ్ఛతి॥

(ப-ம்) 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍,𑌤𑍁,-சரீரத்தைக்காட்டிலும், 𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌃-ஸர்வவியாபியாய், 𑌅𑌲𑌿𑌙𑍍𑌗𑌃-அநுமானப்ரமாணத்தாலறியப்படாதவனாயிருக்கிற, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃-புருஷனானவன், 𑌪𑌰𑌃-சிறந்தவன். 𑌯𑌂-யாதொன்றை, 𑌜𑌨𑍍𑌤𑍁𑌃-ஜீவன், 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾-அறிந்து, 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 - விடுபடுகிறான். 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌂,𑌚,-மோக்ஷத்தையும், 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿-அடைகிறான்.

*ஶம்.பா.*—இந்த்ரியங்களில்வேருயவனுத்மா,என்றதால், இவ்வாத்மா வெளிப்பட்டவனுயறியத்தக்கவனென்று. எல்லாப்பொருளுக்கு முன்பொருளாயன்றோ ஆத்மதத்வமிருப்பது. இந்த கடோபநிஷத் இரண்டாம்வல்லி பதினேராம்ச்லோகத்தில் சொன்னவிஷயத்தையே இங்கும்சொல்லுகிறது. அர்த்தங்களும், இந்த்ரியங்களும், ஒருவகைப்பட்டவையாகையாலே இந்த்ரியங்களைச்சொன்னது,அர்த்தங்களுக்குமுபலக்ஷணம். அங்குபுத்திசப்தத்தால் சொன்னபுத்தியே இங்குஸத்வசப்தத்தால் சொல்லப்படுகிறது. 'வ்யாபக:, என்றது, ஆகாயம்முதலிய எல்லாவற்றுக்கும் காரணமாயிருப்பதுபற்றி. ஸம்ஸாரதர்மங்கள் ஒன்றுமில்லாதவனென்று, 'அலிங்க:, என்றதினுல், சொல்லுகிறது. ஆக, முன்சொல்லியபடி, இந்த்ரியங்கள், அர்த்தங்கள், மநஸ்ஸு, புத்தி, மகாந், அவ்யக்தம், புருஷன், இவைகள் க்ரமமாய், ஒன்றைக்காட்டிலுமொன்று சிறந்தது. இதையறிந்தவனுக்கு, ஸம்ஸாரம் நீங்கி மோக்ஷப்ராத்தியுண்டாகிறது.

*ரா-பா.*—முமுக்ஷுவானவன், முதலிலேசரீரத்தில் வேருயவனுத்மாவென்றறியவேணும். இந்தஜ்ஞாநமும், பரமாத்மாவினருளாலேயே வரவேணும். அவனருள் பெறுவது, அவனைச் சரணமடைவதினுலுண்டாகும் என்றிப்படி முன்சொன்னவிஷயத்தையே இவ்விடத்திலும் சொல்லியிருக்கிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கிரண்டு மந்திரங்களும் ஒன்றாயந்வயிக்கப்பட்டிருக்கிறபடியால், இரண்டுக்கும் சேர்த்து, சங்கராமநுஜ பாஷ்யாபிப்ராயங்கள், சொல்லப்பட்டன. இரண்டுபாஷ்யங்களும் முன் ஸ்புடமாய் எழுதப்பட்டிருக்கிறன அதுபோல் இங்கும் விசேஷார்த்த முணர்க.

௯. ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்| ஹ்ருதா மநீஷா மநஸாபிக்லுப்தோ ய ஏதத்விதுரம்ருதாஸ்தே பவந்தி||

౯. నసందృశేతిష్ఠతిరూపమస్యనచక్షుషాపశ్యతికశ్చనైనమ్।
హృదామనీషామనసాభిక్లప్తోయఏతద్విదురమృతాస్తేభవంతి॥

(ப-ம்) அஸ்ய-இந்த ஆத்மாவினுடைய, ரூபம்-ஸ்வரூபமானது, ஸந்த்ருஶே-நன்றாயறியும்படி, நதிஷ்டதி-விளங்குகிறதில்லை. கஶ்சந - ஒருவனும், ஏநம்-இந்த ஆத்மாவை, சக்ஷுஷா-கண்ணுல், நபஶ்யதி-பார்ப்பதில்லை. ஹ்ருதா-பக்தியுடையதாய், மநீஷா-தைர்யமுடையதாயிருக்கிற, மநஸா-நெஞ்சினுல், அபிக்லுப்த:-அறியப்படுகிறான். யே - யவர்கள், ஏதத்-இதை, விது:-அறிகிறார்களோ; தே-அவர்கள், அம்ருதா: - முக்தர்களாய், பவந்தி - ஆகிறார்கள்.

*ஶம்-பா.*—ப்ரத்தியகாத்ம ஸ்வரூபமானது இந்த்ரியங்களால்அறியப்படாது. 'தத்வமஸி, முதலிய வாக்யார்த்த ஜ்ஞாநத்தால், சுத்தமான நெஞ்சினுல் அறியப்படும்.

*ரா-பா.*—பரமாத்மாவினுடைய ஸ்வரூபம், அல்லது அந்த பரமாத்மாவாகியபரமபுருஷனுடைய அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹமென்கிற திருமேனி, இதுகள் கண் முதலிய பாஹ்யேந்த்ரியங்களுக்கு கோசரியாது. தைர்யமுள்ள புருஷன், இதரவிஷயங்களில் விரக்தனுய், பரமபுருஷனிடத்தில் பக்தனுகி, பரிசுத்தமான நெஞ்

[illegible]கொள்ளுகிறான், மகாபாரதத்திலும், "நஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய நசக்ஷுஷா பச்யதிகச்சநைநம், பக்த்யாச த்ருத்யாச ஸமாஹிதாத்மா ஜ்ஞாநஸ்வரூபம் பரிபச்யதீஹ" என்று, இந்த வர்த்தத்தையே சொல்லியிருக்கிறது.

௧௦. 𑌯𑌦𑌾 𑌪𑌞𑍍𑌚𑌾𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌹 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌨 𑌵𑌿𑌚𑍇𑌷𑍍𑌟𑌤𑌿 𑌤𑌾𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

౧౦. యదాపంచావతిష్ఠంతేజ్ఞానానిమనసాసహ ।
బుద్ధిశ్చనవిచేష్టతితామాహుఃపరమాంగతిమ్॥

(ப்-ம்) யதா-எப்போது, ஸமநஸா - நெஞ்சோடுகூடிய, பஞ்ச, ஜ்ஞாநாநி,-ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், அவதிஷ்டந்தே-நிலைபெற்றுநிற்கின்றனவோ; புத்தி:-அத்யவஸாயமென்று சொல்லப்படுகிற புத்தியும், நவிசேஷ்டதே-அசையாமற் நிற்குமோ; தாம்-கதிம் - அந்தஸ்திதியை, பரமாம்-சிறந்ததாக, ஆஹு:-சொல்லுகிறார்கள்.

ஸம்-ஹா.—ப்ரம்மத்தையறிகிற புத்தியானது. எப்படியுண்டாகுமென்கிற ஸந்தேகமறும்படி யோகத்தைச்செய்வதினால், நல்லபுத்தி யுண்டாகுமென்று யோகப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

ரா-ஹா.—மோக்ஷத்தை யடையும்வழியைச்சொல்லுகிறது இந்தமோக்ஷகதியே உத்தமகதியாகும்.

௧௧. 𑌤𑌾𑌂 𑌯𑍋𑌗𑌮𑌿𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌧𑌾𑌰𑌣𑌾𑌮𑍍 ।
𑌅𑌪𑍍𑌰𑌮𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑌦𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌯𑍋𑌗𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌪𑍍𑌯𑌯𑍌 ॥

౧౧. తాంయోగమితిమన్యంతేస్థిరామింద్రియధారణామ్ ।
అప్రమత్తస్తదాభవతియోగోహిప్రభవాప్యయౌ॥

(ப்-ம்) தாம்-அந்த, ஸ்திராம்,-நிலைபெற்ற, இந்த்ரியதாரணாம்-இந்திரியங்களை நியமிக்கையையே, யோகம்,இதி-யோகமென்று, மந்யந்தே-நினைக்கிறார்கள். ததா-அப்போது, அப்ரமத்த:-அவதானமுடையவனாய், பவதி-ஆகிறான், யோக:,ஹி-யோகமேயன்றோ; ப்ரபவாப்யயௌ-இஷ்டப்ராப்திக்கும். அநிஷ்டநிவ்ருத்திக்கும், காரணமாயிருப்பது.

ஸம்-ஹா-ரா-ஹா.—யோகமானது எல்லா இஷ்டங்களையும் உண்டுபண்ணி அநிஷ்டங்களையெல்லாம் போக்கும். அதாவது-இந்த்ரிய ஜயமேயாகும் இது, மிகவும், ஜாகருகனாயிருந்து தப்பாமல் அநுஷ்டிக்கத்தக்கது. யோகஸித்தியுண்டாகில் எல்லா சங்கடங்களும் விட்டுப்போகின்றன.

௧௨. 𑌨𑍈𑌵 𑌵𑌾𑌚𑌾 𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑍋 𑌨 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 ।
𑌅𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌬𑍍𑌰𑍁𑌵𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌕𑌥𑌂 𑌤𑌦𑍁𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 ॥

౧౨. నైవవాచానమనసాప్రాప్తుంశక్యోనచక్షుషా।
అస్తీతిబ్రువతోఽన్యత్రకథంతదుపలభ్యతే॥

(ப-ம்) வாசா-வாக்கினாலும், நைவ ப்ராப்தும் ஶக்ய:-அடையக்கூடியதன்று, மநஸா-நெஞ்சாலும், ந-அடையக்கூடியதன்று. சக்ஷுஷா-கண்ணாலும், ந - அடையக்கூடியதன்று. அதாவது அறியக்கூடியதன்று. அஸ்தீதி-உள்ளதென்று, ப்ருவத:-சொல்லுகிறவனைக்காட்டிலும், அந்யத்ர-வேறானவனால், கதம்-எப்படி, தத்-அந்த ஆத்மதத்வமானது, உபலப்யதே-அறியப்படும்.

ஶா-ஹா.—ப்ரம்மம் அறியப்படாதாகில் ஶூந்யவஸ்துவாகும். அதாவது-இல்லையாய்விடுமென்கை. ஆதலால ப்ரம்மமறியப்படவேண்டுமெனில், அது ஸ்வயம்ப்ரகாசமாதலால் ஶூந்யவஸ்துவாகாது. ஸ்வாநுபவத்திலறியப்படும். கண்முதலியவற்றாலறியப்படாது. இந்த ஸ்வாநுபவமுண்டாவதற்கு யோகஞ்செய்யவேணும்.

ரா-ஹா.—சாஸ்திர விச்வாஸமுடையச் ரத்தாவானாலறியப்படுமேயன்றி மற்றோரால், ஆத்மதத்துவமறியப்படாது.

கங. அஸ்தீத்யேவோபலப்தவ்யஸ்தத்வபாவேந சோபயோ:।
அஸ்தீத்யேவோபலப்தஸ்ய தத்வபாவ: ப்ரஸீததி ॥

౧౩. అస్తీత్యేవోపలబ్ధవ్యస్తత్త్వభావేనచోభయోః।
అస్తీత్యేవోపలబ్ధస్యతత్త్వభావఃప్రసీదతి॥

(ப-ம்) தத்வபாவேந-மநஸ்ஸினால், அஸ்தீத்யேவ-(பரமாத்மா) உளனென்றே, உபலப்தவ்ய:-அறியத்தக்கவன். உபயோ:-சாஸ்த்ரத்தாலும், நெஞ்சாலும், அஸ்தீத்யேவ-உளனென்றே, உபலப்தஸ்ய-அறிந்தவனுக்கு, தத்வபாவ:-மனஸ்ஸானது, ப்ரஸீததி-ப்ரஸந்நமாகிறது.

ஶம்-ஹா.—அசுரப்ரக்ருதிகள் செய்கிற நாஸ்திகபுத்தியைவிட்டு முதலில், ஸோபாதிகப்ரம்மத்தையறிந்து. பின், நிருபாதிக ப்ரம்மத்தையறியக்கடவன். அப்போது இவனுக்கு நிருபாதிகாத்மதத்வம் ப்ரகாசிக்கிறது இந்த ஜ்ஞானத்திற்கு, யோகமே, ஸாதநமாகையால், யோகத்தைவிடாமல் செய்யவேணும்.

ரா-ஹா.—முன்பு வேதாந்தவாக்யங்களினால், ப்ரம்மத்தை யுள்ளபடி யறிந்து, அதாவது ச்ரவணம்பண்ணி என்றபடி. நெஞ்சில். அந்தப்ரகாரத்தோடு மநநம் பண்ணவேணும். இப்படி, ச்ரவணமநநங்கள் ஸித்தித்தவனுக்கு நித்தியாஸநத்தில் பரப்ரம்மஸ்வரூபம் தோற்றும்படி மனஸ்ஸு நிர்மலமாகிறது.

கச. யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேऽஸ்ய ஹ்ருதி ஶ்ரிதா:।
அத மர்த்யோऽம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே ॥

౧౪. యదాసర్వేప్రముచ్యంతేకామాయేఽస్యహృదిశ్రితాః।
అథమర్త్యోఽమృతోభవత్యత్రబ్రహ్మసమశ్నుతే॥

(ப-ம்) அஸ்ய-இந்தமநுஷ்யனுடைய, யே, காமா:, ஸர்வே, ஹ்ருதி ஶ்ரிதா:,-மநஸ்ஸிலுள்ள எல்லாகர்மங்களும், யதா, ப்ரமுச்யந்தே, எப்போதுவிட்டு

ப்போகின்றனவோ; அத-அதின்பிறகு, மர்த்ய:-மநுஷ்யன், அம்ருதோ பவதி-பாபங்களால் விடப்படுகிறான். அத்ர-இந்த உபாஸநகாலத்தில், ப்ரஹ்ம ஸமச்நுதே-ப்ரமத்தை யநுபவிக்கிறான்.

ஸா ஸா—துஷ்டங்களான காமபோகங்களில், நெஞ்சு, விரக்தியுடையதாயா கும்போது, ஸம்ஸாரபந்தம் நீங்கி ப்ரம்மமேயாய்விடுகிறான். இங்கு காமங்களென்பது சரீரதாரணத்துக்கு வேண்டியவைகளில் வேறானவை.

ரா-ஸா.—இந்த உபாஸகனுக்கு, துஷ்காமங்களில் விருப்பமற்றுப் போனபிறகு, பூர்வோத்தராகங்கள் போகின்றன. அதாவது ப்ராரப்தகர்மத்தைக் காட்டில் வேறுபட்ட ஸகலபாபங்களும் அழிந்துபோகின்றன. இவனுக்கு பிற்காலத்திய தோஷங்களு மொட்டாமல்போகின்றன. உபாஸனத்தில், ப்ரம்மம், ஸ்பஷ்டமாய் ப்ரகாசிக்கிறது.

கரு. யதா ஸர்வே ப்ரபித்யந்தே ஹ்ருதயஸ்யேஹ க்ரந்தய: |
அத மர்த்யோ(அ)ம்ருதோ பவத்யேதாவதநுசாஸநம் ||

౧౫, యదాసర్వేప్రభిద్యంతేహృదయస్యేహగ్రంధయః ।
అథమర్త్యోఽమృతోభవత్యేతావదనుశాసనమ్ ॥

(ப்-ம்.) யதா-எப்போது, ஹ்ருதயஸ்ய-மநஸ்ஸினுடைய, ஸர்வே க்ரந்தய:-எல்லாமுடிகளும், இஹ, ப்ரபித்யந்தே - இங்குவிட்டுப்போகின்றனவோ; அத-பின்பு, மர்த்ய:-மநுஷ்யன், அம்ருத:-பவதி-பாபங்களினுல் விடப்படுகிறான். அநுசாஸநம்-உபதேசமானது, ஏதாவத்-இவ்வளவேயாகும்.

ஸா௦-ஸா.—அவித்யா மாகாத்ம்யத்தால் வந்திருக்கிற எல்லாதோஷங்களும் நீங்கினபோது ஜீவன் ப்ரம்மமேயாகிறான்.

ரா-ஸா.—உபாஸகன் இங்குசொன்னபடி யநுஷ்டிக்கக்கடவன். இவனால் செய்யத்தக்கது யிவ்வளவேயாகும். மேல்சொல்லுகிற ஸகலத்தையுமிப்படி யுபாஸித்தவனுக்கு பகவான் தானே நடத்துகிறான். ஆதாத்தாலே, இந்தவர்த்தத்தை, புந: புந: சொல்லுகிறது,

கசு. சதஞ்சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்யஸ்தாஸாம் மூர்த்தாநமபிநிஸ்ஸ்ருதைகா | தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே பவந்தி ||

౧౬. శతంచైకాచహృదయస్యనాడ్యస్తాసాంమూర్ధానమభినిస్సృతైకా ।
తయోర్ధ్వమాయన్నమృతత్వమేతివిష్వఙ్ఙన్యాఉత్క్రమణేభవన్తి ॥

(ப்-ம்) சதஞ்ச-ஏகா ச,-நாட்ய:-நூற்றொருநாடிகள், ஹ்ருதயஸ்ய நெஞ்சில் சேர்ந்திருக்கின்றன. தாஸாம் - அந்தநாடிகளுக்குள், ஏகா-ஒன்றுயிருக்கிற, (நாபீ-நாடியானது.) மூர்த்தாநம்-சிரஸ்ஸைவழியாய், அபிநிஸ்ஸ்ருதா-வந்திருக்கிறது, தயா-அந்நாடியால், ஊர்த்வம்-மேல்லோ

கத்தை, ஆயந்-அடைந்தவனாய், அம்ருதத்வம்-மோக்ஷத்தை, யாதி-அடைகிறான், அந்யா:-மற்றநாடிகள், விஷ்வங் உத்க்ரமணே-பல்வகைப்பட்ட ஸம்ஸாரகதியை யடையும்போது, பவந்தி-ஆகின்றன.

ஸம்-ஹா.—முக்தனுக்கு, ஸுஷும்நை என்கிற தலையிலுள்ள நாடியின்வழியாய் உத்க்ரமணமில்லை. மந்தாதிகாரிகளாய், ஸத்யலோகம் முதலிய லோகங்களை யடைந்து பிறகு க்ரமமாய் முக்தர்களாகிறவர்கள், ஸுஷும்நை, என்கிற மூர்த்தந்ய நாடியால் உத்க்ரமணத்தையடைந்து முக்திக்கதிகாரிகளாகிறார்கள். இதற்கு, ச்ருதிகள் முதலிய ப்ரமாணங்களிருக்கின்றன.

ஸா-ஹா.—ஸுஷும்நை யென்கிற மூர்த்தந்யநாடியாலே, முக்தியை, (அதாவது பரமபதத்தில் சென்று பரப்ரம்மத்தை; பரிபூர்ணனுபவம் பண்ணுகை) அடைகிறவன், நிஷ்க்ரமித்து, ஸ்வரூபாவிர்பாவத்தைப்பெற்று, ஸந்தோஷிக்கிறான். அதில் வேறான நாடிகளால் நிஷ்க்ரமத்தை யடைகிறவன், லோகாந்தரங்களை யடைகிறான். இந்த ச்ருதி, வ்யாஸஸூத்திரத்தில் விசாரிக்கப்பட்டது.

கஎ. அங்குஷ்டமாத்ர: புருஷோந்தராத்மா ஸதா ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட: ॥ தம் ஸ்வாச்சரீராத்ப்ரவ்ருஹேந்முஞ்ஜாதிவேஷீகாம் தைர்யேண । தம் வித்யாச்சுக்ரமம்ருதம் தம் வித்யாச்சுக்ரமம்ருதமிதி ।

౧౭. అంగుష్ఠమాత్రఃపురుషోంతరాత్మాసదాజనానాంహృదయేసన్నివిష్టః ।
తంస్వాచ్ఛరీరాత్ప్రవృహేన్ముఞ్జాదివేషీకాంధైర్యేణ ।
తంవిద్యాచ్ఛుక్రమమృతంతంవిద్యాచ్ఛుక్రమమృతమితి ॥

(ப-ம்) புருஷ:-பரமபுருஷன், ஜநாநாம் - ஜனங்களுக்கு, ஸதா-எப்போதும், அந்தராத்மா-அந்தராத்மாவாய்க்கொண்டு, ஹ்ருதயே-ஹ்ருதயத்தில், அங்குஷ்டமாத்ர:-பெருவிரலளவுள்ளவராய், ஸந்நிவிஷ்ட:-இருக்கிறார். தம்-அந்தபரமாத்மாவை, ஸ்வாத் ஶரீராத்-தன்னுடைய சரீரமாகிய ஜீவனைக்காட்டிலும், இஷீகாம் முஞ்ஜாதிவ-இஷீகமென்கிற புல்லுக்குள்ளிருக்கிறபொருளை புல்லிலவேறுபட்டதா யறிவதுபோல், தைர்யேண-கலக்கமற்று, ப்ரவ்ருஹேத்-வேறானவனாயறியக்கடவன், தம் - அந்த வேறுபட்டவனாகிய பரமாத்மாவை, ஶுக்ரம்-பரிசுத்தனென்றும், அம்ருதம்-அம்ருதஸ்வரூபியென்றும், வித்யாத்-அறியக்கடவன்.

ஸம்-ஹா.—இப்படி கீழ்ச்சொல்லியபடி சுத்தஸ்வரூபத்தை யறிந்துகொண்டு முக்தியைப் பெறும்வழி தேடவேணுமென்றுசொல்லி நிகமிக்கிறது.

ஸா-ஹா.—பரப்ரம்ம சரீரமாகையாலே வேறுபட்டஜீவனுக்கு ஸகலத்துக்கும் நியாயமகனாய் யோகஸமாதியில் அங்குஷ்டமாத்ரனாய் ஹ்ருதயத்தில் விளங்குகிற பரமாத்மாவை யறிந்தவன் முக்திக்குத்தக்கவன்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

"தம் வித்யாச்சுக்ரமம்ருதம்" என்கிற வாக்யம், உபதேசஸமாப்தியை யறிவிக்கும்பொருட்டு இரட்டிக்கப்பட்டது.

௧௮. ம்ருத்யுப்ரோக்தாம் நசிகேதோऽத லப்த்வா வித்யாமேதாம் யோகவிதிம் ச க்ருத்ஸ்நம் । ப்ரஹ்மப்ராப்தோ விரஜோऽபூத்விம்ருத்யுரந்யோऽப்யேவம் யோ வித்த்யாத்மமேவ ॥

౧౮, మృత్యుప్రోక్తాంనచికేతోఽథలబ్ధ్వావిద్యామేతాంయోగవిధించకృత్స్నమ్ ।
బ్రహ్మప్రాప్తోవిరజోఽభూద్విమృత్యురన్యోప్యేవంయోవిదధ్యాత్మమేవ ॥

(ப-ம்.) அத-பின்பு, நசிகேத:-நசிகேதஸ்ஸானவர், ம்ருத்யுப்ரோக்தாம்-யமனால் சொல்லப்பட்ட, ஏதாம்-வித்யாம்-இந்தவித்யையையும், க்ருத்ஸ்நம்-யோகவிதிம்-ச-ஸமஸ்தயோகாப்யாஸ க்ரமங்களையும், லப்த்வா-பெற்று, விரஜ:-விம்ருத்யு:, ப்ரஹ்ம-ப்ராப்த:-அபூத்-தோஷங்களொன்றுமில்லாதவனாய், பரப்ரம்மத்தை யடைந்தவனானான். அந்ய:-அபி-ஏவம்-வித்-அத்யாத்மம்-ஏவம்ஏவ-இப்படியே ஆத்மஸ்வரூபம் முதலியவையையறிகிற மற்றொருவனும் முக்திபெற்று ஸந்தோஷிக்கிறான்.

ஸம்-ஸா-ரா ஸா.—இப்படி ப்ரம்மஸ்வரூபத்தையறிந்தவனுக்கு, முக்திதப்பாதாகையால் எல்லோரும் ப்ரம்மத்தை யடைகிற மார்க்கத்தை ப்ராபிக்கவேணும்.

௧௯. ஸஹ நாவவது ஸஹ நௌ புநக்து । ஸஹ வீர்யம் கரவாவஹை । தேஜஸ்வி நாவதீதமஸ்து மா வித்விஷாவஹை । ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

౧౯. సహనావవతు । సహనౌభునక్తు । సహవీర్యంకరవావహై ।
తేజస్వినావధీతమస్తుమావిద్విషావహై । ఓంశాన్తిశ్శాన్తిశ్శాన్తిః ॥

(ப-ம்) ஸ:-அந்த பரமாத்மா, நௌ-சிஷ்யாசாரியர்களாகிய எங்களை அவது, ஸஹ-இரக்ஷிக்கவேணும், நௌ-எங்களை, ஸஹ-கூடியிருக்கும்படி, புநக்து-பரிபாலிக்கவேணும், வீர்யம்-வித்யாபலத்தை, ஸஹ-கூடியே, கரவாவஹை-பண்ணுகிறோம், நௌ-எங்களுடைய, அதீதம்-அத்யசநமானது, தேஜஸ்வி-சிறந்ததாய், அஸ்து-ஆகவேணும், மா, வித்விஷாவஹை-த்வேஷமின்றியிலே இருக்கக்கடவோம். சாந்தி:-சாந்தி:-சாந்தி:-எல்லா தோஷங்களும் நீங்கவேணும்.

ஸம-ஸா—சிஷ்யன், ஆசாரியன், இவர்களுக்கு, அநவதாநத்தால்வருகிற தோஷங்கள் நீங்கிப்போகும்படி சாந்திசொல்லுகிறது.

ரா-ஸா,—சிஷ்யாசாரியர்கள், சாஸ்த்ரத்தில் சொல்லிய நியமங்களை யநுஷ்டியாதபோது வருகிற தோஷங்கள் போகும்படி சாந்திசொல்லுகிறது; வித்யையினால றிவிக்கப்பட்ட பரமாத்மா, தன்ஸ்வரூபத்தையும், வித்யாஸ்வரூபத்தையும், ப்ரகாசிக்கச்செய்து எங்களை இரக்ஷிக்கவேணும், எங்களுக்கு வித்யைவளரும்படி எங்களைக்கூட்டிவைக்கவேணும், நியமங்களால், வித்யைக்குபலத்தையுண்டுபண்ணிகிறோம்; நியமங்களில்லாவிட்டால் வித்யைபலியாதன்றோ ; எங்கள் வித்யை ப்ரகாசிக்கவேணும்.

நாங்கள் பரஸ்பரம் தோழமையோடிருக்கவேணும். எல்லாதோஷங்களும் நீங்கவே ணும்; என்று இந்த ச்ருதிக்குப்பொருள். நசிகேதஸ்ஸுக்கு, யமன் சொன்னபடிக ளை நன்றாய்ச்சொல்லி இப்படியே எல்லோரும் இந்த வித்யையறிந்தால் நசிகேதஸ் ஸைப்போலே முக்திபெறலாமென்று சொல்லி, இந்த வித்யை ஆசானிடத்தில் சிஷ் யனிருக்கும் க்ரமத்திலிருந்து அறியத்தக்கதாகையாலே, அந்தக்ரமத்தில் குறைவு நேரிட்டால் அதினாலாகிய தோஷங்கள் நீங்கும்படி சாந்திசொல்லிமுடிக்கிறது. ஆக இந்த உபநிஷத்தால், பரமாத்மாவாகிய பரமபுருஷனே, எல்லாவற்றுக்கும் காரண மென்றும், அவனே எல்லாசரீரங்களிலுமுள்ள ஜீவாத்மாவோடு மவனுக்கு மந்தரா த்மாவாய்க்கொண்டு வஸிக்கிறானென்றும், யோகிகள் தயாநிக்கிற ஸ்வரூபமு மந்த பரமபுருஷ ஸ்வரூபமே என்றும், அவர்கள் ஹ்ருதயத்தில் அங்குஷ்ட ப்ரமாணனாய் விளங்குகிறானென்றும், தேவர்கள், திக்பாலகாகள், ஸூர்யன், சந்திரன், வாயு முத லிய எல்லோரும் அந்த பரமபுருஷனுக்கு, பயம்படுகிறார்களென்றும், மகாப்ரகாச மான திவ்யமங்கள விக்ரகத்தையுடையவனந்த் பரமபுருஷனென்றும், மூலப்ரக்ரு தி, ஜீவன், இவைகள் அவனுக்கு சரீரங்களென்றும், ஆகையால், ப்ரக்ருதி. ஜீவன், ப்ரம்மம், என்கிற விம்மூன்றுக்கும், ஸ்வரூபபேதமுண்டென்றும், இந்த வாத்மாவும் பரமாத்மாவைப்போலே நித்யனென்றும், இவனுக்கு அநாதியான ப்ரக்ருதி ஸம்பந் தமே ஸம்ஸாரதுக்கத்திற்குக் காரணமென்றும், இந்த துக்கம் நீங்குகை, அந்த பரம புருஷனை யுபாஸிப்பதாலென்றும், அந்த உபாஸநம், தைலதாராபோல் இடைவிடா மலிருக்கிற ப்ரத்யக்ஷம்போல ஸ்ம்ருதியின் பரம்பரை என்றும், இந்த உபாஸநத் திற்கு ப்ரதிபந்தகங்களான பாபங்கள் அந்த பரமபுருஷனைச் சரணமடைவதினால் அழிந்துவிடுகின்றனவென்றும், அப்படி உபாஸநம் கைகூடினவன், மூர்த்தந்ய நாடி யாலேநிஷ்க்ரமித்து அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்தைக்கிட்டிபரப்ரம்மாநுப வமாகிற மோக்ஷத்தை யடைகிறானென்றும் சொல்லப்பட்டது. இத்தால், உபாயம். உபேயம், உபேதா, இவைகளின் ஸ்வரூபம் நிர்ணயிக்கப்பட்டதாயிற்று. இந்த உப நிஷத்தின் கருத்து, இஃதேயென்று, ப்ரம்மஸூத்திரங்களில் வேதவ்யாஸரே, மூன் றதிகரணங்களால் நிச்சயித்திருக்கிறார். ஆகையால் ஜகத்து, பொய்யென்றும், ஜ்ஞாந ஸ்வரூபமான ப்ரம்மத்திற்கு, அஜ்ஞாநத்தாலே, தன்னைப்பார்த்து, ஜகத்தென்கிறப்ர மம் வந்திருக்கிறதென்றும், ஜீவாத்மா, என்பவன் வேறுளனல்லவென்றும், உபாதி யினால், ப்ரம்மமே, ஜீவன்போல் வேறுபட்டுத்தோற்றுகிறதென்றும், இந்த உபநிஷ த்திலெங்கும் காணாத இந்த விஷய மிவ்வுபநிஷத்தில் சொல்லப்பட்டதென்றும், பிறர் சொல்வது பொருந்தாதென்று கீழ்பலவிடங்களிலும் ஸ்புடமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. ஆனதால் உண்மையறிந்துய்யவேணும்,

கடோபநிஷத் இரண்டாமத்யாயம்

ஆறும்வல்லி முடிந்தது.

கடோபநிஷத்து முற்றும்.

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:.

ப்ரஶ்நோபநிஷத் ப்ராரம்ப:.

ப்ரஶ்நோபநிஷதி ப்ரதம: ப்ரஶ்ந:.

ஹரி: ஓம். ஸுகேஶா ச பாரத்வாஜஶ்ஶைப்யஶ்ச ஸத்யகாம: ஸௌர்யாயணீ ச கார்க்ய: கௌஸல்யஶ்சாஶ்வலாயநோ பார்கவோ வைதர்பி: கபந்தீ காத்யாயநஸ்தே ஹைதே ப்ரஹ்மபரா ப்ரஹ்மநிஷ்டா: பரம் ப்ரஹ்மாந்வேஷமாணா ஏஷ ஹ வை தத்ஸர்வம் வக்ஷ்யதீதி தே ஹ ஸமித்பாணயோ பகவந்தம் பிப்பலாதமுபஸந்நா:॥

సుకేశాచభారద్వాజః శైబ్యశ్చసత్యకామః ;సౌర్యాయణీచగార్గ్యః కౌశల్యశ్చాశ్వలాయనో భార్గవో వైదర్భిఃకబన్ధీకాత్యాయన స్తేహైతే బ్రహ్మపరాః బ్రహ్మనిష్ఠాః పరం బ్రహ్మన్వేషమాణాఏష హవైతత్సర్వం వక్ష్యతీతి తేహసమిత్పాణయోభగవ న్తంపిప్పలాదముపసన్నాః॥

(ப்ர.) பாரத்வாஜ:-பரத்வாஜமகர்ஷியின் குமாரராகிய, ஸுகேஶா:-ஸுகேசாவென்கிற மகர்ஷியும், ஶைப்ய:-ஶிபியின் குமாரராகிய, ஸத்யகாம:-ஸத்யகாமனென்கிற மகர்ஷியும், ஸௌர்யாயணீ-ஸௌர்யாயணமகர்ஷியின் குமாரராகிய, கார்க்ய:-கார்க்யமகர்ஷியும், ஆஶ்வலாயந:-அச்வலாயனர்குமாரராகிய, கௌஸல்ய:-கௌஸல்யனென்கிற மகர்ஷியும், வைதர்பி:-விதர்ப்பகுமாரராகிய, பார்கவ:-பார்க்கவமகர்ஷியும், காத்யாயந:-கத்யமகர்ஷிகோத்ரத்திலவராகிய, கபந்தீ-கபந்தி என்கிற மகர்ஷியும், ஆகிய, தே ஹ-ப்ரஸித்தர்களான, ஏதே-இந்த மகர்ஷிகள், ப்ரஹ்மபரா:-வேதத்தையோதினவர்களாய், ப்ரஹ்மநிஷ்டா:-வேதார்த்தத்தை யறிந்தவர்களாய், பரம்-ப்ரஹ்ம-பரப்ரம்மத்தை, அந்வேஷமாணா:-அறிய விரும்பினவர்களாய், ஹ வை-ப்ரஸித்தரான, ஏஷ:-இந்த மகர்ஷியானவர் தத்ஸர்வம்-அந்த ஸமஸ்தத்தையும், வக்ஷ்யதி இதி-சொல்லுவரென்று, தே, ஹ; ஸமித்பாணய:-ஸமித்துமுதலியவற்றைக் கையிலேந்திக்கொண்டு, பகவந்தம்-பூஜ்யரான, பிப்பலாதம்-பிப்பலாதரென்கிற மகர்ஷியை, உபஸந்நா:-ப்ரம்மஸ்வரூபத்தைச் சொல்லவேணுமென்று சரணமடைந்தார்கள்.

ஸம்-ஹா.—ப்ரம்மஜ்ஞாந ஸாதனமான உபதேசமானது, பிப்பலாதரைப்போ ரால் சொல்லப்பட்டு, இம்மகர்ஷிகள்போல்வரால் கேட்கத்தக்கது. என்று இந்த விஷயத்தை ஸ்துதிசெய்துகொண்டு ப்ரச்நோத்தர ரூபமாய் ப்ரம்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. ஸுகேசாமுதலிய மகர்ஷிகளாறுவரும், பூஜ்யரான பிப்பலாதரிடத்தில், தாங்கள், அத்யயநம்செய்து அதினலறியப்பட்ட வேதங்களிற் சொன்ன ப்ரம்மஸ்வரூபாதிகளில் தங்களுக்குண்டான ஸந்தேகங்கள் நீங்கும்படி அவைகளின் ஸ்வரூபங்களைக் கேட்கவேணுமென்று, உபஹாரங்களோடு சென்று, அவரை யடைந்தார்கள்.

ரா-ஹா.—வேதவேதாந்தங்களை யோதி தபோநிஷ்டையுடையவர்களான மகர்ஷிகளறுவரும் மகாபூஜ்யரான பிப்பலாதரிடத்தில் எல்லாதத்வார்த்தங்களையுங்கேழ்க்கவேணுமென்று, அவரிடம் சென்றார்கள்.

௨. தாந்ஹஸ ருஷிருவாச பூய ஏவ தபஸா ப்ரஹ்மசர்யேண ச்ரத்தயா ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸ்யத யதாகாமம் ப்ரச்நாந் ப்ருச்சத யதி விஜ்ஞாஸ்யாம: ஸர்வம் ஹ வோ வக்ஷ்யாம இதி॥

౨. తాన్హస ఋషిరువాచ భూయ ఏవ తపసా బ్రహ్మచర్యేణ శ్రద్ధయా సంవత్సరం ।
సంవత్సథ్యథ యథాకామం ప్రశ్నాన్ పృచ్ఛథ యది విజ్ఞాస్యామః సర్వం హ వో వక్ష్యామ ఇతి

(ப-ம்.) பூய:ஏவ-மறுபடியும், தபஸா-தபஸ்ஸோடும், ப்ரஹ்மசர்யேண-ப்ரம்மசர்யத்தோடும், ச்ரத்தயா-ச்ரத்தையோடும், ஸம்வத்ஸரம்-ஒரு வருஷகாலம், ஸம்வத்ஸ்யத-இங்குவாஸம்பண்ணுங்கோள். (பிறகு,) யதாகாமம்-இஷ்டப்படி, ப்ரச்நாந்-ப்ருச்சத-கேளுங்கோள். விஜ்ஞாஸ்யாம:-யதி-அறிந்தோமேயாகில், ஸர்வம்-எல்லாவற்றையும், வ:-உங்களுக்கு வக்ஷ்யாம:-சொல்லுகிறோம். இதி-என்று, ஸ:ருஷி:-அந்த பிப்பலாதரென்கிற மகர்ஷியானவர், தாந்-அந்தமகர்ஷிகளைக்குறித்து, உவாச-சொன்னார்.

ஸ0-ஹா.—நீங்கள் முன் தபஸ்விகளாயிருந்தாலும், நமக்கு சுச்ரூஷைபண்ணிக்கொண்டு ஒருவருஷகாலமிருந்தீர்களாகில் நாமறிந்தபடி உங்களுக்கு ப்ரம்மஸ்வரூபத்தை யுபதேசிக்கிறோம் என்று அந்த மகர்ஷிகளைப்பார்த்து பிப்பலாதர் சொன்னார்,

ரா-ஹா.—இப்போது நீங்கள் ப்ரம்மவித்தையை யறியும்படி, நாம் சொல்லவேணுமாகில் ஒருவர்ஷகாலம், ச்ரத்தாபக்திகளோடுகூடி, ஸ்திரீசிந்தை முதலியவை நீக்குகையாகிற ப்ரம்மசர்யமுடையவர்களாய், நமக்கு சுச்ரூஷை பண்ணிக்கொண்டு நிச்சலராயிருங்கோள், நாமுமக்கு வஞ்சனையில்லாமல் ப்ரம்மவித்யையை யறிந்தாபடி சொல்லுகிறோம் என்று, அந்த மகர்ஷிகளைப்பார்த்து பிப்பலாதர் சொன்னாரென்று பொருள். இத்தாலிப்பன வருத்தப்பட ஸம்மதியில்லையாகில் உங்களிடம் போய்ச் சேரலாமென்று கருத்து காட்டப்பட்டது. இதனால் சிஷ்யன், ஆசாரியனுடைய ஜ்ஞானத்தை பரீக்ஷியாமல், பக்தியோடு ஒருவருஷம் குருகுலவாஸம்செய்யவேணுமென்றும், ஆசாரியன், சிஷ்யனை சோதியாமல் உபதேசிக்கை தகாதென்றும், ஸூசிக்கப்படுகிறது.

௩. அத கபந்தீ காத்யாயந உபேத்ய பப்ரச்ச |
பகவந் குதோ ஹ வா இமா: ப்ரஜா: ப்ரஜாயந்த இதி ‖

3. అథ కబంధీ కాత్యాయన ఉపేత్య పప్రచ్ఛ భగవన్ కుతో హ వా ఇమాః ప్రజాః ప్రజాయన్త ఇతి।

(ப-ம்.) அத-ஒருவருஷம்போனபிறகு, கபந்தீ, காத்யாயந:-கத்யர்குமாரரான கபந்தியானவர், உபேத்ய-வந்து, பகவந்-ஓபூஜ்யரான ஸ்வாமியே, இமா:ப்ரஜா:. இந்த ஜநங்கள், குத:ஹ வா - யாரிடத்திலிருந்து, ப்ரஜாயந்தே-உண்டாகின்றன. இதி-என்று, பப்ரச்ச கேட்டார்.

ஸா-ஹா.ரா-ஹா.—இப்படி ஆசார்யனாகிய பிப்பலாதமகர்ஷி சொன்னபிறகு அப்படியே ஒருவருஷகாலம் மகாபக்தி, விச்வாஸம், ச்ரத்தை, ஆஸ்திக்யம், ப்ரம்ம

சர்யம் முதலியவற்றோடு ஆசாரியனுடைய மநஸ்ஸு ஸந்தோஷிக்கும்படி குருகுல வாஸம்பண்ணி, அதனாலவர் ப்ரஸந்நரான பிறகு அந்தமகர்ஷிகளிலொருவராகிய கபந்தியென்பவர் மற்ற மகர்ஷிகள் அநுமதிப்படியே, சாஸ்த்ர க்ரமமாய் ஆசார்ய ரான பிப்பலாதரையடைந்து, இந்த லோகத்திலுள்ள ஜநங்கள் எந்த வஸ்துவிலிருந்து பிறந்தனவென்று கேட்டார்.

### பதாந்வயார்த்தபேதங்கள்.

இந்த ப்ரச்நம், சதுர்முகப்ரம்மபரமென்று சங்கர பாஷ்யத்திலும், பரப்ரம்மபரமென்று, இராமாநுஜபாஷ்யத்திலும் தாத்பர்யபேதமென்றறிக.

௪. 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌸 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌪𑍍𑌰𑌜𑌾𑌕𑌾𑌮𑍋 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 𑌸 𑌤𑌪𑍋𑌽𑌤𑌪𑍍𑌯𑌤 𑌸 𑌤𑌪𑌸𑍍𑌤𑌪𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸 𑌮𑌿𑌥𑍁𑌨𑌮𑍁𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌤𑍇 । 𑌰𑌯𑌿𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌚𑍇𑌤𑍍𑌯𑍇𑌤𑍌 𑌮𑍇 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 ॥

౪. తస్మైసహోవాచప్రజాకామోవైప్రజాపతిః సతపోఽతప్యతసతప స్తప్త్వాసమిథునము త్పాదయతే । రయించప్రాణంచేత్యేతౌ మేబహుధాప్రజాఃకరిష్యతఇతి॥

(ப்-ம்.) 𑌸𑌃-அந்த, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃-ப்ராஜாபதியானவர், 𑌪𑍍𑌰𑌜𑌾𑌕𑌾𑌮𑌃-ப்ராஜைகளிலாசையுடையவராய், 𑌤𑌪𑌃-தபஸ்ஸை, 𑌅𑌤𑌪𑍍𑌯𑌤-செய்தார். 𑌸𑌃-ப்ரஸித்தரான, 𑌸𑌃-அவர், 𑌤𑌪𑌃-தபஸ்ஸை, 𑌤𑌪𑍍𑌤𑍍𑌵𑌾-செய்து, 𑌮𑌿𑌥𑍁𑌨𑌮𑍍-இரண்டை, 𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑌤𑍇-உண்டுபண்ணினார். 𑌰𑌯𑌿𑌂-இரயி என்றும், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂-ப்ராணனென்றும், 𑌇𑌤𑌿-சொல்லப்படுகிற, 𑌏𑌤𑍌-இவ்விரண்டும், 𑌮𑍇-எனக்கு; 𑌬𑌹𑍁𑌧𑌾-அநேகவிதங்களான, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃-ப்ராஜைகளை, 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌃-ஸ்ருஷ்டிக்கப்போகின்றன; 𑌇𑌤𑌿-என்கிறவபிப்ராயங் கொண்டார். (இப்படி) 𑌸𑌃-அந்தபிப்பலாத மகர்ஷியானவர், 𑌤𑌸𑍍𑌮𑍈-அந்தகபந்திமகர்ஷியைப்பார்த்து, 𑌹𑍋𑌵𑌾𑌚-சொன்னார்.

ஶ0-ஹா.—நான், நான்முகனாயாவேனாகவென்று, நான்முகனாக விரும்பினவன் உபாஸநம் செய்யும்போது, நானே, நான்முகனென்று, உபாஸித்து, அப்படி முன் கல்பத்தில்,உபாஸனம் செய்ததினால் வந்த புண்யத்தால் இந்த கல்பத்தில் ஹிரண்ய கர்ப்பனென்கிற நான்முகனாகவாய்,ப்ரஜைகளை, ஸ்ருஷ்டிக்கவேணுமென்று நினைத்து முன்ஜந்மதிலதான வேதார்த்த விஜ்ஞாநத்தை ஆலோசித்து, அந்த வேதார்த்தத்தை ஸ்ம்ருதியில் கொண்டுவந்து, அந்த ப்ரகாரமாகவே; ஸ்ருஷ்டிக்கு வேண்டியதான, ரயி, ப்ராணன், என்கிற விரண்டையும் ஸ்ருஷ்டித்தான். அதாவது, இவ்விரண்டும் நமக்குவேண்டிய ப்ராஜாஸ்ருஷ்டியைப் பலபடியாகச் செய்யுமென்று நினைத்து, ரயி, ப்ராணன், என்கிற, ஸூர்யன், சந்திரன், இவர்களை ஸ்ருஷ்டித்தானென்கை. இப்படி, பிப்பலாதர், கபந்திக்குச் சொன்னார்.

ரா-ஹா.—பரமாத்மாவானவர் ஸ்ருட்டிக்ரமத்தை வேதத்திலில்சொல்லியுருக்கிறபடி ஆலோசித்து, எல்லாஸ்ருஷ்டிக்கும் மூலமான, ரயி, ப்ரணன், என்கிற ப்ரக்ருதி, ஜீவன், இவைகளை ஸ்ருஷ்டித்தார். இங்கு ப்ரஜாபதி, என்பது பரமாத்மாவே, ஹிரண்யகர்பனென்கிற நான்முகனேயன்று, இது காரணவாக்யமன்றோ.

௫. ஆதி³த்யோ ஹ வை ப்ராணோ ரயிரேவ சந்த்³ரமா:॥ ரயிர்வா ஏதத்ஸர்வம் யந்மூர்த்தம் சாமூர்த்தம் ச தஸ்மாந்மூர்த்திரேவ ரயி: ॥

౫. ఆదిత్యో హవై ప్రాణో రయిరేవ చంద్రమాః । రయిర్వా
ఏతత్సర్వం యన్మూర్తం చామూర్తం చ తస్మాన్మూర్తిరేవ రయిః॥

(ப்-ம்.) ஆதி³த்ய: ஹவை-போக்தாவானவன், ப்ராண:-ஜீவன், சந்த்³ரமா:-போக்யமானது, ரயி:ஏவ-ப்ரக்ருதியே - யந்மூர்த்தம் சாமூர்த்தம் ச-மூர்த்தாமூர்த்தரூபமாயிருக்கிற, ஏதத்ஸர்வம் - காணப்படுகிற ஸமஸ்தமும், ரயி:வா- போக்யமேயன்றோ. தஸ்மாத் - ஆகையால், மூர்த்திரேவ ரயி: - போக்யமான மூலப்ரக்ருதியே, ரயி என்று சொல்லப்படுகிறது.

ஸம்-ஹா.—அத்தாவென்றும், அந்தமென்றும் சொல்ப்படுகிற ஆத்தியன், சந்த்ரமா:, என்கிற எல்லாமூர்த்தியும் ரயி என்னப்படுகிறது.

ஸா-ஹா.—ப்ருதிவி ஜலம் முதலிய பஞ்சபூதங்களும் மூர்த்தாமூர்த்த ரூபமான ரயியென்றும், ப்ராணன் ஆதித்யனென்றும் சொல்லப்படுகிறன.

௬. அதா²தி³த்ய உத³யந்யத்ப்ராசீம் தி³ஶம் ப்ரவிஶதி தேந ப்ராச்யாந் ப்ராணாந்ரஶ்மிஷு ஸந்நித⁴த்தே । யத்³த³க்ஷிணாம் யத்ப்ரதீசீம் யது³தீ³சீம் யத³தோ⁴ யதூ³ர்த்⁴வம் யத³ந்தரா தி³ஶோ யத்ஸர்வம் ப்ரகாஶயதி தேந ஸர்வாந் ப்ராணாந் ரஶ்மிஷு ஸந்நித⁴த்தே॥

౬. అథాదిత్య ఉదయన్యత్ప్రాచీం దిశం ప్రవిశతి తేన ప్రాచ్యాన్ ప్రాణాన్ రశ్మిషు సన్నిధత్తే
యద్దక్షిణాం యత్ప్రతీచీం యదుదీచీం యదధో యదూర్ధ్వం యదంతరా దిశో యత్సర్వం
ప్రకాశయతి తేన సర్వాన్ రశ్మిషు సన్నిధత్తే॥

(ப்-ம்) அத²-பின்பு, ஆதி³த்ய:-ஆதித்யசப்தத்தின்பொருள் சொல்லப்படுகிறது யத்-எந்தகாரணத்தால், உத³யந்-உதயஸமயத்திலேயே, ப்ராசீம் தி³ஶம் - கிழக்குதிக்கை, ப்ரவிஶதி-ப்ரவேசிக்கிறானோ; தேந-அந்தகாரணத்தால், ப்ராச்யாந்-கிழக்கேயிருக்கிற, ப்ராணாந்-ப்ராணங்களை, ரஶ்மிஷு-கிரணங்களிலே, ஸந்நித⁴த்தே-சேர்க்கிறான், த³க்ஷிணாம், யத்-தெற்குதிக்கிலும், உதீ³சீம் யத், வடக்கிலும், அதோ⁴ யத் - கீழ்பாகத்திலும், ஊர்த்⁴வம் யத்-மேல்பாகத்திலும், அந்தரா தி³ஶ: யத் - மத்யபாகங்களிலும், ஸர்வம்-எல்லாவற்றையும், யத்-எந்தகாரணத்தால், ப்ரகாஶயதி - ப்ரகாசிக்கும்படி, செய்கிறானோ, தேந - அந்தகாரணத்தால், ஸர்வாந் - ப்ராணாந் - எல்லாப்ராணங்களையும், ரஶ்மிஷு-கிரணங்களில், ஸந்நித⁴த்தே - சேர்க்கின்றான்.

ஸம்-ஹா.—ஸமஸ்த திக்குக்களிலுமுள்ள எல்லாவற்றைம் ப்ரகாசிக்கச்செய்வதினுல் ப்ராணமானது ஸர்வதாரகமாயிருக்கிறது.

ஸா-ஹா—இந்த ஜீவாத்மா உதயமானபோதே, அதாவது, உறங்கி எழுந்தபோதே, எல்லாதிக்கிலுமுள்ள வஸ்துக்களும் ப்ரகாசிக்கும்படி தர்மபூதஜ்ஞாநமாகிற கிர

ணங்களாலே, ப்ராணங்களென்கிற இந்த்ரியங்களை வ்யாபிக்கச்செய்கிறு ணுகையாலே, இவன் ப்ராண சப்தத்தாலே சொல்லப்படுகிறான்.

ஏ. ஸ ஏஷ வைச்வாநரோ விச்வரூப:
ப்ராணோऽக்நிருதயதே ததேதத்ருசாऽப்யுக்தம் ॥

ஸஏஷ வைச்வாநரோவிச்வரூப: ||
ப்ராணோக்நிருதயதே ததேதத்ருசாப்யுக்தம்.

(ப-ம்.) ஸ: - ஸ: ஏஷ:-ப்ராண:-அப்படிப்பட்ட இந்த ஜீவனானவன் வைச்வாநர: - ஸமஸ்தங்களையும் நியமிக்கிற, விச்வரூப: - எல்லாவற்றையும் சரீரமாகவுடைய, அக்நி: - மேலானகதியைக் கொடுப்பவனான பரமாத்மாவுக்கு சரீரமாய், உதயதே - விளங்குகிறான். தத் - ஸ தத் அந்த இது, ருசா - மந்திரத்தால், அப்யுக்தம் - சொல்லப்பட்டது.

ஸம்-ஸா.—இந்த பரப்ரம்மம், ப்ரத்யக்ஷமாய் காணப்படுகிற தென்கிறது. எல்லா மநுஷ்யர்களுக்கு மாத்மாவாயிருப்பது பரப்ரம்மமே; எல்லாப்ரபஞ்சத்துக்கு மதிஷ்டாநமாயிருப்பதும் ப்ரம்மமே, இவ்விஷயம் இந்த மந்திரத்தால் சொல்லப்படுகிறது.

ரா-ஸா.—போக்தாக்களாயிருக்கிற ஜீவாத்மாக்களெல்லாம், பரமாத்மாவை யாத்மாவாகவுடையவர்கள். பரமாத்மா எல்லாவற்றையும் சரீரமாகவுடையவனன்றோ: என்றிந்தவிஷய மிம்மந்திரத்தால் சொல்லப்படுகிறது வைச்வாநராதி கரணத்தில், பகவத்ராமாநுஜாசார்யரால், இந்த மந்திர மிப்படியே வ்யாக்யாநிக்கப்பட்டது.

அ. விச்வரூபம் ஹரிணம் ஜாதவேதஸம் பராயணம் ஜ்யோதிரேகம் தபந்தம்। ஸஹஸ்ரரச்மி: சததா வர்தமாந: ப்ராண: ப்ரஜாநாமுதயத்யேஷ ஸூர்ய: ॥

விச்வரூபம்ஹரிணம்ஜாதவேதஸம்பராயணம்ஜ்யோதிரேகம்தபம்தம்||
ஸஹஸ்ரரச்மிச்சததாவர்தமாந:ப்ராண:ப்ராஜாநாமுதயத்யெஷஸூர்ய:

(ப-ம்.) விச்வரூப: - எல்லாவற்றையும் சரீரமாக வுடையவனும், ஜாதவேதஸம் - வேதங்களை யுண்டாக்கினவனும், பராயணம் - அடையத்தக்கஸ்தாநமானவனும், தபந்தம்-ப்ரகாசியாநிற்கிற, ஜ்யோதி: - தேஜஸ் ஸ்வரூபியானவனும், ஏகம் - அத்விதீயனுமான, ஹரிணம் - ஹரியென்கிற நாமமுடைய பரமாத்மாவை, வர்தமாந: - அநுவர்த்தித்திருக்கிறவனும், ஸஹஸ்ரரச்மி: - எல்லா விஷயங்களையுமறிகிற சக்தியுடையவனும், ப்ரஜாநாம் - பூதங்களுக்கு, ப்ராணம் - ப்ராண பூதமான, ஏஷ:, ஸூர்ய: - இந்தப்ரகாசனான ஜீவாத்மா, உதயதி - உதயத்தை யடைகிறான்.

ஸம்-ஸா.—எல்லாவுலகங்களிலு மொன்றுயிருக்கிற கிரணங்களையுடைய ஜ்ஞாநஸ்வரூபமான ப்ராணுதாரமாயுள்ள எல்லோருக்கும் கண்போன்ற அத்விதீயமாகிய, எல்லாவற்றையும் செய்கின்ற ஆத்மஸ்வரூபமென்கிற ப்ரம்மத்தையறிந்த வித்வாந்கள் ஸந்தோஷத்தை யடைகிறார்கள். யாதொரு ப்ரம்மஸ்வரூபமே, ஸர்வவஸ்துவாயும் தோற்றுகிறதோ.

ரா-ஹா.— “ப்ரஜ்ஞா ச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ”, என்றபடி, எல்லா விஜ்ஞாநங்களுக்கும் காரணமான வேதங்களை வெளிப்படுத்தினவனும், “ஸந்தாபயதி ஸ்வம் தேஹமாபாததலமஸ்தக:” “அஹம் வைச்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹமாச்ரித:। ப்ராணாபாநஸமாயுக்த: பசாம்யந்நம் சதுர்விதம்” என்கிற ச்ருதிஸ்ம்ருதிகளின்படியே, ஸகல தேஜஸ்ஸ்வரூபியாய்க்கொண்டு ப்ரகாசிக்கிறவனும், இப்படி அநேககுணங்களுக் கிருப்பிடமாயிருக்கிற பரமாத்மாவாகிய ஹரியென்கிற ஸ்ரீமந்நாராயணனை யநுவர்த்தித்திருக்கிற (அதாவது அவனுக்கு சேஷமாயிருக்கிற) ஜீவாத்மாக்கள், எல்லாவற்றையு மறிந்துகொண்டு, அவனுடைய வருளால் விளங்குகிறார்கள்.

௯. ஸம்வத்ஸரோ வை ப்ரஜாபதிஸ் தஸ்யாயநே தக்ஷிணம் சோத்தரம் ச। தத்யே ஹ வை ததிஷ்டாபூர்த்தே க்ருதமித்யுபாஸதே தே சாந்த்ரமஸமேவ லோகமபிஜயந்தே த ஏவ புநராவர்த்தந்தே தஸ்மாதேத ருஷய: ப்ரஜாகாமா தக்ஷிணம் ப்ரதிபத்யந்தே। ஏஷ ஹ வை ரயிர்ய: பித்ருயாண: ॥

*ஸம்வத்ஸரோவைப்ரஜாபதிஸ்தஸ்யாயநேதக்ஷிணம்சோத்தரம்சதத்யேஹவைததிஷ்டாபூர்த்தே.*

*க்ருதமித்யுபாஸதேதேசாந்த்ரமஸமேவலோகமபி ஜயந்தேதஏவபுநராவர்த்தந்தேதஸ்மாதேதேருஷய:ப்ரஜாகாமாதக்ஷிணம்ப்ரதிபத்யந்தேஏஷஹவைரயிர்ய:பித்ருயாண: ||*

(ப்-ம்) ஸம்வத்ஸர:, வை, ஸம்வத்ஸரமானது ப்ரஜாபதி: - ப்ரம்மம். தஸ்ய - அந்த - ஸம்வத்ஸரரூபமான ப்ரம்மத்திற்கு, தக்ஷிணம், உத்தரம்ச - அயநே, — தக்ஷிணாயநம், உத்தராயணம், என்றிரண்டயநங்கள். தத் - ஆகையால், தத் - அந்த விஷயத்தில், யே, ஹ, வை - யாவர். இஷ்டாபூர்த்தே க்ருதம், இதி - யாகம் செய்கை, தடாகத்தை யுண்டுபண்ணுகை, பிறருக்கு தானம்பண்ணுகைமுதலிய கர்மங்களை, உபாஸதே - செய்கிறார்களோ, தே - அவர்கள், சாந்த்ரமஸம் - லோகம், ஏவ, சந்திரலோகத்தையே, அபிஜயந்தே - அடைகிறார்கள், ஆகையால், புந: ஆவர்த்தந்தே, ஏவ - மறுபடியும் ஜந்மத்தை யடைகிறார்கள், தஸ்மாத் - ஆகையால், ஏதே ருஷய: - இப்படி அநித்ய பலங்களை அறிகிற மந்தமதிகள், ப்ரஜாகாமா: - ஸ்வர்க்கம் முதலிய க்ஷுத்ரபலங்களை விரும்பினவர்களாய், தக்ஷிணம் - தக்ஷிணாயநமார்க்கத்தை ப்ரதிபத்யந்தே - அடைகிறார்கள். ஏஷ:, ஹ, வை, இப்படிப்பட்ட, பித்ருயாண: - பித்ருயாணமென்கிற மார்க்கமானது, ரயி: - ப்ரஸித்தமான போகமார்க்கம்.

ப00-ஹா.— ஸம்வத்ஸரமானது ப்ரஜாபதியினாலாகிய தாகலின், ஸம்வத்ஸரத்தை ப்ரஜாபதியென்கிறது. சந்திரன், ஆதித்யன், இவர்களாலேற்படுகிறதிதி, அஹோரா

ராத்ரம், இவைகளின் கூட்டமே யன்றோ ஸம்வத்ஸரம். ஆதலால், அவைகளில் வே
றாகாத ஸம்வத்ஸரம் ரயி, ப்ராணன்களென்கிற மிதுநஸ்வரூபமாகச் சொல்லப்படுகி
றது. அஃதெப்படியென்றால், அந்த ஸம்வத்ஸரப்ரஜாபதிக்கு, தக்ஷிணம், உத்தரம்,
என்றிரண்டுவழிகள். ஆறுமாஸங்கள் கொண்டது. ஒரு அயநமெனப்படுகிறது. இவ்
விரண்டுவழிகளாலும், ஆதித்யன், (ஸூர்யன்) கேவலம் கர்மத்தைப்பற்றி யிருக்கு
மவர்களுக்கும், ஜ்ஞாநகர்மங்க ளிரண்டையும்பற்றி யிருக்கின்றவர்களுக்கும், லோக
ங்களைக்காட்டிக்கொண்டு செல்லுகிறான். ப்ராம்மணாதன் முதலிய கர்மாதிகாரிகள்
அந்தப்படி, இஷ்டம், பூர்தம், என்கிற அநித்யகர்மங்களைச்செய்து நித்யபலத்தைய
டையாது, அந்தப்ரஜாபதியி னம்சமாகிய மிதுநத்திலொன்றான, ரயி, என்கிற போக
லோகமாகிய சந்திரலோகத்தை யடைகிறவர்களாய், அந்த சந்திரலோக மநுஷ்யமாய்
இவனது கர்மத்தின் முடிவிலழிகிறதாகையால், அதில் நின்றும்மீண்டு அவர்கள்
செய்த புண்யபாவங்களுக்குத் தக்கபடி ஸ்வர்க்கம், நரகம், இவைகளிலொன்றையடை
கிறார்கள். அல்லது, இந்த லோகத்திலாவது ஜந்மத்தையடைகிறார்கள். அப்படிப்ப
ட்ட அதிகாரிகள், கீழ்ச்சொல்லிய இரண்டுவழிகளுக்குள் ஒன்றாகிய தக்ஷிணாயநம்
என்கிற வழியையடைகிறார்கள். அதாவது - தக்ஷிணாயநமென்கிற வழியால் சந்திர
னையடைகிறார்கள். இந்த வழியானது பித்ருயாணமென்று சொல்லப்படுகிறது. இவ்
வழியே, ரயி என்கிற போகமார்க்கமென்று சொல்லத்தக்கது. அதாவது அந்த ஸம்
பந்தமுடைய சந்திரனே. ரயி, என்று சொல்லப்படுகிறான்.

ரா-ஹா.—கீழ்,ஸூக்ஷ்மமான ப்ரக்ருதி, ஜீவன், இவர்களைசரீரமாகவு
டைய பரமாத்மாவாகிய ப்ரஜாபதிக்கு, ரயி, ப்ராணன், என்னப்படுகிற ப்ரக்ருதி,
ஜீவன், ஆகிய போகவஸ்து, போகத்தை யநுபவிக்கிற வஸ்து, என்கிற வகையாலே,
விபாகத்தைச் சொல்லி, அகண்ட காலஸ்வரூபியான அந்த ப்ரஜாபதி என்கிற பர
மாத்மாவுக்கு, கண்ட காலவிபாகத்தைச் சொல்லத்தொடங்கி, நெஞ்சில் தங்குகைக்
காகவும், உபாஸநம் செய்வதற்காகவும், ஸம்வத்ஸரமென்று சொல்லப்படுகிற ப்ரஜா
பதிக்கு, தக்ஷிணாயநம், உத்தராயணம், என்கிற, ரயி, ப்ராணன், என்ற விபாகத்தை
யும், அப்படியே, மாஸமென்று சொல்லப்படுகிற ப்ரஜாபதிக்கு, சுக்லபக்ஷம், க்ருஷ்ண
பக்ஷம். என்கிற, ரயி, ப்ராண, விபாகத்தையும், அஹோராத்ரமென்கிற ப்ரஜாபதிக்கு
இராப்பகலென்கிற ரயி, ப்ராண, விபாகத்தையும், அந்த ப்ரஸங்கத்தால், ரயி என்
கிற பதத்தின் பொருளாகிய, தக்ஷிணாயநம், க்ருஷ்ணபக்ஷம், இரவு, இவைகளைக்
காட்டிலும், ப்ராண, என்கிற பதத்தின் பொருளான, உத்தராயண, சுக்லபக்ஷம்;பகல்
இவைகளுக்குண்டான மேன்மையையும் சொல்லத்தொடங்குகிறது. ஸம்வத்ஸர
மென்கிற காலஸ்வரூபியான ப்ரஜாபதிக்கு, தக்ஷிணாயநம் உத்தராயணம் என்கிற
இரண்டயநங்கள், ஸூர்யன் நடப்பதற்கு ஆதாரமாயிருக்கிற இரண்டுரூபங்களாயிருக்
கின்றன. அவைகளிலொன்றாகிய தக்ஷிணாயநத்தை, இஷ்டம். பூர்தம், க்ருதம்,என்
கிற வினைகளை அதாவது - யாகம், தாநம், வாவிகள், முதலியவற்றைச் செய்கிற
ஸ்வர்க்காதி பல காமிகள், அடைகிறார்கள். அவர்களே, புநராவ்ருத்தியையடைகி
றார்கள், ஆத்மாவை யுபாஸித்து, உத்தராயணத்தை யடைந்தவர்கள், புநராவ்ருத்தி
யடைகிறார்களில்லை. காம்யகர்மங்களைச்செய்து தூமாதிமார்க்கத்தாலே ஸ்வர்க்காதி
லோகங்களை யடைந்தவர்கள் புநராவ்ருத்தியடைகிறார்கள். அவைகளை விரும்பாது,
நித்யமான மோக்ஷத்தை விரும்பி ஆத்மாவை யுபாஸித்து, அர்ச்சிராதிமார்க்கத்தாலே
பரமபதத்தை யடைந்தவர்கள், புநராவ்ருத்தியில்லாமல் நித்யாநந்தத்தை யடைகி
றார்களென்கை. அந்தபுநராவ்ருத்தியுண்டான தக்ஷிணாயநமார்க்கமானது, பித்ருயாண

மென்று சொல்லப்படுகிறது. அநித்யவிஷயாநுபவமென்கை.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு, ஜாகரூகர்களாயிருந்து பேதங்களையுணர்ந்துகொள்க. சிலப்ரச்நோத்தரங்கள் இராமாநுஜபாஷ்யத்தில், விஸ்தாரமாய்ச்சொல்லப்பட்டதாகிலுமிங்கு சுருங்கச்சொல்லப்பட்டது.

க௦. அதோத்தரேண தபஸா ப்ரஹ்மசர்யேண ச்ரத்தயா வித்யயாத்மாநமந்விஷ்யாதித்யமபிஜயந்தே ஏதத்வை ப்ராணாநாமாயதநமேததம்ருதமபயமேதத்பராயணமேதஸ்மாந்ந புநராவர்தந்த இத்யேஷ நிரோத: ததேஷ ச்லோக:॥

அதோத்தரேண தபஸா ப்ரஹ்மசர்யேண ஶ்ரத்தயா வித்யயாத்மாநமந்விஷ்யாதித்யமபிஜயந்தேதத்வை ப்ராணாநாமாயதநமேததம்ருதமபயமேதத்பராயணமேதஸ்மாந்நபுநராவர்தந்த இத்யேஷநிரோத: | ததேஷஶ்லோக:

(ப்-ம்.) தபஸா-தவத்தாலும், ப்ரஹ்மசர்யேண-ப்ரம்மசர்யத்தாலும், ச்ரத்தயா-ச்ரத்தையினாலும், வித்யயா - உபாஸநத்தாலும், ஆத்மாநம் - பரமாத்மாவை, அந்விஷ்ய-அறிந்து, அத - ன், ஆதித்யம்-சூர்யனை, உத்தரேண - உத்தராயணமார்க்கத்தால், அபிஜயந்தே - அடைகிறார்கள், ஏதத்வை-இந்த பரமாத்மஸ்வரூபமே; ப்ராணாநாம்-ஜீவாத்மாக்களுக்கு, ஆயதநம் - ஸ்தாநமானது. ஏதத் - இந்தபரமாத்மஸ்வரூபமானது, அம்ருதம்-மோக்ஷஸ்வரூபம், அபயம்-பயமில்லாதஸ்தாநம், ஏதத்-இந்தபரமாத்மஸ்வரூபமானது, பராயணம்-முக்யபலம், ஏதஸ்மாத்-இந்த ஆத்மஸ்வரூபத்திலிருந்து, புந: ந ஆவர்தந்தே - புநராவ்ருத்தியடைகிறதில்லை. இதி-இந்த விஷயத்தில், ஏஷ:-இந்த பரமாத்மா, நிரோத:-காரணமாயிருக்கிறான். தத்-அந்தபரமாத்மஸ்வரூபத்தில். ஏஷ:ச்லோக:-இந்தச்லோகம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ௦-ஹா—உத்தராயணமார்க்கத்தால், ஆதித்யனை யடைகிறார்கள். அதாவது தபஸ்ஸுமுதலியவற்றால் ஆத்மாவும், ப்ரம்மமும், ஒன்றே என்கிற ஜ்ஞாநத்தையடைந்து சராசரங்களுக்கு ப்ராணனாயிருக்கிற ஸூர்யனே நானென் றநுஸந்தித்து, ஸூர்யனையடைகிறார்கள் என்றவாறு. ஸர்வப்ராணிகளுக்கு மாதாரபூதமாய், அழிவில்லாததாய், பயமற்றதாய், ப்ரத்யக்ஷபராயணமாயிருக்கிற ஸ்தாநமாகியாவிதையடைந்தவர்கள், மறுபடியும் ஜந்மத்தையடைகிறதில்லை ஆதித்ய ப்ராப்தியில்லாதவர்களுக்கு ஸம்ஸாரம் நீங்காது. இந்த விஷயத்தில் ஶ்லோகமிருக்கிறது.

ராஹா.—கீழ்ச்சொல்லிய விஷயத்தைக்காட்டில் வேறான வம்சத்தைத் தொடங்குகையால், அத, என்று சொல்லப்படுகிறது. யாவர், இந்த அநித்யங்களாகிய ஸுகங்களையடைந்து பயனென்னவென்று, விரக்தர்களாயிருக்கிறார்களோ; அப்படிப்பட்ட மகர்ஷிகள், சரீரத்தைவாட்டித்தவம் செய்வதினாலும், விஷயாநுபவமென்கிற

ஸ்த்ரீஸம்போகம் முதலியவற்றை நீக்குகையாகிற ப்ரம்மசர்யத்தாலும், சாஸ்த்ரங்களிற்சொன்ன வர்த்தங்களில் நம்பிக்கையாகிற ஸ்ரத்தையாலும், இவைகளை யங்கமாயுடைய ப்ரத்யகாத்ம விஷயமான த்யாநமென்கிற உபாஸநாசப்தத்தாலே சொல்லப்படுகிற வித்யையாலும், பரமாத்மாவை யுபாஸித்து, அர்ச்சிராதிமார்க்கத்தால், அதாவது, ஸூர்யனிடத்திலிருந்து சந்திரனையும், சந்திரனிடத்திலிருந்து, வித்யுத்தென்கிற தேவதையையும், முக்தபுருஷன் சென்றுகிட்டி, அமாநவனென்கிற புருஷனாலே பரப்ரம்மத்தின் ஸாமீப்யத்தை யடைகிறானென்று சொல்லியபடி, பரப்ரம்மத்தையடைவதற்கு வழியாகிய ஸூர்யனை யடைந்து பரமபதத்தை யடைந்து மாகாநந்தத்தோடுவர்த்திக்கிறார்கள். அந்த பரமபதமே ஸர்வாத்மாக்களுக்கும் ப்ராப்யமாயிருக்கிற பயமில்லாத நித்யமான திவ்யஸ்தாநம், இதை யடைந்தவர்கள் புநராவ்ருத்தியடைகிறார்களில்லை. ஸம்ஸாரத்தை யடைவதில்லை. இப்படி முக்தன், ஸம்ஸாரத்தை யமையாமலிருக்கும்படி பரமாத்மா ஸங்கல்பிக்கிறானகையாலே, இது கூடும், "மாமுபேத்யது கௌந்தேயபுநர்ஜந்ம நவித்யதே" என்று பகவானால் சொல்லப்பட்டதன்றோ: வ்யாஸாசார்யரென்கிற ஸ்ருதப்ரகாசிகா சார்யருமிப்படியே, இந்த மந்திரத்திற்கு ஸாலவ்யாக்யாநாதிகரணத்தில் வ்யாக்யாநம்செய்தார். இந்த விஷயத்திலொரு ஸ்லோகம் மேலே சொல்லப்படுகிறது.

கக. 𑌪𑌞𑍍𑌚𑌪𑌾𑌦𑌂 𑌪𑌿𑌤𑌰𑌂 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌕𑍃𑌤𑌿𑌂 𑌦𑌿𑌵 𑌆𑌹𑍁𑌃 𑌪𑌰𑍇 𑌅𑌰𑍍𑌧𑍇 𑌪𑍁𑌰𑍀𑌷𑌿𑌣𑌂 । 𑌅𑌥𑍇𑌮𑍇 𑌅𑌨𑍍𑌯 𑌉𑌪𑌰𑍇 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌂 𑌸𑌪𑍍𑌤𑌚𑌕𑍍𑌰𑍇 𑌷𑌡𑌰 𑌆𑌹𑍁𑌰𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌿𑌤𑌿 ॥

கக. பஞ்சபாதம் பிதரம்த்வாதஸாக்ருதிம்திவ ஆஹு:பரே அர்தே புரீஷிணம் | அதேமே அந்யஉபரே விசக்ஷணம்ஸப்தசக்ரே ஷடர ஆஹுரர்பிதமிதி ||

(ப்-ம்.) 𑌪𑌞𑍍𑌚𑌪𑌾𑌦𑌂-ஐந்துபாதங்களையுடைத்தாயும், 𑌪𑌿𑌤𑌰𑌂-பிதாவாயும், 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌕𑍃𑌤𑌿𑌂 - பன்னிரண்டவயவங்களையுடைத்தாயும், 𑌪𑍁𑌰𑍀𑌷𑌿𑌣𑌂- புரீஷமென்கிற ஜலம், அல்லது ஆவரணஸ்தாநம், இத்தையுடைத்தாயிருக்கிற, ஸம்வத்ஸரப்ரஜாபதியை, 𑌦𑌿𑌵𑌃 - ஆகாசலோகத்தினுடைய, 𑌪𑌰𑍇,𑌅𑌰𑍍𑌧𑍇-இரண்டாம்பாகத்தில், 𑌆𑌹𑍁𑌃-சொல்லுகிறார்கள், 𑌅𑌨𑍍𑌯𑍇 𑌉𑌪𑌰𑍇, வேறுபட்ட ச்ரேஷ்டர்களான காலதத்வத்தை யறிந்தவர்கள், 𑌸𑌪𑍍𑌤𑌚𑌕𑍍𑌰𑍇 - ஏழுசக்கரங்களையுடைத்தாயும் 𑌷𑌡𑌰𑍇 - ஆறரங்களையுடைத்தாயுமிருக்கிற ஸம்வத்ஸரப்ரஜாபதியினிடத்தில், 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌂-நன்றாய், 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤𑌂-எல்லாம் வைக்கப்பட்டிருக்கிறது. 𑌇𑌤𑌿-என்று, 𑌆𑌹𑍁𑌃-சொல்லுகிறார்கள்.

𑌸𑌂-𑌸𑌾.—ஸம்வத்ஸரத்திற்கு, ஹேமந்தருதுவையும், சிசிரருதுவையும் ஒன்றாக்கிக்கொண்டதனாலைந்தாயிருக்கிற ருதுக்களையைந்து பாதங்களாகவும், பன்னிரண்டுமாஸங்களையும், பன்னிரண்ட வயவங்களாகவும், கல்பித்து, இப்படிப்பட்ட ஸம்வத்ஸரத்தை யுலகத்திற்கெல்லாங் காரணமாகவும், அந்த ரிக்ஷலோகத்தினுடைய மூன்றாம்பாகத்திலிருப்பதாயும், சிலர்சொல்லுகிறார்கள். ஜலத்திற்குக்காரணமென்றும்சொல்லுகிறார்கள். "ஏழுசக்ரங்களையும், ஆறரங்களையுமுடைய அந்தஸம்வத்ஸரத்தில், ஜகத்து நின்றிருப்பதாய்ச் சொல்லுகிறார்கள். அதாவது - ஸூர்யனுக்கும், ஸம்வத்

ஸரத்திற்கும், அவச்சேத்யாவச்சேதகபாவத்தாலாகிய ஐக்யத்தைப்பற்றி, ஸூர்யனுக்குண்டாகிய ஏழுகுதிரைகளையும், ஸம்வத்ஸரத்திற்குண்டான ஆறுருதுக்களையும் ஸம்வத்திற்கே சேர்த்து, சக்கிரங்களாகவும், அரங்களாகவும் ரூபித்துச்சொல்லப்பட்டதென்கை.

ரா-ஹா—வத்ஸரம், ஸம்வத்ஸரம், பரிவத்ஸரம், இடாவத்ஸரம், அநுவத்ஸரம், என்கிற வைந்துபாதங்களையுடைத்தாய், எல்லலாவற்றிற்கும் காரணமாய், பன்னிரண்டுமாஸங்களை யாகாரமாகவுடைத்தாய், புரீஷமென்கிற ஸுவர்ணபூமிக்கு ஸமீபமான ப்ரம்மாண்டகோளகாவரணத்தை ஸ்தாநமாகவுடைத்தா யிருக்கிறதென்று சிலரும், ஏழுக்ரகங்களாகிற சக்கிரத்தையுடைத்தாய், எல்லாவற்றிக்கு மாதாரமாயிருக்கிறதென்று காலதத்வத்தையறிந்த ச்ரேஷ்டர்களும், ஸம்வத்ஸரப்ரஜாபதியைச்சொல்லுகிறார்கள். இப்படி, ஸம்வத்ஸரப்ரஜாபதி ஸ்வரூபம் சொல்லப்பட்டது.

கஉ. 𑌮𑌾𑌸𑍋 𑌵𑍈 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌕𑍍𑌷 𑌏𑌵 𑌰𑌯𑌿𑌃 𑌶𑍁𑌕𑍍𑌲𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌤 𑌋𑌷𑌯𑌃 𑌶𑍁𑌕𑍍𑌲 𑌇𑌷𑍍𑌟𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑍀𑌤𑌰 𑌇𑌤𑌰𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 ॥

(ப்-ம்.) 𑌮𑌾𑌸𑍋𑌵𑍈-மாஸமானது, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 - ப்ரஜாபதிஸ்வரூபமானது. 𑌤𑌸𑍍𑌯 - அந்த மாஸரூபியான ப்ரஜாதிக்கு, 𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌕𑍍𑌷𑌏𑌵 - க்ருஷ்ணபக்ஷமானது, 𑌰𑌯𑌿𑌃 - ரயி, என்னபடுகிறது. 𑌶𑍁𑌕𑍍𑌲𑌃 - சுக்கலபக்ஷமானது, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃-ப்ராணனென்று சொல்லப்படுகிறது. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍-ஆகையால், 𑌏𑌤𑍇-𑌋𑌷𑌯𑌃-இந்திரியங்களுக்கெட்டாத விஷயங்களையறிகிற சக்தியையுடைய விந்த மகர்ஷிகள், 𑌶𑍁𑌕𑍍𑌲𑍇-சுக்லபக்ஷத்தில், 𑌇𑌷𑍍𑌟𑌂-யாகம்முதலிய நல்ல கர்மங்களை, 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿-செய்கிறார்கள், 𑌇𑌤𑌰𑍇 - அறிவில்லாத மற்றவர்கள், 𑌇𑌤𑌰𑌸𑍍𑌮𑌿𑌨𑍍-சுக்லபக்ஷத்தைக்காட்டில் வேறானக்ருஷ்ணபக்ஷத்தில், 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿-கர்மங்களைச் செய்கிறார்கள்.

ஶம்-ஹா.—எல்லாவற்றிற்கு மிருப்பிடமாகிய ஸம்வத்ஸரப்ரஜாபதியை மாஸரூபப்ரஜாபதியாகச் சொல்லுகிறது கீழ்ச்சொல்லிய லக்ஷணத்தோடு கூடின விந்த மாஸப்ரஜாபதியினுடைய பாகங்களாகிய விரண்டுபக்ஷங்களில் க்ருஷ்ணபக்ஷம் ரயி என்கிற சந்திரோபலக்ஷிதமான போகலோகமார்க்கம். சுக்லபக்ஷமானது, ப்ராணனென்கிற ஸூர்யோபலக்ஷிதமான மோக்ஷமார்க்கம். ஆகையால், ப்ராணஸ்வரூபமாகவே ஸகலத்தையுமறிந்த மகர்ஷிகள் க்ருஷ்ணபக்ஷத்தில், கர்மங்களைச்செய்தாலும், ப்ராணஸ்வரூபமான சுக்லபக்ஷத்திலேயே செய்தவர்களாகிறார்கள். ப்ராணஸ்வரூபமாகாத வஸ்துவாயொன்று மவர்களுக்குத் தோற்றுதன்றோ; அஞ்ஞாநிகளாகிய மற்றோர், சுக்லபக்ஷத்தில் கர்மங்களைச்செய்தாலும், க்ருஷ்ணபக்ஷத்தில் செய்தவர்களாகிறார்கள். இவர்கள் ப்ராணஸ்வரூபத்தை யறியார்களானதால் சுக்லபக்ஷமும் ப்ராணஸ்வரூபமாய் தோற்றுதன்றோ; இதனால், சுக்லபக்ஷம் ப்ராணஸ்வரூபமென்றறிந்தவர்கள் ஸ்துதிக்கப்படுகிறார்கள்.

ரா-ஹா.—உபாஸநத்திற்காக, ஸம்வத்ரம், ரயி, ப்ராணன், என்று பிரிக்கப்பட்டதுபோல், மாஸமும், ரயி, ப்ராணன், என்று பிரித்துச்சொல்லப்படுகிறது. மாஸஸ்வரூபியான ப்ரஜாபதியினுடைய க்ருஷ்ணபக்ஷ பாகமானது, ரயி ரூபமாகையாலே தாழ்ந்தது, சுக்லபக்ஷபாகமானது, ப்ராணரூபமாகையாலே சிறந்தது. ஆகையால்

வுடையோர் சுக்லபக்ஷங்களிலே: நல்ல கர்மங்களைச்செய்கிறார்கள். அறிவிலரோ க்ருஷ்ணபக்ஷத்தில் கர்மங்களைச்செய்கிறார்கள்.

கங. அஹோராத்ரோ வை ப்ரஜாபதி ஸ்தஸ்யாஹரேவ ப்ராணோ ராத்ரிரேவ ரயிஃ ப்ராணம் வா ஏதே ப்ரஸ்கந்தி யே திவா ரத்யா ஸம்யுஜ்யந்தே ப்ரஹ்மசர்யமேவ தத்யத்ராத்ரௌ ரத்யா ஸம்யுஜ்யந்தே ॥

அஹோராத்ரோவைப்ரஜாபதிஸ்தஸ்யாஹரேவ ப்ராணோராத்ரிரேவ ரயிஃப்ராணம்வாஏதேப்ரஸ்கந்தி | யேதிவாரத்யாஸம்யுஜ்யந்தேப்ரஹ்மசர்யமேவதத்யத்ராத்ரௌரத்யாஸம்யுஜ்யந்தே.

(ப்-ம்.) அஹோராத்ரோவை - அஹோராத்ரமானது, ப்ரஜாபதிஃ - ப்ரஜாபதிஸ்வரூபமானது, தஸ்ய-அந்த வஹோராத்ரரூபப்ரஜாபதிக்கு, அஹஃ-ஏவ-பகலானது, ப்ராணஃ-ப்ராணனென்று சொல்லப்படுகிறது, ராத்ரிஃ-ஏவ, இரவானது, ரயிஃ-ரயி, என்று சொல்லப்படுகிறது, யே - யாவர் திவா-பகலில், ரத்யா-ஸுரதத்தைச்செய்வதற்கு, ஸம்யுஜ்யந்தே - ஸ்திரீ ஸங்கம் பண்ணுகிறார்களோ; ஏதே-இவர்கள், ப்ராணம்-வா, ப்ராணஸ்வரூபத்தை, ப்ரஸ்கந்தி-அழிக்கிறார்கள். ராத்ரௌ, ரத்யா, ஸம்யுஜ்யந்தே யத்-தத்-இராக்காலத்தில் ரதிசெய்வதற்கு ஸ்வபத்நியோடுசேருதலானது ப்ரஹ்மசர்யம் - ஏவ- ஸ்த்ரீஸங்கத்தை பெக்காலத்திலுமொழித்து விரக்தியோடிருக்கையாகிற ப்ரம்மசர்யமேயாகும்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பகற்காலத்தில் ஸ்த்ரீஸங்கம் செய்வது தகாதென்றும்,இராக்காலத்தில், தன் பத்நியோடு ஸம்போகிப்பது குற்றமல்லவென்றும் சொல்லப்பட்டது மற்றெல்லாம் முன்போலவே கண்டுகொள்வது.

கச. அந்நம் வை ப்ரஜாபதிஃ ததோ ஹ வை தத்ரேதஸ்தஸ்மாதிமாஃ ப்ரஜாஃ ப்ரஜாயந்த இதி ॥

அந்நம்வைப்ரஜாபதிஃததோஹவைதத்ரேதஸ்தஸ்
மாதிமாதிப்ராஜாஃப்ரஜாயந்தஇதி ||

(ப்-ம்.) அந்நம்வை-அந்நமானது, ப்ரஜாபதிஃ-ப்ரஜாபதிஸ்வரூபமானது, ததஃ-அந்த, ரேதஃ-ரேதஸ்ஸானது, ததோஹவை - அந்த அந்நத்தினுலுண்டாகிறதன்றோ, தஸ்மாத்-அந்தரேதஸ்ஸிலிருந்து, இமாஃ - ப்ரஜாஃ-இந்த ஜனங்கள், ப்ரஜாயந்தே-உண்டாகிறார்கள். இதி-என்று சொல்லப்பட்டது.

ஸம-ஸா.—இந்த ப்ரஜைகளெவ்விடத்தி லிருந்துண்டாகிறார்களென்று செய்த ப்ரச்நத்திற்கு, நேராயுத்தரம் சொல்லப்படுகிறது. க்ரமத்தில் அந்நரூபத்தையடை

ந்த ப்ரஜாபதி, ரேதோரூமாகி யவ்வழியாலே ப்ரஜைகளை யுண்டுபண்ணுகையால் எல்லாம், ப்ரஜாபதி ஸ்வரூபமாகிய சந்திரன், சூர்யன், மிதுநம், முதலிய பரம்பரையாலே வந்த சுக்லசோணிதங்களுடைய சேர்க்கையால் ஸகலப்ரஜைகளு முண்டாகிறார்கள்.

ஸாஹா.—கீழ்ச்சொல்லிய எல்லா விஷயங்களாலும், ப்ரக்ருதி, ஜீவன், காலம், இவைகளை சரீரமாகவுடைய ப்ரம்மத்திலிருந்து ஸகல ப்ரஜைகளுமுண்டாகிறார்களென்றுதோற்றுகிறது. இஃதெப்படிகூடும், ப்ரத்தியக்ஷத்தில் ஸ்திரீபுருஷ ஸம்யோகத்தாலாகிய சுக்லசோணிதங்களால் ஸகல ப்ரஜைகளுக்கு முத்பத்தி காணப்படுகிறதன்றோ; என்கிற விந்த ஸந்தேகம் நீங்கும்படி சொல்லுகிறது. அந்நம், ரேதஸ்ஸு முதலிய ஸர்வமு மந்த ப்ராஜாபதி என்கிற பரமாத்மாவின் சரீரமாகையால்; ப்ரக்ருதியின் பரிணாமமாகிய அந்நாதிகளால் ப்ரஜோத்பத்தியானாலும், ப்ரக்ருதி ஜீவர்களை சரீரமாகவுடைய பரமாத்மா எல்லாவற்றுக்கு முபாதாந காரணமென்பதில் ப்ரத்தியக்ஷவிரோதம் கிஞ்சித்து மில்லை என்பது ஸ்பஷ்டமன்றோ.

கரு. கடு. தயெ ஹ வை தத்ப்ரஜாபதிவ்ரதம் சரந்தி தெ மிதுநமுத்பாதயந்தெ । தெஷாமெவைஷ ப்ரஹ்மலோகோ யெஷாம் தபோ ப்ரஹ்மசர்யம் யெஷு ஸத்யம் ப்ரதிஷ்டிதம் ॥ தெஷாமஸௌ விரஜோ ப்ரஹ்மலோகோ நயெஷு ஜிஹ்மமந்ருதம் நமாயா சேதி॥

(ப்-ம்.) தத்-ஆகையால், யெ ஹ-எவர்கள், ப்ரஜாபதிவ்ரதம்-அந்த லக்ஷணத்தை, சரந்தி-பண்ணுகிறார்களோ, தெ-அவர்கள், மிதுநம் - ஸ்திரீபுமான்களை, உத்பாதயந்தெ-உண்டுபண்ணுகிறார்கள். தெஷாம்-ஏவ- அவர்களுக்கே, ஏஷ:-ப்ரஹ்மலோக:- ஸ்தூலமாயிருக்கிற விந்தப்ரம்மலோகவாமுண்டகிறது, யெஷாம் - எவர்களுக்கு, தப: - தபஸ்ஸும், ப்ரஹ்மசர்யம்-ப்ரம்மசர்யமுமோ, யெஷு-எவர்களிடத்தில், ஸத்யம்-ஸத்தியமானது, ப்ரதிஷ்டிதம்-நிலைபெற்றிருக்கிறதோ, யெஷு-எவர்களிடத்தில், ஜிஹ்மம்-குடிலமானது, ந-இல்லையோ, அந்ருதம்-பொய்யானது, ந - இல்லையோ, மாயா-மாயையும், ந-இல்லையோ, தெஷாம்-அவர்களுக்கு, அஸௌ விரஜ:,ப்ரஹ்மலோக:-நிர்தோஷமான ப்ரம்மஸ்வரூபமானதுஸித்திக்கிறது

ஸாஹா.—இந்த விஷயத்தில், எந்த க்ருகஸ்தர்கள், ருதுகாலத்தில் ஸ்வபார்யையோடு ஸம்போகிக்கையாகிற ப்ரஜாபதி வ்ரதத்தைச்செய்கிறார்களோ, அவர்களுக்கிந்தலோகத்திலேயே நைதாநரூபமான பலமுண்டாகிறது. தாநம், இஷ்டா பூர்தம் முதலிய கர்மங்களையும், தபஸ்ஸு, ஸ்நாதகவ்ரதம் முதலிய வ்ரதங்களையும், செய்கிறவர்களுக்கு, சந்திரஸம்பந்தமுடைய வித்த புத்ரயாணத்தாலடையத்தக்க ப்ரம்மலோகமாகிய அத்ருஷ்டபலமுமுண்டாகிறது; அதாவது - ருதுகாலமல்லாத ஸமயங்களில் ஸம்போகம் செய்யாமையாகிற ப்ரம்மசர்யம், பொய்யை நீக்கி மெய்யையே சொல்லுகை முதலான தர்மங்கள், யவர்களிடத்தில், தங்கியிருக்கின்றனவோ; அவர்களுக்கு இந்த லோக ஸுகத்தோடு லோகாந்தரமாகிய ஸ்வர்க்காதிஸுகமும்,த்

திக்கிறது என்கை. கிரஹஸ்தர்களுக்குப், பலவகைப்பட்ட சார்டங்களின் பலத்தைப் பற்றி கபடமும், க்ரீடை முதலிய காரணங்களால் பொய்யும், வெளியிலொருபடியு முள்ளொருபடியுமாய் வர்த்திக்கையாகிற மாயையும் தப்பாதாகலின், க்ருகஸ்தர்களைக் காட்டில் வேறான கீழ்ச்சொல்லிய குற்றமொன்றுமில்லாத குடீசரஸந்யாஸிகளுக்கு நிர்தோஷமான ப்ரம்மலோக ப்ராப்தியுண்டாகிறது. என்று ஜ்ஞாநகர்மிகள் கதி சொல்லப்பட்டது.

ரஹா.—இத்தால் முமுக்ஷுக்கள் நிந்திக்கப்பட்டு, முமுக்ஷுக்கள் ஸ்துதிக்கப் படுகிறார்கள். எவர்கள் விரஜாபதி ரவ்தாசரணம் பண்ணுகிறார்களோ, அதாவது "அந் நம்மை ப்ரஜாபதி:" என்று ப்ரஜாபதி சப்தத்தாலே சொல்லப்பட்ட அந்நத்தை ப க்ஷிக்கிறார்களோ, என்கை. அப்படி கேவல பக்ஷணபரர்களாய் வைராக்கிய மில்லா தவர்கள், புத்ரன், பசு, முதலான ஸம்ஸாரத்தை யடைந்து துக்கப்படுகிறார்கள். இந் த காமிகளுக்குண்டாகிய தோஷங்களை நீக்கி ஆத்மஸ்வரூபத்தில் விருப்பமுடையவர் கள், நிர்தோஷமான ப்ரம்மலோகத்தை யடைகிறார்கள். இப்படி, ஸர்வவ்யாக்யாநா திகரணத்தில், வ்யாஸாசார்யரால், ச்ருதப்ரகாசிகையில் வ்யாக்யாநம் பண்ணப்பட் டது. 'இதி' என்றதினால் ப்ரச்நப்திவசநம் ஸமாப்தமாயிற்றென்னப்பட்டது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில், மூன்றந்வயங்களாகப்பிரித்து வ்யாக்யாநம் செய்யப் பட்டது. இராமாநுஜபாஷ்யத்தில், இரண்டந்வயமாக்கி விவரிக்கப்பட்டதெ ன்றறிக. ஆகவித்தால் வைராக்கியமுடையவனுக்கு ப்ரம்மஸ்வரூபாவாப்தி க்ர மத்தில் ஸித்திக்குமென்று சொல்லப்பட்டது.

ப்ரச்நோபநிஷத்தில், முதல்ப்ரச்நம் முற்றிற்று.

---

பரப்ரம்மணே நம:

𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃.

---

𑌹𑌰𑌿𑌃 𑍐 ॥

𑌅𑌥 𑌹𑍈𑌨𑌂 𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑍋 𑌵𑍈𑌦𑌰𑍍𑌭𑌿𑌃 𑌪𑌪𑍍𑌰𑌚𑍍𑌛 । 𑌭𑌗𑌵𑌨𑍍 𑌕𑌤𑍍𑌯𑍇𑌵 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌂 𑌵𑌿𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌤𑌰 𑌏𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌃 𑌪𑍁𑌨𑌰𑍇𑌷𑌾𑌂 † 𑌵𑌰𑌿𑌷𑍍𑌠 𑌇𑌤𑌿॥

க. அதஹைநம் பார்க்வோ வைதர்பி: பப்ரச்ச | பகவந்கத்யேவதேவா: ப்ரஜாம்விதாரயந்தேகதர ஏதத்ப்ர காசயந்தேக: புநரேஷாம்வரிஷ்ட இதி.

(ப் - ம்.) 𑌅𑌥-கபந்திமார்ஷி ப்ரச்நம்செய்தபிறகு, 𑌹, 𑌏𑌨𑌂 - இந்த பிப்பலாதமகர்ஷியை, 𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑌃-ப்ருகுகோத்திரத்தில்பிறந்த, 𑌵𑍈𑌦𑌰𑍍𑌭𑌿𑌃-

† "𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑌤 𑌇𑌤𑌿" என்றொருபாடம் சுருங்கிறது. பாடநிர்ணயம் ஸம்ப்ர தாயசுத்தியாலாகவேணும்.

விதர்ப்பகுமாரரானவர், பகவந்-பூஜ்யரே, கதி; தேவா:-எத்தனைதேவர்கள், ப்ரஜா:-ப்ரஜைகளை, விதாரயந்தே-தரிக்கிறார்கள். கதரே-எவர்கள், ஏதத்-இதை, ப்ரகாசயந்தே-ப்ரகாசிக்கச்செய்கிறார்கள். ஏஷாம்-இவர்களுக்குள், க:புந:, யவன், வரிஷ்ட:-ச்ரேஷ்டன், இதி-என்று, பப்ரச்ச-வினவினார்.

ஸம்-ஹா.—கீழ், ப்ராணனை, அத்தாவென்றும், ப்ரஜாபதி என்றும் சொல்லிற்று. இங்கு, இந்த சரீரத்திலே அத்தைக்கண்டறியும் வழிசொல்வதற்கு இந்த ப்ரச்நம் தொடங்கப்படுகிறது. இந்த சரீரத்தை, எத்தனை யிந்திரியங்கள், தரிக்கின்றன. இவைகளுக்குள் எவைகளால் இந்த சரீரம் ப்ரகாசிப்பிக்கப்படுகிறது. இவைகளுக்குள்ளே சிறந்ததென்று பிப்பலாதரை, வைதர்பி ப்ரச்நம் பண்ணினார்.

ரா-ஹா—தேகம், இந்திரியங்கள், மநஸ்ஸு, ப்ராணன், இவை முதலானவற்றைக்காட்டிலும் வேறான ப்ரத்யகாத்மாவினுடைய ஸ்வரூபத்தை சோதிக்ககைக்காக விந்த ப்ரச்நம் தொடங்கப்படுகிறது. ஸ்தாவரஜங்கமங்களை தரிக்கிற தேவர்கள் யாவர். கார்யமான சரீரத்தை ப்ரகாசிக்கச் செய்பவர். என்றிப்படி கபந்திப்ரச்நம் செய்தபிறகு, வைதர்பி, பிப்பலாதனை ப்ரச்நம் பண்ணினார்.

பதாந்வயார்த்தபேதங்கள்,

இங்குதேவர்களென்பது சரீரத்தைதரிக்கிற இந்திரியம் முதலியவற்றை. இவைகளுக்கு, அதிஷ்டாநதேவதைகளோடு அபேதத்தை யத்யவஸித்து இப்படி சொல்லுகிறது, இதனால் மேல்சொல்லப்போகிற வ்யவஹாரங்களும், அதிஷ்டாநதேவதைகளுக்குண்டானவைகளானபடியால், அசேதநங்களானவிந்திரியம் முதலியவற்றுக்கு வ்யவஹாரம் கூடாமையா லிது கல்பநை, என்கிற ஸந்தேகத்திற் கிடமில்லை யென்றறிக.

உ. தஸ்மை ஸ ஹோவாசாகாசோ ஹ வா ஏஷ தேவோ வாயுரக்நிராப: ப்ருதிவீ வாங்மநச்சக்ஷு: ச்ரோத்ரம் ச । தே ப்ரகாச்யாபிவதந்தி வயமேதத்பாணமவஷ்டப்ய விதாரயாம: ॥

உ. தஸ்மைஸஹோவாசாகாசோஹவா ஏஷதேவோவாயுரக்நிராப: ப்ருதிவீவாங்மநச்சக்ஷுச்ச்ரோத்ரம்ச | தேப்ரகாச்யாபிவதந்திவயமேதத்பாணமவஷ்டப்யவிதாரயாம:

(ப்-ம்.) தஸ்மை-அந்தவைதர்பிக்கு, ஸ:, ஹ,—அந்தபிப்பலாத மகர்ஷியானவர், உவாச-சொன்னார். ஏஷ:-இந்த, ஆகாச:-ஆகாயமானது, தேவ:-தேவஸ்வரூபமானது. ஹவா-இதுச்ருதிகளிலே ப்ரஸித்தம் இப்படியே, வாயு:-அக்நி:-ஆப:-ப்ருதிவீ-கால், எரி, நீர், மண், என்கின்ற மற்றநான்குபூதங்களும், வாக்-மந:-சக்ஷு:-ச்ரோத்ரம்-ச-வாய், நெஞ்சு. கண், காது, இவைகளும், (பஞ்சஜ்ஞாநேந்த்ரியங்களும், பஞ்சகர்மேந்திரியங்களுமென்கை.) தேவஸ்வரூபங்கள். தே-அவைகள், ப்ரகாச்ய-விளங்கச்செய்து, அபிவதந்தி-சொல்லுகின்றன. என்னவென்றால், வயம்-நாங்கள், ஏதத்-பாணம்-இந்த பாணம்போன்றதேகத்தை, அவஷ்டப்ய-பிடித்துக்கொண்டு, விதாரயாம:-திறக்கச்செய்கிறோமென்று.

ஸஹா.—இப்படிக்கேட்ட வைதர்ப்பியைநோக்கி, இச்சரீரத்தை தரித்துக் கொண்டிருக்கிறவஸ்து யாதென்கிறவர் சங்கை திரும்படி யுணர்த்துகிறது. ஆகாய, முதலியவைந்து பூதங்களும், சரீரத்தைத்தொடங்க முக்யகாரணங்கள். இவையும் செவி வாய் கண் மூக்கென்கிற அறிவுக்குக் காரணங்களாய் ஜ்ஞாநேந்த்ரியங்களைத் தும், வாக் பாணி பாத பாயூபஸ்தங்களென்கிற செயலுக்குக்காரணங்களான கர்மேந்திரியங்களைந்தும் மனமென்கிற நெஞ்சமும், இச்சரீரத்தை விளங்கச்செய்கின்றன. இப்படிப்பட்டவிவைகள் தனித்தனியே ஒன்றொன்றும், தன்னையுயர்ந்த பொருளாய் நினைத்துக்கொண்டு தங்கள் மேன்மையைச் சொல்லிக்கொண்டன. என்று பிப்பலா தர் விதர்ப்பிக்கச்சொன்னார்.

ஙாஹா.—இச்சரீரத்தை, இந்த ஜீவாத்மாவே தரிக்கிறுனென்று சொல்லத்தொடங்கி, மற்றவைகளிலொன்றும் தாரகமல்லவென்று காட்டற்பொருட்டு, தாரகத்வம், அதாவது, கீழ்விழாமலிருக்கும்படி செய்கை, ப்ரகாசகத்வம், அதாவது, விளங்கச்செய்கை. ச்ரேஷ்டத்வம், அதாவது, உயர்ந்ததாயிருக்கை. இவைகள் ஜீவாத்மாவுக்கேயென்றுஸ்புடமாகும்படி, வைதர்ப்பிக்கு, பிப்பலாதமகர்ஷி யொருகதை சொல்லுகிறார். இந்திரியங்களும் பூதங்களும், இச்சரீரத்தை 'நான் தரிக்கிறேன்; 'நான் தரிக்கிறேனென்று சொல்லிக்கொண்டன. ஒவ்வொன்றுக்கும், தன்னிடத்தில், தாரகத்வம், ப்ரகாசகத்வம், ச்ரேஷ்டத்வம், இவைகளிருக்கின்றனவென்று, எண்ணமுண்டாயிருந்தது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இங்கு, வாக்குமுதலிய சிலவற்றைச்சொன்னது கர்மஜ்ஞாநேந்த்ரியங்களுக்கு பலக்ஷணமென்றுகொண்டு வ்யாக்யாநமிரண்டு பாஷ்யங்களிலும், செய்யப்பட்டிருக்கிறது. தேவஸ்வரூபங்களென்றது - அதிஷ்டாநதேவர்களைக் கொண்டாதல், தேவசப்தத்தின்பொருள் இவைகளிருப்பது பற்றியாதலாகும். "அபிமாநிவ்யபதேசஸ்து விசேஷாநுகதிப்யாம்." என்கிற நியாயத்தாலும், "ஸாக்ஷாதப்யவிரோதம்ஜைமிநி:" என்கிற நியாயத்தாலும், இவ்வாறு சொல்லாகுமென்றறிக. இந்நியாயங்களின் கருத்துமேலே விளங்கச் சொல்லப்படும். அங்குகண்டுகொள்க.

க. தாநுவரிஷ்டஃப்ராணஉவாச மாமோஹமாபத்யதாஹமேவைதத் பஞ்சதாத்மாநம் ப்ரவிபஜ்யைதத்பாணமவஷ்டப்ய விதாரயாமீதி ॥

க. தாந்வரிஷ்டஃ ப்ராணஉவாச | மாமோஹமாபத்யதாஹ மேவைதத் பஞ்சத்தாமாநம் ப்ரவிபஜ்யை தத்பாணமவஷ்டப்யவிதாரயாமீதி.

(ப்-ம்.) வரிஷ்டஃ - சிறந்ததான, ப்ராணஃ - முக்கியப்ராணமானது தாந்-அவை-நானே, ஆத்மாநம் - என்னை, பஞ்சதா-ஐவகையாக, ப்ரவிபஜ்ய - பிரித்துக்கொண்டு, ஏதத் - பாணம் - இந்தபாணம்போன்ற சரீரத்தை, அவஷ்டப்ய - பிடித்துக்கொண்டு, விதாரயாமி - தரிக்கிறேன். ஆகையால், நீங்கள், மோஹம்-நாம்தரிக்கிறோமென்கிற ப்ராந்தியை, மா - ஆபத்ய-அடையவேண்டாம். என்று தாந்-ஆகாயம் முதலியவைகளை நோக்கி, உவாச-சொல்லிற்று.

ந்யோ மாயயா ஸந்நிருத்த:" (மாயையென்கிற பிரகிருதியை நியமிக்கிற பரமாத்மா பிரகிருதியைக்கொண்டு ஜகத்தைஸ்ருஷ்டிக்கின்றான் இந்த பிரகிருதியில் பரமாத்மாவில் வேருன ஜீவனகப்பட்டுக்கிடக்கிருன்) பிரகிருதி ஜீவன் இவ்விரண்டுக்கும் நியாமகனுன பரமாத்மாகல்யாணகுணங்களால் நிறைந்தவன். "நித்யோ நித்யாநாம் சேதநஸ்சேதநாநாம் ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந்" (நித்யராயனேகராயிருக்கிற சேதனர்களுக்கு நித்யனு யொருவனுயிருக்கிறபரமசேதனன் வேண்டியவற்றைத்தருகிருன்.) "யஸ்யாவ்யக்தம் சரீரம் யோவ்யக்தமந்தரே ஸஞ்சரந் யமவ்யக்தம் ந வேத யஸ்யாக்ஷரம் சரீரம் யோக்ஷரமந்தரே ஸஞ்சரந் யமக்ஷரம் ந வேத ஏஷ ஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:" (யவனவ்யக்தத்தினுள்ளிருக்கிருனே யவனுக்கு அவ்யக்தம்சரீரமோ யவனையவ்யக்தமறியாதோ; யவனக்ஷரத்தினுள்ளிருக்கிருனே யவனுக்கு அக்ஷரம் சரீரமோ; யவனையக்ஷரமறியாதோ; இப்படிப்பட்டவன் எல்லாபூதங்களுக்கு மந்தராத்மாவானவன் அவன்ஹேயப்ரத்யநீகனுன நாராயணனே) இவைமுதலிய சுருதிகளில் ஜீவன்வேறு; ப்ரம்மம்வேறு; இவைகளுக்கு அபேதமில்லையென்று நன்குவிளங்குமன்றே; மண்ணுங்கட்டிமுதலிய விகாரங்களுக்கெப்போது மிடமாய் மிகவும் ஹீநமாயிருக்கிற வஸ்துக்கும் நிர்விகாரமாயதிபரிசுத்தமாய் அகிலஹேயப்ரத்யநீகமாய் ஸமஸ்தகல்யாணகுணங்களுக்கு மாஸ்பதமாய்மற்றுள்ள எல்லாவற்றிலும் விலக்ஷணமாய் ஜ்ஞாநைகஸ்வரூபமான பரப்ரம்மத்துக்கும்அபேதம் ஸம்பவியாதாப்போல, ஹேயாஸ்பதனும் மின்மினிபோன்ற ஜீவனுக்கும் அபஹதபாப்மாவாய் அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகணாஸ்பதமான ப்ரம்மத்துக்கும் அபேதம் ஸம்பவியாது. "தத்த்வமஸி" முதலியவிடங்களில்சொல்லிய ஸாமாநாதிகரண்யம் சரீராத்மபாவத்தாலே யாகையால் இதற்கு அநுகூலமேயன்றி விரோதியன்று இவ்வர்த்தம் "அவஸ்திதே:" என்கிற ஸூத்திரத்தில் நன்றாகஉபபாதிக்கப்பட்டது. ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டம்காரணம். ஸ்தூலசிதசித்விசிஷ்டம்கார்யம் ஆகையாலே எல்லாச்ருதிகளுக்கு அவிரோதம் ஸித்திக்கிறது. இப்படிசொல்லும்போது அபேதமும் ஸ்வரூபஸ்வபாவா ஸங்கரமும்ஸித்திக்குமன்றே. "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" ஸ்ருஷ்டிக்குமுன்புஸத்தொன்றேயுண்டு என்றஒரேபொருளுண்டென்று சொல்லும்போதும் அசித்துகூடிய ஜீவனடங்கியிருந்தானென்ன ஸம்மதிக்கவேணும் "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" "ந கர்மாவிபாகாதிதி சேந்நாநாதித்வாத் உபபத்யதே சாப்யுபலப்யதே ச" (ஜீவனும் கர்மமுமநாதியாகையாலே விஷமமாக ஸ்ருஷ்டித்தானென்றும் குற்றமில்லை) என்கிற ஸூத்திரங்களில் ஸ்ருஷ்டிக்குமுன்பு ஜீவனிருந்தானென்று சொல்லப்பட்டதன்றே; ஒன்றேயாயிருந்ததென்பது நாமரூபங்கள் நீக்கியிருந்தமையால்சேரும். ஆகையால் ப்ரம்மம்காரணமாமென்பதில் ஒருகுற்றமுமில்லை என்று அவ்வதிகரணத்தில் பகவத்பாஷ்யகாரரருளிச்செய்தார். இப்படியே, "ஏகோ ஹ வை நாராயண ஆஸீந்ந ப்ரஹ்மா நேசாந:" "ஸோகாமயத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி" "ஸாக்ஷாத்தாக்ஷ்யோ ..." [illegible]

𑌶𑍇𑌷𑍇 𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇" இவைமுதலிய ஜீவனுக்கும் ப்ரமத்திற்கும் ஸ்வாபாவிகபேதமுண்டென்று சொல்லுகிற ஸூத்திரந்யாயங்களோடு விரோதம்வரும். இப்படிசொல்லச்சொல்லப் பெருகுமானதாலிவ்வளவு தூஷித்ததுபோதமென்று நிறுத்துகிறோம் ஆகையால்ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் ஸ்வாபாவிகஸ்வரூபபேதமுண்டென்று இந்த உபநிஷத்தின்கருத்து.

𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑌿 𑌷𑌷𑍍𑌠𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌃.

பிரச்நோபநிஷத்து முற்றும்.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

𑌹𑌰𑌿𑌃 𑌓𑌂.

𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

---

க. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌸𑌂𑌬𑌭𑍂𑌵 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌭𑍁𑌵𑌨𑌸𑍍𑌯 𑌗𑍋𑌪𑍍𑌤𑌾 । 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌮𑌥𑌰𑍍𑌵𑌾𑌯 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 ॥

க. ப்ரஹ்மாதேவாநாம்ப்ரதமஸ்ஸம்பபூவவிஶ்வஸ்யகர்தாபுவநஸ்ய கோப்தா | ஸப்ரஹ்மவித்யாம்ஸர்வவித்யாப்ரதிஷ்டாமதர்வாயஜ்யேஷ்டபுத்ராயப்ராஹ ||

(ப-ம்.) 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾 - எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கின்ற, 𑌭𑍁𑌵𑌨𑌸𑍍𑌯 𑌗𑍋𑌪𑍍𑌤𑌾 - படைத்தஉலகத்தைதக்காக்கின்ற, 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 - இந்திரன்முதலிய தேவர்களுக்கு முதல்வனாகிய, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 - நான்முகன், 𑌸𑌂𑌬𑌭𑍂𑌵 - ப்ரம்மஜ்ஞானமுடையவனானன், 𑌸𑌃 - அந்தப்ரம்மா - 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 - எல்லாவித்யைக்கும் ப்ரதிஷ்டையான, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 - ப்ரம்மவித்யையை, 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌯𑌾𑌥𑌰𑍍𑌵𑌾𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 - ஜ்யேஷ்டகுமாரனாகிய அதர்வனென்பவனுக்குச் சொன்னன்.

𑌸𑌂-𑌹𑌾.—இவ்வுபநிஷத்து அதர்வண வேதத்துள்ளாயது. மேலேசொல்லுகிற ப்ரம்மவித்யைஸ்துதிப்பதற்கு ஸம்ப்ரதாயபரம்பரை சொல்லப்படுகிறது பெரியோரிடத்தில் வருத்தப்பட்டுக்கேட்டறிந்த பருஷார்த்தஸாதநமாகிய வித்யை என்றகொண்டாடிப் புகழ்ந்தாலன்றோ கேட்பாருக்கு உருசிபிறந்துவேண்டுவார்கள் இந்தவித்யையின் ப்ரயோஜநத்தை இவ்வுபநிஷத்திலேமேலே வெளியிடப்படுகிறது, "பித்யதே" என்பது முதலிய சுலோகங்களால் இந்த வித்யைப்பெற்றவர் ஸம்ஸாரபந்தம் நீங்கி மோக்ஷத்தை பெறுவார்களென்று சொல்லப்படுகிறது. அபரவித்யை ஸாக்ஷாத்மோக்ஷஸாதனமாகாமையால் பரவித்யை முக்யமென்றும் இதுமுக்யமான தற்குக்காரணத்தையும் நற்குருவருளாலிவ்வித்தை யடையப்பட வேண்டுமென்பதையும் "பரீக்ஷ்யலோகாந்" என்பது முதலாயவாக்கியங்களிலேயோதும்.ஜ்ஞானமாத்திரத்தில் எல்லாஆச்ரமத்தாருக்கு மதிகாரமுண்டானாலும் இப்படியுத்தமமாயப்ரம்மவித்யையில் ஸந்யாஸிக்கே முக்யாதிகாரம். கர்மாநுஷ்டாநத்தோடுசேர்ந்தக்ருஹஸ்தாச்ரமாதிகள் இவ்வித்யைக்குச்சேர்ந்தவையல்ல. கர்தாவாகாதப்ரம்மமென்றுதன்னை

புணருகையாகிற வித்யைக்கும் நான்கர்த்தாவாகிறேனென்று கர்மங்களையநுஷ்டிப்பதற்கும் சேர்க்கைகூடாதன்றோ "பைக்ஷாசர்யஞ்சரந்த:", ஸந்யாஸயோகாத்" என்பவை முதலானவிடங்களிலே இது விளங்கச்சொல்லப்பட்டது. க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்தவர் இந்தப்ரம்மவித்யையை உபதேசிக்கின்றமையால் அவர்க்கும் ப்ரம்மவித்யையிலதிகாரம் கூடுமென்றுசிலர் சொல்லுவர் அது பொருந்தாது கீழ்சொல்லியபடி காமமும்வித்யையும் விரோதப்பட்டவையானதால் இந்தலிங்கம் ஸதியாது இப்படிப்பட்ட வித்யையையோதுகிற இவ்வுபநிஷத்திற்கு சருங்கவ்யாக்யாநம் பண்ணுகிறோம் இந்த உபநிஷத்தென்கிற பேராலேயே இவ்வித்யையின் பெருமைவிளங்கும் தருமம் ஜ்ஞாநம் வைராக்கியம் ஐசுவரியம்முதலியவைற்றால் மற்றோரை மிச்சாகின்றமையால் இந்திரனுள்ளிட்ட தேவர்க்குழாங்களில் சிறந்தவனாய் பிரமன்பலவகைப்பட்ட ஸ்ருஷ்டிகளில் ஒருஸ்ருஷ்டியில் முதல்வனை அதர்வனென்பவனுக்கு எல்லாவித்யைகளுக்கும் நிலையிடமாய் ப்ரம்மவித்யையுபதேசிததான். இங்கு பிரமனையும் வித்யையுங்கொண்டாடியது வித்யையைஸ்துதிசெய்வதற்கு.

ரா-ஹா — ஸ்ருஷ்டிகர்த்தான ப்ரம்மா தன்முதல்குமாரனாகிய அதர்வனென்பவனுக்கு ப்ரம்மவித்யையையுபதேசித்தான். ப்ரம்மசதையறிந்தபோது அறியவேண்டுமென்பதொன்றுமில்லை யானதால் எல்லாவித்யைக்கும் ப்ரம்மவித்யையை ப்ரதிஷ்டையென்றது. வித்யையினால் ப்ரவ்ருத்திபிரப்பிறபதற்கு கதைசொல்லப்படுகிறது.

உ. அதர்வணே யாம் ப்ரவதேத ப்ரஹ்மாऽதர்வா தாம் புரோவாசாங்கிரே ப்ரஹ்மவித்யாம் | ஸ பாரத்வாஜாய ஸத்யவாஹாய ப்ராஹ பாரத்வாஜோऽங்கிரஸே பராவராம் ||

உ. அதர்வணேயாம்ப்ரவதேதப்ரஹ்மாதர்வாதாம் புரோவாசாங்கிரேப்ரஹ்மவித்யாம் | ஸபாரத்வாஜாயஸத்யவாஹாயப்ராஹபாரத்வாஜோங்கிரஸேபராவராம் ||

(ப்-ம்.) ப்ரஹ்மா அதர்வணே யாம் ப்ரவதேத - பிரமனதர்வா என்பவனுக்கு எந்தவித்யையையுபதேசித்தானோ, தாம் ப்ரஹ்மவித்யாம் அதர்வா அங்கிரே புரோவாச - அந்தப்ரம்மவித்யையை அதர்வா என்பவர் தன்னுடைய சிஷ்யராகிய அங்கிஎன்பவருக்குச்சொன்னார், ஸ: பாரத்வாஜாய ஸத்யவாஹாய ப்ராஹ - அந்த அங்கிஎன்பவர் பாரத்வாஜகோத்ரியாகிய ஸத்யவாஹரென்பவருக்குச்சொன்னார், பாரத்வாஜ: அங்கிரஸே பராவராம் - அறியாதாரறிந்தோரிடத்தி லறியவேண்டுகையால் பராவரையென்கிற அந்தபரம்மவித்யை அங்கிரஎன்பவருக்கு அந்தபாரத்வாஜராகிய ஸத்யவாஹர் சொன்னார்.

பதார்த்வயார்த்தபேதங்கள்.

பதவுரையாலே விளங்கும் கருத்து சங்கரராமாநுஜ பாஷ்யங்களிரண்டுக்குமொக்கும் சிறிதும் பேதமில்லை.

ந. சௌநகோ ஹ வை மஹாசாலோऽங்கிரஸம் விதிவதுபஸந்ந: பப்ரச்ச | கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதீதி ||

ந. சௌநகோஹவைமஹாசாலோங்கிரஸம்விதிவதுபஸந்ந: பப்ரச்ச | கஸ்மிந்நுபகவோவிஜ்ஞாதேஸர்வமிதம்விஜ்ஞாதம்பவதீதி ||

(ப-ம்.) ஶௌநகோ ஹ வை மஹாஶால: - க்ருஹஸ்தாச்ரமிகளில் சிறந்தவராய சுநகரென்பவரின் குமாரர், அங்கிரஸம் விதிவதுபஸந்ந: பப்ரச்ச - அங்கிரஸென்பவரை சாஸ்திரப்படியடைந்து வினவினார், கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதீதி - எல்லாமறிந்தமுநிவரே எப்பொருளையறிந்தாலிவ்வெல்லா மறியப்பட்டதாமென்று வினவினர்.

ஸா-ஸா.—இங்கு ஆசாரியரிடத்தில் விதிப்படி யடைந்தது சொல்லப்பட்டாலும் மேலோர்க்கும் நமக்குமிந்த விதி முக்யமேயாம். ஆனதால் நடுவில் கூறப்பட்டது.

ரா-ஸா.—சுநகரின் குமாரராகிய மகாகிருகஸ்தர், ஸமித்பாணி என்கிற விடத்தில் சொல்லப்பட்ட விதிப்படியடைந்து ஆசாரியராகிய அங்கிரஸனைஎப்பொருளையறிந்தா லிவ்வுலகமெல்லாமறியப்படும். முக்காலத்தையுமறிந்தமுநிவரே மண்ணையறிந்தபோது அதின்காரியமாகிய குடமுதலியவை யெல்லாமறியப்படுவதுபோலொரு காரணப்பொருளையறியவே எல்லாப்பொருளுமறியப்படுமல்லவோ; அக்காரணப்பொருள்யாது என்று வினவினரென்று இந்த சுருதிக்குப்பொருள். இங்கு எல்லாமென்பதற்கு ஸ்தூலமானசித்து அசித்து இவைகளுடன் சேர்ந்த பரப்ரம்மமோ; அல்லது சித்து மசித்துமேயோ; பொருளென்று கொள்வது. இந்த சௌநகர்ப்ரமமஸ்வரூபத்தை யறியவே ப்ரச்நம்பண்ணுகிறாரகையால் இவர் சொல்லிய வாக்கியத்தில் சேர்ந்த எல்லாமென்கிற பதத்திற்கு ப்ரம்மத்தையறிந்தவர் வாயில் பிறந்த சொல்லுக்குப்போல் பரப்ரம்மம் வரையில் பொருள்கொள்ளக்கூடாமையால் முந்திய கல்பம் தள்ளுண்டது. மேலும், அந்தபுருஷனால் இவ்வுலகெல்லாம் நிறைந்திருக்கின்றது என்மேல் விடையளிக்கும் வாக்கியத்தில் எல்லாமென்கிற பதத்திற்கு புருஷனைத்தனித்துச்சொல்லி விடுகையால் விசேஷணமாகிய ஸ்தூலசிதசித்துக்களேபொருளானதால் அங்குபோலிங்கும் விசேஷணமாகிய ஸ்தூல சிதசித்துக்களே பொருளாகலாமன்றி இவைகளோடு சேர்ந்த ப்ரம்மம் பொருளாகக்கூடாது. ஆகில் விசேஷணமாகிய ஸ்தூல சிதசித்துக்களே பொருளென்று இரண்டாவது கல்பத்தைக்கொள்ளுவோமென்றால் அந்த கல்பத்தில் மேலே சொல்லப்படும் அக்ஷரபரப்ரம்மம்ஸ்தூல சிதசித்துக்களில் வேறாயதானதால் அவைகளுக்கு இந்த அக்ஷரபரப்ரம்மம் உபாதாநகாரணமாவது சேராது. ஆகையால் இங்குபொருளமையும் வழியாதெனில், கூறுகின்றோம். விசேஷணமாகிய ஸ்தூல சிதசித்துக்களே இங்கு, எல்லாமென்கிற பதத்திற்குப்பொருள் மேலே சொல்லப்படுகிறபடி அக்ஷரபரப்ரம்மம், தன்னில் வேறாய ஸ்தூல சிதசித்துக்களுக்கு உபாதாநகாரணமாவதும் பொருந்தும். பிந்நமானாலும் உபாதாநகாரணமாகலாம். அபின்னமே உபாதாநகாரணமென்கிற நிர்பந்தமில்லை. முன்னை ஸூக்ஷ்மாவஸ்தையோடு கூடிய பொருள் பின்னை ஸ்தூலாவஸ்தையோடு கூடிய பொருளுக்குபாதாநகாரணமாம். அவஸ்தையை யுடைத்தாயிருக்கை சித்து அசித்து ஈச்வரன் என்கிற விம்மூன்றுக்குமுண்டு. ஸாக்ஷாத்தாக சித்துக்கும் சரீரம் தர்மபூதஜ்ஞாநம் இவைகளின் வழியே சித்துக்கும் இவ்விரண்டின் வழியாக ஈச்வரனுக்கும் அவஸ்தையுண்டாகும். என்றிவ்வளவே பேதம். ஆக மகத்தத்வாவஸ்தை அஹங்காரதத்வாவஸ்தை முதலியவருகிற ஸ்தூலாவஸ்தையையுடைத்தாயிருக்கை அசித்து சித்து பரமாத்மா இவை எல்லாவற்றிற்கும்பொதுவாயிருக்கையால் பரமாத்மாவுக்குப்போலே சேதநம் அசேதநம் இவற்றுக்கும் வருகிற அவஸ்தையுண்டாகையால் பரமாத்மா இவற்றுக்கு பாதாநகாரணமாகையில் தடையில்லை. ஆக இவை எல்லாமென்பதற்கு ஸ்தூல சிதசித்துக்களாகிய விசேஷ

ணம் பொருளானாலும் அதற்குமேல் சொல்லப்போகிற அக்ஷரபரப்ரம்மம் உபாதாநகா
ரணமாமென்று, எதையறிந்தாலெல்லாமறியலாமென்ற விசேஷணத்துக்கு உபாதாந
காரணம்யாதென்று, வினவித்தகும். மகாஸித்தாந்தத்திலும் எல்லா உலகமும் ப்ரம்ம
கார்யமாகையாலும் ஒன்றாகையால் அதற்குவிரோதியானபேதம் நிஷேதிக்கப்படுகி
றது. என்கிறபாஷ்யவ்யாக்யாந ப்ரகரணத்தில் ச்ருதப்ரகாசிகையில் ஸ்ரீவ்யாஸாசார்
யரால் விசிஷ்டங்களுக்கே உபாதாநகாரணகாரியபாவமுள்ளது; ஸ்தூலசித்சித்துக்க
ளாகிய விசேஷணங்களுக்கு ப்ரம்மம் உபாதாநகாரணமாவதில்லை. உயிருமுடலுமா
கையாகிறசரீராத்மபாவமானது அறிவால் பிரித்த விசேஷணங்களுக்கும் விசேஷ்ய
மாகிய ப்ரம்மத்திற்குமாம். சிதசித்விசிஷ்டப்ரமத்தை சிதசித விசிஷ்டப்ரம்மப்நிய
மியதாகையால் சுத்தப்ரபஞ்சத்திற்கு சுத்த ப்ரம்மமேயந்தர்யாமியாமன்றோ; "ஸத்
தைக்காரணமாகஉடையது ஸத்தையாத்மாவாக உடையது இவ்வுலகம்" என்கிற சா
ந்தோக்யவாக்கியத்தில், 'காரணமாகவுடையது' என்கிறவிடத்திற்கு 'ஸத்' என்கிற
பதம் விசிஷ்டப்ரம்மத்தைச் சொல்லுகிறதென்றும், 'ஆத்மாவாக உடையது' என்கிற
விடத்திற்கு 'ஸத்'என்கிறபதம் சுத்தப்ரம்மத்தைச் சொல்லுகிறது. ப்ரம்மத்திற்குபரம்
மம அந்தர்யாமியாகாதாகையாலும், ப்ரபஞ்சமும் விசிஷ்ட ப்ரம்மத்தை உபாதாந
மாகஉடைய தன்றாகையானு மிப்படியே பொருள்கொள்ளவேண்டுமெனச் சொல்லி
இந்த பக்ஷத்தில் 'ஸத்' என்கிற பதங்களுக்கு பொருள்வேறுபடுகையாலும் 'உலகம்'
என்கிற ஒருபதத்திற்கே ப்ரம்மம் அந்தர்யாமி என்னும்போதுகேவல உலகத்தையும்
ப்ரம்மம் காரணமென்னும்போது விசிஷ்ட ப்ரம்மத்தையும் பொருளாகக்கூறவே
ண்டிவருகின்றமையாலும், இப்பக்ஷமழகல்லவென்றெண்ணி, 'உலகம்' என்கிறபதம்
கேவல உலகத்தையே சொல்லும்; 'ஸத்' என்கிறபதமும் சுத்தப்ரம்மத்தையேசொல்
லுமென்கிற பக்ஷத்தைப்பற்றி இப்பக்ஷத்தில் கேவலப்ரபஞ்சத்துக்கு ப்ரம்மமுபா
தாநகாரணமாவதெப்படி என்றால் இவ்வுலகத்தில்வருகிற அவஸ்தையுண்டாகையாலு
மிதற்குமுன் அவஸ்தையுடைய ப்ரம்மம் விசிஷ்டத்துக்கு விசிஷ்டம்காரணமாவது
போலவே கூடுமென்று தமக்குத்திருவுள்ளமான இந்தபக்ஷம் உபந்யஸிக்கப்பட்டது
பகவத்பாஷ்யகாரராலும் 'ஆத்மேதிதூபகச்சந்தி' என்கிறவிடத்தில் சித்து அசித்து
என்கிற எல்லாவஸ்துவும் தன்னிடத்திலிருந்து பிறக்கையாலும் தன்னிடத்திலேலயி
க்கின்றமையாலும், தன்னால் காக்கப்படுகின்றமையாலும் தன்னால் நியமிக்கப்படுகை
யாலும், தனக்கு சரீரமாகையாலும் தானே எல்லாவற்றிற்கு மாத்மாவாகின்றதப்ர
ம்மமேயாம். என்று சரீரமாகும்பொருளே, உபாதாநகாரணமாகிய ப்ரம்மத்தின் கா
ரியமாகின்றதெனப்பல க்ரந்தங்களிலும் அருளிச்செய்யப்பட்டது. இதை வேறுக்கு
வது நம்மால்கூடாதன்றோ. «ப்ராஜ்ஞேநாத்மநாஸம்பரிஷ்வக்த:» என்கிறவிடத்
தில் பரமாத்மாவில் வேறான ஜீவனுக்கு லயம் சொல்லப்பட்டதன்றோ. இங்குபரிஷ்
வங்கம் சொல்லப்பட்டதேயன்றி லயமன்று; பரிஷ்வங்கசப்தத்திற்கு லயம்பொரு
ளல்லாமையால் என்று சொல்லவமையாது. "ஸ்வாப்யயாத்" என்கிற ஸூத்திரத்
தையும் அவ்விடத்திற்கு பாஷ்யத்தையும் பார்யாலோசிக்கும்போதுபரிஷ்வங்கம்லயமே
யென விளங்குமன்றோ; «ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி» என்கிற வாக்
கியத்திற்கு ஜாகரதசையில் ராகத்வேஷமுதலியவற்றோடுகூடிய ஜீவனோடுசேர்ந்த
பரமாத்மா ஸுஷுப்தியில் ராகமுதலியவை நீங்கிய ஜீவனோடு சேர்ந்திருக்கின்றான்
என்று பொருளாகையால் அவ்வாறே «ப்ராஜ்ஞேநாத்மநா» என்கிற வாக்கியத்திற்
கும் பொருள்கொள்ளலாகாது; அப்படியாமாயின் இவ்வாக்கியம் ஜீவாத்மா பரமாத்
மா இவர்களுக்கு பேதத்தைபேதியாமையால் «ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோர்பேதேந»
என்கிற ஸூத்திரத்தில் ஜீவாத்மா பரமாத்மா இவர்களுக்கு பேதத்தை

யுணர்த்துமென்று கொள்ளப்பட்டிருக்கின்றமையாலச்சோடு விரோதம்வரும். இனி
வேறுணும் முந்திய அவஸ்தையை யுடைத்தானவை எல்லாமுபாதாநகாரணம்
பிந்திய அவஸ்தையையுடையவை யெல்லாங்காரியம் என்றால்வருகிற மகாந் அஹங்கா
ரம் முதலிய அவஸ்தையையுடைய பரமாத்மாவக்கு முந்திய அவ்யக்தாவஸ்தையை
யுடைத்தான அசேதந முபாதாநகாரணமாக வேண்டுகின்றமையால் வருகிற அவஸ்
தையையுடைத்தானவைக்கு முந்திய அவஸ்தையையுடைய அபிந்நவஸ்துவே உபா
தாநகாரணமென்று சொல்லவேண்டும். ஆகப்ரமத்தில் வேறான சேதநாசேதநங்க
ளுக்கு ப்ரம்மமுபாதாநகாரணமாகாதெனில் இதற்கு விடையளிக்கின்றோம். வருகிற
அவஸ்தையையுடைத்தான பொருளுக்கு முந்திய அவஸ்தையையுடைய காரணப்
பொருள் உபாதாநகாரணமெனில் இவ்விஷயுக்கிடமில்லை வருகிற அவஸ்தையை
யுடைய ப்ரம்மத்திறகு அசேதநம்காரணமென்பதில் ப்ரமாணமில்லாமையால் அசே
தநம் ப்ரம்மத்திற்குபாதாநகாரணமாகாதாயினும் ப்ரம்மம் எல்லாவற்றிற்கும் காரண
மானதால் வருகிற அவஸ்தையையுடைய அசேதநத்திற்கு ப்ரம்மம் உபாதாநகாரண
மாகலாம். இனி தந்மாத்திராவஸ்தை பூதாவஸ்தை முதலிய அவஸ்தைகளையுடைத்
தான ப்ரக்ருதிக்கு அவ்யக்தாவஸ்தை மகத்வாவஸ்தை முதலிய அவஸ்தைகளையுடை
யப்ரம்மம் உபாதாகாரணமென்று இதனல் சொல்லப்பட்டதாயிற்று; இவ்வாறு
கூடுமென்றிசைந்தாலும் அவ்யக்தாவஸ்தை முதலிய அவஸ்தைகள் ப்ரக்ருதியின்
கண்ணேயுளவானதால் ப்ரம்மம் இவ்வவஸ்தைகளையுடையதாகாது; ஆக ப்ரம்மம்
ப்ரக்ருதிக்கு பாதாநகாரணமாவது கூடாதெனில், இவ்விஷயுக்கு ப்ரக்ருத்யதிகரணத்
தில் சுருதப்ரகாசிகையில் ஸ்ரீவ்யாஸாசார்யர் இவ்வாறு விடைதந்திருக்கிறார். அதா
வது ப்ரம்மம் சித்து அசித்து இவைகளை சரீரமாக உடையதானதால் ப்ரக்ருதி ப்ரம்ம
ஸ்வரூபத்திலடங்கியதென்று ப்ரக்ருதியின் வஸ்தைகளெல்லாம் ப்ரம்மத்தினவஸ்தை
களேயாம். விசிஷ்டவஸ்துவினதுஸ்வரூபம் விசேஷ்யமாத்திரமானதல்ல. விசிஷ்ட
வஸ்துவுக்கு விசிஷ்டமே ஸ்வரூபம். மண்குடத்திற்கு மண்மாத்திரம் ஸ்வரூபமல்ல
வன்றோ. குடவடிவு என்கிற கடத்வஜாதியுடன் சேர்ந்தமண்ணேயன்றோ ஸ்வ
ரூபமாம். இங்கு விசேஷணமும் ஸ்வரூபத்தில் சேருமாகில் தடியுடைய ஒருமனி
தனுக்கு விசேஷணமாகியதடியும் தடியின் ஸம்பந்தமும் ஸ்வரூபமாகவேணுமெ
ன்று வருகின்றமையால் விசேஷணம் ஸ்வரூபத்தில் சேராதெனச்சிலர்மறுப்பர்;
அப்படி சொல்லப்போகாது. தடியும்தடி ஸம்பந்தமும் மனிதனைவிட்டுப் பிரியும்
தன்மையனவாகையால் அவைஸ்வரூபத்தில் சேராவாயினும் தனித்துப்பிரியாது
அப்பொருளுள்ளவனாயி லப்பொருளோடு சேர்ந்திருக்குமவை ஸ்வரூபமாவதில்
குற்றமில்லையன்றோ. மேலும் குடமுதலியவற்றுக்கு தண்ணீர் கொண்டுவருகை
முதலிய அக்காரியங்களுக்குத் தக்கதாகையாகிற யோக்யதையே ஸ்வரூபமாம்.
மண்மாத்திரமல்ல. அப்படியாயின் பிண்டமாயிருக்கும்போதும் குடமென்றுபெயர்
வரவேண்டும். அந்த யோக்யதையாவது ஓட்டையில்லாத குடமாகையாகிற அச்சி
த்ரகடத்துவமேயாம் எந்தவஸ்துவுக்கு எந்தகாரியத்தை ஸாதிக்கும்போது எந்த
ஆகாரமின்றியமையாததாம்; அவ்வஸ்துவுக்கு அக்காரியத்தை யுண்டுபண்ணும்போது
அவ்வாகாரம் யோக்யதையாகின்றது. நெருப்பு உடம்பை எரிக்கும்போது உஷ்
ணமின்றியமையாததாதலால் நெருப்புக்கு எரிப்பதில் உஷ்ணம் யோக்யதையாகின்
றது. வாளுக்குக்கூர்மையும் யோக்யதையாகும். இப்படியே மண்ணுக்கும் குடமாம்
போது யோக்யதையாவது மண்ணாயிருக்கை ம்ருதுவாயிருக்கை நீர் கலந்திருக்கை
முதலியவையாம். இவவஸ்துக்களுக்கு இவை யோக்யதையாவதுபோல ப்ரம்மத்தி
ற்கு ஜகத்ரூபத்தாலே பலவாகப்பரிணமிக்கும்போது, ப்ரக்ருதி ஜீவன்காலம், இவை
கள் விட்டிப்பிரியாத விசேஷணங்களாகையால் யோக்யதையாகின்றன. இக்கார

ணத்தாலே சில ப்ரமாணங்களில் ப்ரக்ருதி முதலியவை பரப்ரம்மசக்தி என்று இவை சக்திசப்தத்தாலே சொல்லப்படுகின்றன. காரியத்திற்கு வேண்டிய விட்டு பிரியாத விசேஷணங்களையன்றோ சக்தியெனப்படும். யோக்யதை யோக்ய ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகையால் ப்ரம்மத்திற்கு யோக்யதையாகிய ப்ரக்ருதி ப்ரம்மஸ்வரூபத்தோடே சேர்ந்திருப்பதென்று அவ்யக்தாவஸ்தைமுதலிய அவஸ்தைகள் ப்ரம்மஸ்வரூபத்திலிருப்பன வாகின்றமையால் ப்ரம்மம் ப்ரக்ருதிக்குபாதாநகாரணமாகலாம், இவ்வாறு சித்த அசித்துஇவைகளுடன்சேர்ந்த விசிஷ்டமே ப்ரம்மஸ்வரூபமாகையால் ச்ருதியிலும் «தத்ய

थस्यारेषु नेमिरर्पिता नाभावरा अर्पिता एवमेवैता भूतमा-
त्राः प्रज्ञामात्रास्वर्पिताः प्रज्ञामात्राः प्राणेऽर्पिताः»

என்று சக்ராந்தமென்கிற சக்கிரத்தில் சுற்றும் கோர்க்கட்டமரம் அரங்களென்கிற கொம்புகளில் கோர்க்கப்பட்டாப்போலே பஞ்சபூதமுதலியவை எல்லாம் ஜீவாத்மாக்களிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன; அரவுகள் குடமென்கிறநாபியில்கோர்க்கப்பட்டிருப்பதுபோல் ஜீவாத்மாக்கள் பரமாத்மாவினிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றனவென்று அரநாபித்ருஷ்டாந்தம் சொல்லப்பட்டது. சக்கிரமாவது நாபிமாத்திரமல்ல; அரங்களும் சக்ராந்தமென்கிறநேமியும் சக்ரஸ்வரூபத்திலடங்கியவையன்றோ; இந்த த்ருஷ்டாந்தத்தால் அரநேமிகள் சக்ரஸ்வரூபத்தில் சேர்ந்தவைபோலேப்போலே ஜீவாத்மாப்ரக்ருதி இவைகளும் ப்ரம்மஸ்வரூபத்தில் சேர்ந்தவையென்று நன்கு விளங்கும். இலை பட்டை இவைகளோடு சேர்ந்த வாழையை சித்து அசித்து இவைகளோடுசேர்ந்த ப்ரம்மத்திற்குத்ருஷ்டாந்தமாக ச்ருதிசொல்லுகிறது. இதனாலும் சேதநாசேதநங்கள் ப்ரம்மஸ்வரூபத்தில் சேர்ந்தவையென்று விளங்கும். இலைபட்டை இவைகளைவிட்டு தண்டுமாத்திரமே வாழையல்லவன்றோ. இலைப்பட்டைகளோடு சேர்ந்ததண்டேயன்றோ வாழையாகும். இப்படி சிதசித்துக்கள்சேர்ந்து ப்ரம்மஸ்வரூபமாகின்றது. பலத்ருஷ்டாந்தங்களிப்படியே ச்ருதியில் காட்டப்படுகின்றன. த்ருஷ்டாந்த ஸ்தலங்களில் எல்லாமசேதநமாகையால் நியாம்ய நியாமகபாவமில்லாமையால் சரீராத்மபாவமில்லை. ஆகையால் விசேஷணவாசகசப்தங்கள் விசேஷ்யத்தைச்சொல்லா. இங்கு விசேஷ்யவிசேஷணங்கள் சேதநாசேதநரூபங்களாகையாலே நியாம்ய நியாமகபாவம் கூடுமாகையால் சரீராத்மபாவமுண்டு ஆகையாலே சேதநாசேதநவாசிசப்தங்கள் ப்ரம்மத்துக்கு வாசகங்களாகின்றன என்கிற இவ்வளவுபேதமொழிய மற்றவிஷயங்களில் பேதமில்லை. ஆகமகத்துமுதலிய அவஸ்தைகள் விசிஷ்டப்ரம்மஸ்வரூபத்தில் பிறந்தவையாகையாலே ஜகத்திற்குப்ரம்மமுபாதாநகாரணமாவது முக்யமேயாம். மேலும் ப்ரக்ருதிஜீவன் இவைகள் ஸ்வரூபத்தில்சேராதவையானாலும், ப்ரம்மம் ஜகத்துக்கு பாதாநகாரணமாவது முக்யமேயாம். சரீரத்தின் வழியாலே உபாதாநகாரணமானால் முக்யமென்பதற்குக்குறையில்லை காரணமாவதற்கு வேண்டியவற்றால் வ்யவஹிதமாகையாலே ஜவிலையினால் வ்யவஹிதமானாலும் சட்டைசமயலுக்குக் காரணமாகின்றதன்றோ. இனி, மண்ணால் வ்யவதாநமுண்டானாலும் குலாலன் உபாதாநகாரணமாகலாம்; காரணமாவதற்குவேண்டியதேயன்றோ மண்ணுமெனில்மண்ணில்வேறாய்ப்பிரிந்த குலாலனுபாதாநமாகான். ப்ரக்ரு

தியைப்பிரியாதப்ரம்மம் உபாதானமேயாம். இனி,இவ்வழியாலே ப்ரம்மமுபாதானகார ணமாமாயினும் கார்யாவஸ்தை உபாதாநகாரணத்திலிருக்கவேணுமாகையால் கார்யாவஸ்தைப்ரக்ருதியிலிருக்கின்றமையால் ப்ரம்மத்திலவஸ்தையில்லையேயெனில் ; இதற்கும் விடைதருகிறோம். குடத்திலெடுத்த தண்ணீரைப் புருஷன்சுமக்கும்போது குடம் நடுப்பட்டிருந்தாலும் தண்ணீரைப்புருஷனே தாங்குவதுபோல மகத்வமுதலிய அவஸ்தைகளைப் பரமாத்மா தாங்குகின்றமையால் அவஸ்தைகளுக்கு முக்கியாச்ரயம் பரமாத்மாவேயாகையால் பரமாத்மா ஜகத்துக்கு பாதானகாரணமென்பது முக்யமேயாம். புருஷன் தண்ணீரைத்தாங்குகிற குடத்தைத் தாங்குகிறானன்றி தண்ணீரைத்தாங்குவதில்லை என்னப்போகாது ; அப்படியாயின் தண்ணீரில்லாதபோதிலக்குடத்தைத் தாங்கியதால் வருகிற சிரமத்தைக்காட்டில் அதிகமான ச்ரமம் தண்ணீரோடுகூடியபோதும் பிறக்கக்கூடாதன்றோ. வஸ்திரம் தர்ப்பம் முதலியவைகளைச் கீழேசேர்த்துஅவற்றின்மேலே குந்தினாலும் புருஷனுக்கு முக்யாதாரம் பூமியேயாம்; வஸ்திரம் தர்ப்பமுதலியவையல்ல. அவைகளுக்குப் புருஷனைத்தாங்குகிற சக்தியில்லையன்றோ;அவை புருஷன்நேராக பூமியில்படாமல் மறைக்கின்றன. ஆகையால் அவ்யஹிதமே முக்யாதாரமென்கிற நியதியில்லை. ஆகதிருட்டாந்தவிடங்களிலே போலப்ரம்மமேஅவஸ்தைகளுக்கு முக்யாதாரமாகையால் ப்ரம்மமேஜகத்துக்கு முக்யோபாதாநமாம். இனி ஜகத்துக்கு பாதாநகாரணமாகிய அவ்யக்தத்தை சரீரமாக உடையதானதால் ப்ரம்மம் ஜகத்துக்கு பாதாநகாரணமாகில் தார்க்கிகர்மதத்திற்கு முங்கள்மதத்திற்கும்பேதமென்ன? நியமிக்கப்படுவது சரீரமென்கையாலும் சிதசித்துக்கள் ஈச்வரநியாம்யங்களென்றவர்களும் சொல்லுகையாலும் உபாதாநகாரணமீச்வரனென்று அவர்களுக்கு விரித்திக்கின்றதேயெனில், இதுநல்ல பூர்வபக்ஷமாயிருக்கின்றது. தார்க்கிகரால்அப்ரமாணிகமாயே சொல்லுவரென்றும், அவர்கள்சொன்னதை ஒப்பக்கூடாதென்றும் நாங்கள் ப்ரதிஜ்ஞைசெய்யவில்லை. நாம் சொன்னபடியவர்களும் சொன்னதெல்லாங்களுக்கதனால் நஷ்டமில்லை, மேலும் ஸாம்யமும் சொல்லப்போகாது, ஆகாசம் காலம் திக்குமுதலியவற்றை ஈச்வரநியாம்யமென்றவர்களங்கீகரியாரன்றோ: என்றருளிச்செய்தார். ஆகப்ரம்மம்ஜகதுபாதாநமாம்போது ஒரநுபபத்தியுமில்லை. இனித்தானிப்படியுபாதாநமென்று ஸாதித்தாலும் ப்ரமத்தை யறிந்தபோது ப்ரபஞ்சமுமறியப்படுமென்பது பொருந்தாது. ப்ரபஞ்சம் ப்ரமத்தில் வேறாயதன்றோ; ஸூக்ஷ்மசிதசித்துடன்சேர்ந்தவிசிஷ்டப்ரம்மஸ்வரூப மறியப்பட்டால் எல்லாமதிலடங்கிய தாகையாலே யறியப்படும்; வநமுழுதே மறிந்தபோதுவநத்திலடங்கிய மாமரம் பலாமரம் முதலியவையறியப்படுவதுபோல சிதசித்துக்களு மறியப்படுகின்றமையால் எல்லாமறியப்படுமென்பது பொருந்துமெனில், "ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரம்ம" என்கிற லக்ஷணமுடைய ப்ரம்மத்தில் அந்த லக்ஷணமில்லாத சேதநாசேதநங்கள் சேரவழியில்லாமையால், அது சேராது. இனி ஸத்ய ஜ்ஞாநாநந்தலக்ஷணம் விசேஷ்யமாத்திரத்திற்கு லக்ஷணமாம்; எதையறிந்தா லெல்லாவற்றையுமறியலாகு மப்படிப்பட்ட ப்ரம்மம் விசிஷ்ட ப்ரம்மமே; அதற்கு லக்ஷணம் ஜந்மாதி காரணத்வமே என்று ஸூத்ரகாரர்கருத்தென்று ஜந்மாதி ஸூத்திரச்ருத ப்ரகாசிகையில் வ்யாஸாசார்யரருளிச்செய்தாரே எனில்;காரணவாக்கியத்திற்கும் சோதகவாக்யத்திற்கும் பொருள் மாறுபாடு கூடாமையாலதுவும்சேராது. மேலும் "ஆத்மாவிலிருந்து ஆகாயம்பிறந்தது" என்கிற தைத்திரீய

வாக்கியத்தால் ஆத்மாவே உபாதாநமென்றோதப்படுகிறதன்றோ. இனி; உங்களிஷ்டப்படி விசிஷ்டமே ப்ரம்மமானாலும் ‘‘வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்’’ என்கிற ச்ருதியில் உபாதாநகாரணத்திற்கும் காரியத்திற்கும் பேதமில்லையானதால் காரணத்தையறிந்தபோதே காரியமெல்லாமறியப்படுமென்று சொல்லுகின்றமையால் இவை எல்லாமென்று காட்டப்படுகிற விசேஷணமாகிய ப்ரபஞ்சத்திற்கும் விசிஷ்டப்ரம்மத்திற்கும் அபேதம் ஸம்பவியாமையால் விசிஷ்டப்ரம்மத்தை யறிந்தபோதிவை எல்லாமறியப்படுமென்று சொல்லப்போகாது சரீரத்திலுள்ளவிகாரங்களெல்லாம் சரீரியினிடத்திலிருக்குமென்பது, எல்லா, லௌகிகசாஸ்திரதர்க்கங்களுக்கும் விருத்தமாம். ‘‘நதுத்ருஷ்டாந்தபாவாத்’’ என்கிரஸூத்திரபாஷ்யங்களுக்கும் விருத்தம். முந்திய அவஸ்தையையுடைய பொருளை நியமிப்பது உபாதாநகாரணமென்பது கட்டுவார்த்தை மேலும் பிறக்கும் பொருளக்கன்றோ உபாதாநகாரணம் தேடவேண்டும்; உங்கள் மதத்தில் த்ரவ்யம் நிச்யாமாகையால் பிறவாததன்றோ; சப்தம் ஸ்பர்சம் முதலிய அத்ரவ்யரூபமாகிய விகாரமே பிறக்குமாகையாலிவைகளுக்கு ப்ரம்மத்திற்கும் பேதமேயாகையால் ப்ரம்மத்தையறிந்தபோது இவை எப்படி யறியப்படும் இனி, கடமென்கிற பொருளுக்குத்பத்தியாவது கடத்வாஸ்தையேயாம். மேலே மேலே வருகிற அவஸ்தை முன்னிருந்த அவஸ்தையோடுகூடிய பொருளின் நாசமர்கும். அவ்வவஸ்தையையுடைய பொருளுக்குத்பத்தியாம். அவஸ்தைநித்யமல்லாமையாலே அதற்குப் பிறப்புவேணுமென்பது உத்பத்தி நித்யமல்லாமையாலே உத்பத்திக்குத்பத்தி வேணுமென்பது போலதிவாதம். தனித்துப்பிரிந்திருக்கிறவற்றுக்கே தனிப்பிறப்பு முதலியவை வேண்டுமன்றி தனித்திராதவற்றுக்குத்தனியே பிறப்புமுதலியவை வேண்டா இக்காரணங்கொண்டே உத்பத்திக்கு உத்பத்தி வேண்டாமென்றதும், ஆகையால் பொருளைவிட்டுப் பிரியாத அவஸ்கைதன் பொருளுக்குத்பத்திமுதலியவையாகின்றன. ஆகையால் அவஸ்தையேபொருளுக்குத்பத்தியாம். அவஸ்தைக்குத்பத்தி வேண்டுவதில்லை. என்று ஆரம்பணாதிகரணத்தில் பாஷ்யத்திலும்ச்ருதப்ரகாசிகையிலும் உபபாதிக்கப்பட்டதே என்றால்; அது நல்லதென்று கடத்துக்குத்பத்தியாவது கடத்வாவஸ்தையேயாகில் கடத்வாஸ்தையுள்ளவரையில் கடம்பிறக்கிறது என்று வ்யவஹாரம் வரவேணுமேயல்லது கடம்பிறந்தது என்று வரக்கூடாது. ம்ருத்பிண்டத்தின் அழிவானது கடத்வாவஸ்தையேயாகி லிப்படியே கடத்வாவஸ்தையுள்ளவரையில் மருத்பிண்டமழிகிறதென்று வ்யவகாரம் வரவேணும் ம்ருத்பிண்டம் அழிந்தது என்று சொல்லக்கூடாது. கடத்வாவஸ்தையிலுண்டாகிற முதல்க்ஷணத்தின் ஸம்பந்தமேகடத்திற்குத்பத்தி என்றால் அது, அநித்தியமும் முதல் க்ஷணஸம்பந்தமுடையதும் முன்னில்லாதேவந்ததுமாம்; அதற்குப்பிறப்பிறப்பில்லை இவையொன்றுமில்லாதபொருளுக்குப் பிறப்பென்பதுகட்டுவார்த்தையாம். மேலும் கடத்தில் ரூபம் ரஸம்முதலியவை ஸம்யோகம் இவை உண்டாம்போது கடம்பிறந்ததென்று வ்யவஹாரம் வரக்கண்டோமில்லையே. ரூபம் பிறந்தது இரஸம் பிறந்ததென்றும் சொல்லக்கூடாது. தனித்துப்பிரியாதவைக்குப் பிறப்பில்லையன்றோ; ஸம்யோகத்தில் வருகிற க்ரியையால் பிறந்தது ஸம்யோகத்தால் பிறந்ததென்கிற வ்யவகாரமெல்லாப் நிர்மூலமாகவேணும். ‘‘[illegible]

ரூதவொ ஷுதாநி" ஹநூாஂவிஜஜிரெ தஹாாகு" என்கிற ச்ருதிகளி லோதப்படுகிற வேதம் முதலியவை பிறந்தனவென்பதெல்லாமப்ரமாணமாகவேணும். சப்தம் பிறந்ததென்று வ்யவஹாரம்கூடாது சப்தம்பிறந்தபோதெல்லாம் ஆகாயம் பிறந்ததென்று வ்யவஹாரம்வரவேணும். தனித்திராதவைக்கு உத்பத்திவிநாசங்களில்லையன்று சரீரம் ஆத்மாவைப் பிரிந்திராதானதால் சரீரத்திற்கு உத்பத்திநாசங்களில்லை. ஆத்மாவுக்கே உத்பத்திவிநாசங்களென்று சொல்லவேணும். பலசொல்லுவானேன்? உலகத்திலே [illegible] விட்டுப்பிரியாதவை யாகையாலே இவைகளுக்குத் பத்திவிநாசங்களில்லை; ஈச்வரனுக்கே உத்பத்திவிநாசங்களென்று விபரீதமாய் விடும். விட்டுப்பிரியாத அத்ரவ்யங்களுக்கே உத்பத்திவிநாசங்களில்லை; விட்டுப்பிரியாதவையானாலும் த்ரவ்யங்களுக்கே உத்பத்திவிநாசங்களில்லை. அத்ரவ்யங்களுக்கே யவையென்றுமாற்றிச்சொன்னு லதையார்மறுப்பார்? மேலும், விகாரத்துக்கு முதலானது பாதாநகாரணமென்றும் விகாரம் காரியமென்றும் எல்லோருமொப்புக்கொண்டவிஷயம்; "வாவாரூணஂவிகாரொ நாஜயெயஂ" என்கிற விடத்தில் கடத்வாவஸ்தைய விகாரசப்தத்தால் சொல்லப்படுகின்றமையால், "யமாவஸ ஜெ௱கெநஜ்ஞாநெந ஸவ஬ஂஜ௱ணயஂவிஜ்ஞாதஂஸ௱ாகு" என்கிற முந்திய வாக்கியத்திலும் விகாரப்பொருளையுணர்த்தும் மயட்ப்ரத்யயத்தாலவ்விகாரமேயுணர்த்தப்படுதல் சக்கதாகலால் அவ்விகாரமே மண்ணையுபாதாநகாரணமாகவுடைய காரியமென்பது உலகநீதியாலே யறியப்பட்டதென்று நினைத்து த்ருஷ்டாந்தமாக்கி காரணத்தை யறிந்தபோதே விகாரமறியப்படுமென்று சொல்லுகையால் உங்கள் மதத்திலவஸ்தைஎன்கிற விகாரமறியப்படாமையா லந்த ச்ருதியில் சொல்லப்பட்ட காரணகாரிய விஞ்ஞாநமுங்களுக்குப்பொருந்தாது. அந்த ச்ருதியில் பூர்வவாக்கியத்தில் ம்ருண்மயமென்கிற பதமானது விகாரத்தையுடைய பொருளைக்குறிக்கின்றது. "விகாரோநாமதேயம்" என்கிறவிடத்தி லவஸ்தையாகிய விகாரமேவிகார சப்தத்தால் சொல்லப்படுமென்பது பொருத்தமற்ற வார்த்தையானதா லிவ்விரண்டிடத்திலு மொருபொருளையே கொள்ளவேண்டும். ஆகவிகாரரூபமான அவஸ்தை யுங்கள் மதத்திலேயறியப்படாதாகையால் மண்ணையறிவதினாலதனில் வேறாகாத விகாரமெல்லாமறியப்படுமென்பது உங்கள் மதநிலைக்குச் சேராததேயாமென்பீரேலதற்கு விடைதருகிறோம்.—ப்ரக்ருதிக்கும் விக்ருதிக்கும் அதாவது உபாதாநகாரணத்திற்கும் காரியத்திற்கும் பேதமில்லாதபோது மண், குடமாவதற்காகச் செய்யும்வேலைஎல்லாம் வீணாமாகையால் பேதமுண்டாகிலும் தனித்திருத்தலும் தனித்தறியப்படுதலுமில்லாமையாலே தனித்துஸத்தையில்லையென்பது ஸித்தமாம் ஆகவேறாகாத ஸத்தையுடையகாரணமுபாதாநகாரணமாம். ப்ரக்ருதி என்று மாச்மாவென்று மிதற்குப்பெயர். இக்காரணத்தை தார்க்கிகர் நன்குபிரிந்து தோன்றாமையால் அயுதஸித்தம் ஸமவாயிகாரணமென்கிறார்கள். காரியத்தில் வேறுபடும் வேறாகாததுமாயகாரணமுபாதாநகாரணமென பேதாபேதவாதிகள் சொல்லுகின்றார்கள். வேறென்றும் வேறல்லவென்றும் பேசத்தகாதகாரணமெனச்சிலர் காரியத்தில் வேறாயதாய் காரியஸத்தையில்வேறல்லாத ஸத்தையுடைய காரணமுபாதாநகாரணமெனமற்றோர். எமக்குமீதே உபாதாநகாரணவிசாரத்தில் ஸம்மதமானவபிப்ராயம். கலசமுதலிய அவஸ்தையே விகாரம் பலரூபத்தையும் பலநாமத்தையுமடைகிற அவஸ்தைகளெல்லாம் மண்ணினவஸ்தையேயாகையாலே மண்ணேயிப்படியாகின்றதென்று வேதார்த்த ஸங்

க்ரகத்தில் அவஸ்தையே விகாரமென்றருளிச் செய்தார். அவ்விதவிகாரங்களுக்கும் மண்ணுக்கும், தடிக்கும் புருஷனுக்கும், போல பிரிந்திருக்குந்தன்மையில்லையானதால் பிறித்தறியப்படாதே குடமுதலிய விகாரங்களோடு மண்சேர்ந்திருக்கின்றமையால் கீழ்ச்சொல்லிய உபாதாநகாரணலக்ஷணம் மண்ணிலுண்டாகையால் குடமுதலியவற்றக்கு மண்ணனது ப்ரக்ருதியி மாத்மாவுமாகின்றது. ஆகையாலிம் மண்ணையறிந்தபோது கடமுதலிய அம்மண்ணினவஸ்தையாகிய விகாரங்களெல்லாம் தனித்தநிலைக்கும் ஜ்ஞாநத்திற்கும் சகாசரையாகையாலே மண்ணின் ஸத்தையாலே ஸத்தையுண்டாகிறதுபோலே மண்ணையறிந்தவிடலறிந்தவையுண்டாகின்றமையால் இவை எல்லாமறியப்படுமென்று சொல்லலாகும். இப்படியே சேதநாசேதநப்ரபஞ்சமெல்லாவற்றிற்கும் ப்ரம்மம் தனித்துப்பிரியாத காரணமாகையாலே எல்லாவற்றிற்கும் ப்ரக்ருதியாய் ஆத்மாவாயிருக்கையால் ப்ரம்மத்தைவிட்டுப் பிரியத்தறியத்தகாத எல்லாமறியப்படாதாமென்பது ஸித்திக்கும். ஆகையால் கீழ்ச்சொல்லிய தோஷங்களிலொன்றுமிங்குசங்காசென்று ஸூக்ஷ்மபுத்தியாலே அறிந்துகொள்க. இனி பாஷ்யத்தில் கேவலபேதவாதிமதத்தில் அத்யந்தம் பின்னங்களுக்கு ஒருவழியாலுமைக்யம் சொல்லப்போகாமையாலே ப்ரம்மாத்மபாவம்கூடாமையால் எல்லாவேதாந்தங்களும் விடப்பட்டனவாமென்று கேவலபேதபக்ஷம் நிந்திக்கப்படுகின்றமையால், "ஏக த்வே ஸதி நாநாத்வம் நாநாத்வே ஸதி சைகதா । அசிந்த்யம் ப்ரஹ்மணோ ரூபம் கஸ்தத்வேதிதுமர்ஹதி" என்று, ப்ரம்மம் ஒன்றாயிருக்கவும் பலவாய்த் தோற்றுகிறது பலவாயிருக்கவு மொன்றாய்த்தோற்றுகிறது; இன்னதென்றறியப்படாத ப்ரம்மஸ்வரூபத்தை எவனறியத்தக்கவன்; என்று ஸ்ம்ருதிசொல்லுகையாலும் பேதாபேதபக்ஷமே பகவத்பாஷ்யகாரருக்குத் திருவுள்ளமென்று தோற்றுகையால் காரியத்தில் வேறாகாதகாரணமுபாதாநகாரணமென்று கொள்ளவேணும்; இப்படியானால் எல்லாப்ரபஞ்சமும் ப்ரம்மமேயாகையாலே ப்ரம்மத்தையறிந்தபோதெல்லாமறியப்படுமென்று சுருதியில் சொன்னது நன்றாய்ச்சேரும். "ஹரிரேவ நகிஞ்சித் ப்ரதிகத்வம்" (ஹரியென்று ப்ரஸித்தமான ப்ரம்மத்தில் வேறாயதொன்றுமில்லை.) "ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:" (இவ்வுலகத்திலுள்ள ஸமஸ்தமும் அந்த ஒரு ப்ரம்மமே) "தஸ்மாந்ந வித்யதே நாந்யத்" (அந்த ப்ரம்மத்தில் வேறில்லை அந்த ப்ரம்ம மப்படிசொல்லப்படுகிறது.) "ஏகஸ்ஸதைகரூபரூபஸ்ய வாஸுதேவ பரமேச்வரஸ்ய நாந்யோஸ்தி" (எக்காலத்திலும் மாறாத ஸ்வரூபத்தையுடைய ப்ரம்மமொன்றே பரவாஸுதேவனென்றும் பரமேச்வரனென்றும் சொல்லப்படுகிறது. அந்த ப்ரம்மத்தில் வேறுபட்டபொருளில்லை.) என்கிற சாஸ்திரங்கள் கேவலபேதத்தை நிஷேதிக்கின்றனவாகையாலும் பேதாபேதபக்ஷத்தை யங்கீகரிப்பது யுக்தமமாம். சரீராத்மபாவத்தைச் சொன்னாலும் சரீரமாகிய ஜகத்து ப்ரம்மத்தில் வேறானதேயாகையால் ப்ரம்ம பிந்நமானவஸ்துவை நிஷேதிப்பது சேராது. ஆகையால் பேதாபேத பக்ஷத்தையே கொள்ளவேணுமெனில் இது தக்கதன்று—பேதாபேத பக்ஷத்தில் ப்ரம்மத்திற்கே உபாதி ஸம்பந்தத்தால் உபாதியினால் வருகிற ஸகலதோஷங்களும் வருகையாலே தோஷஸம்பந்தமில்லாதே கல்யாணகுணங்களுக்கு நிலமான ப்ரம்மத்தையுபதேசிக்கிற வேதாந்தங்களெல்லாம் விரோதிக்கும்; என்று பேதாபேதபக்ஷத்தை பாஷ்யத்

திலே அவஷிக்கையாலும் ப்ரம்மாஜ்ஞானபக்ஷத்திலும் பேதாபேதபக்ஷம்கெட்டதென்று வேதார்த்த ஸங்க்ரஹத்தில் மிகவும் நிந்திக்கையாலும் பேதாபேதவாதம் பகவத்பாஷ்யகாரருக்குத் திருவுள்ளமன்று. ஆனால் கீழ்காட்டிய பாஷ்யத்துக்குப் பொருளென் சரீராத்மபாவமாவது பேதமேயன்றோ. ப்ரகார ப்ரகாரிபாவம் பேதரூபமேயன்றோ. எப்போதும் ப்ரகாரப்ரகாரி பாவமாகிய சரீராத்மபாவமாவது எப்போதும் பேதரூபமாகையால் சரீராத்மபாவத்தைச் சொல்வதினால் கேவலபேதமே வலியுறுத்தப்படுகிறது. ஆனதினாலன்றோ «உஹயெவிஹிஹெ ஜெடுெ.நகுஜயிய டுத'' என்கிற ஸூத்திரத்தில் சரீராத்மபாவமே பேதமென்றுபந்யஸிக்கப்பட்டது. எனில் சொல்லுகிறோம் கீழ்காட்டிய பாஷ்யத்திற்குக் கருத்து இவ்வாறு கொள்ள வேணும். ஒன்று என்கிற வ்யவஹாரத்தில், ஸ்வரூபைக்யம் அல்லது ப்ரகாரைக்யம் காரணமாகிறது. ஸாயங்காலத்தில் பசுக்களெல்லாமொன்றாய் விடுகின்றன, அரசர்களொன்றானார்கள், இவை எல்லாமோரேதாங்யம். என்கிற விடங்களில் தேசம் முதலிய ப்ரகாரமொன்றாகையால் ஒன்று என்கிற வ்யவஹாரமுண்டாயிருக்கிறது. இங்கு ஜகத்துக்கும் ப்ரம்மத்திற்கும் ஸ்வரூபம் பின்னமாகையாலே ஒன்று என்கிற வ்யவஹாரத்திற்குக் காரணமொன்று சொல்லவேணும் அஃது யாதென்று விசாரித்துப் பலவிடங்களிலும் விட்டுப்பிரியாத விசேஷணமாயிருக்கை என்று நிர்ணயித்தருளிச்செய்தார். ஆகையாலப்ருதக் ஸித்தியே பகவத்பாஷ்யகாரருக்குத்திருவுள்ளம். ஸித்தியாவது - ஸ்திதியும், ஜ்ஞானமும். ஸ்திதியாவது இருப்பு. ஜ்ஞானமாவது அறிவு. இவ்விரண்டும் தனியேயில்லாத விசேஷணங்களுக்கு அப்ருதக்ஸித்த விசேஷணங்களென்று பெயர், இக்கருத்து அவ்விடத்திலேயே பாஷ்யத்தில் விளங்கும். அவையாவன:—ஜாதிகுணமுதலியன. இனி, கந்தமுதலிய அப்ருதக்ஸித்த விசேஷணங்கள் தனித்து மறியப்படுகையா லிவ்விலக்கணம் பொருந்தாது. யாதொன்று தானுள்ளவரையிலொன்றைப்பற்றியே நிற்கின்றது; அது அப்ருதக்ஸித்தமென்று தார்க்கிகர்சொல்லிய விலக்கணங்கூறில் இவ்விதமாகிய அப்ருதக்ஸித்திபேத வ்யவகாரத்திற்கே ஹேதுவாமல்லது அபேதவ்யவகாரத்திற் கிடங்கொடாது. ஆனதால் ப்ரம்மமொன்றே யுள்ளதென்கிற வ்யவகாரமுங்கள் மதத்திற்குப் பொருந்தாதெனில் ; பொருந்துமாறு கூறுகின்றோம் ; தனித்திருக்கிற காரியங்களுக்கே தனிப்பிறப்பு முதலியன வேணுமென்கின்ற சுருதி ப்ரகாசிகையை யாலோசிக்கும்போது யாதொன்றின் பிறப்புநாசம் ஸத்தைமுதலியவை எவ்வாதாரத்தைப்பற்றி யிருக்கின்றதோ அது அவ்வாதாரத்திற்கு அப்ருதக்ஸித்தவிசேஷணமென்று கொள்ளப்பட்டதாகிறது. கந்தமுதலிய குணங்களின் ஸத்தைபொருளின் ஸத்தையைப்பற்றியிருப்பதால் குணங்கள் பொருளுக்கு அப்ருதக்ஸித்தவிசேஷணங்களாகின்றன. இப்படியே விக்ருதி என்கிற காரியத்திற்கு ப்ரக்ருதியென்கிற உபாதானகாரணத்தின் ஸத்தையில் வேறான ஸத்தையில்லையாதலால் தன்னுடைய ஸத்தையில் வேறாகாத ஸத்தையுடைய காரணமுபாதானகாரணமென்பதில் விரோதமொன்றுமில்லை. இஃதேயாத்மாவாயிருக்கை. ப்ரம்மத்தினின்றும் பிறக்கின்றமையாலும், ப்ரம்மத்திலே லயிக்கின்றமையாலும் ப்ரம்மத்தால் காக்கப்படுகின்றமையாலும், ப்ரம்மத்தால் நியமிக்கப்படுகின்றமையாலும் ப்ரம்மத்திற்கு சரீரமாகின்றமையாலும் எல்லாம் ப்ரம்மத்தை யாத்மாகவுடையனவென்றருளிச் செய்யாநின்ற பகவத்பாஷ்யகாரரால் இவ்வர்த்தம் வெளியிடப்பட்டதன்றோ. உள்ளே புகு

ந்து நியமிக்கையாகிற ஆத்மத்வமிங்கு சொல்லப்பட்டதில்லை. அது உபாதாநகாரண மாவதினால் வருமதன்றே உபாதாநமாவதினாலும் நியந்தாவானதினாலும் நியந்தா வான ஆத்மாவாகிறானென்பது பொருந்ாதன்றோ. நாம் சொல்லியபடி ஆத்மாவாகை யே இங்கு பொருத்தமுடையது. எப்படி என்றால் கூறுகிறோம், ப்ரம்மத்தினின் றும் பிறக்கையாலுமென்ற தாவசேதநங்களைப்பற்றி உபாதாநகாரணமாகையாகிற ஆத்மத்வமும், ப்ரம்மத்தால் நியமிக்கப்படுதலாலுமென்பதற்கு ஜீவரூபனாகி நியமிக் கிறானென்று கருத்தாகையாலே ஜீவனை விட்டுப்பிரியாதவனென்று பெறப்படுகின்ற மையாலும் சேதநாசேதநங்களெல்லாவற்றிற்கு மப்ருதக்ஸித்தகாரணமென்கிற காரி யஸத்தையில் வேறல்லாதஸத்தையுடைய காரணமாகிய உபாதாநகாரணமாகிய சொல்லப்பட்டதாயிற்று. ஆக, இவ்விதகாரணமாகையாகிற ப்ரக்ருதி த்வமென்கிற ஆத்மத்வம் சேதநாசேதநங்களெல்லாவற்றையும் பற்றி ப்ரம்மத்திற்குண்டாகையால் இவ்வித ஆத்மாவாகிய ப்ரம்ம மறியப்பட்டபோதே மற்றெல்லா மறியப்பட்டதே யாம். மற்றொன்று தனித்தறியவேண்டிய தொன்றுமில்லையன்றோ; ப்ரம்மத்தின் ஸத்தையால் ஸத்தைபெற்ற வஸ்துப்ரம்ம மறியப்பட்டபோதறியப்படாதொழியுமோ. இனி, ப்ரபஞ்சத்திற்கு ப்ரம்மஸத்தையொழிந்த ஸத்தையில்லாதொழிந்தால் ப்ரபஞ்ச சம் பொய்யென்று சொல்லப்பட்டதாகிறது. அப்போதுலகத்தைப் பொய்யென்கிற அத்வைதிகளுக்கு மூங்களுக்கும் பேதமில்லையே என்றால் இச்சந்தேகம் வேண்டாம். குணங்களில் ஸத்தாஜாதியை யொப்பாதவர் மதத்தில் ரூபமுதலிய குணங்களுக்கு த்ரவ்யஸத்தையில் வேறான ஸத்தையில்லையானாலும் குணங்கள் பொய்யென்றார்க ளோ; ஸித்தாந்தத்திலும் தனித்து உத்பத்தி ஸ்திதி ஸத்தையில்லாத அவஸ்தைகளைப் பொய்யென்று சொன்னார்களோ; இப்படியே ப்ரம்மஸத்தையில் வேறான ஸத்தை யில்லையானாலும் ப்ரபஞ்சம் பொய்யாகாது. ஆகையாலன்றோ ‘‘மெநகூவிளுவஉஹ வாகூ’’ என்கிற ஸூத்திரத்தில் காலமென்பது தனியேதோற்றாதே எல்லாப்பொரு ளுக்கும் விசேஷணமாய் தோற்றுகையால் இதற்குத்தனியேஸத்தையில்லை. ஆனாலுமி ல்லைஎன்று சொல்லப்போகாது. ஜாதிமுதலியவற்றிற்குத்தனியே ஸத்தையில்லையானா லும் மவைபொய்யாமோ; என்று பாஷ்யத்தில் தெளிவாகவருளிச்செய்தார் ஆனதால் ப்ரம்மஸத்தையால் ஸத்தைபெற்றிருப்பதால்ப்ரபஞ்சம் பொய்யாகாது. இனி, உபாதா நமாயிருக்கையாவது அப்ருதக்ஸித்தகாரணமாகை ஆத்மத்வமென்பது மீதேயாமென் றால்; பகவானுடைய திருமேனி விமாந கோபுரமண்டப ப்ராகாரமாகியிருக்கும் நித்ய விபூதியை நித்யமென்று லதைப்பற்றி பரமாத்மா ஆத்மாவாகமாட்டான். நித்யவிபூதி நித்யமாகையால் அவ்விபூதிக்கு பரமாத்மா உபாதாநகாரண மாகானன்றோ; ஆகை யால் நித்யவிபூதியும் உத்பத்தியுடையதேயாம். இவ்விபூதிக்குத்பத்தியில்லையானால் இவ் விபூதிப்ரம்மகார்யமாகாமையால் ப்ரம்மத்தை யறிந்தபோதறியப்படாது. அப்படியா கில் ப்ரமத்தையறிந்தபோதெல்லா மறியப்படுமென்கிற ப்ரதிஜ்ஞை சேராதாம். இந்த ப்ரதிஜ்ஞைக்கு விருத்தமாகவும் நித்யவிபூதியை நித்யமென்றால் வியததிகரண விரோதமும் வரும். அவ்வதிகரணத்தில் ஆகாயம் நித்யமோ உத்பத்தியுடையதோவெ ன்று விசாரித்து நித்யமாகில் ப்ரம்மகார்யமாகாமையால் ப்ரம்மத்தை யறிந்தபோ தெல்லா மறியப்படுமென்கிற ப்ரதிஜ்ஞைக்கு விரோதம் வருகின்றமையால் உத்பத்தி

யுடையதேயாமென்று விஸ்தாரம் செய்யப்பட்டதன்றோ. இந்த நியாயத்தால் நித்ய விபூதிக்கு உத்பத்தியுண்டென்று சொல்லவேணும். நித்யவிபூதியை உத்பத்தியுடைய தென்றால் நித்யமென்று சொல்லுகிற ப்ரமாணங்களோடு விரோதம் வருமாகையால் ப்ரம்மத்தையறிந்தபோதெல்லா மறியப்படுமென்கிறவிடத்தில் நித்யவிபூதி தவிரமற் றெல்லாமறியப்படுமென்று பொருள்கொள்ளவேணுமென்றால்; இப்படியே ஆகாயத் தையும், "வாயுஶ்சாந்தரிக்ஷஞ்சைதத் அம்ருதம்" "ஆகாஶவத் ஸர்வகதஶ்ச நித்ய:" இவை முதலிய ப்ரமாணங்கள் நித்யமென்று சொல்லுகையால் ஆகாயத்தை யும் நீக்கவேணுமென்று வரும். ஆனதால் நித்யவிபூதிமாத்திரம் நித்யமாவது கூடா தென்றால் "ஆகாஶஸ்ஸம்பூத:" இது முதலிய ப்ரமாணங்களில் மகதஹங்கார க்ரமத்திலே உத்பத்தியுடையதென்று தெளிவாகச் சொல்லுகையாலும் நித்யவிபூதிக்கு உத்பத்தியை ஒரு ப்ரமாணமும் சொல்லாமையாலும் நித்யவிபூதியை ஆகாயத்ரு ஷ்டாந்தத்தாலே உத்பத்தியுடையதென்று சொல்லத்தகாது. இனி, "யதாத்மகோ ஹ்யவாங்மநஸாதீதோ ஹ்யவ்யக்தாவ்யக்த:" (பகவானுடைய திருமேனியும் பகவதாத் மகம்) இது முதலான ப்ரமாணங்கள் திருமேனியும் நித்யவிபூதியும் பரமாத்ம ஸ்வ ரூபமேயென்று சொல்லுகையால் திருமேனிமுதலிய நித்யவிபூதியெல்லாம் பரமாத்ம ஸ்வரூபத்தில் சேருமதன்றென்கொள்ளலாம் அந்தபக்ஷத்தில் எல்லாமறியப்படு மென்கிற ப்ரதிஜ்ஞைக்கும் விரோதமில்லை., நித்யவிபூதியில் விசித்திர உத்யானவனங் களும் விசித்திரதடாகங்களு முண்டென்று சொல்லுகையால் இவற்றையெல்லாம் ப்ர ம்ம ஸ்வரூபமென்று கொள்ளுகை யுக்தமன்றோவென்று ஸந்தேகம்வேண்டாம்; உத் யானமுதலியவை யுண்டென்று சொல்லுகிற வாக்யங்களுக்கு உத்யானவனமுதலியவற் றில் வருகிற ஆநந்தமெல்லாம் ப்ரம்மாநந்தத்தின் துளியென்னலாம்படி எல்லா ஆநந் தங்களையும் ப்ரமமாநுபவம் தருமென்று கருத்தாகையால், தஹராதிகரணத்தில் பா ஷ்யம் சுருதப்ரகாசிகை இவ்விரண்டிலுமிவ்வாறே இங்குண்டான ஆநந்தங்களும் இல்லாத ஆநந்தங்களுமெல்லாம் ப்ரம்மாநந்தத்திலடங்கியதென்று அருளிச்செய்தார் கள். ஆனதால் ப்ரம்மஸ்வரூபமே நித்யவிபூதி என்றாலது சேராது. விரஜையென் கிற திவ்யநதியைத்தாண்டிச் சேரவேண்டிய திவ்யலோகத்திலடங்கிய ஐரமதீய மென்கிற தடாகமுதலியவை ப்ரம்மஸ்வரூபமே யென்று சொல்லுவது பொருந்தா தன்றோ. ஆகையால் நித்யவஸ்துக்களுக்கு ஆத்மாவாகையாவது அப்ருதக்ஸித்தியற் றவைகளுக்கு ஆத்மாவாகையாவது உபாதாநகாரணமாகை ஆகையாலனுப்பத்தியொன் றுமில்லை. ஆக உபாதாநகாரணமாகிய ப்ரம்மமறியப்பட்டபோது அப்ருதக்ஸித்த விசே ஷணங்களான மற்றெல்லாமறியப்படுமாகையால் ப்ரம்மத்தையறிந்தபோதெல்லா மறி யப்படுமென்கிற ப்ரதிஜ்ஞை பொருத்தமுடையதாகின்றது. அல்லது, விசேஷணமா கிய ப்ரபஞ்சத்தையே யுத்தேசித்து ப்ரச்நம்பண்ணப்பட்டாலும், விஷ்ணுபுராணத் தில் ஆதிபரதசரிதத்தில் நீயாரென்றுகேட்ட ஸௌவீரராஜ ப்ரச்நத்திற்கு, ப்ரச்நம் கேவல சரீரஸம்பந்தமுடைய ஆத்மாவைப்பற்றியதானாலும் உண்மையில் நீயென்கி றபதத்திற்கு சுத்தாத்மஸ்வரூபமே பொருளெனவறிவித்தற்கு ஆதிபரதர் "யதா ஸர்வஶரீரேஷு புமானேகோ வ்யவஸ்தித:" "யத்யந்யோஸ்தி பர: கோ" இவைமுதலிய சுலோகங்களில் சுத்தாத்மஸ்வரூபத்தைப்பற்றிவிடையளித்தாப்

போலும், அதர்வசிரஸ்ஸில் தேவர்கள் உருத்திரனை நீ யாரென்று கேட்டபோது தேவர்கள் கருத்துப்படி நீ யென்கிறபதத்திற்கு ருத்ரனே பொருளானாலும் எல்லாப் பதங்களும் பரமாத்மாவரையில் போதிக்கின்றனவென் றறிவித்தற்கு உருத்திரன் நீ யென்கிற பதத்திற்குப் பரமாத்மாவைப் பொருளாகக்கருதி "ஸஹமேகஃப்ரது ஜராவஸ்" என்று தொடங்கி பரமாத்மஸ்வரூபத்தைப்பற்றி விடைதந்தாற்போலவும் இங்கும் ப்ரச்நத்தில் எல்லாமென்கிற பதத்திற்கு விசேஷணமே பொருளானாலும் விசேஷணத்தை யுணர்த்துகிற சப்தம் விசேஷ்யமாகிய ப்ரம்மத்தைபோதிக்குமென்றறிவித்தற்கு ஸ்தூலஸூக்ஷ்மப்ரம்மஸ்வரூபத்தைப்பற்றி உத்தரம் சொல்லப்பட்டாலும் குற்றமில்லையானதால் ஒருவிதஸந்தேகத்திற்கு மிடமில்லை. இவ்விசாரத்தை ப்ரஹதாரண்ய உபநிஷத்திற்கு வ்யாக்யாநம் செய்யும்போது விளங்க விவரித்து உபந்யஸிக்கப்போகிறோம். இங்கு இவ்வளவே போதுமென்று நிறுத்துகிறோம்.

௪. தஸ்மை ஸ ஹோவாச । த்வே வித்யே வேதிதவ்யே இதி ஹ ஸ்ம யத் ப்ரஹ்மவிதோ வதந்தி பரா சைவாபரா ச ॥

௪. தஸ்மை ஸ ஹோவாச | த்வே வித்யே வேதிதவ்யே இதி ஹஸ்மயத் ப்ரஹ்மவிதோ வதந்தி பரா சைவாபரா ச ||

(ப - ம்.) பரா ச அபரா ச த்வே வித்யே-பரவித்யை அபரவித்யை என்கிற விரண்டுவித்யைகள், யத்-யாதொன்றை, (ப்ராப்தும்-அடைவதற்கு) வேதிதவ்யே-அறியத்தக்கவையென்று, ப்ரஹ்மவித:-ப்ரம்மஜ்ஞாநிகள் சொல்லுகிறார்களோ, (அதையறிந்தாலெல்லாமறியப்படும்.) இதி தஸ்மை ஸ ஹோவாச - இப்படி சௌநகருக்கு அங்கிரஸ்ஸு சொன்னார்.

பதார்த்தபோதங்கள்.

பரவித்யை பரமாத்மாவைப்பற்றியது அபரவித்யைதருமம் அதருமம் இவைகளுக்குஸாதநம் இவைகளின்பலம் இவைகளைப்பற்றியது ப்ரசநத்திற்குத்தரம் நேரில்லையென்றால்,பூர்வபக்ஷம் சொல்லிஸித்தாந்தம்சொல்வது போலபரவித்யையுணர்த்தி இதநால் ப்ரம்மத்தையறிந்தபோதெல்லாமறியப்படுமென்று சொல்வதற்கு அபரவித்யைபரவித்யையென்று பிரித்துச் சொல்லப்படுகையால் குற்றமில்லை என்று சங்கரபாஷ்யாபிப்ராயம். ப்ரம்மத்தையடைவதற்கு இரண்டுவித்யைகளறியத்தக்கவை என்கிறவிடத்தில் அடைவதற்கு என்கிறபதம் வருவிக்கப்பட்டது. இது, பகவத்பாஷ்யகாரர் ப்ரம்மத்தையடைய விரும்பினவனுக்கென்று இந்த சுருதி வ்யாக்யாநத்திலருளிச்செய்கையாலவரது திருவுள்ளமேயாம். அப்படிப்பட்டப்ரம்மமறியப்பட்டபோது எல்லாமறியப்படுமென்பதும் சேர்க்கப்பட்டது.சேராதபோது ப்ரசநம்வேறு உத்தரம்வேறென்று அஸங்கதமாம்.ஆகையால் பதஉணையால் விளங்கும் கருத்தே இந்த சுலோகத்தின் கருத்தென்று இராமாநுஜ பாஷ்யத்திலடங்கிய வபிப்ராயம்.

௫. தத்ராபரா ருக்₃வேதோ₃ யஜுர்வேத₃: ஸாமவேதோ₃ அத₂ர்வவேத₃: ஶிக்ஷா கல்போ வ்யாகரணம் நிருக்தம் ச₂ந்தோ₃ ஜ்யோதிஷமிதி அத₂ பரா யயா தத₃க்ஷரமதி₄க₃ம்யதே॥

௫. தத்ராபராருக்வேதோயஜுர்வேதஸ்ஸாமவேதோதர்வவேதஶ்ஶிக்ஷாகல்போவ்யாகரணம்நிருக்தம்சந்தோஜ்யோதிஷமிதி அதபராயயாததக்ஷரமதிகம்யதே ||

(ப்-ம்.) தத்ர-இவ்வித்யைகளுக்குள், அபரா - அபரவித்யையானது ருக்₃வேத₃:-யஜுர்வேத₃: ஸாமவேத₃: அத₂ர்வவேத₃: ஶிக்ஷா கல்ப: வ்யாகரணம் நிருக்தம் ச₂ந்த₃: ஜ்யோதிஷம் இதி-ருக்யஜுஸ்ஸாமாதர்வணங்களென்கிற நான்குவேதங்களும் சிக்ஷைமுதலிய ஆறங்கங்களுமாகிய இவையேயாம். அத₂ பரா யயா தத₃க்ஷரம் அதி₄க₃ம்யதே - யாதொன்றாலே யந்தவக்ஷரபரப்ரம்ம மறியப்படுமோ, ஸா பரா - அந்த பரவித்யையென்று சொல்லப்படுகிறது.

ஸ௦-ஹா.—அதிகம்யதே என்கிறபதத்திற்கு அடையப்படுமென்று பொருள் அறியப்படுமென்று பொருளாலும் அடையப்படுமென்றே பொருள்சொல்லப்பட்டதாம் எவ்வழியாலேயெனில்; அவித்யை நீங்குதலேயன்றோ ப்ரம்மப்ராப்தி யாகின்றது; வேறல்லவன்றோ; அவித்யைநீங்குவது ப்ரம்மத்தையறிந்தாலன்றோ. ஆனதால் ப்ரம்மத்தை யறிந்தபோதே அவித்யைநீங்குகையால் ப்ரமத்தையடைவதும் ப்ரம்மத்தையறிவதுமொன்றேயாம். இனி, இங்குபரவித்யையை வேதங்களில் சேராததாகச்சொல்லுகின்றமையால், "யா வேத₃பா₃ஹ்யா: ஸ்ம்ருதய:" என்கிற வசநத்தின்படி வேதபாஹ்யங்களானவை அப்ரமாணங்களாய் மோக்ஷவிரோதிகளாயிருக்குமாகையால் வேதபாஹ்யமான பரவித்யை மோக்ஷஸாதநமாயாவது எங்ஙநமெனில்; உபநிஷத்துக்களை வேதபாஹ்யங்களென்றிங்கு சொல்லவில்லை. ப்ரம்மஜ்ஞானத்தை சப்தரூபமாகிய வேதத்தில் வேறென்றுசொல்லிற்று அபரவித்யை சப்தரூபமாகிய வேத சாஸ்த்ரமாகையாலே பரவித்யைப்படி யானதல்லவென்று சொல்லப்பட்டது. உபநிஷத்தினால் சொல்லப்படுகிற அக்ஷரபரப்ரம்மம் ஆசார்யனைக்கிட்டி வைராக்யமடைந்தவனு லறியப்படுமென்று ப்ரம்மவித்யையைப் பிரித்து பரவித்யையென்று பேரிட்டது.

ஶா - ஹா.—பரவித்யை அபரவித்யையென்றெடுத்த க்ரமத்தைவிட்டு முன்னபரவித்யையைச்சொல்வது ஸூசீகடாஹந்யாயத்தாலே ஆறங்கங்களும் உபப்ருஹ்மணங்களானஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களும் நான்குவேதங்களும் வேதாந்தகளுமாகிய சாஸ்திரத்தால் பிறக்கிற ப்ரத்யக்ஷரூபமாகாத சாப்தஜ்ஞாநமபரவித்யை எனப்படுகிறது. பரவித்யையாவது—விவேகம் விமோகம் அப்யாஸம் க்ரியைகல்யாணம் அநவஸாதம்அநுத்தர்ஷம் என்கிற ஸாதநஸப்தகஸஹாயத்தாலே பிறக்குமதாய் ச்ரவணத்தால் பிறந்தபரோக்ஷ ஜ்ஞாநத்திற்குப் பின்னுண்டாவதாய் ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாயிருக்கிற ஜ்ஞாநமேயாம். இத்தால், பகவத்பாஷ்யகாரரருளிச் செய்தபடி ச்ருதிதாத்பர்யமென்று காட்டப்பட்டது.

ரு. யத்தத³த்³ரேஶ்யமக்³ராஹ்யமகோ³த்ரமவர்ணமசக்ஷு:ஶ்ரோத்ரம் தத³பாணிபாத³ம்। நித்யம் விபு⁴ம் ஸர்வக³தம் ஸுஸூக்ஷ்மம் தத³வ்யயம் யத்³பூ⁴தயோநிம் பரிபஶ்யந்தி தீ⁴ரா:॥

ரு. யத்ததத்³ரேஸ்யமக்ராஹ்யமகோத்ரமவர்ணமசக்ஷுஶ்ஶ்ரோத்ரம்தத³பாணிபாதம் | நித்யம்விபுமஸர்வகதம்ஸுஸூக்ஷ்மமவ்யயம்யத்பூதயோநிம்பரிபஶ்யந்திதீரா: ||

(ப்-ம.) யத்-யாதொன்று, அத்³ரேஶ்யம்-அறியப்படாததோ, அக்³ராஹ்யம்-கிரகிக்கப்படாததோ, அகோ³த்ரம்-குலமில்லாததோ, அவர்ணம்-ப்ரம்மக்ஷத்ரியாதி ஜாதியில்லாததோ, அசக்ஷு:ஶ்ரோத்ரம்-கண்காது முதலிய ஜ்ஞானேந்திரியங்களில்லாததும், தத்-அப்படியே பரஸித்தமானதும், அபாணிபாத³ம்-கைகால் முதலிய கர்மேந்திரியங்களில்லாததும், நித்யம்-காலபரிச்சேதமில்லாததும், விபு⁴ம்-தேசபரிச்சேதமில்லாததும், ஸர்வக³தம்-ஸ்வதுபரிச்சேதமில்லாததும், ஸுஸூக்ஷ்மம்-மிகச்சூக்ஷ்மமானது, யத்-யாதொன்றோ, தத்-அதானது, அவ்யயம்-அக்ஷரபரப்ரம்மமாம், யத்-யாதொருப்ரம்மத்தை, தீ⁴ரா:-அறிவுடையோர், பூ⁴தயோநிம்-ஸமஸ்தபூதங்களுக்கு முபாதாநகாரணமென்று, பரிபஶ்யந்தி-அறிகிறார்கள்.

பா - ஸா—யாகம் முதலியவற்றை விதிக்கும்போது கர்தாகரணம் முதலியவனேகஸாமக்ரிகளை போதிக்கிறவாக்கியார்த்தஜ்ஞானம் வந்தபின்னநுஷ்டிக்கவேண்டியக்ரியையுண்டாயிருக்கிறப்போலே பரவித்யைஸ்தலத்தில்பின்னனுஷ்டிக்கவேண்டியக்ரியையொன்றில்லை. வாக்கியார்த்தத்தை யறிந்தபோதே பரவித்யை முற்றுப்பெறுகிறது; வாக்கியங்களில் சொல்லாபடி அர்த்தங்களில் நிஷ்டையொழிய மற்றொன்றுமில்லாமையாலே. ஆனதால் வியவித்யையை நிச்சயிப்பதற்கு விசேஷணங்களுடனக்ஷரபரப்ரம்மத்தை யோதிபரசேஷப்படுத்துகிறது. இனி சொல்லப்போகிற ப்ரம்மத்தை புத்தியில் தேக்கிக்கொண்டிருக்கையால் யாதொன்றெனப் பேசப்படுகிறது ஜ்ஞானம்புறப்படும் வழியாகிய பஞ்சேந்திரியம்புத்தி முதலியவற்றுக்குத் தோற்றுததும் கர்மேந்திரியங்களுக்கு விஷயமல்லாததும் மூலகாரண ஸம்பந்தமில்லாததும் த்ரவ்ய தர்மங்களாகிய ஸ்தூலத்வமுதலிய தர்மங்களில்லாததும் நாமரூபங்களை க்ரஹியாநிற்கிற கண்செவிமுதலியவை யில்லாததும் கர்மேந்திரியமில்லாததும் இவ்வாறு க்ரஹிக்கப்படுதலும் க்ரஹித்தலுமில்லாமையாலே நித்யமானதும் நாநாரூபத்தையுடைவதும் ஆகாயம்போலே வ்யாபகமானதும் சப்தாதிஸ்தூலகாரணங்களில்லாமையால் மிகச்சூக்ஷ்மமானதும் இப்படிப்பட்டதானதாலழியாததுமான ப்ரம்மத்தை எல்லாவற்றிற்கு மாத்மாகவும் ஸர்வபூதங்களுக்கு முபாதாநகாரணமாகவும் விவேகிகளறிகிறார்கள். ப்ரம்மமெல்லாவற்றையு மறிந்ததென்று சொல்லுகையால் உலகத்திலறிபவர்க்கு இந்திரியஸஹாயம் வேண்டியிருப்பதாலவ்வாறு ப்ரமத்திற்கு வேண்டுவதில்லையென்று சொல்வதுமுக்யமாம். இப்படியே கண்ணில்லாமலே பார்க்கிறான் காதில்லாமலே கேழ்கிறானென்று வேறுச்ருதிகளும் சொல்லுகின்றன. சப்தாதிஸ்தூலகாரணமில்லாமையாலென்றது சப்தாதிகுணங்களையுடைய ஆகாசம் வாயு அக்நிமுதலிய

வையொன்றிலுமொன்று ஸ்தூலமாயிருப்பதுபற்றி. அழிவில்லாததென்பதற்கு சரீரமில்லாமையும் வேறுபாடில்லாமையும் குணமில்லாமையும் காரணமாகிறது. இவையுண்டாகிலன்றோ இவைகளின் வழியாலே குறைவரக்கூடும் இவையில்லையானதாலெவ்வழியாலுங்குறையில்லை ஆகஇப்படிப்பட்டப்ரம்மத்தையறியச்செய்வது பரவித்யையென்று முடிவானகருத்து.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பதவுரையின்படிவிளங்குங் கருத்தே இராமாநுஜபாஷ்யத்தில் கொள்ளப்பட்டது. யோநிசப்தம் உபாதாநகாரணத்தைச் சொல்லுமென்பதுமேல்வாக்யத்தால் விளங்குமென்று பகவத்பாஷ்யகாரரருளிச்செய்தாரென்று யோனிசப்தம் உபாதாநகாரணத்தை போதிப்பதற்குக்காரணமும் ப்ரமாணமாகப்ரக்ருத்யதிகரணபாஷ்யமும் காட்டப்பட்டது.

௭. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌨𑌾𑌪𑌰𑌮𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌣𑍀𑌯𑍋 𑌨 𑌜𑍍𑌯𑌾𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 । 𑌵𑍃𑌕𑍍𑌷 𑌇𑌵 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋 𑌦𑌿𑌵𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑍇𑌕𑌸𑍍𑌤𑍇𑌨𑍇𑌦𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 ॥

௭. யஸ்மாத்பரம்நாபரமஸ்திகிம்சித்யஸ்மாந்நாணீயோநஜ்யாயோஸ்திகச்சித் | வ்ருக்ஷஇவஸ்தப்தோதிவிதிஷ்டத்யேகஸ்தேநேதம்பூர்ணம் புருஷேணஸர்வம் ||

(ப்-ம்.) 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍-யாதொருப்ரம்மத்தைக்காட்டில், 𑌪𑌰𑌂 𑌅𑌪𑌰𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 - வேறொருசிறந்தவஸ்து கிடையாதோ, 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌣𑍀𑌯𑌃 𑌨-எந்தப்ரம்மத்தில் சிறியதில்லையோ, 𑌯𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑍍𑌯𑌾𑌯𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌨 - எந்தப்ரம்மத்தில்பெரியதில்லையோ, அப்படிப்பட்டப்ரம்மமாகிய பரமபுருஷன் 𑌏𑌕𑌃 𑌵𑍃𑌕𑍍𑌷 𑌇𑌵 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃 𑌦𑌿𑌵𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿-ஒருவனுய் வ்ருக்ஷம்போலே யொருவருக்கும்வணங்காதவனுய் பரமபதத்திலிருக்கிறுன், 𑌤𑍇𑌨 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍍 - அந்தபரமபுருஷனுலிவையெல்லாம் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது.

𑌭𑌾-𑌷𑌾.—ப்ரம்மம் எல்லாவற்றிற்கு முபாதாநகாரணமென்பது சேரும்வழியாது? மண்முதலியவையே கடமுதலியவற்றிற்கு பாதாநகாரணமாகின்றனவன்றோ; எனில் சொல்லுகிறது. எல்லாவற்றிற்குமாத்மாவாயிருப்பதால் மண்முதலியவற்றைச் சரீரமாகஉடைய ப்ரம்மமேகாரணமாகின்றது; ஆனதால் விரோதமில்லை ஆக இப்படிஸர்வோபாதாநமாகையால் ப்ரம்மத்தில் சிறந்தவஸ்து மற்றொன்றில்லை அணுவுக்கணுமகத்துக்கு மகத்தாயிருக்கும் அந்தப்ரம்மமேபுருஷோத்தமன். இவனுக்கு ஸ்வாமிஒருவனுமில்லாமையாலே யாருக்குமிவன்வணங்கான். அவனுக்கிருப்பிடம் பரமபதம் இத்தமந்திரத்திற்குச் சிலர்வ்யாக்யாநம் செய்யவில்லையாயினும் ஸ்ரீவ்யாஸாசார்யர் வ்யாக்யாநம் செய்தார்.

பதாந்வயார்த்தபேதங்கள.

இந்த மந்திரத்திற்கு சங்கரபாஷ்யமில்லை. இதுபற்றியே சிலரிம்மந் திரத்திற்கு வ்யாக்கியானம் செய்யவில்லை என்று இராமாநுஜபாஷ்யத்தில் சொன்னது.

௮. 𑌯𑌥𑍋𑌰𑍍𑌣𑌨𑌾𑌭𑌿𑌃 𑌸𑍃𑌜𑌤𑍇 𑌗𑍃𑌹𑍍𑌣𑌤𑍇 𑌚 𑌯𑌥𑌾 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌷𑌧𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌯𑌥𑌾 𑌸𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌤𑍍𑌕𑍇𑌶𑌲𑍋𑌮𑌾𑌨𑌿 𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌸𑌂𑌭𑌵𑌤𑍀𑌹 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍍 ॥

௮. யதோர்ணநாபிஸ்ஸ்ருஜதே க்ருஹ்ணதே சயதாப்ருதிவ்யாமோ ஷதயஸ்ஸம்பவந்தி | யதாஸதப்புருஷாத்கேசலோமாநிததாக்ஷராதஸம்ப வதீஹவிச்வம் ||

(ப்-ம்.) 𑌊𑌰𑍍𑌣𑌨𑌾𑌭𑌿𑌃-சிலந்திப்பூச்சியானது, 𑌯𑌥𑌾 - எப்படி, 𑌸𑍃𑌜𑌤𑍇-ஸ்ருஷ்டிக்கின்றதோ, 𑌗𑍃𑌹𑍍𑌣𑌤𑍇 𑌚-கிரஹிக்கின்றதோ, 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑍍 𑌓𑌷𑌧𑌯𑌃 𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 - பூமியிலெப்படி பலைவைதிகளுண்டாகின்றன வோ, 𑌯𑌥𑌾 𑌸𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌤𑍍𑌕𑍇𑌶𑌲𑍋𑌮𑌾𑌨𑌿 - ஜீவித்திருக்கிற மனிதனி டத்தில் எப்படி கலைமயிர் உடம்புமயிர்பிறக்கின்றனவோ, 𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍 𑌇𑌹 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 - அப்படியே அக்ஷரபரப்ரம்மத்திலிருந்து ஸமஸ்த முமுண்டாகிறது.

𑌸𑌂 - 𑌸𑌾.—அனேகதிருஷ்டாந்தங்களால் அக்ஷரபரப்ரம்மம் உபாதாநகாரண மென்பதை வலியுறுத்துகிறது.

𑌸𑌂 - 𑌭𑌾.—உபாதாநகாரணமும் அதின்காரியமும் ஏகஜாதியாயிருக்கவேண்டும்; அன்றியிலே உபாதாநகாரணத்தில் வேறான நிமித்தகாரண மொன்றுண்டாகையால துஉபாதாநஜ்ஞாநத்தாலறியப்படாமையாலு பாதாநகாரணமாகிய ப்ரம்மமொன்றை யறிந்தபோதே எல்லாமறியப்படுமென்பதற்கு வழியில்லை. உபாதாநகாரணத்தியமுன் ரூபம்மாறியே காரியமாகையாலு பாதாநகாரணமாகிய ப்ரம்மத்திற்கு முன்ரூபம் மாறவேண்டும் ப்ரம்மத்திற்குரூபம்மாறாது ஆனதாலிது சேரும்படியாதெனில் இந்த சங்கையை இந்தமந்திரம் தீர்க்கின்றது. எப்படி சிலந்திப்பூச்சிமுதலியவை சரீர த்வா ரா வேறொருநிமித்தத்தை வேண்டாமல் தன்ஸ்வரூபமும் கெடாமலுபாதாநகாரண மாகின்றனவோ, இப்படியே ப்ரம்மமும் சேதநாசேதநமாகிய சரீரத்வார உபாதாந காரணமாகையாலொரு தோஷமுமில்லை ஆகையால் ப்ரம்மம் எல்லாவற்றிற்கு மு பாதாநகாரணமாகிறது.

௯. 𑌤𑌪𑌸𑌾 𑌚𑍀𑌯𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑍋𑌽𑌨𑍍𑌨𑌮𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌅𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌮𑌨𑌃 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌚𑌾𑌮𑍃𑌤𑌮𑍍 ॥

௯. தபஸாசீயதேப்ரஹ்மததோந்நமபிஜாயதே |
அந்நாத்ப்ராணோமநஸ்ஸத்யம்லோகா:கர்மஸுசாம்ருதம் ||

(ப்-ம்) ப்ரஹ்ம-பரப்ரம்மமானது, தபஸா-ஸங்கல்பத்தால், சீயதே-ஸ்தூலாவஸ்தையையடைகிறது. ததஃ-அந்த ஸ்தூலாவஸ்தப்ரம்மத்திலிருந்து, அந்நம்-அபிஜாயதே-அவ்யாக்ருதமென்கிற ப்ரக்ருதியுண்டாகும், அந்நாத்-அந்தப்ரக்ருதியிலிருந்து, ப்ராணஃ-ப்ராணனும், மநஃ-மனஸ்ஸும், ஸத்யம்-ஜீவாத்மாக்களும், லோகாஃ-அவர்களுக்கு லோகங்களும், கர்மஸு அம்ருதம்-மோக்ஷோபாயமும் பிறக்கும்.

ஸ்ரீ. ஸா.—பிரம்மத்தினிடத்தில் பிறக்கும்போது கிரமம் விளங்க இம்மந்திரம் போதிக்கிறது. ப்ரம்மத்திலிருந்து ப்ரக்ருதியும் ப்ரக்ருதியிலிருந்து ஹிரண்யகர்பனும் ஹிரண்யகர்பனிடத்திலிருந்து மனஸ்ஸும் மநஸ்ஸிலிருந்து பூதபஞ்சகமும் பூதபஞ்சகத்திலிருந்து எல்லாஉலகமும்பிறக்கும் அந்தலோகங்களில் வர்ணாச்ரமங்களுக்குத்தக்ககர்மங்களும் கர்மபலங்களுமுண்டாகின்றன

ப்ர. ஸா.—ப்ரம்மத்திலிருந்த உலகம்பிறக்கும்வழியோதுகிறது ப்ரம்மம் ஸங்கல்பத்தாலே சரீரத்வாரா ஜகத்தாகப் பரிணமித்து தன்னம்சமாகிய ஜீவாத்மாக்களுக்கு மோக்ஷஸாதநமாகிய கர்மங்களை யுண்டுபண்ணித்தந்து மோக்ஷபலத்தைத் தருகிறது. இதனைவிரிவுபாஷ்யத்திலும் ச்ருதப்ரகாசிகையிலும் கண்டுகொள்வது.

௯. யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தபஃ।
தஸ்மாதேதத் ப்ரஹ்ம நாம ரூபமந்நம் ச ஜாயதே॥

௯. யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்யஸ்யஜ்ஞாநமயந்தபஃ ।
தஸ்மாதேதத்ப்ரஹ்மநாமரூபமந்நஞ்சஜாயதே ॥

(ப்-ம்.) யஃ-எந்தஅக்ஷரபரப்ரம்மம், ஸர்வஜ்ஞஃ-எல்லாவற்றையுமறிந்ததோ, யஃ-எந்தப்ரம்மம், ஸர்வவித்-எல்லாவிசேஷங்களையுமறியுமோ, யஸ்ய-எந்தப்ரம்மத்திற்கு, தபஃ ஸங்கல்பமானது, ஜ்ஞாநமயம்-ஜ்ஞாநமேயோ, தஸ்மாத்-அந்தப்ரம்மத்திலிருந்து, ஏதத்-ப்ரஹ்ம நாமரூபம் அந்நம் ச ஜாயதே - முன்சொன்னபடி நாமரூபாத்மகமாகிய ப்ரபஞ்சமுண்டாகிறது.

ஸ்ரீ. ஸா.—இந்த சொல்லியபடியே பொருள்கொள்வதால் முன்சொல்லியக்ரமத்திற்கு விரோதமில்லை.

ரா. ஸா.—இந்த மந்திரத்தில் ஸர்வஜ்ஞத்வம் விதிக்கப்படுகிறது என்று கொள்க. இப்படி கொள்வதே மீமாம்ஸாந்யாயத்திற்குச் சேரும் ப்ரம்மமே உபாதாநமும் நிமித்தமும் என்பது இம்மந்திரத்தால் விளங்கும். அந்த ப்ரம்மம் நாராயணன் வேறுதேவதையல்ல. விஸ்தரம் வேறிடத்திலறியத்தக்கது.

முதல்முண்டகம்முதல்கண்டம்முற்றிற்று.

பரப்ரம்மணே நமஃ

---

𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌖𑌣𑍍𑌡𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

𑌸𑌂𑌹𑌿𑌤𑌾.

---

க. 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿𑌕𑌵𑌯𑍋𑌯𑌾𑌨𑍍𑌯𑌪𑌶𑍍𑌯𑌂𑌸𑍍𑌤𑌾𑌨𑌿𑌤𑍍𑌰𑍇𑌤𑌾𑌯𑌾𑌂𑌬𑌹𑍁𑌧𑌾𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌨𑌿 । 𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌚𑌰𑌥𑌨𑌿𑌯𑌤𑌂 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌾𑌏𑌷𑌵𑌃𑌪𑌨𑍍𑌥𑌾𑌃𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯𑌲𑍋𑌕𑍇 ॥

**க. ததேதத்ஸத்யம்மந்த்ரேஷு கர்மாணி கவயோயாந்யபஶ்யம்ஸ்தா நித்ரேதாயாம்பஹுதாஸந்ததாநி | தாந்யாசரதநியதம்ஸத்யகாமாஏஷவ: பந்தாஸ்ஸுக்ருதஸ்யலோகே ||**

(பதம்.) 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂-அப்படிப்பட்டவிது ஸத்யம். 𑌕𑌵𑌯𑌃𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁𑌯𑌾𑌨𑍀𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 - மகர்ஷிகள் வேதமந்திரங்களில் எந்த கர்மங்களைக்கண்டார்களோ, 𑌤𑌾𑌨𑌿𑌤𑍍𑌰𑍇𑌤𑌾𑌯𑌾𑌂 𑌬𑌹𑍁𑌧𑌾𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌨𑌿- அந்த அக்நிஹோத்ராதி கர்மங்கள் த்ரேதாக்நியில பலவாகவிதிக்கப்பட்டன, 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌾𑌃-ஸத்யமான ப்ரமத்தைவிரும்புகின்ற அதிகாரிகளே, 𑌨𑌿𑌯𑌤𑌂𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌚𑌰𑌤 - தப்பாமல அந்தகர்மங்களை யநுஷ்டியுங்கோள், 𑌸𑍁𑌕𑍃𑌤𑌸𑍍𑌯𑌲𑍋𑌕𑍇𑌏𑌷𑌵𑌃𑌪𑌨𑍍𑌥𑌾𑌃 மோக்ஷத்திற்காகச்செய்கிற உபாஸநத்திற்கு இந்தகர்மாநுஷ்டாநமங்கமாகையாலே பலமாகியமோக்ஷத்திற்கு வழியாம்.

பா - ஸா.—"பரீக்ஷ்யலோகாந்கர்மசிதாந்" என்கிறபடி கர்மங்களைப் பரீக்ஷித்து அவைகளைவிட்டு ப்ரம்மவிசயையிலிழிவதற்கு கர்மாநுஷ்டாநவிதி சொல்லப்படுகிறது.

ரா - ஸா.—மோக்ஷஸாதநமாகிய உபாஸநாங்கமாக கர்மாநுஷ்டாநம் விதிக்கப்படுகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

மற்றக்கருத்து இரண்டுபாஷ்யங்களுக்கு மொன்றே.

உ. 𑌯𑌦𑌾𑌲𑍇𑌲𑌾𑌯𑌤𑍇𑌹𑍍𑌯𑌰𑍍𑌚𑌿𑌃𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑍇𑌹𑌵𑍍𑌯𑌵𑌾𑌹𑌨𑍇 । 𑌤𑌦𑌾𑌜𑍍𑌯𑌭𑌾𑌗𑌾𑌵𑌨𑍍𑌤𑌰𑍇𑌣𑌾𑌹𑍁𑌤𑍀𑌃𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌾𑌦𑌯𑍇𑌚𑍍𑌛𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌹𑍁𑌤𑌮𑍍 ॥

**உ. யதாலேலாயதேஹ்யர்சிஸ்ஸமித்தேஹவ்யவாஹநே | ததாஜ்யபாகாவந்தரேணாஹுதீ: ப்ரதிபாதயேச்சரத்தயாஹுதம் ||**

(பதம்) 𑌸𑌮𑌿𑌦𑍍𑌧𑍇𑌹𑌵𑍍𑌯𑌵𑌾𑌹𑌨𑍇 𑌅𑌰𑍍𑌚𑌿𑌃𑌲𑍇𑌲𑌾𑌯𑌤𑍇 𑌯𑌦𑌾𑌤𑌦𑌾 - அக்நி ஜ்வலிக்கும்போது, 𑌆𑌜𑍍𑌯𑌭𑌾𑌗𑌾𑌵𑌨𑍍𑌤𑌰𑍇𑌣𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌆𑌹𑍁𑌤𑍀𑌃

ஹுதிவாதியெசு ஜ்வாலையில், ஆஜ்யபாகமத்யத்தில் ஆகுதிஹோமம்பண் ணக்கடவன், ஹுதஃ - அதுதலைஹோமமாகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பதஉரையாலே விளங்குங்கருத்து இரண்டுபாஷ்யங்களுக்கு மொ ண்றே.

ஙு. யஸ்யாக்நிஹோத்ரமதர்ஶமபௌர்ணமாஸமசாதுர்மாஸ்யமநாக்ரயணமதிதிவர்ஜிதஞ்ச | அஹுதமவைஶ்வதேவமவிதிநாஹுதமாஸப்தமாம்ஸ்தஸ்ய லோகாந்ஹிநஸ்தி ||

ஙு. யஸ்யாக்நிஹோத்ரமதர்ஶமபௌர்ணமாஸமசாதுர்மாஸ்யமநா க்ராயணமதிதிவர்ஜிதஞ்ச | அஹுதமவைஶ்வதேவமவிதிநாஹுதமாஸப் தமாம்ஸ்தஸ்யலோகாந்ஹிநஸ்தி ||

(ப-ம்.) யஸ்ய-யவனுடைய, அக்நிஹோத்ரஃ - அக்நிஹோத்ரமானது, அதர்ஶஃ-தர்சகர்மமில்லாததோ, அபௌர்ணமாஸஃ- பௌர்ணமாஸ கர் மமில்லாததோ, அசாதுர்மாஸ்யஃ-சாதுர்மாஸ்யகர்மமில்லாததோ, அநா க்ராயணஃ - ஆக்ராயணகர்மமில்லாததோ, அதிதிவர்ஜிதஃ - அதிதிபூஜை யில்லாததோ, அவைஶ்வதேவஃ-வைச்வதேவகர்மமில்லாததோ, அவிதிநா ஹுதஃ - விதிப்படி ஹோமம்பண்ணப்படாததோ, அப்படிப்பட்ட அக்நி ஹோத்ரமானது, அஹுதஃ ஹோமம்பண்ணப்படாததாம். அதுவும்த விர, தஸ்ய - அப்படிஹோமம்பண்ணவனுடைய, ஆஸப்தமாந்-லோகாந் ஏழுபுருஷன்வரையிலும் பலங்களையும், ஹிநஸ்தி-அழிக்கின்றது.

ஸா - ஹா.—ரா - ஹா.—எவனக்நிஹோத்ரகர்மத்தை விதிப்படி யநுஷ்டியா மலும் அக்நிஹோத்ராதி காரிக்கவச்யமான தர்சாதியாகங்களைச் செய்யாமலும் இரிகிறானோ அவன்செய்த அக்நிஹோத்ராதி கர்மங்கள் வீணாவதோடு இவையும் இவனைச்சோந்தாரையு மழித்துக்கெடுக்கும். ஆனதால் எல்லாக்கர்மங்களையும் தவராம லநுஷ்டித்தாலது பயன்தருமல்லது சப்பினால் ஸங்கடங்களை யுண்டுபண்ணும் என்று பயத்துடன் தவராமல் அவைகளை யநுஷ்டிக்கக்கடவான்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

தர்சாதியாகங்கள் அக்நிஹோத்ரத்திற்கு அங்கமல்லவாயினும் நித்ய நைமித்திகசர்மங்களைத் தவராம லநுஷ்டிக்கவேணுமென்று கருத்தி னலிப்படி கூறப்பட்டது. இக்கருத்து பகவத்பாஷ்யகாரராலும் வெளியி டப்பட்டது, என்று இராமாநுஜ பாஷ்யத்தில் விசேஷம்.

ச. காளீகராளீசமநோஜவாசஸுலோஹிதாயாசஸுதூம்ரவ ர்ணா | ஸ்புலிங்கிநீவிஶ்வருசீசதேவீலேலாயமாநாஇதிஸப்தஜிஹ்வா:||

ச. காளீகராளீசமநோஜவாசஸுலோஹிதாயாசஸுதூம்ரவர்ணா | ஸ்புலிங்கிநீவிஸ்வருசீசதேவீலேலாயமாநாஇதிஸப்தஜிஹ்வா:||

(ப-ம்.) காலீ-காளியென்றும், கராலீ ச - கராளியென்றும், மநோஜவா ச - மனோஜவை யென்றும், ஸுலோஹிதா - சுலோகிதை யென்றும், யா - யாதொன்று, ஸுதூம்ரவர்ணா - சுதூம்ரவர்ணை யெனப்பட்டதோ, (அதுவும்) ஸ்புலிங்கிநீ - ஸ்புலிங்கினியென்றும், தேவீ - பூசிக்கத்தக்கதான, விச்வரூபீ ச - விச்வரூபியென்றும், லேலாயமாநா: - அசைந்துகொண்டிருக்கிற, ஸப்த - ஏழு, ஜிஹ்வா: - நாக்குகள்.

ஸம்-ஸா-ரா-ஸா.—பதார்த்தயார்த்த பேதங்களில்லை. இதி, என்பது-என்றும், என்றபொருளைத்தருகின்றது; அதுஒன்றேயாயினும் பலவிடங்களிலும் சேர்த்துக்கொள்க.

ரு. ஏதேஷு யச்சரதே ப்⁴ராஜமாநேஷு யதா²காலம் சாஹுதயோ ஹ்யாத³தா³யந் । தந்நயந்த்யேதா: ஸூர்யஸ்ய ரச்மயோ யத்ர தே³வாநாம் பதிரேகோ(அ)தி⁴வாஸ: ॥

౫. ఏతేషు యశ్చరతే భ్రాజమానేషు యథాకాలంచాహుతయో హ్యాదదాయన్ ।
తంనయంత్యేతాస్సూర్యస్యరశ్మయో యత్రదేవానాంపతిరేకోధివాసః ॥

(ப-ம்.) ப்⁴ராஜமாநேஷு - விளங்குகிற, ஏதேஷு - இந்த நாக்குகளில், ய: - யாதொருவன், யதா²காலம் - விதித்தகாலங்களில், சரதே - ஹோமம்செய்கிறானோ, தம் - அவனை, ஆஹுதய: - ஹோமாஹுதிகள், ஆத³தா³யந் - அழைத்துக்கொண்டு, ஏதா: - இந்த, ஸூர்யஸ்ய - சூரியனுடைய, ரச்மய: - கிரணங்களாக, (பூ⁴த்வா - ஆகி,) யத்ர - எந்தவிடத்தில், தே³வாநாம் - தேவர்களுக்கு, பதி: - தலைவனானபிரமன், ஏக: - ஒப்பற்றவனாக, அதி⁴வாஸ: - இருக்கிறானோ, தத்ர - அவ்விடத்தில், நயந்தி-கொண்டுவிடுகிறதுகள்.

ஸம்-ஸா-ரா-ஸா.—மேற்கூறிய அக்கினியின் நாக்குகளில் அவ்வோகாலங்களில் செய்யப்பட்ட வாகுதிகள் சூரியனுடைய கிரணங்களில் சேர்ந்துகொண்டு ஹோமஞ் செய்த புருஷனை எந்த விடத்தில் சகல தேவர்க்கு மதிபதியாகிய சதுர்முகன் வீற்றிருக்கிறானோ அவ்விடத்தில் கொண்டுசேர்க்கின்றன. இந்திரலோகத்தில் சேர்க்கின்றன என்பது சங்கரபாஷ்யத்தில் பேதம்.

சு. ஏஹ்யேஹீதி தமாஹுதய: ஸுவர்சஸ: ஸூர்யஸ்ய ரச்மிபி⁴ர்யஜமாநம் வஹந்தி । ப்ரியாம் வாசமபி⁴வத³ந்த்யோ(அ)ர்சயந்த்ய ஏஷ வ: புண்ய: ஸுக்ருதோ ப்³ரஹ்மலோக: ॥

౬. ఏహ్యేహీతి తమాహుతయస్సువర్చసస్సూర్యస్యరశ్మిభిర్యజమానంవహన్తి ।
ప్రియాంవాచమభివదంత్యోర్చయన్త్య ఏషవఃపుణ్యస్సుకృతోబ్రహ్మలోకః ॥

(ப-ம்.) தம் - அந்த, யஜமாநம் - யஜமானனை, ஸூர்யஸ்ய-சூரியனுடைய, ரச்மிபி⁴: - கிரணங்களோடு, ஸம்யுக்தா: - சேர்ந்த, ஸுவர்சஸ: - நல்லொளியோடுகூடிய, ஆஹுதய:-ஆகுதிகள், ஏஹி-ஏஹி-இதி-வாரும், வாரும், என்றும், ஏஷ: - இந்த, புண்ய: - சுத்தமான, ஸுக்ருத: - நல்ல

றத்தால் சாதிக்கப்பட்ட, ப்ரஹ்மலோகஃ - சதுர்முகனுலகமானது, வஃ - உம்முடையது, (இதி - என்றும்) ப்ரியாம் - பிரியமான, வாசம் - வார்த்தையை, அபிவதந்த்யஃ-சொல்லிக்கொண்டும், அர்ச்சயந்த்யஃ-பூசித்துக்கொண்டும்; வஹந்தி - அழைத்துக்கொண்டுபோகின்றன.

பத-ஸா-ரா-ஸா.—இந்த புருஷனை மேற்கூறிய வாகுதிகள் சூரியனுடைய கிரணங்களுடன் சேர்ந்துகொண்டு வாரும்வாரும் சுத்தமாயும் நல்லறங்களால் பெறப்பட்டதாயுமுள்ள சதுர்முகனுலகம் உம்முடையதே யென்று பிரியவார்த்தைகளைச் சொல்லி யழைத்துக்கொண்டு போகின்றன. சதுர்முகனுலக மென்னுமிடத்தில் இந்திரனுலகமென்பது சங்கரபாஷியத்தில் பேதம்.

எ. ப்லவாஹ்யேதே அத்ருடா யஜ்ஞரூபா அஷ்டாதசோக்தமவரம் யேஷு கர்ம । ஏதச்ச்ரேயோ யேऽபிநந்தந்தி மூடா ஜராம்ருத்யும் தே புநரேவாபியந்தி ॥

౭. ప్లవా హ్యేతే అదృఢా యజ్ఞరూపాః అష్టాదశోక్తమవరం యేషు కర్మ।
ఏతచ్ఛ్రేయో యేఽభినన్దన్తి మూఢా జరామృత్యుం తే పునరేవాపి యన్తి॥

(ப-ம்.) அஷ்டாதசோக்தம் - பதினெட்டு பெயர்களால் செய்யவேண்டியதாக சொல்லப்பட்ட, அவரம் - தாழ்ந்த, கர்ம - யஜ்ஞமானது, யேஷு - எந்தபுருஷர்களிடத்தில் (வர்த்ததே - இருக்கிறதோ,) ஏதே - இந்த, யஜ்ஞரூபாஃ - யஜ்ஞம்செய்பவர்கள், அத்ருடாஃ - உறுதியற்ற, ப்லவாஃ - தோணிகள், ஏதத் - இந்தகர்மத்தை, ஶ்ரேயஃ - நற்கதிக்குக்காரணமாக, யே - எந்த, மூடாஃ - அறிவிலிகள், அபிநந்தந்தி - கொண்டாடுகிறார்களோ, தே - அவர்கள், ஜராம்ருத்யும் - கிழத்தனமரணங்களை, புநரேவ - மறுபடிதானே, அபியந்தி - அடைகிறார்கள்.

பத-ஸா.—ஜ்ஞானமில்லாமல் செய்யப்பட்ட யஜ்ஞம் முதலிய கருமங்கள் அவித்தையால் செய்யப்பட்டதாதலால் துக்கத்தையே விளைக்கத்தக்கவைகள் என்று சொல்லப்படுகிறது. பதினாறு ருத்விக்குகளும் பத்நி-யஜமானன் ஆக பதினெட்டு பெயர்களால் செய்யவேண்டியதாக சொல்லப்பட்ட கருமங்களை யெவர்கள் செய்கிறார்களோ; அவர்கள் உறுதியற்ற தோணிகள்போல் ஸம்ஸாரமாகிய சமுத்திரத்தை தாண்ட சக்தியற்றவர்கள். இவைகளை முக்திக்குக்காரணமாக எண்ணுகிறவர்கள் தங்கள் புண்ணியங்கள் கழிந்தபோதே மேலுலகமான சுவர்க்கத்தில் நின்றும் மீண்டும் ஸம்ஸாரத்தை யடைகிறார்கள்.

ரா-ஸா. பதினெட்டு பெயர்களால் செய்யவேண்டுவதாகச் சொல்லப்பட்ட கருமங்களை எவர்கள் தாழ்ந்தபயன்களை விரும்பிச் செய்கிறார்களோ அவர்கள் உறுதியற்ற தோணிகள்போல் ஸம்ஸாரமாகிற சமுத்திரத்தை தாண்ட சக்தியற்றவர்களாக விருக்கிறார்கள். அல்லது பதினெட்டு ஸ்மிருதிகளில் சொல்லப்பட்ட கருமங்கள் எந்த கருமங்களுக்கு அங்கங்களாகவிருக்கின்றனவோ. அந்த யஜ்ஞம் முதலிய கருமங்கள் உறுதியற்ற தோணிகள். அவைகளை நற்கதிக்குக்காரணமாக வெண்ணுகிறவர்கள் திரும்பவும் சம்சாரத்தை யடைகிறார்கள், என்று பலத்தைவிரும்பிச் செய்கிற கருமங்கள் நிந்திக்கப்படுகின்றன.

௮. अविद्यायामन्तरे वर्तमानाः स्वयं धीराः पण्डितं मन्यमानाः।
जङ्घन्यमानाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः॥

౮. అవిద్యాయామన్తరే వర్తమానాస్స్వయంధీరాః పండితంమన్యమానాః।
జంఘన్యమానాః పరియంతిమూఢా అంధేనైవ నీయమానా యథాంధాః॥

(ப்-ம்.) मूढाः - அறிவில்லாதவர்கள், अविद्यायाम् अन्तरे - அவித்யையின் நடுவில், वर्तमानाः - இருக்கின்றவர்களாய், स्वयम् - தாமே, धीराः - புத்திமான்கள், पण्डितंमन्यमानाः - பண்டிதர்கள், என்று நினைவுடையவர்களாய், जङ्घन्यमानाः - கிழத்தனம்முதலிய ரோகங்களால் பீடிக்கப்பட்டவர்களாய், अन्धेनैव - குருடனாலேயே, नीयमानाः - வழிகாட்டப்படுகிற, अन्धाः यथा - குருடர்கள்போல, परियन्ति - சுழலுகின்றார்கள்.

௯. अविद्यायां बहुधा वर्तमाना वयं कृतार्था इत्यभिमन्यन्ति बालाः।
यत्कर्मिणो न प्रवेदयन्ति रागात्तेनातुराः क्षीणलोकाश्च्यवन्ते॥

౯. అవిద్యాయాంబహుధావర్తమానా వయంకృతార్థా ఇత్యభిమన్యంతి బాలాః।
యత్కర్మిణో న ప్రవేదయంతి రాగాత్తేనాతురాః క్షీణలోకాశ్చ్యవన్తే॥

(ப்-ம்.) अविद्यायाम् - बहुधा वर्तमानाः - தேவர்மனுஷ்யர் முதலிய அநேகபேதங்களை யடைந்து இப்ப்ரக்ருதிமண்டலத்தில் வஸிக்கிற, बालाः - அறிவிலாதவர், वयम् - நாம், कृतार्थाः - எல்லாம்பெற்றவர்கள், इति - என்று, अभिमन्यन्ति - எண்ணுகிறாகள், यत् - எந்தகாரணத்தால், कर्मिणः - கர்மம்செய்பவர், रागात् - ஆசையினால், न प्रवेदयन्ति - தத்வத்தையறியார்களோ, तेन - அந்தகாரணத்தால், आतुराः - பீடிக்கப்பட்டவர்களாய், क्षीणलोकाः - புண்யங்கழிந்தவர்களாய், च्यवन्ते - புண்யலோகங்களினின்றும் நழுவுகின்றார்கள்.

பதார்த்தபேதங்கள்.

அவித்யை என்பதற்கு சங்கரபாஷ்யத்தில் மாயை என்றும் இராமாநுஜ பாஷ்யத்தில் ப்ரக்ருதி என்றும் பொருள்கூறப்பட்டிருக்கிறது. மற்றவைபத உரையில்போலவே இரண்டு சுலோகங்களிலும் இரண்டு பாஷ்யங்களிலு முரைக்கப்பட்டிருக்கின்றன.

௧௦. इष्टापूर्तं मन्यमाना वरिष्ठं नान्यच्छ्रेयो वेदयन्ते प्रमूढाः।
नाकस्य पृष्ठे ते सुकृतेऽनुभूत्वेमं लोकं हीनतरं वा विशन्ति॥

౧౦. ఇష్టాపూర్తంమన్యమానా వరిష్ఠంనాన్యచ్ఛ్రేయో వేదయన్తే ప్రమూఢాః।
నాకస్యపృష్ఠే తే సుకృతేఽనుభూత్వేమంలోకంహీనతరంవా విశన్తి॥

(ப-ம்.) 𑌪𑍍𑌰𑌮𑍂𑌢𑌾𑌃 - அறியாதவர்கள், 𑌇𑌷𑍍𑌟𑌾𑌪𑍂𑌰𑍍𑌤𑌂 - யாகம்செய்தல் தடாகமுதலியவையுண்டாக்குதல் இவைகளை, 𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑌂 - சிறந்ததாக, 𑌮𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌃 - நினைத்தவர்களாய், 𑌅𑌨𑍍𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑌃 - வேறுபுருஷார்த்தத்தை, 𑌨𑌵𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍇 - தெரிந்துக்கொள்ளுகிறதில்லை. 𑌤𑍇 - அவர்கள், 𑌸𑍁𑌕𑍃𑌤𑍇 - புண்யத்தாலாகிய, 𑌨𑌾𑌕𑌸𑍍𑌯𑌪𑍃𑌷𑍍𑌠𑍇 - ஸ்வர்க்கலோகத்தில், 𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 - கர்மபலத்தையநுபவித்து, 𑌇𑌮𑌂 𑌲𑍋𑌕𑌂 - இந்தமநுஷ்யலோகத்தையும், 𑌹𑍀𑌨𑌤𑌰𑌂𑌵𑌾 - நரகாதிலோகத்தையும் 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 - அடைகிறார்கள்.

௧௧. 𑌤𑌪𑌃𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑍇𑌯𑍇𑌹𑍍𑌯𑍁𑌪𑌵𑌸𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑌣𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑍋𑌭𑍈𑌕𑍍𑌷𑌚𑌰𑍍𑌯𑌾𑌂𑌚𑌰𑌨𑍍𑌤𑌃। 𑌸𑍂𑌰𑍍𑌯𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣𑌤𑍇𑌵𑌿𑌰𑌜𑌾𑌃𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑌿𑌯𑌤𑍍𑌰𑌾𑌮𑍃𑌤𑌸𑍍𑌸𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌹𑍍𑌯𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍𑌮𑌾॥

౧౧. తపశ్శ్రద్ధేయే హ్యుపవసన్త్యరణ్యే శాన్తావిద్వాంసో భైక్షచర్యాంచరన్తః।
సూర్యద్వారేణ తే విరజాః ప్రయాన్తియత్రామృతస్స పురుషో హ్యవ్యయాత్మా॥

(ப-ம்.) 𑌯𑍇 - யவர்கள், 𑌅𑌰𑌣𑍍𑌯𑍇 - ஏகாந்தஸ்தலத்தில், 𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 - சாந்தியுடையவர்களாய், 𑌭𑍈𑌕𑍍𑌷𑌚𑌰𑍍𑌯𑌾𑌂𑌚𑌰𑌨𑍍𑌤𑌃 - பிக்ஷைசெய்கிறவர்களாய், 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑌃 - உபாஸகர்களாய், 𑌤𑌪𑌃𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑍇 - ப்ரம்மத்தைபக்தியோடு, 𑌉𑌪𑌵𑌸𑌨𑍍𑌤𑌿 - உபாஸிக்கிறார்களோ, 𑌤𑍇 - அவர்கள், 𑌵𑌿𑌰𑌜𑌾𑌃 - தோஷமில்லாதவர்களாய், 𑌸𑍂𑌰𑍍𑌯𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 - ஸூரியமார்க்கத்தாலே, 𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 - போகிறார்கள், 𑌯𑌤𑍍𑌰 - யந்த பரமபதத்தில், 𑌅𑌮𑍃𑌤𑌃 - அம்ருத ஸ்வரூபியாயும், 𑌅𑌵𑍍𑌯𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 - அழிவில்லாதவராயுமிருக்கிற, 𑌸𑌃𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌹𑌿 - அந்த பரமபுருஷன் வஸிக்கிறாரோ; அந்தபரமபதத்தை யடைகிறார்கள்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

சங்கரபாஷ்யத்தில் தபச்சப்தத்திற்கு வர்ணாச்சிரமங்களுக்குரிய கருமமென்றும் ச்ரத்தை, என்பதற்கு ஹிரண்யகர்ப்பவிஷயமான வித்யைஎன்றும் இந்த சுலோகத்தில் சொல்லிய அதிகாரியடைவது ஸத்யலோகமென்றும் இது மோக்ஷமல்லவென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இராமாநுஜபாஷ்யத்திலிதுவே மோக்ஷமென்று வ்யாக்யாநம் செய்யப்பட்டது. மற்றவைகளிலிரண்டு பாஷ்யங்களு மிவ்விரண்டு ச்லோகங்களிலும் பதஉரையயே யநுஸரிக்கின்றன.

௧௨. 𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌕𑌰𑍍𑌮𑌚𑌿𑌤𑌾𑌨𑍍𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌮𑌾𑌯𑌾𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌃𑌕𑍃𑌤𑍇𑌨। 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌂𑌸𑌗𑍁𑌰𑍁𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌸𑌮𑌿𑌤𑍍𑌪𑌾𑌣𑌿𑌶𑍍𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌮𑍍॥

౧౨. పరీక్ష్యలోకాన్కర్మచితాన్ బ్రాహ్మణో నిర్వేదమాయాన్నాస్త్యకృతః కృతేన।
తద్విజ్ఞానార్థం స గురుమేవాభిగచ్ఛేత్సమిత్పాణిశ్శ్రోత్రియం బ్రహ్మనిష్ఠమ్॥

(ப-ம்.) 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 - வேதாத்யயநம் செய்த எந்த ப்ராம்மணன், 𑌕𑌰𑍍𑌮𑌚𑌿𑌤𑌾𑌨𑍍 - கர்மங்களாலாகிய, 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 - லோகங்களை, 𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 - ப்ரமா

ம்லைகளைக்கொண்டு நன்கறிந்து, அக்ருத: - நித்யனாகிய புருஷன், க்ருதேந - அநித்யமான கர்மத்தினால், நாஸ்தி - அடையப்படமாட்டான் என்று, நிர்வேதமாயாத் - சிந்தையடைவனே, ஸ: - அந்தப்ராம்மணன், தத்விஜ்ஞாநார்த்தம் - அந்தபுருஷனை யறியும்பொருட்டு, ச்ரோத்ரியம் - வேதாந்தமறிந்தவனும் ப்ரஹ்மநிஷ்டம் - ப்ரம்மநிஷ்டை யுடையவனுமிருக்கிற, குருமேவ - ஆசாரியனையே, ஸமித்பாணி: - ஸமித்தைக் கையிலேந்திக்கொண்டவனாய், அபிகச்சேத் - அடையக்கடவன்.

கங. தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரசாந்தசித்தாய சமாந்விதாய | யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்த்வதோ ப்ரஹ்மவித்யாம் ||

౧౩. తస్మై స విద్వానుపసన్నాయ సమ్యక్ప్రశాన్తచిత్తాయ శమాన్వితాయ।
యేనాక్షరం పురుషం వేద సత్యం ప్రోవాచ తాం తత్త్వతో బ్రహ్మవిద్యామ్॥

(ப-ம்.) ஸ: - அந்த, வித்வாந் - ஆசாரியன், ஸம்யக் - சாஸ்திரப்படி, உபஸந்நாய - தன்னை யடைந்திருக்கிறவனும், ப்ரசாந்தசித்தாய - சாந்தமான நெஞ்சையுடையவனும், சமாந்விதாய - மற்ற இந்திரியங்களினுடையவுமடக்கத்தையுடையவனுமான, தஸ்மை - அந்த சிஷ்யனையும்பொருட்டு, யேந - எந்தவித்யையினால், அக்ஷரம் - ஸ்வரூபவிகார மில்லாதவனும், ஸத்யம் - குணவிகாரமில்லாதவனுமான, புருஷம் - புருஷனை, வேத - தானறிந்துகொண்டானோ; தாம்ப்ரஹ்மவித்யாம் - அந்தப்ரம்மவித்யையை, தத்த்வத: - உள்ளபடி, ப்ரோவாச - சொல்லக்கடவன்.

பா०-ஹா.—காரணகாரிய ரூபமாகிய இந்த ஸம்ஸாரத்தில் பூர்ணவிரக்தி பிறந்தவனுக்கு ப்ரம்மவித்தையை யிலதிகாரமென்று காட்டுவதற்கு இந்த சுலோகம் சொல்லப்படுகிறது. ஒருவன், அவித்யை ஆசை கருமம் முதலிய தோஷங்களையுடைய புருஷனால் அநுஷ்டிக்கத்தக்கதாகிய ருக்வேத முதலிய வற்றில் சொன்ன அபரவித்தைகளின் ஸ்வரூபத்தையும், அவைகளின் பலங்களாய் விதிக்கப்பட்ட தக்ஷிணாயந மார்க்கத்தாலுமுத்தராயண மார்க்கத்தாலு மடையக்கூடிய லோகங்களையும், விதிப்படி செய்யாமையாலும் விதியினால் தடுக்கப்பட்டவைகளைச் செய்வதினாலு முண்டாகிற நரகம் முதலிய லோகங்களையும், ப்ரத்யக்ஷம் அநுமாநம் உபமாநம் வேதாகமம் இவைகளால் முற்றிலுமுள்ளபடியறிந்து, இவைஸம்ஸாரத்தில் செல்லுவதற்குக்காரணங்களென்றும், வித்தும் முளையும்போல ஒன்றுக் கொன்று காரணமாய் அநேகாநர்த்தங்களுக் கிடமென்றும் அஸாரங்களென்றும் மாயை, கானல்தண்ணீர் கந்தர்வநகரம், ஸ்வப்நம் நீர்க்குமிழி முதலிய வற்றைப்போல க்ஷணந்தோறும் ஆவதுமழிவதுமாகிய தன்மையுடையன வென்றும் நிச்சயித்து, வ்யாக்ருதம் அவ்யாக்ருதம் என்கிற அவ்யக்தம் முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள ஸமஸ்தத்தையும் விட்டு, ப்ராஹ்மணன் வைராக்கிய மடையக் கடவன். அவித்யா காமதோஷாதிகளால் வருகிற கர்மங்களினா லுண்டாகும் தருமா தருமங்களைச் சேர்ந்தவைகளில் வைராக்யம் செய்து ப்ரம்ம வித்யையைப் பற்றுவதில் ப்ராம்மணனுக்கே முக்யாதிகார மாகையால் ப்ராம்மணனென் றெடுத்தது. வைராக்கிய மடை

யும் ப்ரகாரமாவது. இந்த ஸம்ஸாரத்தில் நித்யமான பதார்த்த மொன்றுமில்லை. எல்லாம் கருமத்தினலுண்டானவை ஆகையா லநித்யங்களே, நித்யமாகிய தொன்றுமில்லை. எல்லா கர்மமும் அநித்யத்திற்கே ஸாதநமாகின்றது. கர்ம்மத்தின் பயன் நால்வகைத் தேயன்றோ ; அதாவது கர்மத்தினல் பிறப்பிக்கப்படும் சில ; கருமத்தினலடையப்படும் சில ; கர்ம்மத்தினல் ஸம்ஸ்கரிக்கப்படும் சில ; கர்மத்தினல் வேறுபாட்டை யடைவிக்கப்படும் சில, நமக்கு நிச்யமாய் அம்ருதமாய் அபயமாய் கூடஸ்த்தமாய் அசலமாய் த்ருவமாயிருக்கிற பொருளில் விருப்பமிருக்கின்றது; இப்படி யாகாததில் நமக்காசையில்லை. ஆகையால் நித்யஸாதநமாயும் இப்படிப்பட்ட பொருளுச்கு ஸாதநமாகாததுமான கருமத்தினல் நமக்கென்ன ப்ரயோஜநமுண்டு, அநித்யத்தைவிட கருமம் வேறென்றையும் ஸாதியாது. ஆகையால் வீணயநேகா நர்த்தங்களுக்குக் காரணமாய் ஆயாஸத்திற்கிடமாகிய கருமம் வீணேயாம் ; அநித்யத்தினல் நித்யம் வராதன்றோ ; என்பதாம். இப்படி வைராக்யமடைந்தவன் அபயமானதும் மங்களஸ்வரூபமானதும் அம்ருதம்போன்றதும் நித்யமுமான ஸ்தாநத்தை யடைவதற்கு, சமம், தமம், தயை, இவைகளோடு கூடிய ஆசாரியனையே ஆச்ரயிக்கக் கடவன், இவன் சாஸ்திரபண்டிதனயினும் ஆசாரியனை யடைந்தே ப்ரம்மஜ்ஞாநத்தைப் பெறவேணு மென்பதற்கு ஆசாரியனையே என்றது. வேதாந்தத்தை யறிந்தவனயும் ப்ரம்மநிஷ்டனாயு மிருக்கிற ஆசாரியனை **அரிக்த பாணியாய்** ஸமித்து பலம் முதலிய உபஹாரங்களை யெடுத்துக்கொண்டு,ஆச்ரயிக்கக் கடவன். கேவலப்ரம்ம நிஷ்டனே ஆசாரியனகிறான். கர்மநிஷ்டன் ப்ரம்மநிஷ்டனகான். கர்மத்திற்கும் ப்ரம்மஜ்ஞாநத்திற்கும் விரோதமாகையா லென்றறிக. ஆகையால் கேவலப்ரம்ம நிஷ்டனை ஆசாரியனக வரிக்கக் கடவன். ஆசாரியனருள்பெற்று அவனைத்தான் ப்ரம்மஸ்வரூபத்தை ப்ரஸ்நம் பண்ணக் கடவன். அப்படிப்பட்ட சிஷ்யனுக்கு ஆசார்யன் தானறிந்த ப்ரம்மவித்யையை உபதேசிக்கக் கடவன். ஆந்தர பாஹ்யேந்திரியங்களை நிக்ரஹித்து பரமவிரக்தனன சிஷ்யனுக்கு தானெந்த வித்யையினல் அக்ஷரஸத்யபுருஷனை யறிந்தானே அந்தப்ரம்ம வித்யையை உள்ளபடி யுபதேசிக்கக் கடவன். **ரிக்தபாணியென்றல்** வெறுங்கையனென்று பொருள். அப்படியாகாதவன், அரிக்தபாணியாகிறான்.

ஈா-ஹா.—வைராக்ய முடையவனய் பரப்ரம்மத்தை யடைவதற்கு வேண்டிய வித்யை என்கிற ஜ்ஞாநத்தைச் கோருகிறவனுக்கு ஆசாரியோபாஸநம் விதிக்கப்படுகிறது. இந்த வாக்யத்தில் ந்யாயத்தினு லேர்ப்படுகிற அர்த்தத்தை யனுவதித்துக்கொண்டு ஆசாரியனை யாச்ரயிக்கும் க்ரமம் சொல்லப்படுகிறது. ஆசாரியன் வேதாந்த பண்டிதனயினும் ப்ரம்மநிஷ்டை யில்லாதவனை யடையக் கூடாது. அசித்து சித்து இவ்விரண்டு தத்வங்களிலும் பேதப்பட்ட ப்ரம்மத்தை யடைவதற்கு குருபாஸநம் அவச்யமானது என்று நியமவிதியா லுணர்த்தப்படுகிறது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இரண்டு சுலோகங்களு மொன்றோடொன்று ஸம்பந்தமுடையதா யிருப்பதால் இரண்டுக்கும்சேர்த்து பாஷ்யமெழுதப்பட்டது.

இதி ப்ரதமமுண்டகே த்விதீய: கண்ட:

இதி ப்ரதமமுண்டகம் ||

ஸ்ரீ:

## 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑌖𑌣𑍍𑌡𑌃.

௧. 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂 𑌯𑌥𑌾 𑌸𑍁𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌤𑍍𑌪𑌾𑌵𑌕𑌾𑌦𑍍𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍂𑌪𑌾𑌃 । 𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 𑌸𑍋𑌮𑍍𑌯 𑌭𑌾𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌚𑍈𑌵𑌾𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿 ॥

౧. తదేతత్సత్యంయథాసుదీప్తాత్పావకాద్విస్ఫులింగాస్సహస్రశః ప్రభవంతేసరూపాః।
తథాక్షరాద్వివిధాస్సోమ్య భావాః ప్రజాయంతేతత్రచైవాపియంతి॥

(ப்-ம்.) 𑌸𑍋𑌮𑍍𑌯 - ஓ ஸோம்யனே, 𑌤𑌤𑍍- அப்படிப்பட்ட, 𑌏𑌤𑌤𑍍- இந்தப்ராம்மஸ்வரூபமானது, 𑌸𑌤𑍍𑌯𑌮𑍍 - ஸத்யமானது, 𑌯𑌥𑌾 - எப்படி, 𑌸𑍁𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌤𑍍 - ஜ்வலித்துக்கொண்டிருக்கிற, 𑌪𑌾𑌵𑌕𑌾𑌤𑍍 - அக்நியிலிருந்து, 𑌸𑌰𑍂𑌪𑌾𑌃 - ஸத்ருசங்களான, 𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌃 - பொறிகள், 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃 - அனேகமாக, 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍇 - உண்டாகின்றனவோ; 𑌤𑌥𑌾 - அப்படியே, 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍 - அக்ஷரபரப்ரம்மத்திலிருந்து, 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 - அநேகவிதங்களான, 𑌭𑌾𑌵𑌾𑌃 - பதார்த்தங்கள், 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 - உண்டாகின்றன. 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 - அவ்விடத்திலேயே, 𑌅𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿 - லயம் பெறுகின்றன.

ஶம்-ஹா.—இதுவரையில் அபரவித்யையின் ப்ரகாரம் முற்றும் சொல்லப்பட்டது. இனி இந்த அபரவித்யையின் காரியமான ஸம்ஸாரம் எந்த அக்ஷரப்ரம்மத்தினின்றும் பிறக்கிறதோ எந்த அக்ஷரபரப்ரம்மத்தி லழிந்து லயிக்கிறதோ யதையறிந்தா லெல்லா மறியப்படுமோ அப்படிப்பட்ட பரவித்யை என்கிற ப்ரம்மவித்யைக்கு விஷயமான ஸத்ய புருஷாக்ஷர ப்ரம்ம ஸ்வரூபத்தை ரூபித்துச் சொல்லுவதற்கு மேல் துடங்கப்படுகிறது. அபரவித்யைக்கு விஷயமான கருமத்தால் வருகிற பலம் ஸத்யமென்று உபசரிக்கப்பட்டாலும் அவித்யைக்கு விஷயமாகையாலே வாஸ்தவத்தில் ஸத்யமல்ல. இந்த அக்ஷரப்ரம்மம் ஸத்தாகையால் வித்யாவிஷயமாய் வாஸ்தவஸத்யமாகிறது. இப்படிப் பட்ட அக்ஷரபரப்ரம்மம் மிகவும் பரோக்ஷமாகையால் கண் முதலிய இந்திரியங்களுக்குத் தெரியாதாகையால் ப்ரத்யக்ஷ வஸ்துவைப்போ லறிவது கஷ்டமென்று இந்த ப்ரம்மத்திற்கு திருஷ்டாந்தம் கூறப்படுகிறது. அக்நியிலிருந்து அக்நி கணங்கள் புறப்படுவதுபோல அக்ஷரபரப்ரம்மத்தி லிருந்து அந்த ப்ரம்ம கணங்களாகிய ஜீவர்கள் புறப்படுகிறார்கள். நெருப்பிலிருந்து கிளம்புகிற பொறிகளும் நெருப்பேயாவதுபோல ப்ரம்மத்திலிருந்து பிறக்கிற ஜீவர்களும் ப்ரம்மமே யாவர்கள். ப்ரம்மம் ஒன்றே யாயினும் ஓரே ஆகாயத்தில் குட முதலிய உபாதிகளினால் அனேக பேதங்களுண்டாகிறதுபோல தேவர் மநுஷ்யர் முதலான தேஹங்களாகிற உபாதிகளினால் அனேக ஜீவர்கள் ஏர்ப்படுகிறார்கள். அந்த ப்ரம்மத்திலேயே குட முதலியவை யுடைந்தபோது மஹாகாசத்துடன் கலந்து லயிக்கிறதுபோல ஜீவர்கள் சரீரமாகிய உபாதி கழிந்தபோது லயிக்கிறார்கள்.

ரா-ஹா.—ஸூக்ஷ்மமாகிய சித்தையும் அசித்தையும் சரீரமாக உடைய ப்ரம்மத்திலிருந்து ஸ்தூலங்களான சித்துக்களும் அசித்துக்களும் உண்டாவதில் த்ருஷ்டாந்தமாக அக்நியை யெடுத்துக் காட்டுகிறது. மற்றவை முன்போலவே.

௨. 𑌦𑌿𑌵𑍍𑌯𑍋 𑌹𑍍𑌯𑌮𑍂𑌰𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌸𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍋 𑌹𑍍𑌯𑌜𑌃।
𑌅𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌹𑍍𑌯𑌮𑌨𑌾𑌶𑍍𑌶𑍁𑌭𑍍𑌰𑍋 𑌹𑍍𑌯𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑌃 𑌪𑌰𑌃॥

౨. దివ్యో హ్యమూర్తః పురుషస్సబాహ్యాభ్యన్తరో హ్యజః।
అప్రాణో హ్యమనాశ్శుభ్రో హ్యక్షరాత్పరతః పరః॥

(ப-ம்.) 𑌦𑌿𑌵𑍍𑌯𑌃 - பரமபதவாசியாயும், 𑌅𑌮𑍂𑌰𑍍𑌤𑌃 - கர்மஸம்பந்தத்தாலுண்டான அவயவங்களில்லாதவனாயும், 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 - புருஷசப்தவாச்யனாயும், 𑌸𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌃 - உள்ளும்வெளியும் வ்யாபித்தவனாயும், 𑌅𑌜𑌃 - உத்பத்தியில்லாதவனாயும், 𑌅𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 - ப்ராணஸம்பந்தமில்லாதவனாயும், 𑌅𑌮𑌨𑌾𑌃 - மநஸ்ஸில்லாதவனாயும், 𑌶𑍁𑌭𑍍𑌰𑌃 - சுத்தனாயுமிருக்கிற, 𑌸𑌃 - அந்த பரமபுருஷன், 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍 - அவ்யாக்ருதத்தைக்காட்டிலும், 𑌪𑌰𑌤𑌃 - பரனான ஸமஷ்டிபுருஷனைக்காட்டிலும், 𑌪𑌰𑌃 - பரன்.

இந்தசுலோகத்தில் 'ஹி' மூன்றுக்கும் ப்ரஸித்தியே பொருள்.

𑌶𑌂-ஹா.—நாமரூபங்களுக்குக் காரணமாய் தன் விகாரங்களில் காட்டில் பரமாயிருக்கிற அவ்யாக்ருத மென்கிற அக்ஷரத்தைக் காட்டில் பரமாய், ஸமஸ்தமான உபாதி பேதங்களும் நீங்கியதாய் ஆகாசம்போலே அமூர்தமாயிருக்கிற அக்ஷரபரப்ரம்ம ஸ்வரூபத்தை பேதசூந்யமென்று சொல்லுவதற்கு தொடங்குகிறது. ப்ரகாச ஸ்வரூபமாய் ஸ்வயம் ஜ்யோதியாய் தனக்குத்தானே காரணமாய் லோகவிலக்ஷணமாய் அவயவசூந்யமாய் பூர்ணமாய் புரிசயனாய் தேஹத்திற்குள்ளும் வெளியும் கலந்திருப்பவனாய் பிறப்பு முதலிய பாவவிகாரங்களில்லாதவனாய், நீர்க்குமிழி முதலியவற்றிற்கு காற்றுப்போலவும், ஆகாய பேதத்திற்கு குட முதலியவைபோலவும் தனக்கு ஜந்ம காரணமில்லாதவனாய், ஜராமரணங்களில்லாதவனாய் க்ஷயமில்லாதவனாய் த்ருவனாய் அபயஸ்வரூபியாய் தேஹமுதலிய உபாதி பேதத்தால் கண்டவர்களுக்கு அவித்யையினால், ஆகாயம் அழுக்கு முதலியவற்றோடுகூடித் தோற்றுவதுபோல, அநேக தேஹங்களில் ப்ராணன் மனஸ்ஸு இந்திரியம் விஷயம் இவைகளோடு கூடினவனைப்போல் தோற்றினானாயினும், பரமார்த்தங் கண்டவர்களுக்கு, க்ரியாசக்தி பேதத்தோடு கூடிச் சலிக்கிற ப்ராணவாயு ஸம்பந்தமில்லாதவனாய், ஜ்ஞாநசக்தி பேதத்தோடுகூடி ஸங்கல்பரூபமாயிருக்கும்மனஸ்ஸில்லாதவனாய், இப்படியே அபாநம் முதலிய வாயு ஸம்பதமில்லாதவனாய் கர்மேந்த்ரியம் அதின் விஷயங்கள் புத்தி மநஸ்ஸு, ஜ்ஞாநேந்திரியம் அதின் விஷயங்கள் இவைகளில்லாதவனாய், இப்படியே வேறு சுருதியிலும் சொல்லப்பட்டவனாய், இப்படி உபாதி ஸம்பந்தமில்லாதவனாகையாலே சுத்தனாயிருக்கிற பரமபுருஷன், தன் விகாரங்களுக்குத் தான் காரணமாகையாலே அவைகளுக்குப் பரமாயிருக்கிற அக்ஷரத்தைக் காட்டிலும் பரனாயிருக்கிறான். இவனிடத்திலேயே, ஆகாசமென்கிற வ்யவஹார காரணமான அக்ஷரம் ஒட்டிக்கிடக்கிறது. புருஷன் ப்ரத்யக்ஷத்தில் ப்ராணன் முதலிய வற்றோடு கூடியிருக்க ப்ராணன் முதலியவையில்லாதவனென்று சொல்லுவதெங்ஙனமெனில் ப்ராணாதிகளுண்டாவதற்கு முன்னமே புருஷனிருக்கிறானாகையால் அப்போது ப்ராணாதி ஸம்பந்தமில்லையன்றோ; ஒருவனுக்கு, பிள்ளை பிறப்பதற்கு முன் அவனைப் பிள்ளையில்லாதவனென்று சொல்லுகிறார்களன்றோ.

𑌰𑌾-ஹா.—சுத்தனாகிய பரமபுருஷன் ப்ரக்ருதியில் காட்டில் பரனான ஜீவனைக் காட்டில் பரனென்று பொருள். சங்கரபாஷ்யத்தில் செய்த வ்யாக்யாநம் யுக்தமன்று,

த்ருஷ்டாந்தத்திற்குச் சேராமையாமென்று விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. மற்றவை பத உரையில் சொல்லியபடியே கொள்ளப்பட்டு எல்லாவற்றுக்கும் சுருதி ப்ரமாணம் காட்டப்பட்டது.

௩. 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌮𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚 |
𑌖𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌾𑌪𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌧𑌾𑌰𑌿𑌣𑍀 ||

3. ఏతస్మాజ్జాయతే ప్రాణో మనస్సర్వేంద్రియాణిచ ।
ఖంవాయుర్జ్యోతిరాపః పృథివీ విశ్వస్య ధారిణీ ॥

(ப·ம்.) 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - இந்தபுருஷனிடத்திலிருந்து, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 - ப்ராணனும், 𑌮𑌨𑌃 - மநஸ்ஸும், 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚 - எல்லா இந்திரியங்களும், 𑌖𑌂-ஆகாயமும், 𑌵𑌾𑌯𑍁𑌃 - காற்றும், 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 - தேஜஸ்ஸும், 𑌆𑌪𑌃 - ஜலமும், 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 - ஸமஸ்தத்தையும், 𑌧𑌾𑌰𑌿𑌣𑍀 - தரிக்கிற, 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 - பூமியும், 𑌜𑌾𑌯𑌤𑍇 - உண்டாகிறது.

பாஷ்யம்.—இவைகள் முன்னில்லை யென்பது விளங்க இந்த ப்ராணுதிகளுக்கு ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறது. அவித்யா விஷயங்களாகையாலே ப்ராணுதிகள் பொய்யாகும். ஸ்வப்நத்தில கண்ட பிள்ளையைக்கொண்டு ஒருவனைப் பிள்ளையுடையவனென்று சொல்வதுபோல இந்த பொய்யான ப்ராணனைக்கொண்டு புருஷனை ப்ராணமுடையவனென்பது சேராது. இப்படியே மற்றுள்ள வற்றிலும் காண்க. பிறப்புக்கு முன்னின்றியே பொய்யாவதுபோல ப்ரளயத்திற்கும் பின்னின்றியும் பொய்யாகின்றன. அவைகளாவன ப்ராணங்களும் பூதங்களு மிந்திரியங்களும்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இராமாநுஜபாஷ்யத்தில் பதஉரைக்குமேல்பட விசேஷமில்லை.

௪. 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌮𑍂𑌰𑍍𑌧𑌾 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍀 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍂𑌰𑍍𑌯𑍌 𑌦𑌿𑌶𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇 𑌵𑌾𑌗𑍍𑌵𑌿𑌵𑍃𑌤𑌾𑌶𑍍𑌚 𑌵𑍇𑌦𑌾𑌃 | 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌸𑍍𑌯 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 ||

4. అగ్నిర్మూర్ధా చక్షుషీ చంద్రసూర్యౌ దిశశ్శ్రోత్రే వాగ్వివృతాశ్చ వేదాః ।
వాయుః ప్రాణో హృదయం విశ్వమస్య పద్భ్యాం పృథివీ హ్యేష సర్వభూతాంతరాత్మా ॥

(ப·ம்.) 𑌅𑌸𑍍𑌯 - இந்தபுருஷனுக்கு, 𑌮𑍂𑌰𑍍𑌧𑌾 - சிரஸ்ஸானது, 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 - ஸ்வர்க்கலோகம், 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍀 - கண்கள், 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍂𑌰𑍍𑌯𑍌 - சந்திரஸூரியர்கள், 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇 - காதுகள், 𑌦𑌿𑌶𑌃 - திசைகள், 𑌵𑍇𑌦𑌾𑌃 - வேதங்கள், 𑌅𑌸𑍍𑌯 𑌵𑌾𑌗𑍍𑌵𑌿𑌵𑍃𑌤𑌾𑌃 - இவனுடைய வாக்கினால் வெளியாக்கப்பட்டவை. 𑌅𑌸𑍍𑌯 - இவனுடைய, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 - ப்ராணன், 𑌵𑌾𑌯𑍁𑌃 - காற்று, 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 - ஸமஸ்தமும், 𑌅𑌸𑍍𑌯 - இவனுடைய, 𑌹𑍃𑌦𑌯𑌂 - ஹ்ருதயம், 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 - கால்கள், 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 - பூமியாம், 𑌏𑌷𑌃 - இவன், 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 - எல்லாபூதங்களுக்கு மந்தர்யாமியாயிருக்கிறான்.

ஸ௦-ஹா.—முன்சொன்ன அக்ஷரபுருஷனையே ஸவிசேஷமாக விஸ்தரித்துச்சொல்லுகிறது. ஸூத்திரபாஷ்யங்களைப்போல, இப்படி கூறுவதினால்ஸங்கமாயிருப்பமென்றே.

பதாந்வயார்த்தபேதங்கள்.

இராமாநுஜபாஷ்யத்தில் விசேஷமில்லை. பதஉரையின் கருத்தேயுளது.

ரு. தஸ்மாதக்நிஸ்ஸமிதோ யஸ்ய ஸூர்யஸ்ஸோமாத்பர்ஜந்ய ஓஷதய: ப்ருதிவ்யாம்। பூமாந்ரேத: ஸிஞ்சதி யோஷிதாயாம் பஹ்வீ: ப்ரஜா: புருஷாத்ஸம்ப்ரஸூதா:॥

౫. తస్మాదగ్నిస్సమిధో యస్య సూర్యస్సోమాత్పర్జన్య ఓషధయః పృథివ్యామ్। పుమాన్రేతస్సిఞ్చతి యోషితాయాం బహ్వీః ప్రజాః పురుషాత్సమ్ప్రసూతాః॥

(ப-ம்.) தஸ்மாத் - அந்த அக்ஷரபுருஷனிடத்திலிருந்து, அக்நி: - ஸ்வர்க்கலோகமுண்டாகிறது. யஸ்ய - யந்த ஸ்வர்கலோகமாகிறஅக்நிக்கு, ஸூர்ய: - ஸூர்யன், ஸமித: - ஸமித்துக்களோ; ஸோமாத் - அந்தஸ்வர்க்கலோகத்திலுண்டாகிய சந்திரனிடத்திலிருந்து, பர்ஜந்ய: - மேகமுண்டாகிறது, ப்ருதிவ்யாம் - பூமியில், ஓஷதய: - அந்த பர்ஜந்யத்திலிருந்து ஓஷதிகளுண்டாகின்றன, பூமாந் - புருஷனானவன், யோஷிதாயாம் - ஸ்த்ரீயினிடத்தில், ரேத: - அந்த ஓஷதிகளாலுண்டாகிய ரேதஸ்ஸை, ஸிஞ்சதி - விடுகிறான், புருஷாத் - புருஷனிடத்தில், பஹ்வீ: - அனேகமான, ப்ரஜா: - ப்ரஜைகள், ஸம்ப்ரஸூதா: - அந்த ரேதஸ்ஸம்பந்தத்தாலுண்டாகின்றன.

ஸ௦-ஹா. ரா-ஹா. பஞ்சாக்நிவித்யையில் சொன்னப்ரகாரம் ஸமஸ்த ஜகத்தும் அந்த புருஷனிடத்திலிருந்து பிறக்கிறது.

சு. தஸ்மாத்ருச: ஸாம யஜூம்ஷி தீக்ஷா யஜ்ஞாஸ்ச ஸர்வே க்ரதவோ தக்ஷிணாஸ்ச। ஸம்வத்ஸரஸ்ச யஜமாநஸ்ச லோகா: ஸோமோ யத்ர பவதே யத்ர ஸூர்ய:॥

౬. తస్మాదృచస్సామయజూంషిదీక్షా యజ్ఞాశ్చ సర్వే క్రతవో దక్షిణాశ్చ। సంవత్సరశ్చ యజమానశ్చ లోకాస్సోమో యత్ర పవతే యత్ర సూర్యః॥

(ப-ம்.) தஸ்மாத் - அந்த அக்ஷரபுருஷனிடத்திலிருந்து, ருச: - ருக்குக்களும், ஸாம - ஸாமங்களும், யஜூம்ஷி - யஜுஸ்ஸுக்களும், தீக்ஷா: , தீக்ஷைகளும், ஸர்வே யஜ்ஞா: - எல்லாயஜ்ஞங்களும், க்ரதவ: - யாகங்களும், தக்ஷிணாஸ்ச - தக்ஷிணைகளும், ஸம்வத்ஸரஸ்ச - ஸம்வத்ஸரரூப காலமும், யஜமாநஸ்ச - கர்த்தாவும், யத்ர - எந்தலோகங்களில், ஸோம: - சந்திரன், பவதே - பரிசுத்தம் பண்ணுகிறானோ; யத்ர - எந்தலோகங்களில், ஸூர்ய: - ஸூரியன், பவதே - பரிசுத்தம் செய்கிறானோ; லோகா: - அந்த லோகங்களுமுண்டாகின்றன.

எ. தஸ்மாச்ச தேவா பஹுதா ஸம்ப்ரஸூதா: ஸாத்யா மநுஷ்யா: பஸவோ வயாம்ஸி। ப்ராணாபாநௌ வ்ரீஹியவௌ தபஸ்ச ஸ்ரத்தா ஸத்யம் ப்ரஹ்மசர்யம் விதிஸ்ச॥

౭. తస్మాచ్చ దేవా బహుధా సంప్రసూతాః సాధ్యా మనుష్యాః పశవో వయాంసి।
ప్రాణాపానౌ వ్రీహియవౌ తపశ్చ శ్రద్ధా సత్యం బ్రహ్మచర్యం విధిశ్చ॥

(ப-ம்.) தஸ்மாத் - அந்த பரமபுருஷனிடத்திலிருந்து, பஹுதா - அனேகப்ரகாரமாக, தேவா: - தேவர்களும், ஸாத்யா: - ஸாத்தியர்களும், மநுஷ்யா: - மநுஷ்யர்களும், பசவ: - பசுக்களும், வயாம்ஸி - பக்ஷிகளும், ப்ராணாபாநௌ - ப்ராணன் அபாநன்முதலியவாயுக்களும், வ்ரீஹியவௌ - தாந்யவிசேஷங்களும், தப: ச - தபஸ்ஸும், ச்ரத்தா - ஆஸ்திக்யபுத்தியும், ஸத்யம் - பொய்சொல்லாமையும், ப்ரஹ்மசர்யம் - மைதுனம்செய்யாமையும, விதி: ச - விதியும், ஸம்ப்ரஸூதா: - உண்டாயின.

௮. ஸப்த ப்ராணா: ப்ரபவந்தி தஸ்மாத் ஸப்தார்சிஷ: ஸமித: ஸப்த ஹோமா: | ஸப்த இமே லோகா யேஷு சரந்தி ப்ராணா குஹாசயா நிஹிதா: ஸப்த ஸப்த ||

౮. సప్త ప్రాణాః ప్రభవన్తి తస్మాత్సప్తార్చిషః సమిధః సప్త హోమాః।
సప్త ఇమే లోకా యేషు చరన్తి ప్రాణా గుహాశయా నిహితాః సప్త సప్త॥

(ப-ம்.) தஸ்மாத் - அந்த அக்ஷரபுருஷனிடத்திலிருந்து, ஸப்த - ஏழுவிதமான, ப்ராணா: - இந்திரியங்களும், ஸப்தார்சிஷ: - ஏழக்நிகளும், ஸமித: - ஸமித்துக்களும், ஸப்த ஹோமா: - ஏழுஹோமங்களும், இமே ஸப்த லோகா: - இந்தஏழுலோகங்களும், ப்ரபவந்தி-உண்டாகின்றன. யேஷு - எந்தலோகங்களில், குஹாசயா: - குஹைகளிலிருக்கிற, ப்ராணா: - ப்ராணங்கள், ஸப்த ஸப்த - ஏழேழாய், நிஹிதா: - வைக்கப்பட்டவைகளாய், சரந்தி - ஸஞ்சரிக்கின்றனவோ;

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஏழுப்ராணங்களாவன - ஏழிந்திரியங்கள், ஏழிடங்களி லிருக்கின்றமையால் இந்திரியங்களை ஏழென்கிறது. கண்களிரண்டு காதுகளிரண்டு மூக்கிரண்டு வாய் இந்தஏழுஸ்தாநங்களிலும் இந்திரியம் ஸஞ்சரிக்கின்றது. இவைகளுக்கு சீர்ஷண்யங்களென்று பெயரிடப்பட்டிருக்கிறது. இந்திரியபரமாகவே எல்லாபதங்களையு மந்வயித்து வ்யாக்யாநம் செய்யப்பட்டது சங்கரபாஷ்யத்தில். இராமாநுஜபாஷ்யத்தில் நடுவிலிரண்டுவாக்யம் அக்நிபரமாக வ்யாக்யாநம் செய்யப்பட்டது. மேலும் 'ஸப்தஹோமா:' என்கிறவிடத்தில் 'ஸப்தஜிஹ்வா:' என்று பாடம் காட்டப்பட்டது, மற்றவைகளில் விசேஷமில்லை.

௯. அத: ஸமுத்ரா கிரயச்ச ஸர்வேऽஸ்மாத் ஸ்யந்தந்தே ஸிந்தவ: ஸர்வரூபா: | அதச்ச ஸர்வா ஓஷதயோ ரஸச்ச யேநைஷ பூதைஸ்திஷ்டதே ஹ்யந்தராத்மா ||

౯. అతస్సముద్రా గిరయశ్చ సర్వేఽస్మాత్స్యందంతే సింధవస్సర్వరూపాః।
అతశ్చ సర్వా ఓషధయో రసశ్చ యేనైష భూతైస్తిష్ఠతే హ్యంతరాత్మా॥

(ப்-ம்.) அதঃ - இந்தபுருஷனிடத்திலிருந்து, ஸர்வே - ஸமஸ்தவிதங்களான, ஸமுத்ராঃ - கடல்களும், கிரயঃச - மலைகளு முண்டாகின்றன. ஸர்வரூபாঃ - ஸமஸ்தரூபங்களான, ஸிந்தவঃ - நதிகளும், அஸ்மாத் - இந்த புருஷனிடத்திலிருந்து, ஸ்யந்தந்தே - ப்ரவஹிக்கின்றன. ஸர்வாঃ - ஓஷதயঃ - எல்லாஓஷதிகளும், ரஸாঃ - ரஸங்களும், அதঃச - இந்த அக்ஷரபுருஷனிடத்திலிருந் துண்டாகின்றன, யேந - எந்த காரணத்தால், ஏஷঃ - இந்த அக்ஷரபுருஷன், பூதைঃ - பூதங்களினால் சூழப்பட்டவனாய், அந்தராத்மா - அந்தர்யாமியாய்க்கொண்டு, திஷ்டதே ஹி-இருக்கிறானே.

ஸ0-ஹா. யாதொருரஸத்தினாலே ஸ்தூலபூதங்களினால் அந்தராத்மா, என்கிற லிங்கசரீரம் சூழப்பட்டிருக்கிறதோ அந்தரஸமும் மற்றுமெல்லாம் அந்தபுருஷனிடத்திலுண்டானவையேயாம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

யேந, என்பதற்கும், அந்தராத்மா என்பதற்கும் வேறுபொருள் கொண்டபடியால் சங்கரபாஷ்யத்தில் கருத்து பேதப்பட்டது. இராமாநுஜபாஷ்யத்தில் பதஉரையின்படியே கருத்து கொள்ளப்பட்டது.

௧௦. புருஷ ஏவேதம் விஶ்வம் கர்ம தபோ ப்ரஹ்ம பராம்ருதம்। ஏதத்யோ வேத நிஹிதம் குஹாயாம் ஸோऽவித்யாக்ரந்திம் விகிரதீஹ ஸோம்ய॥

௧0. புருஷ ஏவேதம் விஶ்வம் கர்ம தபோ ப்ரஹ்ம பராம்ருதம் ।
ஏதத்யோ வேத நிஹிதம் குஹாயாம் ஸோऽவித்யாக்ரந்திம் விகிரதீஹ ஸோம்ய॥

(ப்-ம்.) இதம்விஶ்வம் - இந்தஸமஸ்தமமும், புருஷঃஏவ - அக்ஷரபுருஷனே; கர்ம - இவனுடைய ஸ்ருஷ்டிவ்யாபாரமானது, தபঃ - ஸங்கல்பரூபமேயாகின்றது. ப்ரஹ்ம பராம்ருதம் - இந்தபுருஷன், ப்ரம்மமென்கிற முக்தபுருஷர்களுக்கு ச்லாக்யமான வம்ருதம்போல் போக்யபூதனாகிறான், யঃ - யவன், ஏதத் - இப்படிப்பட்ட அக்ஷரபுருஷனாகிய பரப்ரம்மத்தை, குஹாயாம் - ஹ்ருதயகுஹையில், நிஹிதம் - வாஸம்செய்வதாக, வேத - அறிகிறானோ; ஸঃ - அவன், ஸோம்ய - ஸோம்யனே, அவித்யாக்ரந்திம்-முடிபோலிருக்கிற அவித்யையை, விகிரதி - போக்குகிறான்.

ஸ0-ஹா. இவ்வாறு புருஷனிடத்திலிருந்த எல்லாம் தோற்றினதாகையால் வ்யவாஹாரத்துக்குரியதேயன்றி ஸத்யமல்ல பொய்யேயாம் புருஷனே ஸ்த்யஸ்வரூபமுடையவன். ஆகையால் இவையெல்லாம் புருஷனே. இந்தபுருஷனுக்கு வேறாய் உலகமென்றொன்றில்லை. இப்படி யறியவே எல்லாமறியப்பட்டதாகும். அக்நிஹோத்ர முதலிய கர்மமும்ஜ்ஞாநமும் வேறுபலத்தைத்தரும். எவன் ப்ரம்மமேநானென்றறிகிறானோ அவன் அவித்யைநீங்கி மோக்ஷம்பெறுவான்.

ரா-ஹா. இப்படி இவ்வுலகெல்லாம் புருஷனிடத்தி லுண்டாகிய தாகையாலே புருஷனே எனப்படுகிறது. காரணத்தையறிந்தபோது காரியமெல்லா மறியப்படுமாகை

யால் இந்தபுருஷனை யறியவே இந்தபுருஷனிடத்தி லுண்டான உலகமெல்லா மறியப் படுமென்று கருத்து.

பதாந்வயார்த்தபேதங்கள்,

இராமாநுஜபாஷ்யத்தில் புருஷஏவேதம் விச்வம்,என்கிறவரையில் கருத்தெழுதப்பட்டது மற்றது பதஉரையில் கூறியபடி காண்க.

இதி த்விதீயமுண்டகே ப்ரதமகண்ட:.

---

அத த்விதீயமுண்டகே த்விதீயகண்ட:.

---

க. ஆவி: ஸந்நிஹிதம் குஹாசரம் நாம மஹத்பதமத்ரைதத்ஸமர்பிதம் | ஏஜத்ப்ராணந்நிமிஷச்ச யதேதஜ்ஜாநத² ஸதஸத்வரேண்யம் பரம் விஜ்ஞாநாத்யத்வரிஷ்டம் ப்ரஜாநாம் ||

౧. ఆవిస్సన్నిహితంగుహాచరంనామమహత్పదమత్రైతత్సమర్పితమ్।

ఏజత్ప్రాణన్నిమిషచ్చయదేతజ్జానథసదసద్వరేణ్యంపరంవిజ్ఞానాద్యద్వరిష్ఠంప్రజానామ్॥

(ப-ம்.) ஆவி: - யோகிகளுக்கு ப்ரகாசமாய்விளங்குவதும், குஹாசரம் - ஹ்ருதயகுஹையி லிருக்கின்றதும், ஸந்நிஹிதம் - கிட்டிநிற்பதும், நாம - அறியப்படாதென்று ப்ரஸித்தமானதும், மஹத்பதம் - சிறந்தப்ராப்யமும் பலமுமானது அந்த அக்ஷரபரப்ரம்மமே. அத்ர - இந்த அக்ஷரபரப்ரம்மத்தினிடத்தில், ஏஜத் - உணர்த்தியுடையதும், நிமிஷச்ச - உறங்குவதுமான, ப்ராணத் - ப்ராணிஸமூஹமானது, யத்யத் - யாதொன்றுண்டு, ஏதத் - இதானது, ஸமர்பிதம் - வைக்கப்பட்டிருக்கிறது, ப்ரஜாநாம் - ஜநங்களுக்கு, வரிஷ்டம் - உபாயமாகையாலும் பலமாகையாலும் மிகவும் விரும்பத்தக்கதாயும், விஜ்ஞாநாத் - ஜீவனைக்காட்டிலும், பரம் - வேறுபட்டதாயும், ஸதஸத்வரேண்யம் - ஸ்தூலஸூக்ஷ்மங்களுக்கு ஆதாரமானதும், யத் - யாதொன்றோ; ஏதத் - இந்த அக்ஷரபரப்ரம்மத்தை, ஜாநத - அறிந்துகொள்ளுங்கோள்.

ஸா-ஹா. அரூபமாகிய அக்ஷரபரப்ரம்மம் எவ்வாறறியப்படுமென்கிற ஸந்தேஹம் தீரச்சொல்லுகிறது. ஸமஸ்தப்ராணிகளுக்கும் ச்ரவணம் மநநம் முதலிய உபாதிகளுமங்களால் ஹ்ருதயத்தில் விளங்கும். ஆகையால் குஹையிலிருப்பதென்று சொல்லப்படுகிறது. எல்லாவற்றிலும் பெரிதானது. எல்லாவற்றாலு மடையப்படுகிறது. பசு பக்ஷி மநுஷ்யர்முதலியவை எல்லாம் இங்குதங்கி நிலைபெறுகிறது. ஸ்தூலசூக்ஷ்மஸ்வரூப மாகியது.நித்யாம்ருதஸ்வரூபமாகையா லனைவராலு மாதரிக்கத்தக்கது. லௌகிகஜ்ஞாநத்தாலறியப்படாதது. எல்லாவற்றிலும் சிறந்தது. இப்படிப்பட்ட ப்ரம்மத்தை சிஷ்யர்களே தெரிந்துகொள்ளுங்கோள்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பதஉரையின்படியே இராமாநுஜபாஷ்யத்தின் கருத்து.

௨. யதர்சிமத்யதணுப்யோऽணு ச யஸ்மிம்ல்லோகா நிஹிதா லோகிநஶ்ச | ததேததக்ஷரம் ப்ரஹ்ம ஸ ப்ராணஸ்தது வாங்மந: | ததேதத்ஸத்யம் ததம்ருதம் தத்வேத்தவ்யம் ஸோம்ய வித்தி ||

౨. యదర్చిమద్యదణుభ్యోఽణు చ యస్మిన్ లోకా నిహితా లోకినశ్చ ।
తదేతదక్షరం బ్రహ్మ స ప్రాణస్తదు వాఙ్మనః । తదేతత్సత్యం తదమృతం తద్వేద్ధవ్యం సోమ్య విద్ధి ॥

(ப்-ம்.) ஸோம்ய - தெளிவுள்ளசிஷ்யனே, யத் - எந்த அக்ஷரபரப்ரம்மமானது, அர்சிமத் - காந்தியுடையதோ, அணுப்ய: - அணுவஸ்துக்களிலும், அணு - சிறியதோ; யஸ்மிந் - யந்தப்ரம்மத்தில், லோகா: - உலகங்களும், லோகிந: ச - உலகத்தோரும், நிஹிதா: - வைக்கப்பட்டிருக்கிறார்களோ, தத் ஏதத் அக்ஷரம் ப்ரஹ்ம - அப்படிப்பட்ட இந்த அக்ஷரபரப்ரம்மமானது, ஸ: ப்ராண: - அப்படிப்பட்ட ப்ராணன், தத் உ வாங்மந: - அப்படிப்பட்ட வாகிந்திரியமும் மனஸ்ஸும், தத் ஏதத் ஸத்யம் - அப்படிப்பட்ட ஸத்யம், தத் வேத்தவ்யம் - அது ஆலோசித்தறியத்தக்கது. ஆகையால், அதை நீ, வித்தி - நன்கறிந்துகொள்.

ஸ0-ஹா, சூரியசந்திராதிகளும் எந்த காந்தியால் விளங்குகிறார்களோ அப்படிப் பட்ட காந்தியுடையதுஎதுவோ, எது எல்லாவற்றிலும் சிறியதோ எது எல்லாவற்றிலும் பெரிதோ; எந்தப்ரம்மத்தில் பூமிமுதலியலோகங்களும் அவ்வோலோகங்களிலுள்ள ஜநங்களும் இருக்கின்றனவோ பிராணன் மநஸ்ஸு வாக்கு முதலிய எல்லாவற்றுக்கு மதிஷ்டாநமாய் யாதொன்று விளங்காநின்றதோ; அதுவே ஸத்யமான அக்ஷரபரப்ரம்மம். ஆகையாலதை நன்குமநஸ்ஸினால் த்யாநித்துத் தெரிந்துகொள்ளவேணும்.

ரா-ஹா. அப்ராக்ருதமாய் ஜ்யோதிர்மயமான திருமேனி யுடையதாகையாலே காந்தியுடையதென்கிறது. எல்லாவற்றிலு முள்புகுகிற சக்தியுடையதானதால் அணுவிலுமணுவென்று சொல்லப்பட்டது.

௩. தநுர்க்ருஹீத்வௌபநிஷதம் மஹாஸ்த்ரம் ஶரம் ஹ்யுபாஸாநிஶிதம் ஸந்தயீத | ஆயம்ய தத்பாவகதேந சேதஸா லக்ஷ்யம் ததேவாக்ஷரம் ஸோம்ய வித்தி ||

3. ధనుర్గృహీత్వౌపనిషదం మహాస్త్రం శరం హ్యుపాసానిశితం సంధయీత ।
ఆయమ్య తద్భావగతేన చేతసా లక్ష్యం తదేవాక్షరం సోమ్య విద్ధి ॥

(ப்-ம்) ஸோம்ய - நற்குணமுடையவனே, ஔபநிஷதம் - உபநிஷத்தில்சொல்லப்பட்ட, தநு: - வில்லை, க்ருஹீத்வா - எடுத்துக்கொண்டு, உபாஸாநிஶிதம் - உபாஸநத்தினால் கூர்மையடைந்திருக்கிற, மஹாஸ்த்ரம் - மஹாஸ்திரத்தோடுகூடிய, ஶரம் - பாணத்தை, ஸந்தயீத - ஸந்தாநம்பண்ணக்கடவன். தத்பாவகதேந - அந்தப்ரம்மபாவனையோடுகூடிய, சேதஸா - மனஸ்ஸினால், ஆயம்ய - ஆகர்ஷித்து, தத் ஏவ அக்ஷரம் லக்ஷ்யம் - அந்த அக்ஷரப்ரம்மமாகிற லக்ஷ்யத்தையே, வித்தி - அறிந்துகொள்.

ஸ0-ஹா. ரா-ஹா. ப்ரணவமேதநுஸ்ஸென்பது முதலாய விசேஷங்கள் மேல் மந்திரத்தில் விளங்கும். இதரவிஷயங்களில் நெஞ்சை செல்லவொட்டாமல் தடுத்து பரப்ரம்மத்தினிடத்தில் நிலைபெறச்செய்து ப்ரம்மத்தை யறிந்துகொள்ளென்றுகருத்து.

ஈ. ப்ரணவோ தநு: ஶரோ ஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே।
அப்ரமத்தேந வேத்தவ்யம் ஶரவத்தந்மயோ பவேத்॥

௪. ప్రణవో ధనుశ్శరో హ్యాత్మా బ్రహ్మ తల్లక్ష్యముచ్యతే।
అప్రమత్తేన వేద్ధవ్యం శరవత్తన్మయో భవేత్॥

(ப்-ம்.) ப்ரணவ: - ப்ரணவமானது, தநு: - தநுஸ்ஸு, ஶர: ஹி - பாணமேயென்றால், ஆத்மா - ஜீவாத்மா, தத்ப்ரஹ்ம - அந்தப்ரம்மமானது லக்ஷ்யம் - லக்ஷ்யமாக, உச்யதே - சொல்லப்படுகிறது. அப்ரமத்தேந - அநவதாநமில்லாதவனாலே, வேத்தவ்யம் - வேதிக்கத்தக்கது, ஶரவத் - பாணம்போல, தந்மய: - அந்தலக்ஷ்யஸ்வரூபமாக, பவேத் - ஆகக்கடவன்.

ஸ0-ஹா. ரா-ஹா. ஆத்மாவை ப்ரணவத்தினால் ப்ரம்மத்தில் சேர்க்கக்கடவன். ப்ரணவார்த்தத்தை யறியக்கடவன்.

பதாக்வயார்த்தபேதங்கள்.

ஜீவப்ரம்மங்களுக்கு பேதமில்லையென்பது சங்கரமதத்தில் ப்ரணவார்த்தம். ப்ரம்மத்திற்கு ஜீவன் சேஷபூதனென்பது ராமாநுஜமதத்தில் ப்ரணவார்த்தம்.

ரு. யஸ்மிந் த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷமோதம் மந: ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை: । தமேவைகம் ஜாநத ஆத்மாநமந்யா வாசோ விமுஞ்சதாம்ருதஸ்யைஷ ஸேது:॥

௫. యస్మిన్ ద్యౌః పృథివీ చాంతరిక్షమోతం మనస్సహ ప్రాణైశ్చ సర్వైః।
తమేవైకం జానథ ఆత్మానమన్యా వాచో విముంచథామృతస్యైష సేతుః॥

(ப்-ம்.) யஸ்மிந் - எந்த அக்ஷரபுருஷனிடத்தில், த்யௌ: - ஸ்வர்க்கலோகமும், ப்ருதிவீ ச - பூலோகமும், அந்தரிக்ஷம் - அந்தரிக்ஷலோகமும், ஸர்வை: - ஸமஸ்தமான, ப்ராணை: ஸஹ - ப்ராணங்களோடு, மந: - மநஸ்ஸும், ஓதம் - கோர்க்கப்பட்டிருக்கிறதோ, தம் ஏவ ஏகம் - அந்தபரமபுருஷனையே, ஆத்மாநம் - அந்தராத்மாவாக, ஜாநத - அறியுங்கோள், அந்யா: - இதரங்களான, வாச: - வார்த்தைகளை, விமுஞ்சத - விடுங்கோள், அம்ருதஸ்ய - மோக்ஷத்திற்கு, ஏஷ: - இந்த பரமபுருஷன், ஸேது: - அணையாகிறான்.

ஸ0-ஹா. இந்த அக்ஷரபரப்ரம்ம ஸ்வரூபத்தை விசதமாக்குவதற்கு அடிக்கடி சொல்லுகிறது.

ரா-ஹா. மோக்ஷமானது ஸம்ஸாரஸாகரத்திற்கு அக்கரையாகையால் அதற்குக் காரணமாகிய பகவானை ஸேதுவென்கிறது. ஸேதுவானது இக்கரையோரை அக்கரை

சேர்ப்பதன்றோ; ஆகையால் மோக்ஷப்ரதனை அவனையே உபாஸியுங்கோள் இதரவிஷயங்களை விடுங்கோள். அவனே ஸர்வாதாரபூதன்.

௬. अरा इव रथनाभौ संहता यत्र नाड्यः स एषोऽन्तश्चरते बहुधा जायमानः। ओमित्येवं ध्यायथ आत्मानं स्वस्ति वः पाराय तमसः परस्तात्॥

௬. அரா இவ ரதநாபௌ ஸம்ஹதா யத்ர நாட்ய: ஸ ஏஷோऽந்தஶ்சரதே பஹுதா ஜாயமாந:।
ஓமித்யேவம் த்யாயத ஆத்மாநம் ஸ்வஸ்தி வ: பாராய தமஸ: பரஸ்தாத்॥

(ப்-ம்.) யத்ர - எந்தஹ்ருதயத்தில், ரதநாபௌ - ரதநாபியில், அரா: இவ - அரங்கள்போல, நாட்ய: - நாடிகள், ஸம்ஹதா: - சேர்ந்திருக்கின்றனவோ; அந்த: - அந்தஹ்ருதயத்தில், ஸ: ஏஷ: - அந்த அக்ஷர புருஷன், பஹுதா - அனேகப்ரகாரமாக, ஜாயமாந: - உண்டாகிறவனாய், சரதே - ஸஞ்சரிக்கிறான். தமஸ: - மூலப்ரக்ருதிக்கு, பரஸ்தாத் - அப்புறத்தானாகிய வ: - உங்களுக்கு, பாராய - ப்ராப்யனாயிருக்கிற அவனை யடைவதற்கு, ஆத்மாநம் - ஆத்மாவாகிய அவனை ஓம் இதி ஏவம் - ப்ரணவார்த்தங்கொண்டு, த்யாயத - த்யானம்பண்ணுங்கோள், ஸ்வஸ்தி - அப்படி த்யானம் செய்கிற உங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது.

௬0-ஹா. நாடீஸ்தாநமாகிய ஹ்ருதயத்தில் ஸாக்ஷிபூதனைக்கொண்டு ஸுகம் துக்கம் முதலிய வற்றோடுகூடி ஜ்ஞாதாவாய் அநேகப்ரகாரமாய் உண்டாகிறான். அந்த ஆத்மாவை ப்ரணவத்தைக்கொண்டு சொல்லியபடி த்யாநியுங்கோள். இப்படி தத்வஜ்ஞாநியான ஆசாரியன் சிஷ்யனுக்கு உபதேசிக்கவேண்டிய விஷயத்தை யுபதேசிக்க, சிஷ்யனும் விரக்தனாய் ப்ரம்மவித்யையில் விருப்பமுடையவனாய் மோக்ஷமார்க்கத்திலிழிய அப்படி இழிந்த சிஷ்யனுக்கு விக்நமின்றி ப்ரம்மப்ராப்தி யுண்டாம்படி அநுக்கிரகம்செய்கிறார். அவித்யைக்கடந்து ப்ரம்மஸ்வரூபத்தைப் பெறுவதற்கு விக்நங்கள் சமிக்கவேணுமென்று ஆசாரியர் ஆசீர்வாதம் செய்கிறார்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

பதஉரையின்படி கருத்து இராமாநுஜபாஷ்யத்தில் கூறப்பட்டது.

௭. ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் யஸ்யைஷ மஹிமா புவி।
திவ்யே ப்ரஹ்மபுரே ஹ்யேஷ வ்யோம்ந்யாத்மா ப்ரதிஷ்டித:॥

௭. यः सर्वज्ञः सर्वविद्यस्यैष महिमा भुवि।
दिव्ये ब्रह्मपुरे ह्येष व्योम्न्यात्मा प्रतिष्ठितः॥

(ப்-ம்.) ய: - எந்த அக்ஷரபுருஷன், ஸர்வஜ்ஞ: - எல்லாமறிந்தவனோ; ஸர்வவித் - எல்லாமடைந்தவனோ; புவி - இவ்வுலகத்தில், ஏஷ: மஹிமா - இந்தமாஹாத்ம்யமானது, யஸ்ய - யவனுடையதோ, ஏஷ: - இந்த ஆத்மாவான பரமபுருஷன், திவ்யே வ்யோம்நி - பரமாகாசத்தில், ப்ரஹ்மபுரே - வைகுண்டநகரத்தில், ப்ரதிஷ்டித: - ஹி - இருப்பவனன்றோ;

ஸ௦-ஹா. அவித்யைக்குப் பரனுயிருக்கும் ப்ரவித்யாவேத்யனுன பரமபுருஷ னிருக்குமிடங் கூறுகின்றது. இந்தபரமபுருஷன் ஸர்வஜ்ஞனென்றும் எல்லாமடைந்தவனென்றும் சொல்லப்பட்டது. இன்னமும் அவனுக்கு மஹிமைசொல்லுகிறது. ஸமஸ்தலோகங்களும் இவனுடைய ஆஜ்ஞையிலிருக்கின்றன. சூர்யசந்திரர்கள் இவனுக்கு பயந்து சுழலுகிறுர்கள். இவனுடைய ஸங்கல்பத்தால் நதிகளும் ஸமுத்திரங்களும் தங்கள் நிலைமாருமலிருக்கின்றன. ஸகலஸ்தாவரஜங்கமங்களு மவனிட்டவழக்காயிருக்கின்றன ருதுக்களு மயனங்களும் வருஷங்களும் அவன்கட்டளையைத் தாண்டுகிறதில்லை. அவனிட்ட கட்டளையா லவரவர் ஒவ்வொருவ்யாபாரத்தாலு மவ்வோவ்யாபாரங்களின் பலனைப்பெறுகிறுர்கள். இப்படிப்பட்டமாஹாத்ம்யமுடைய பரமபுருஷன், விளங்காநின்ற ஹ்ருதயமத்யத்திலிருக்கிறவனைப்போல் காணப்படுகிறுன்.

ரா-ஹா. மஹாமஹிமையுடைய பரமபுருஷன் பரமபதத்தில் வஸிக்கிறுன். அவன் ஸர்வஜ்ஞன் அவாப்தஸமஸ்தகாமன்.

௮. 𑌮𑌨𑍋𑌮𑌯𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑌰𑍀𑌰𑌨𑍇𑌤𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑍋𑌽𑌨𑍍𑌨𑍇 𑌹𑍃𑌦𑌯𑌂𑌸𑌂𑌨𑌿𑌧𑌾𑌯 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌧𑍀𑌰𑌾 𑌆𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌮𑌮𑍃𑌤𑌂𑌯𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ॥

౭. మనోమయః ప్రాణశరీరనేతా ప్రతిష్ఠితోఽన్నే హృదయం సన్నిధాయ ।
తద్విజ్ఞానేన పరిపశ్యన్తి ధీరా ఆనన్దరూపమమృతం యద్విభాతి ॥

(ப்-ம்.) 𑌮𑌨𑍋𑌮𑌯𑌃 - நெஞ்சினுல் காணத்தக்கவனும், 𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑌰𑍀𑌰𑌨𑍇𑌤𑌾 - ப்ராணனையும் சரீரத்தையும் அவைகளின் வ்யாபாரத்தில் நடத்துகிறவனுமான பரமாத்மா, 𑌅𑌨𑍍𑌨𑍇 - சரீரத்தில் 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃 - இருக்கிறுர். 𑌹𑍃𑌦𑌯𑌮𑍍 - நெஞ்சை, 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌾𑌯 - அவரிடத்தில் சேர்த்து, 𑌯𑌤𑍍 - யந்தப்ரம்மஸ்வரூபமானது, 𑌆𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌮𑍍 - ஆநந்தரூபமாயும், 𑌅𑌮𑍃𑌤𑌮𑍍 - அம்ருதஸ்வரூபமாயும், 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 - விளங்குகிறதோ, 𑌤𑌤𑍍 - அந்த ப்ரம்மஸ்வரூபத்தை, 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 - உபாஸநத்தினுல், 𑌧𑍀𑌰𑌾𑌃 - பண்டிதர்கள், 𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 - காண்கிறுர்கள்.

ஸ௦-ஹா.—மநஸ்ஸின் வ்ருத்திகளினு லறியத்தக்கவனுய் ப்ராண சரீரங்களுக்கு நேதாவா யிருக்கிறவன் உண்ணும் சோற்றின் பரிணமமாகிய ஸ்தூல சரீரத்திலும் ஸூக்ஷ்மமாயிருக்கிற சரீரத்தில் வர்த்திக்கிறுன். ஹ்ருதய புண்டரீகத்தில் புத்தியை செலுத்தி உபதேசஜ்ஞானத்தா லாத்மதத்வத்தை யறிந்து ஆநந்தாம்ருத ஸ்வரூபமான அந்த ப்ரம்மத்தை யுபாஸிக்கிறுர்கள்.

ரா-ஹா.—பரிசுத்தமான நெஞ்சினுல் பரமாத்மா காணத்தக்கவன். ஜீவனுக்கு ப்ராண சரீரங்களைக் கொடுப்பவன். ப்ராணனை சரீரமாக உடைய ப்ரபு. சரீரத்தில் எவனிருக்கிறுனே அவனிடத்தில் நெஞ்சை செலுத்தி ஆநந்தாம்ருத ஸ்வரூபமான ப்ரம்மத்தை யறிந்து உபாஸநம் செய்கிறுர்கள்.

௯. 𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌹𑍃𑌦𑌯𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌶𑍍𑌛𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌶𑌯𑌾𑌃 ।
𑌕𑍍𑌷𑍀𑌯𑌨𑍍𑌤𑍇𑌚𑌾𑌸𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌪𑌰𑌾𑌵𑌰𑍇 ॥

౮. భిద్యతేహృదయగ్రన్థిశ్ఛిద్యన్తేసర్వసంశయాః ।
క్షీయన్తేచాస్యకర్మాణితస్మిన్దృష్టేపరావరే ॥

(ப்-ம்.) பராவரே - உலகத்திற்கு பெரியோராகிய இந்திரன் முதலானோரைத் தன்னில் தாழ்ந்தாராக வுடையனாயிருக்கிற, தஸ்மிந் - அந்த பரம புருஷன், த்ருஷ்டே - உபஸநத்தால் காணப்படுவானாயின், ஹ்ருதயக்ரந்தி: - நெஞ்சிலிருக்கிற அவித்யாதிதோஷங்கள், பித்யதே - நசிக்கின்றன, ஸர்வ ஸம்சயா: - ஸகலஸந்தேஹங்களும், சித்யந்தே - கழிந்துபோகின்றன. அஸ்ய - இவனுடைய, கர்மாணி - கருமங்கள், க்ஷீயந்தே - க்ஷயிக்கின்றன.

ஸ௦-ஹா.—இதில் பரமாத்மஜ்ஞாநத்திற்கு பலம் சொல்லுகிறது. புத்தியி லழிந்திக் கிடக்கிற வாஸநாமயமான அவித்யை கழியுண்கிறது. அவித்யை ஸ்வபாவத்தாலாத்மாவை யடைந்ததன்று. கங்கையைப்போலே இடைவிடாமல் வந்துகொண்டிருந்த ஸகல ஸந்தேஹங்களும் நீங்குகின்றன. இவ்வாறு ஸம்சயங்கள் நீங்கி யவித்யை கழிந்தவனுக்கு, ஜ்ஞாநம் பிறப்பதற்குமுன் செய்தவையாய் பலங்கொடாத கருமங்களும் அக்காலத்தில் செய்த கருமங்களும் க்ஷயிக்கின்றன. இந்த ஜந்மத்திற்குக் காரணமாகிய கருமமோவெனில் அது பயனைத் தருவதற்குத் தொடங்கியதால் அநுபவித்தே யழிய வேணும். இவையெல்லாம் அந்த ப்ரம்மமே நானென்றறிந்தவனுக் குண்டாகிறபலம்.

ரா-ஹா.—அந்த ஜ்ஞாநத்திற்கு பலம் சொல்லுகிறது. ஸர்வோத்க்ருஷ்டர்களான ப்ரம்மாதிகள் யவனுக்குத் தண்ணியரோ; யவன் சேதநாசேதநங்களை சரீரமாக உடையவனோ; அந்த பரமபுருஷன் தர்சநஸமாநாகாரமான உபாஸநத்தில் விளங்கினானாயின் அந்த உபாஸகனுக்கு அந்தக்கரணத்தில் ராகத்வேஷாதிகளாகிய முடிகள் அவிழ்ந்து போகின்றன. ஹ்ருதய பதத்திற்கு, அந்தக்கரணத்தையாயினும், ஜீவனையேயாயினும் பொருளாகச் சொல்லலாம். ஆகையால் ஜீவனுக்கு ஸமஸ்தராகத்துவேஷங்களும் நீங்குமென்றுமொருபொருள்சொல்லவமையும். பிரம்மத்தையறிந்தபோது ஸர்வஜ்ஞத்வமுண்டாகிற தானதால் ஸகல ஸம்சயங்களும் நீங்கிப்போகின்றன. ப்ராரப்தகர்மம் தவிர மற்றுள்ள அநேக ஜந்மார்ஜிதங்களான பூர்வகருமங்கள் நசிக்கின்றன. கர்மத்திற்கு நாசமாவது பலங்கொடுக்கிற சக்தி நாசமென்றறிக. பகவான் பாஷ்யகாரர் இவ்வாறுவ்யாக்யானம் செய்திருக்கிறார். இனி இப்படி உபாஸித்தவனுக்கு மரணகாலத்தில் ஸகல கருமங்களும் நசிக்குமென்று சில ச்ருதிகள் சொல்லுகின்றன. பகவான் பாஷ்யகாரரும் அவ்வாறே யருளிச்செய்திருக்கின்றனர். அப்படியிருக்க, இங்கு உபாஸநம் தொடங்கும்போதே ஸகல கருமங்களும் அழியுமென்பது கூடுமோவெனில்; கூடும்; இங்குச் சொன்ன அழிவு இவ்வுபாஸகனுடைய பாபத்திற்கு பலம்கொடுக்கக் கடவேனல்லேன். என்கிற பகவத்ஸங்கல்ப ரூபமாகின்றது. மரணகாலத்தில் இவன் பாபங்களைப் பொறுத்துவிட்டேன், என்கிற பகவத்ஸங்கல்பம். ஆகையால் விரோதமில்லை.

௧௦. ஹிரண்மயே பரே கோசே விரஜம் ப்ரஹ்ம நிஷ்கலம் ।
தச்சுப்ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதிஸ் தத்யதாத்மவிதோ விது: ॥

౧౦. హిరణ్మయేపరేకోశే విరజంబ్రహ్మనిష్కలమ్ ।
తచ్ఛుభ్రంజ్యోతిషాంజ్యోతిస్తద్యదాత్మవిదోవిదుః॥

(ப்-ம்.) ஹிரண்மயே - ஸ்வயம்ப்ரகாசமாகையாலே ஹிரண்மயமென்னப்படுவதாய், கோசே - பரமாத்மவாஸஸ்தானமாயிருக்கிற, பரே - பரம பதத்தில், விரஜம் - ஸத்வ ரஜஸ் தமோரூபகுணங்களில்லாததாய், நிஷ்கலம் - அவயவமில்லாததாய், சுப்ரம் - சுத்தனாய், ஜ்யோதிஷாம் - ஜயோதிஸ்

ஸூர்யாதிகளுக்கும், ஜ்யோதி:-ஜ்யோதிஸ்ஸைக்கொடுக்கத்தக்கதாய், ஆத்மவித: யத்விது:-ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவராலே யறியப்பட்டதாய், தத்-நதிப்ரஸித்தமாயிருக்கிற, ப்ரஹ்ம - பரப்ரம்மமானது விளங்குகின்றது.

ஸ0-ஸா.—கீழ்ச்சொல்லிய மந்திரத்தின் பொருளேயே விரித்துரைக்கின்ற திம் மந்திரமும் மேலிரண்டு மந்திரங்களும். ஆத்மவித்துக்களே ப்ரம்ம ஸ்வரூபத்தை இப் படிப்பட்டதென் றறிவார்கள். மற்றோரறியார்.

பா-ஸா.—நிர்தோஷமாய் திவ்யமங்கள விக்கிரத்தோடு பரமபதத்தில் பரப்ரம்மம் விளங்குகின்றது.

கக. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோ(அ)யமக்நி: । தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ॥

౧౧. నతత్రసూర్యోభాతినచంద్రతారకంనేమావిద్యుతోభాంతికుతోయమగ్నిః।
తమేవభాంతమనుభాతిసర్వంతస్యభాసాసర్వమిదంవిభాతి॥

(ப்-ம்.) தத்ர - அந்தப்ரம்மஸ்வரூபத்தில், ஸூர்ய: - ஸூரியனும், ந பாதி - ப்ரகாசிப்பதில்லை, சந்த்ர தாரகம் - சந்திரனும் நக்ஷத்திரங்களும் ந - ப்ரகாசிப்பதில்லை, இமா: வித்யுத: - இந்த மின்னல்களும், ந பாந்தி- மின்னுகின்றனவில்லை, அயமக்நி: - இந்த அக்நி, குத: - எப்படிப்ரகாசிக்கப்போகிறது, ஸர்வம் - எல்லாம், பாந்தம் - ப்ரகாசிக்கிற, தமேவ அநு - அந்தப்ரம்மத்தையநுஸரித்தே, பாதி - ப்ரகாசிக்கின்றன. தஸ்ய - அந்த ப்ரம்மத்தினுடைய, பாஸா - காந்தியினால், இதம் ஸர்வம்-இவையெல்லாம், விபாதி - ப்ரகாசிக்கின்றது.

ஸ0-ஹா.—ஸமஸ்த ஜ்யோதிஸ்ஸுக்களிலு மிதுவேஜ்யோதிஸ்ஸென்று முன் சொன்ன விஷயத்தை விரிக்கின்றது இம்மந்திரம். ஆத்மாவாகிய ப்ரம்மஸ்வரூப விஷயத்தில், எல்லாவற்றையும் ப்ரகாசிக்கச்செய்கிற சூரியனும் ப்காசிப்பதில்லை. அந்த ப்ரம்மத்தை ப்ரகாசிக்கச்செய்கிறதில்லை. அந்த சூரியனே, அந்தப்ரம்மத்தின் தேஜஸ்ஸி னால் ஆத்மாவல்லாத ஸமஸ்தத்தையும் ப்ரகாசிக்கச்செய்கிறான். அவனுக்கு சுயமாய் ஒன்றை ப்ரகாசிக்கச்செய்ய சக்தியில்லை. அவ்வாறே சந்திரனும் நக்ஷத்திரங்களும் இந்த மின்னல்களும் ப்ரகாசிக்கச்செய்வதில்லை. ஸூரிய தேஜஸ்ஸுக்கு முன்னடங்கிப்போகின்ற தேஜஸ்ஸை யுடையவனாய் நம்மால் ப்ரத்யக்ஷத்தில் காணப்படுகிற இந்த அக்நிக்கு அந்த ப்ரம்மத்தை ப்ரகாசப்படுத்தும் சக்தியேது. பலவாறுசொல்லி யென்பயன். இந்த ஜகத்து விளங்குவது தனக்குத்தானே விளங்காநின்ற ப்ரம்மஸ்வரூபத்தை யநுஸரித்தேயன்றி வேறில்லை. தண்ணீர்முதலியவை யொன்றைச் சுடுவது நெருப்பின் ஸம்பந்தாலேயன்றி சுயமாகவன்றே. அவ்வாறேயென்க. இந்த ஸூரியசந்திரர் நக்ஷத்திரம் முதலியவற்றோடு கூடிய இந்த ஜகத்து அந்த ப்ரம்மத்தின் தேஜஸ்ஸாலே ப்ரகாசிக்கின்றது. ஏனென்றால் அந்த ப்ரம்மமேயன்றோ காரியமாய் அவைகளின் காந்தியால் விளங்குகின்றது. ஆகையா லந்த ப்ரம்மம் ஸ்வயம் ஜ்யோதிரூபமென்பது விளங்குகின்றது. தனக்கில்லாதே பிறருக்குத்தான்கொடுப்பது கூடாதன்றோ; மண்குடமுதலியவை மற்றொன்றை விளங்கச்செய்யக் கண்டதில்லை, காந்தியுடைய ஸூரியன் முதலாகிய

வற்ருல் மற்றவை விளங்கக்கண்டோம். ஆனதால், தான் ஸ்வயம் ஜ்யோதியாயிருந்தே மற்றவைகளை ஜ்யோதிரூப மாக்கவேணும்.'

ரா-ஹா.—அந்த ப்ரம்ஸ்வரூபத்தை ஜ்யோதிஸ்ஸுக்களுக்கும் ஜ்யோதிஸ்ஸென்றது என்கொண்டென்பதை விரிக்கின்றது. இந்த ஸூரியன் முதலியவை எல்லாவற்றுக்கும் அந்த ப்ரம்மம் ப்ரகாசிக்கும்போது காந்தியில்லை என்று கருத்து. மிகவும் ப்ரகாசரூபமாய் ஸூரியாதிகளும் அவைகளால் ஜகத்து ப்ரகாசிக்கவும் ப்ரத்யக்ஷமாய்க் காணப்படுகையில் அந்த ப்ரம்மஸ்வரூபத்தில் ஸூரியன் ப்ரகாசிப்பதில்லை என்றெங்ஙனம் சொல்லலாமெனில் கூறுகின்ருேம். இந்த ஜகத்தை விளங்கச்செய்கிற ஸூரியாதி தேஜஸ்ஸெல்லாம் சுயமாய் வந்ததன்றே. பரமாத்மாவினுல் கொடுக்கப்பட்ட அவனுடைய தேஜஸ்ஸே யன்ருே. இவ்விஷயம் கீதையிலும் பகவானுலே சொல்லப்பட்டது. "யதாதித்யகதம் தேஜோஜகத் பாஸயதேகிலம் ! யச்சந்த்ரமஸியச்சாக்னௌ தத் தேஜோவித்திமாமகம்" என்கிற சுலோகத்தைக் காண்க. ஸூரிய சந்திராக்னி முதலியவற்றிலுள்ள தேஜஸ்ஸு என்னுல் கொடுக்கப்பட்ட என்னுடைய தேஜஸ்ஸு, என்று இதின் பொருள். பகவான் பாஷ்யகாரரும் இவ்வாறே வ்யாக்யாநம் செய்தருளினுர். ஸூரியாதிகள் என்னை யாராதித்து என்னிடத்திலிருந்து என்னுடைய தேஜஸ்ஸின் லேசத்தைப்பெற்று விளங்குகிருர்கள். என்று அர்ஜுநனுக்கு பகவானுபதேசிக்கிருரென்று அவ்விடத்தில் பாஷ்யத்திற்குக் கருத்து. ஆகையா லிவர்களுக்கு சுயமான தேஜஸ் ஸில்லாமையினுல் தேஜஸ்ஸில்லாதவர்களென்று சொல்லக் கூடும். ஆகையால் அந்த பரமபுருஷனுடைய காந்தியினுலே எல்லாம் விளங்குகிறது.ப்ரத்யக்ஷத்தில் ஸூரியாதி தேஜஸ்ஸால் ஜகத்து விளங்கினுலு மந்த தேஜஸ்ஸு அவர்களுடைய தன் ருகையால் பரமபுருஷனுடையதே யாதலால் அந்த பரமபுருஷனுடைய தேஜஸ்ஸாலே எல்லாம் விளங்குகிறது என்று சொல்லக் குறையில்லை. இங்கு சொல்லவேண்டிய விசேஷங்கள் கடவல்லியிலும் சொல்லியிருக்கிருேம். அங்கே கண்டுகொள்க.

௧௨. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌮𑌮𑍃𑌤𑌂𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑌶𑍍𑌚𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌤𑌶𑍍𑌚𑍋𑌤𑍍𑌤𑌰𑍇𑌣। 𑌅𑌧𑌶𑍍𑌚𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂𑌚𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑍇𑌦𑌂𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌿𑌦𑌂𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑌮𑍍॥

౧౨. బ్రహ్మైవేదమమృతంపురస్తాద్బ్రహ్మపశ్చాద్బ్రహ్మదక్షిణతశ్చోత్తరేణ।
అధశ్చోర్ధ్వంచప్రసృతంబ్రహ్మైవేదంవిశ్వమిదంవరిష్ఠమ్॥

(ப-ம்) 𑌇𑌦𑌂-இப்படிப்பட்ட, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 - பரப்ரம்மமே, 𑌅𑌮𑍃𑌤𑌂- மோக்ஷம், 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 - முன்னும்விளங்குகின்றது, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - பிரம்மமே, 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 - பின்னும்விளங்குகின்றது, 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌤𑌃- வலபுறத்திலும், 𑌉𑌤𑍍𑌤𑌰𑍇𑌣𑌚 - இடபுறத்திலும், 𑌅𑌧𑌃𑌚 - கீழும், 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂𑌚 - மேலும், 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌂 - வ்யாபித்திருக்கின்றது, 𑌇𑌦𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 - இந்தஸமஸ்தமும், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - ப்ரம்மமே, 𑌇𑌦𑌂 - இந்தப்ரம்மமே, 𑌵𑌰𑌿𑌷𑍍𑌠𑌂 - வரிக்கத்தக்கது.

௱-ஹா.—ப்ரம்மமே ஸத்யம், மற்றவை மித்யை, என்று முன்சொன்ன உபதேசத்தை திருடமாக்கி முடிக்கின்ற திம்மந்திரத்தில். உலகத்தின் தோற்றம் கயிற்றில் தோற்றுகிற பாம்புத் தோற்றம்போலது. ப்ரம்மமேஸத்யமென்று வேதாநுசாஸநமாம்.
௱௧-ஹா.எல்லாவிடங்களிலும் வ்யாபித்திருக்கிறவஸ்து வரிக்கத்தக்கின ப்ரம்மமேயாம்.

𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍇 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌖𑌣𑍍𑌡𑌃 𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑌮𑍍.

ஸ்ரீ:.

𑌅𑌥 𑌤𑍃𑌤𑍀𑌯𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑌖𑌣𑍍𑌡𑌃

௧. 𑌦𑍍𑌵𑌾𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾𑌸𑌯𑍁𑌜𑌾𑌸𑌖𑌾𑌯𑌾𑌸𑌮𑌾𑌨𑌂𑌵𑍃𑌕𑍍𑌷𑌂𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇।
𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋𑌽𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿॥

౧. ద్వాసుపర్ణాసయుజాసఖాయాసమానంవృక్షంపరిషస్వజాతే।
తయోరన్యఃపిప్పలంస్వాద్వత్త్యనశ్నన్నన్యోఽభిచాకశీతి॥

(ப்-ம்) 𑌸𑌯𑍁𑌜𑍌 - ஸமாநமானகுணமுடையவர்களாய், 𑌸𑌖𑌾𑌯𑍌 - கூடியிருப்பவர்களாய், 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑍌 - பக்ஷிகள்போல்வராகிய ஜீவாத்ம பரமாத்மாக்கள், 𑌦𑍍𑌵𑍌 - இருவரும், 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 - வ்ருக்ஷம்போலிருக்கிற ஒருசரீரத்தை, 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 - அடைந்திருக்கிறார்கள், 𑌤𑌯𑍋𑌃 - அவ்விருவருக்குள், 𑌅𑌨𑍍𑌯𑌃 - பரமாத்மாவைக்காட்டில் வேறுபட்டவனான ஜீவாத்மா, 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁 - விபாகதசையையடைந்திருக்கிற, 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 - புண்யபாபரூபமாகிய கருமபலத்தை, 𑌅𑌤𑍍𑌤𑌿 - புஜிக்கிறான். 𑌅𑌨𑍍𑌯𑌃 - ஜீவாத்மாவைக் காட்டில் வேறுபட்ட பரமாத்மா, 𑌅𑌨𑌶𑍍𑌨𑌨𑍍 - கர்ம பல ஸம்பந்தமில்லாதவனாய், 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿 - ப்ரகாசிக்கிறான்.

ஸ0-ஸா.—இதுவரையில் பரவித்யை சொல்லப்பட்டது. யாதொன்று புருஷபதத்தால் சொல்லப்படுகிற ஸத்யஸ்வரூபமான அக்ஷர பரப்ரம்மத்தை யறிவதற்கு ஸாதநமாகின்றதோ; யதை யறிந்து அவித்யைமுதலிய ஸம்ஸார காரணங்கள் நீங்கி ராகத்வேஷமுதலிமுடிகள் கழியுமோ; அந்த ப்ரம்மத்தை யடைவதற்கு ப்ரணவத்தை வில்லாக்கி என்று துடங்கி யோகமுமுபாயமாகச் சொல்லப்பட்டது. இனி யதற்கு துணைக் காரணங்களாகிய ஸத்யமுதலியவை கூறுவதற்கு இந்த கண்டம் துடங்கப்பட்டது. அதுவுமன்றி தத்வ நிச்சயமும் முக்யமாய் சொல்லப்படுகிறது. கீழில் தத்வநிச்சயம் பண்ணப்பட்டதாயினு மது புலப்படுவது மிகவும் வருத்தமானதினால் இங்குமதைச் சொல்வது புநருக்தி தோஷத்திற் கிடமாகாது. பரமார்த்த வஸ்துவை யறிவித்தற்கு ஸூத்திரமாகிய மந்திரம் முதலில் "த்வாஸுபர்ணா" என்பது. இதற்குப் பொருள் சொல்லுகிறோம். பக்ஷிகளின் ஸாத்ருச்யமிருப்பதால் பக்ஷிகளென்றது. எப்போதும் கூடியிருப்பதால் ஸயுஜௌ என்றது. ஒன்றாய் தோற்றுகிற காரணத்தை யுடையவராகையால் ஸகாயௌ என்றது. இப்படியுள்ள ஜீவாத்ம பரமாத்மாக்கள் வருக்ஷம்போ லழிந்து போகிறபடியால் வ்ருக்ஷமெனப்படுகிற சரீரத்தை தங்களுக்கு ப்ரத்யக்ஷ ஸ்தாநமாக அடைந்திருக்கின்றார்கள். இரண்டு பக்ஷிகள் ஒரு வ்ருக்ஷத்தில் சேருவதுபோலவென்று கருத்து. இந்த வ்ருக்ஷமானது மேல்வேராய் கீழ் கிளைகளாய் க்ஷேத்திரமென்று பெயர் பெற்றதாயிருக்கிறது; ஸமஸ்த ப்ராணிகள் செய்த கருமபலத்திற்கு மிருப்பிடமாயிருக்கிறது இந்த சரீரமே. அந்த சரீரத்தை அவித்யை காமம் கருமம் வாஸனை இவைகளுக்கிடமாகிய லிங்கத்தை உபாதியாக உடைய ஜீவனும் ஈச்வரனும் பக்ஷிகளைப்போ லடைந்திருக்கின்றனர். அவ்வாறு சேர்ந்திருக்கிற இருவருள் ஒருவனாகிய ஜீவன், ஸுகதுக்கங்களை கருமத்திற்குத் தக்கபடி யநுபவிக்கிறான். அது, அவிவேகத்தினாலே வந்த விசித்திரவேதனை, ஸர்வஜ்ஜனாய் ஸத்வத்தை யுபாதியாக உடைய நித்யசுத்தபுத்த முக்தஸ்வ

பாவனுகிய ஈச்வரன் கருமபலத்தை புசிப்பதில்லை. இந்த ஈச்வரன் ஸத்தாமாத்திரத்தால் ப்ரக்ருதி ஜீவர்களை நித்தியஸாக்ஷியாய்க்கொண்டு ப்ரேரணம் செய்கிறவனுகையால் தான் ஸாக்ஷியாகிருனேயன்றி கருமபலத்தை புசிப்பதில்லை, தான் பார்த்தமாத்திரத்தால் ப்ரேரித்துக்கொண்டு அரசனைப்போல் விளங்குகிருன்.

ஞா-ஹா.—கீழ்ச்சொல்லியதில் ப்ரம்மத்திற்கு சரீர ஸம்பந்தத்தால் ஸுகதுக்காநுபவம் வரும்போல் தோற்றுகையா லந்த ஸந்தேஹம் நீங்குவதற்கு இந்த மந்திரம் சொல்லப்படுகிறது. சுபாவத்தில் அபஹதபாப்மத்வம் முதலிய குணங்களால் சமாநராய், கூடியிருப்பவராய் பக்ஷிபோலிருக்கிற ஜீவாத்ம பரமாத்மாக்கள் ஒருசரீரத்தி லிருந்தாலும் பரவசஞன ஜீவாத்மா துக்காநுபவம் பண்ணுகிருனேயன்றி பரமாத்மாத்வுக் கில்லை. ஜீவன் வேறு பரமாத்மா வேருகையால் ஜீவனுடைய துக்கம் பரமாத்மாவுக்கில்லை. இத்தால் ஜீவனே பரமாத்மா என்று அத்வைதிகள் சொல்லுகிறபடி ஸரியல்லவென்று இந்தச் சுருதி காட்டுகிறது. அப்படியாகில் பரமாத்மாவுக்கு துக்காநுபவம் வருகையாலென்க.

உ. ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ(அ)நீஶயா ஶோசதி முஹ்யமாந:।
ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶமஸ்ய மஹிமாநமிதி வீதஶோக:॥

౨. సమానే వృక్షే పురుషో నిమగ్నో௨నీశయా శోచతి ముహ్యమానః।
జుష్టం యదా పశ్యత్యన్యమీశమస్య మహిమానమితి వీతశోకః॥

(ப்-ம்.) அநீஶயா-போக்யபூதையாயிருக்கிற ப்ராக்ருதியினுலே, முஹ்யமாந: - மோஹத்தையடைந்தவனுய், ஸமாநே - ஒன்றுயிருக்கிற, வ்ருக்ஷே-சரீரத்தில், நிமக்ந: - முழுகினவனுய், ஶோசதி - சோகிக்கிறுன். இதி - இந்தப்படி, அந்யம் - வேறுனவனுய், ஜுஷ்டம் - தன்னிடத்தில் ப்ரீதியுடையவனுயிருக்கிற. ஈஶம் - பரமாத்மாவையும், அஸ்ய - இந்த பரமாத்மாவினுடைய, மஹிமாநம் - மாஹாத்ம்யத்தையும், யதா - எப்போது, பஶ்யதி - பார்க்கிறுனே, (ததா-அப்போது) வீதஶோக:-சோகமில்லாதவனுகிறுன்.

ஸம்-ஹா —இவ்வாறு ஜீவனுக்கு கர்மபலாநுபவ மாகையால் முன்சொன்னபடி வ்ருக்ஷம்போன்ற ஒருசரீரத்தில் போக்தாவாய்க்கொண்டு அவித்யை, காமம் கருமபலம் ராகம், த்வேஷம்முதலிய பெருஞ்சுமையால் அமுக்கப்பட்டு ஸமுத்திரஜலத்தில் சுரைக்காய்போல முழுகினவனுய் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்துக்கொண்டு இவனுக்கு நான் பிள்ளை இவனுக்கு நான் பேரன் நானிளைத்தவன் நான் பெருத்தவன் நான் குணமுடையவன் நான் குணமில்லாதவன் நான் ஸுகத்தை யநுபவிக்கிறேன், நான் துக்கத்தை யநுபவிக்கிறேன், என்றிப்படிப்பட்ட ஜ்ஞாநமுடையவனுய் பிறப்பதும் சாவதும் பந்துக்களோடு கூடுவதும் பிரிவதுமாய், எனக்கு சக்தியில்லையே என்பிள்ளை மரித்தானே என் பார்யை மரணமடைந்தாளே இனி நானேன் பிழைத்திருக்கவேணும், என்று தீநனுய் அனேகவித ஸங்கடங்களால் விவேகமின்றி சிந்தையடைகிறவனுய் தபிக்கிருன். இப்படி திர்யக்காபு மனுஷ்யனுயும் பிறந்துபிறந்து ப்ரேதனுகிற அந்த ஜீவன் இவ்வாறு கழிந்துபோன அநேக ஜந்மங்களில் செய்த ஸுக்ருதலேசத்தால் ஒருகருணையுடைய புருஷனுல் உபதேசிக்கப்பெற்ற யோகமார்க்கத்தை யுடையனுய் கொல்லாமை, மெய்யுரை, ஸ்த்ரீ ஸம்பந்தமில்லாமை, நிவ்ருத்தி, சமம்தமம் முதலியவற்ருேடு கூடி தெளிந்த நெஞ்சையுடையவனுய் யோகிகளில் பலராலும்கண்டு ஸேவிக்கப்படுகிற

ஶ்ரீ:

ஶ்ரீபரப்ரம்மணேநம:.

ஈசாத்யஷ்டோபநிஷத் த்ராவிடபாஷாவ்யாக்யானம்.

ஈசாவாஸ்யோபநிஷத் த்ராவிட

பாஷாவ்யாக்யானம்.

பதாந்வயார்த்தபேதங்கள்.

ஈசாவாஸ்யோப நிஷத்து, கேநோப நிஷத்து, கடோப நிஷத்து, ப்ரச்நோபநிஷத்து, முண்டகோப நிஷத்து, மாண்டூக்யோப நிஷத்து. இந்த ஆறு உபநிஷத்துக்களுக்கும் முன்மத்வ பாஷ்யத்திலுள்ள விசேஷார்த்தங்க ளெழுதப்படாமையால், இந்த ஆறு உபநிஷத்துகளுக்கும் மத்வமதாநு ஸாரமாகச்செய்த பாஷ்யங்களிலுள்ள விசேஷார்த்தங்க ளெழுதப்படுகின்றன. தைத்திரீயம் முதல், நாலுஉபநிஷத்துகளுக்கும் மற்ற இரண்டு பாஷ்யங்களோடு இந்த பாஷ்யமும் எழுதப்படும். அர்த்தபேதங்க ளுள்ளவிடத்தில் மாத்திரமே அந்தந்த அர்த்தபேதங்க ளெழுதப்படுமென்றறிக.

ஈசாவாஸ்யமத்வபாஷ்யாவதாரிகை.

இந்த ஈசாவாஸ்யோப நிஷத்து ஸ்வாயம்புவமநுவினால் கண்டுபிடிக்கப்பட்டு யஜ்ஞஸ்வரூபியாகிய பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகிற க்ரமத்திலே வெளியிடப்பட்டது. அந்தவிஷ்ணுவுக்கு யஜ்ஞமூர்த்தியென்றுபெயர். இதின் விஸ்தரம் ப்ரம்மாண்ட புராணத்திலும் பாகவதத்திலும் விளங்கும்.

ஈ - க, ம - பா. ப்ரக்ருதி என்கிற இந்த லோகதத்வமானது விஷ்ணுவினால் நடத்தப்படுகிறது. ஸ்வயமாக இதற்கு ப்ரவர்த்திக்க சக்தியில்லை, அந்த விஷ்ணுகொடுத்த பொருளைக்கொண்டு புசிக்கவேணும். ப்ரம்மாண்டபுராண மிவ்வாறே கூறுகின்றது.

ஈ - உ, ம - பா. கருமங்கள் செய்துவந்தாலும் ஜ்ஞாநிக்கு அவை முக்திக்கு விரோதமாகிய தந்தம்பயனைத் தராவாம். அஜ்ஞஞாகி க்ருஷ்ணமூர்த்தியை உபாஸநம் செய்யாதவனுக்கே கருமங்கள் மோக்ஷவிரோதமாக தந்தம்பயனைத் தருகின்றன. இவ்வாறு நாரதீயபுராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஈ - ரு, ம - பா. விஷ்ணுவை யுபாஸியாதவர்கள், துன்பத்தைத்தருவது மஸுரர்களா லடையப்படுவதுமான நரகலோகத்தை யடைகிறார்கள். இதுதப்பாது. இவ்வாறு வாமநபுராணத்திலுங் கூறப்பட்டது.

ஈ - ச, ம - பா. இந்த சுருதியின் பொருள் ப்ரம்மாண்டபுராணத்தில் சொல்லப்பட்டது.

ஈ - ரு, ம - பா. இந்த சுருதியின்படி தத்வஸம்ஹிதையில் கூறப்பட்டது.

ஈ - சு, ம - பா. ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவனுக்கு பயமில்லை. இகத விஷயம் ஸௌகராயண ச்ருதியிலுஞ் சொல்லப்படுகிறது.

ஈ - எ, ம - பா. எல்லாபூதங்களிலு மிருக்கின்றவர் பரமாத்மா ஒருவரே, என்றறிந்தவனுக்கு சோகமோஹங்களொன்றுமில்லை. ஜீவபரமாத்மாக்களுக்கு ஐக்யமில்லை.

இந்தப்பொருள் பிப்பலாதசாகையிலுள்ள ச்ருதியில் நன்ருய் விளங்குகின்றது. கீழ்சுருதியில் கூறிய விஷயத்தையே இங்குங்கூறியது பரமாத்மா எங்குமிருக்கிருனென்பதில் தாத்பர்யத்தை விளக்குவதற்காம்.

ஈ - அ, ம - பா. இவ்வுலகம் பொய்யல்ல மெய்யாய் சாச்வதமானது. இதை விஷ்ணுபடைத்தார். இது வராஹபுராணத்தில் விரிவாய் கூறப்பட்டிருக்கிறது. இந்த பரமாத்மா ஸர்வசுத்தர்.

ஈ - கூ, க0, கக, கஉ, கங, கச, ம - பா. இந்த சுருதிகளின்பொருள் கூர்மபுராணத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றது.

ஈ - கடு, கசு, கஎ, ம - பா. இங்கு ஸூர்யமண்டலத்திலிருக்கும் பரமாத்மாவை யுபாஸிக்கிற ப்ரகாரஞ்சொல்லப்படுகிறது; இவ்விஷயம் இராமஸம்ஹிதையில் கூறப்பட்டது. இதனுல் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் ஸாதிக்கப்பட்டது.

ஈ - கஅ, ம - பா. இந்த சுருதிக்கும் இராமஸம்ஹிதையின் வசநப்படி தத்வத்தில் பொருள்கொள்க.

ஈ - ககூ, ம - பா. இந்த ச்ருதிக்கு ப்ரம்மதர்க்கவசநத்தை வ்யாக்யாநமாகக் கொள்க. நித்யமும் பக்தர்களை விஷ்ணுஸ்மரிக்கிருர் என்றுகருத்து.

ஈ - உ0, ம - பா. ஜ்ஞாநபக்திகளுடன் உன்னை வணங்குகிருேம் எங்களுக்குப் பாபத்தைப்போக்கி ஜ்ஞாநத்தைத் தரவேணும் இச்தசுருதிக்கு, ஸ்காந்தபுராணத்தில் விவரணம் செய்யப்பட்டது.

## பதார்த்வயார்த்தபேதங்கள்.

கீழ்ச்சொல்லிய அந்தந்த புராணுதிகளிலிருந்து வசநங்கள் ப்ரமாணங்களாக எடுக்கப்பட்டு அந்தந்த சுலோகவாக்யங்க ளங்கங்கெழுதப்பட்டன. இதனுல் அந்தவசநங்கள் அந்தச்ருதிகளுக்கு உபப்ரம்மணங்க ளாகையாலந்த வசநங்களுக்கிணங்க அந்தசுருதிகளுக்குப் பொருள் சொல்லவேணும். ஆகையா லத்வைதத்திற் கிடமில்லை என்னுகருத்து வெளியிடப்பட்டது. அந்தந்தச் லோக வாக்யங்களையெல்லா மிங்கெழுதி அவற்றிற் கெல்லாம் பொருள் கூறுவதில் விஸ்தரமாகுமென்று விசேஷக்கருத்துக்களே யெழுதப்பட்டன. எழுதாத விடங்களில் இராமாநுஜ பாஷ்யத்தின் கருத்துப் போலவே என்று கண்டுகொள்க. அவ்விரண்டுபாஷ்யங்களிலும் இவ்வுபநிஷத்து பதினெட்டு மந்திரங்களாகப் பிரிக்கப்பட்டாலும் இந்த பாஷ்யத்தில் இருபது மந்திரங்களாகப் பிரிக்கப்பட்டது. "யோஸாவஸௌ புருஷஸ் ஸோஹமஸ்மி" என்கிற வாக்யத்தையும், "ஓங்க்ரதோஸ்மரக்ருதம்ஸ்மர" என்கிற இரட்டித்துப் படிக்கப்பட்ட இந்தவாக்யத்தையும் தனிமந்திரமாகக் கொண்டபடியால், இருபது மந்திரங்களாயின வென்றறிக.

ஸ்ரீபரப்ரம்மணேநமஃ

ஈசாவாஸ்யோபநிஷத்திற்குமத்வபாஷ்யம் முற்றிற்று.

---

ஶ்ரீபரப்ரம்மணேநம:.

## 𑌕𑍇𑌨𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

ம - பா. இவவுபநிஷத்து நான்குகண்டங்களுக்கும் பொருள் ப்ரம்மஸாரத்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. சதுர்முகப்ரம்மாவை, உருத்திரன் விஷ்ணுதத்வத்தை யறியவிரும்பி, ப்ரச்நம்பண்ணினதற்கு சதுர்முகப்ரம்மா இந்த உபநிஷதர்த்தத்தை யுபதேசித்திருக்கின்றார். பார்க்கடலில் கண்வளர்ந்தருளுகிற மகாவிஷ்ணுவை இந்த உபநிஷத்து ப்ரதிபாதிக்கின்றது. இதனாலும் ஜீவாத்மாக்களுக்கும் ப்ரம்மத்திற்கும் பேதமேவெளியிடப்பட்டது. இதனால் ஸமஸ்ததேவதைகளிலும் விஷ்ணுவேசிறந்தவரென்று காட்டப்பட்டது. இந்த உபநிஷத்தி லர்த்தத்தை சிலவிடங்களில் மற்றும்சில சுருதிகளும், கீதையும் சப்தநிர்ணயமும் வித்யாநிர்ணயமும் வெளியாக்குகின்றன.

### பதாந்வயார்த்தபேதங்கள்.

இவ்வுபநிஷத்திற்கு வ்யாக்யாநமாக ப்ரம்ம ஸாரத்தில் சுலோகங்களையேஎழுதி யிருக்கிறார். முடிவில்சப்தநிர்ணயம் முதலியவற்றையும் ப்ரமாணமாகக் காட்டியிருக்கிறார். மற்றசில பதார்த்தங்கள் மிகவும் பேதப்படவில்லை. ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனியே வ்யாக்யாநம் செய்யப்படவில்லை என்றறிக.

ஶ்ரீபரப்ரம்மணேநம:.

கேநோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றிற்று.

---

ஶ்ரீபரப்ரம்மணேநம:.

## 𑌕𑌠𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

ம - பா. இவ்வுபநிஷத்தில் முதலத்யாயம் முதல்வல்லியில், அக்நியிலிருக்கிற பகவானை யுபாஸிக்கும் க்ரமம்முதலியவை சொல்லப்படுகின்றன. இந்தவல்லியிற் சொல்லுகிற அர்த்தங்களுக்கு வ்யாக்யாநங்களாக ப்ரம்மஸாரம், கதிஸாரம், பாத்மம், தத்வஸாரம் ப்ரம்மாண்டம், இவற்றிலுள்ள வசநங்களைக் காண்க, சிலவிடங்களில் கீதாதிவசநங்களையும் ஸம்வாதமாகக்கொள்க. இந்தவல்லி பகவத்ஸ்வரூபத்தைப் பற்றியதேயாம். கேவல மக்நிஸ்வரூபமாத்திரத்தால் அந்தந்த லோகப்ராப்திபலம் ஸித்தியாமையாலென்க. முக்தாத்மஸ்வரூபத்துக்கு நியாமகனாகிய பரமாத்மாவின் ஸ்வரூபத்தை ப்ரச்நம் பண்ணுகிறது. சிவன்முதலிய தேவதாந்தரங்களை முக்திப்ரதராக நினைக்கக்கூடாது.

ம - பா. இவ்வுபநிஷத்து முதலத்யாயம் இரண்டாவதுவல்லியில் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதஞ்சொல்லப்பட்டது. இதற்கு முன்பின்ஸந்தர்பங்கள் அநுகூலங்களாயிருக்கின்றன. அபேதவாதத்திற்கு பூர்வோத்தர விரோதங்களும் யுக்திவிரோதங்களும் ஸந்தர்பவிரோதங்களுமுண்டு. ஆகையா லத்வைதமதம் யுக்தமானதல்ல. மற்ற சுருதிபுராணங்களும் இதற்கு ஸம்வாதங்களாயிருக்கின்றன. அத்வைதமதத்திற்கு யுக்திவிரோதங்

கள் பலவிருக்கின்றனவென்பது புத்திமான்களுக்கு ஸ்புடமேயாம். ஆகையால் ஜீவ பரமாத்மாக்களுக்கு வாஸ்தவத்தில் பேதமுண்டென்பது விளங்கும்.

ம - பா. இந்த கடோபநிஷத்து முதலத்யாயம் மூன்றாவது வல்லியில் ஸமஸ்ததே வதைகளிலு முத்தமனான ஸ்ரீமந்நாராயணனை த்யாநம் செய்யவேண்டுமென்று விதிக் கின்றது.

பதாந்வயார்த்தபேதங்கள்.

கடோபநிஷத்து முதலத்யாயம் மூன்று வல்லிக்கும் முக்யக் கருத்து மாத்திரமே யெழுதப்பட்டது. மற்ற பதார்த்தங்களில் பேதங்களில்லை. இத ற்கு சில விடங்களிலிருந்து சில வசநங்கள் ஸம்வாதமாக எழுதப்பட்டன. ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனித்தனியே வ்யாக்யாநம் செய்யப்படவில்லை.

ம - பா. கடோபநிஷத்து இரண்டாவது அத்யாயம் முதல் வல்லியிலும் பரமாத்மா வுக்கும் ஜீவாத்மாவுக்கும் பேதம் வாஸ்தவமென்றறிவிப்பதற்கு ஜீவாத்மபரமாத்ம ஸ்வ ரூபத்தை விரிவாய்ச்சொல்லுகிறது. உறக்கம் முதலிய தோஷங்களையுடையவன்ஜீவன், ஜீவர்களுறங்கும்போதும் தான் விழித்துக்கொண் டிருப்பவனும் சுத்தனுமாகியவன், பரமா த்மா; இவ்வாறு ஜீவபரமாத்மாக்களுக்கு பேதம் வாஸ்தவமென்பதற்கு பலயுக்திகள் சொல்லப்படுகின்றன. ஆக இவ்வாறு ஜீவபரமாத்மாக்களுக்கு பேதத்தைக் கூறியதால் சிலர் குணங்களுக்கும் அவ்வோ குணங்களையுடைய த்ரவ்யத்திற்கும் பேதத்தைச் சொல் லுகின்றார்கள். அது கூடாதென்று தூஷிக்கின்றது. இப்படி யேகாரண விஷ்ணுஸ்வரூ பத்திற்கும் அவதாரங்களில் விஷ்ணுஸ்வரூபத்திற்கும் பேதமில்லாதிருக்க பேதத்தை நினைப்பது கூடாது. இவ்விரண்டு விஷ்ணுஸ்வரூபமும் பரப்ரம்மமேயாம். விஷ்ணு என்றாலும் பரப்ரம்மம் என்றாலும் பொருளொன்றே யாமென்றறிக.

ம - பா. கடோபநிஷத்து இரண்டாவது அத்யாயம் இரண்டாவது வல்லியிலும், ஜீவபரமாத்மாக்களுடைய ஸ்வரூபத்தை சோதித்து, பேதத்தை நிலைநிறுத்தி பரமாத் மாவுக்குவ்யாப்தியைச்சொல்லி கீழ்ச்சொன்னவற்றையே விஸ்தரித்திருக்கின்றது. இந்த வல்லியில்கூறிய இந்த விஷயங்களைத் தெளிவாகச் சொல்லுகிற கூர்மபுராணத்தியவச நங்களையும் மஹாவராஹ புராணவசநங்களையும் இந்த வல்லிக்கு வ்யாக்யாநமாகக் காண்க.

ம - பா. கடோபநிஷத்து இரண்டாவது அத்யாயம் மூன்றாவது வல்லியில் இந்த ஜகத்து ஸத்யமென்றும் ப்ரவாஹநித்யமென்றும் இதற்கு ஹரிஎன்கிற பரப்ரம்மமே மூல மாயிருக்கின்றதென்றும் அந்த ஹரி, ஜீவர்களுக்குள் வஸிக்கிறாரென்றும். இவ்விடத்தி லிருக்கின்ற ஹரியை ஜ்ஞாநத்ருஷ்டியாலே யறியலாம். கண்ணாடியில் முகம்போல பித்ரு லோகத்திலறியலாம். கந்தர்வலோகத்தில் அதைவிட ஸ்பஷ்டமாய்க்காணலாம். ப்ரம்ம லோகத்தில் மிகவும் ஸ்பஷ்டமாய்க்காணலாம். என்றும், ஸர்வ தேவதைகளிலும் விஷ் ணுவே உத்தமோத்தமரென்றும். இதை யறிந்தவன் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடு வானென்றும், ஸ்ருஷ்டிலயங்களுக்கு விஷ்ணுவே காரணமென்றும், சொல்லப்பட் டது. ஆகையால் விஷ்ணுவே ஸர்வோத்தம தேவதை யென்பது ஸித்தமாயிற்று.

ஸ்ரீபரப்ரம்மணேநம:

கடோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றும்.

---

பரப்ரம்மணேநம:

# 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

ம - பா. ப்ரஜைகளை பரிபாலநம் செய்வதினால் ப்ரஜாபதியென்று பெயரையுடைய விஷ்ணுவானவர், ஸூர்யனென்கிற பெயரையுடைய வாயுவையும், சந்திரனென்று பெயரையுடைய ஸரஸ்வதியையும், ஸூர்யசந்திரர்களிடத்தில் ஸ்ருஷ்டித்து, அவர்களிடத்திலாவேசித்து, ஸமஸ்தத்தையும் ஸ்ருஷ்டித்தார். அமூர்த்தங்களாகிய வஸ்துக்களில் வாயுவும், மூர்த்தங்களாகிய வஸ்துக்களில் ஸரஸ்வதியுமிருக்கின்றார்கள். என்று ஸ்ருஷ்டிவிஸ்தரம் ப்ரச்நோபநிஷத்து முதலாவது ப்ரச்நத்தில் சொல்லப்படுகிறது; இதற்கு வ்யாக்யாநமாக ப்ரஜாபதி ஸம்ஹிதையிலுள்ள வசநங்களைக்காண்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து இரண்டாவது ப்ரச்நத்தில், வாயுரக்நி:, என்கிற மந்திரத்தில் வாயுசப்தத்தால் பூதவாயுவைச் சொல்லுகிறது. ப்ராணசப்தத்தால் ப்ரதாநவாயுவைச் சொல்லுகின்றதென்றுணர்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து மூன்றாவது ப்ரச்நத்தில் ஆத்மந:, என்கிற பதத்திற்கு பரமாத்மாவினிடத்திலிருந்து, என்று பொருள். அந்த பரமாத்மா விஷ்ணு. அந்த விஷ்ணுவினிடத்திலிருந்து வாயு உண்டானான். அந்த வாயுவினிடத்திலிருந்து ஸமஸ்த தேவதைகளுமுண்டானார்கள். அந்த வாயுவே பஞ்சப்ராண ஸ்வரூபியாய்க்கொண்டு, மோக்ஷம் முதலிய வற்றைத் தருகின்றான். என்று சொல்லுகிறது. இந்த ப்ரச்நத்திற்கு வ்யாக்யாநமாக ப்ரபஞ்சநத்திலுள்ள வசநங்களைக்காண்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து நாலாவது ப்ரச்நத்தில், பரமாத்மாவுக்கு ஜீவர்கள் சரீரம்போன்றவரென்றும் அசேதநமாகிய சரீரத்திற்கு ஸங்கங்கூடாமையால் ஜீவர்களிடத்தில் ஸங்கமுண்டாகின்றதென்றும், சொல்லப்பட்டிருக்கின்றது. இதற்கும் புராண வசநங்களை வ்யாக்யாநமாகக்காண்க.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து ஐந்தாவது ப்ரச்நத்தில், ப்ரணவத்தினால் ஹரி என்று நாமத்தையுடைய பரமாத்மாவாகிய நாராயணனை த்யாநம்செய்து ப்ரம்மலோகத்தையடைந்து அங்கு ப்ரம்மாவினால் தத்வஜ்ஞாநத்தைப் பெற்று, முக்திபெறுகிறானென்பதில் ஸந்தேஹமில்லை என்று சொல்லப்பட்டது.

ம - பா. ப்ரச்நோபநிஷத்து ஆறாவது ப்ரச்நத்தில், ஸமஸ்தகாரணமாகியவன் வாஸுதேவனென்று நாமத்தையுடைய பரமாத்மா. அவனைவிட வேறொருவரும் உத்தமரில்லை என்று சொல்லவேண்டுவதில்லை; ஸமாநரேயில்லை யன்றோ. ஆகையாலவனை யறிந்து முக்தனாவானென்றும், உத்பத்தியில் க்ரமமும் சொல்லப்பட்டது. ஸமுத்திரத்தில் சேர்ந்த நதிஜலங்களுக்கு வேறு நாமரூபங்களுண்டாயிருந்தாலும் மூடராலறியப்படாததுபோல பரமாத்மாவையடைந்த ஜீவர்களுக்கு பேதப்பட்ட அநந்தநாமரூபங்களுண்டாயிருக்கின்றன. பேதப்பட்டவை யென்பதினால்சூந்யமாயழிந்தனவென்று பொருள்சொல்லுகிறவர்கள்மிகவுமறிவிலாதவர்கள். பேதசப்தத்தை விநாசப்பொருளில் ப்ரயோகிப்பதில்லை. குடம் பேதப்பட்டது பிந்நமாயிற்றென்றாலும், அநேகாவயவங்களாய்ப் பிறிந்ததென்று பொருளாகிறதேயன்றி யழிந்ததென்று பொருளில்லை. அங்கு குடமழிந்ததென்பது வ்யங்க்யமாய்த் தோற்றுகின்றது. "பித்யதேதாஸாம்நாமரூபே" என்கிற விடத்தில் வ்யங்க்யமாயுங்கூட நாசந்தோற்றாது. நாமரூபங்களுக்கு கபாலமுதலிய வற்றைப்போல் நாநாபாவங்கூடாமையாலென்க. ஆகையால் பிந்நமாகிற தென்பதற்கு இவ்விட

த்தில் பரமாத்மாவுக்குண்டாகிய நாமரூபங்களைவிட வேருன நாமரூபங்களையுடையவர்களாகின்ருர்கள் முக்தஜீவாத்மாக்களென்றே பொருள். இத்தால் முக்தியிலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதமுண்டென்பது ஸ்பஷ்டமாய் விளங்குகின்றதன்ருே. "அராஇவரதநாபௌகலாயஸ்மின்ப்ரதிஷ்டிதாஃ" என்று சொல்லுகிற த்ருஷ்டாந்தத்தாலுமிது விளங்கும். ஆகையால் முக்தியிலும் நாமரூபங்கள் ஜீவாத்மாக்களுக்குண்டென்றறியவேணும். சிலர், 'பரமாத்மாவில் ஜீவாத்மாக்கள் அஸ்தமிக்கிருர்கள்' என்றதினல் ஜீவர்களழிந்து போனுர்களென்று தோற்றுகிறதென்று ஐயமுறுவர், அங்ஙனமல்ல. 'ஸூரியன் அஸ்தமிக்கிருன்' என்ருல் காணப்படுவதில்லையென்று பொருளேயன்றி, அழிந்துபோனுனென்று பொருளல்லவன்ருே. அப்படியே ஜீவாத்மாக்களையப்போது அறிவிலாதாறியார்களென்று அஸ்தமிக்கிருர்களென்று சொல்லிற்றேயன்றி அழிந்துபோகின்ருர்களென்று சொல்லவில்லை. ஆகையாலஸ்தமிக்கிருர்களென்பதினல் அழிகிருர்களென்று பொருள்கூறுவது யுக்தமல்ல. "நாமரூபாத்விமுக்தஃ" என்கிற விடத்தில் நாமரூபங்களால் விடுபட்டவனென்று பொருள் சொல்லக்கூடாது. முக்த சப்தத்திற்கு விடுபட்டவனென்று பொருளாயினும் விமுக்த சப்தத்திற்கு அப்பொருள் சொல்லக்கூடாது. எப்படியென்ருல், ப்ரியமென்ருல் இஷ்டமென்று பொருள். விப்ரியமென்ருல் அந்தப்பொருள் இல்லை. அநிஷ்டமென்று பொருளாகிறதன்ருே. அப்படியே இங்கும் விமுக்தஃ என்கிற பதத்திற்கு நாமரூபங்களாலே விடுபடாதவனென்றே பொருளாகும். இப்படியே பல உதாகரணங்களையுங்காண்க. "நாமரூபேவிஹாய" என்கிற விடத்திலும் 'நாமரூபே, அவிஹாய' என்று பதவிபாகம் செய்து நாமரூபங்களை விடாதவனுயென்று பொருள் சொல்லக்கடவது. "அநந்தம்வைநாமாநந்தாவிச்வேதேவாஃ" என்றும், "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவாஃ" என்றும் இப்படி பல ச்ருதிகளாலும் அநேகரூபநாமங்களையடைந்திருப்பதாகச் சொல்லியிருக்கின்றதன்ருே. ஆகையால்தன்னில்பேதப்பட்ட அநந்தமுக்தர்களிலு முத்தமனுய் பரமாத்மா நாராயணன் விளங்குகிருனென்பதுஸித்தம். இவ்விடத்திற்குப் பலவிடங்களிலுள்ள சுருதிஸ்ம்ருதி புராணவசநங்களை வ்யாக்யாநமாகக்காண்க.

ஸ்ரீபரப்ரம்மணேநமஃ.

ப்ரச்நோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றிற்று.

ஸ்ரீபரப்ரம்மணேநமஃ

## முண்டகோபநிஷத்பாஷ்யப்ராரம்பஃ.

ம - பா. வைவஸ்வதமநுவுக்கு ஆதியில் ப்ரம்மாவினிடத்திலிருந்து, அதர்வா என்பவன்பிறந்தான். பின்பு, மித்திரனும் வருணனும் ஹேதியும், ப்ரஹேதியும்,பிறந்தார்கள். ப்ரம்மாவினுடைய முதல் கல்பத்தில் சிவன் பிறந்தான். வராஹகல்பத்தில் ஸநகாதிகளுண்டானுர்கள். இந்தப்ரம்மா விஷ்ணுவுக்குத் தலைமகனுனவன். இருக்குமுதலிய வேதங்கள்விஷ்ணுவைஸ்தோத்திரம் செய்வதினல் பரவித்யையாகின்றன.இல்லாதபோது அபரவித்யையாகின்றன. பராத்பரனுகியவிஷ்ணுவையே இதிஹாஸபுராணம்முதலிய ஸமஸ்தமும் பேசுகின்றது. இந்த விஷ்ணுவைப் புருஷோத்தமனென்றறிகிறவர்கள் மகாபாகவதர்களாகிருர்கள். வேதம் ராமாயணம் பாரதம் இவை யெல்லாவற்றிலும், முதலிலும் நடுவிலும் முடிவிலும், விஷ்ணுவே சொல்லப்படுகிருர். ஆகையாலே விஷ்ணுவே பூஜிக்கத்தக்கவர் த்யாநிக்கத்தக்கவர், நமஸ்கரிக்கத்தக்கவர். இந்த விஷ்ணுபூஜைக் குபயோக

மாகிய வேதங்களே பரவித்யைகள். கருமத்திற்குபயோகப்பட்டவை அபரவித்யைகள். இவ்விடத்திற்கு விஸ்தரவ்யாக்யாநமாக பரஸம்ஹிதை ப்ரம்மாண்ட புராணம், வராஹ புராணம் பாரதம் நாராயண ஸம்ஹிதை முதலியவற்றிலுள்ள வசநங்களைக்காண்க. வேதவ்ரதம் செய்தவனுக்கே வித்யாதிகாரமுள்ளது, இது வ்யாஸஸ்ம்ருதியிலும் விளங்குகின்றது. இது முதல் முண்டகம் முதல்கண்டம் போதிக்கின்றது.

ம - பா. நிவ்ருத்தி தருமம் மிகவும் சிறந்தது. காமத்தை விடுதல் முக்யம். வ்யாஸஸ்ம்ருதியையும் காண்க. ஆயினும் ஸங்கமில்லாதவனுய் கருமங்களை யநுஷ்டிக்கவேணும். பலசுருதிஸ்ம்ருதிகளை யுதாகரணமாக இவ்விடத்திற்கு அறியக்கூடும். இது முதல் முண்டகம் இரண்டாவது கண்டத்திற்குக் கருத்து.

ம - பா. அக்ஷரமென்றால் ப்ரக்ருதி, அதற்கு மேலான அக்ஷரம் லக்ஷ்மி, அதற்கு மேலான அக்ஷரம் பரவாஸுதேவன், இது இரண்டாவது முண்டகம் முதல் கண்டத்தில் விசேஷம். இங்கும் பல ப்ரமாணங்களுண்டு.

ம - பா. ஜ்ஞாநிகளுக்கு கோசரிக்கிற பரமாத்மா ஜ்ஞநசக்தி முதலிய குணங்களுடையவன் ஜீவர்களை நியமிக்கிறவன். குணஸ்வரூபம் முன் சொல்லப்பட்டது. இது இரண்டாவது முண்டகம் இரண்டாவது கண்டத்திற்கு விசேஷம். பாகவதம் முதலியவற்றிலிருக்கிற வசநங்களை அதற்கு வ்யாக்யாநமாகக் காண்க.

ம - பா. ஜீவன், கருமபலத்தை போக்யமாக நினைத்து புசிக்கிறான். வாஸ்தவத்தில் அது ஸ்வாதுவல்ல. பரமாத்மா புசிப்பதில்லை. இதனுல் ஜீவபேதம் ஸித்தமாயிற்று. தத்வஸாரம் முதலிய வற்றிலுள்ள வசநங்களை வ்யாக்யாநமாகக் காண்க. இது மூன்றுவது முண்டகம் முதல் கண்டத்தில் விசேஷம்.

ம - பா. மூன்றுவது முண்டகம் இரண்டாவது கண்டத்தில், பரமாத்மா ப்ராணனை அதிஷ்டித்து ஆவேசிக்கிறுறென்றும், பிசாசு முதலியவை யாவேசித்து புருஷனைச் சேர்ந்து ஸுகாதிகளை யநுபவிப்பதை இதற்கு த்ருஷ்டாந்தமாகக் கொள்ளவேணு மென்றும், ஹரி என்கிற பகவானை யடைவது முக்தியென்றும், ப்ரம்மலோகத்தி விருப்பவர்களுக்கு ப்ரம்மாவின் அந்தகாலத்தி லவனுடன் முக்தியென்றும், இந்த முக்தி ப்ரம்மத்துடன் ஐக்யமல்ல; அவிரோதத்தாலும் ஸாத்ருச்யத்தாலும், ஏகதேசத்தி விருப்பதாலும், ஐக்ய முண்டென்று சொல்லப்படுகிறதென்றும் அது ஸ்வரூபத்தாலல்ல வென்றும், நித்யமும் பிந்நரூப முடையவர்களுக்கு, ஸமுத்திரத்தில் கலந்த நீருக்குப்போலவே ஐக்யங் கூடாதென்றும், நாமரூபங்களில்லை யென்பது அந்த நாமரூபங்களை யறிவது முக்தி பெறுதவருக்கு அஸாத்யமாகையாலென்றும், ஸமுத்திரத்தில் கலந்திருக்கிற நதீ ஜலத்தை தனித்தறிவதற்கு நம்போல் வாருக்குச் சக்தியில்லை யாயினும் அதைத் தனியே வாயுவானவ னறிந்து மேகங்களி லேற்றுகிறுனென்றும், முக்தர்களான மநுஷ்யர்களிலும் தேவதைகளுக்கு ஏற்றமுண்டு இவ்வாறே மற்றோரிடத்திலும் தாரதம்யத்தை யறியவேணுமென்றும் அறியாதபோது நற்கதி யடைவது அஸாத்யமென்றும், ஆகையால் குணபூர்ணனை விஷ்ணுவே உத்தமனென்றும்; கருத்து அடங்கியிருக்கின்றது, இதைமுக்தவிவேகம் மகாவராஹம் முதலிய க்ரந்தங்களால் தெளிவாயறியலாம்.

ஸ்ரீபரப்ரம்மணேநம:.

முண்டகோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றிற்று.

ஸ்ரீபரப்ரம்மணே நம:.

மாண்டூக்யோபநிஷத்பாஷ்யப்ராரம்ப:.

அவதாரிகை.

ம - பா. இந்த மாண்டூக்யோபநிஷத்தினால் நான்குரூபங்களையுடைய நாராயணனை மண்டூகரூபியாகிய வருணன் ஸ்துதிசெய்தான். இது பாத்மபுராணத்தில் சொல்லப் பட்டது.

ம - பா. ஜகத்துக்கெல்லா மாதாரமாயிருக்கின்றமையால் ஓமென்று பரமாத்மா சொல்லப்படுகிறான். ப்ருஹத்ஸம்ஹிதையிலிது விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆக பூர்ண னாகின்றமையால் ஓங்காரமே எல்லாமென்று, ஸ்துதிசெய்கிறது. இந்த உபநிஷத்து நாலுகண்டங்களின் கருத்தும் ப்ரம்மதர்க்கம் ப்ரம்மாண்டம் முதலியவற்றில் விரிவா கச் சொல்லப்பட்டிருக்கிறது.

பதாந்வயார்த்த பேதங்கள்.

இந்த மாண்டூக்யோபநிஷத் பாஷ்யத்தில் புராணவசநங்கள் விசேஷமா யெழுதப்பட்டிருக்கின்றன. பலவிஷயங்களில் இராமாநுஜபாஷ்யத்திற்போ லவே கருத்து கொள்ளப்பட்டிருக்கிறது.

மாண்டூக்யோபநிஷத்திற்கு மத்வபாஷ்யம் முற்றும்.

ஸ்ரீபரப்ரம்மணே நம:.

ஓம்

பரப்ரம்மணே நம:.

# தைத்திரீயோபநிஷத்

## த்ராவிடபாஷ்யப்ராரம்ப:.

### தைத்திரீயோபநிஷத்திற்குச் சங்கராசாரியர் செய்த பாஷ்யத்தில் மங்களச்லோகங்கள்.

க. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑌾𑌤𑌂𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇 ।
𑌯𑍇𑌨𑍇𑌦𑌂𑌧𑌾𑌰𑍍𑌯𑌤𑍇𑌚𑍈𑌵 𑌤𑌸𑍍𑌮𑍈𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍇𑌨𑌮𑌃॥

உ. 𑌯𑍈𑌰𑌿𑌮𑍇𑌗𑍁𑌰𑍁𑌭𑌿𑌃𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌪𑌦𑌵𑌾𑌕𑍍𑌯𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑌃 ।
𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌮𑍍॥

౧. యస్మాజ్జాతంజగత్సర్వంయస్మిన్నేవప్రలీయతే ।
యేనేదంధార్యతేచైవతస్మైజ్ఞానాత్మనేనమః॥

౨. యైరిమేగురుభిఃపూర్వంపదవాక్యప్రమాణతః ।
వ్యాఖ్యాతాస్సర్వవేదాన్తాస్తాన్నిత్యంప్రణతోఽస్మ్యహమ్॥

### முதல்மங்களசுலோகத்தின் கருத்து.

இவ்வுலகத்திற்கு எவன் முதற்காரணமும், நிமித்தகாரணமு மாகின்றானோ; எவ னிடத்தில் இவ்வுலகு லயம்பெறுகின்றதோ; எவனாலிவ்வுலகு தரிக்கப்படுகின்றதோ; அந்தஜ்ஞானமூர்த்தியை நாம் வணங்குவோமாக.

### இரண்டாவதுமங்களசுலோகத்திற்கு கருத்து.

எந்த பூர்வாசாரியர்களால் வேதாந்தங்களுக்கு தர்க்கவ்யாகரண ப்ரமாணங்களுக் கிணங்க வ்யாக்யாநம்செய்யப்பட்டதோ; அவர்களைஎப்போதும்யான்வணங்குகின்றேன்.

### சங்கரபாஷ்யத்தில் ப்ரதிஜ்ஞைசுலோகம்.

𑌤𑍈𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌯𑌕𑌸𑌾𑌰𑌸𑍍𑌯 𑌮𑌯𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌤𑌃।
𑌵𑌿𑌸𑍍𑌪𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌰𑍁𑌚𑍀𑌨𑌾𑌂𑌹𑌿𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑍇𑌯𑌂𑌸𑌂𑌪𑍍𑌰𑌣𑍀𑌯𑌤𑍇॥

తైత్తిరీయకసారస్య మయాచార్యప్రసాదతః ।
విస్పష్టార్థరుచీనాంహివ్యాఖ్యేయంసమ్ప్రణీయతే॥

### இதற்குக் கருத்து.

இந்த தைத்திரீயோபநிஷத்திற்கு, குருகடாக்ஷத்தினால் இவ்வுபநிஷத்தில் பதார்த் தக்கருத்துக்களை யறியவிரும்புகிறவர்களுக்கு உபகாரமாக என்னால் வ்யாக்யாநம் செய் யப்படுகிறது.

சங்கரபாஷ்யத்தி லவதாரிகை.

பூர்வகாண்டத்தில், பலாபிஸந்தி என்கிற பலகாமனேயோடு கூடியவர்களுக்கு ஜ்யோதிஷ்டோமம்முதலிய காம்யகருமங்களும், பலகாமனேயில்லாதவர்களுக்கு கீழ்ச்செய்துள்ள பாபகருமங்களைக் கழித்துத்தருகிற தருமங்களும், கூறப்பட்டன. ஆக, கருமாநுஷ்டாநம் ஸம்ஸாரத்திற்குக் காரணமாகின்றது. ஆகையால், ஸம்ஸாரகாரணமாகிய கருமாநுஷ்டாநத்திற்குஹேதுவான காமத்தை நீக்குவதற்கு ப்ரம்மவித்யை உபநிஷத்தில் கூறப்படுகின்றது. வேதத்தால் கருமம் விதிக்கப்பட்டாலு மிதிலாசையுடையவனிதைச் செய்யக்கடவனென்று விதிக்கப்படுகின்றமையால் காமமென்கிற ஆசையில்லாதவன் செய்யவேண்டுவ தில்லையாகையால் கருமத்தை யநுஷ்டிக்கச்செய்கிறது காமமேயாம், காமத்தாலன்றோ கருமத்தில் ப்ரவர்திக்கின்றான். காமங்களையடைந்தவர்களாயின், ஆத்மசுகத்தி லிருக்கின்றமையால், காமமற்றவர்களாகின்றமையால் ஒன்றிலும் ப்ரவர்திக்கமாட்டார்களன்றோ. ஒருமனிதனொன்றை விரும்பினவன் அதை யடைந்தபின் மற்றொன்றை விரும்புகிறானேயன்றி அதையேவிரும்புகின்ற தில்லையன்றோ. ஆகையா லெல்லாமடைந்தானுகில் ஒன்றையும் விரும்பானன்றோ. இவ்வாறு எல்லாமடைந்தவனே அவாப்தஸமஸ்த காமனென்றும் ஆப்தகாமனென்றுஞ் சொல்லுவர். ஆக, ஆப்தகாமன், தனக்கொன்றிலு மாசையில்லாமையினாலே ஒன்றிலும் ப்ரவர்திக்கமாட்டான் தன்னிலேதான்நிற்பான், இப்படி தன்னில்தான்நின்றபின், ஆத்மசுகத்தை யநுபவிக்கிறான். ஆத்மசுகத்தை யநுபவித்தா லவாப்தஸமஸ்தகாமனாகிறான். 'ஆத்மா' என்றாலும் 'தான்' என்றாலும்,பொருளொன்றேயாமென்றுணர்க. ஆக, காமங்களையடைவதே காமநிவ்ருத்திக்கு ஹேதுவாகையால், ப்ரம்மவித்யை காரணமாகாமையால் காமநிவ்ருத்திக்காக ப்ரம்மவித்யையென்று சொல்லிய தெங்ஙனமென் றய்யமுற வழியில்லை. ஏனென்றால் ப்ரம்மவித்யையினால் ஆத்மஜ்ஞாநமுண்டாகிறது. ஆத்மாவே ப்ரம்மம். இத்தால் ப்ரம்மவித்யையினா லாத்மஜ்ஞாநமுண்டாவதெங்ஙனமென்கிற ஸந்தேஹம்தீரும். இந்த ஆத்மஜ்ஞாநமாவது, ஆத்மாவேஸத்யம் மற்றவையெல்லாம் அஸத்யமென்பதாம். மெய்யானவஸ்துவில் ஆசையுண்டாகுமேயன்றி பொய்யானவஸ்துக்களி லாசையுண்டாகாது. ஆகையால் ஆத்மஜ்ஞாநத்தால் ஆசைஎன்கிற காமம் நீங்குகின்றது. ஆனதால் ஆசைப்பட்ட வஸ்துக்களையடைந்தவனுக்கு ஆசைநீங்குவதுபோல் ஆத்மஜ்ஞாந முடையவனுக்கும் காமமென்கிற ஆசை நீங்குகின்றமையால் ஆத்மஸ்வரூபத்தை யறிந்தவனே ஆப்தகாமனென்று சொல்லுகிறது. இவ்வாறு ப்ரம்மவித்யையினால் காமங்கள் கழிந்துபோகின்றமையாலென்க. இப்படி யறிந்தவனுக்கு மோக்ஷத்தைச்சொல்லுகிறது. மோக்ஷமாவது அவித்யைநீங்கி யாத்மஸ்வரூபத்தி லிருப்பதேயாம். அவித்யையாவது இதரவஸ்துக்களை ஸத்யமென்றுநினைத்திருப்பது இந்த அவித்யை நீங்குவது ஆத்மாவே ஸத்யமென்கிற வித்யையினாலே

இப்படி சுருதிகள் போதிக்கின்றன. அவையாவன, "அபயம்ப்ரதிஷ்டாம் விந்ததே" "ஏதமாநந்தமயமாத்மாந முபஸங்க்ராமதி" இவைமுதலியவை. இவற்றிற்குப்பொருள். ஆத்ம ஸ்வயம்ப்ரகாசாநுபவமே மோக்ஷமென்பதாம். ஆக இப்படிப்பட்ட மோக்ஷத்திற்கு விரோதியான ஸம்ஸாரத்திற்கு ஹேதுவாயிருக்கிற கருமங்களுக்குக் காரணங்களான காமங்களை யுண்டுபண்ணுகிற அவித்யை நீங்குவதற்கு ப்ரம்மவித்யை உபநிஷத்தில் கூறப்படுகின்றமையால், உபநிஷத்து மிகவும் முக்யமானது. இதனால் எல்லாசுகங்களும் கருமத்தினாலாகின்றனவாகையால் அந்த கருமத்தைச் சொல்லுகிற பூர்வகாண்டமே முக்யமென்றும் உபநிஷத்து அநவச்யகமென்றும் கூறுவதுகூடாது என்பது விளங்கிற்று. இனிகாம்யகருமங்களைச் செய்யாமல் பாபகருமங்களையும் விட்டிருந்தால் இதற்குமுன்செய்த பாபகருமங்கள் துக்காநுபவத்தாலொழிந்துபோமாகையால் ப்ரம்மவித்யை யின்றியே மோக்ஷமுண்டாகுமென்றுவது, மோக்ஷமென்பது மகாசுகமாகையால் ஸ்வர்கமென்பதும் மகாசுகமேயாகையால், ஸ்வர்க்கத்திற்கு கருமமேஸாதநமென்று சுருதி சொல்லுகின்றமையால் கருமாநுஷ்டாநத்தாலே மோக்ஷமும் ஸித்திக்குமென்றுவது சொல்லலாமேயெனில்; அதுபொருந்தாது; அநேகபூர்வஜந்மங்களில் செய்த கருமங்கள் பலவாயும் விருத்தங்களாயு மிருக்கின்றமையால் இந்த ஜந்மத்திலே ஸமஸ்தகருமங்களு மநுபவித்துக்கழிக்க முடியாவாம். நரகஹேதுவான கருமத்தையும் ஸ்வர்க்கஹேதுவான கருமத்தையு மிந்த சரீரத்திலநுபவித்துக்கழிப்பது எப்படிகூடும். முன்செய்த கருமங்களில் இந்தஜந்மத்திலே பலனைத்தருகிற கருமங்கள்பல. ஜந்மாந்தரத்தில் பலனைத்தருமவை பல இவ்வாறு பலகருமங்க ளிருக்கின்றமையாலென்க. ஆனதா லிந்தஜந்மத்தி லநுபவித்த கருமங்கள்போக மற்றுள்ள கருமங்களால் ஜந்மாந்தரத்தையடைவதுகூடும். இத்தாலிந்த ஜந்மத்தி லநுபவித்தறுத க்ரமசேஷங்களுண்டென்று நிலைநிறுத்தப்பட்டது. இவ்வாறே சுருதிஸ்மிருதிகள்பலவும் முறையிடுகின்றன. அவையாவன "தத்ய இஹரமணீயசரணா:" "ததச்சேஷேண" இவைமுதலியவை. இவற்றிற்குப்பொருள். ஒருஜந்மத்தில் சிலகரும பலங்களை யநுபவித்து கருமசேஷங்களால் புண்யபாபங்களுக்குத் தக்கபடி ஜந்மாந்தரங்களை யடைகின்றார்களென்பதாம். இனி, நீங்கள்கூறும்வண்ணம் கருமங்கள் பலவுளவாயினும் அவையெல்லா மநுபவத்தா லொழியாவாயினும், அநுபவத்தாலழிந்த கருமங்களை யொழிந்த கருமசேஷங்கள் நித்யகருமங்களாகிய ஸந்த்யாவந்தந பஞ்சமஹாயஜ்ஞாதிகளா லழிந்துபோமாகையால் வேறுயத்நமின்றியே மோக்ஷம் ஸித்திக்குமென்று சொல்லவழியில்லை. ஏனென்றால்; நித்யகருமங்கள் செய்யாதபோது பாபத்தை போதிக்கின்றமையாலென்க. அதாவது, நித்யகருமங்கள் அவற்றைச்செய்யாவிடில் வருகிறபாபத்தை வரவொட்டாமற் செய்வதற்கு செய்யப்படுகின்றனவேயன்றி முற்செய்த பாபங்களைப் போக்குவதற்கன்று. அப்படிச்ருதிவிதியாமையால். ஆகையால்,

இவற்றைச் செய்யாவிட்டால் வரப்போகிற துன்பம்வாராமலிருப்பதற்காக
நித்யகருமங்கள் செய்யப்படுகின்றனவேயன்றி கீழ்ச்செய்துள்ள பாபங்களைத்
துலைப்பதற்கன்றென்று அனைவரு மொப்புக்கொள்ளவேணு மென்றவாறு
ஆகையால் வேறுயத்நமின்றியே மோக்ஷம் ஸித்திக்குமென்பது கூடாதாயி
ற்று. கருமசேஷத்தால் ஜந்மாந்தரமே வருமாகையாலென்க. உங்களிஷ்டப்
படி முன்செய்த கருமங்களையும் நித்யகருமங்கள் போக்குமென்று ஒப்புக்
கொண்டாலும் பாபகர்மங்களைப் போக்குமேயன்றி புண்யகர்மங்களைப்போக்
காது. ஏனென்றால் நித்யகருமங்களும் புண்யரூபங் ளாகின்றமையால் புண்
யகருமங்களோடு இவற்றிற்கு விரோதமில்லை. ஒருவன், தனக்குவிரோதியை
யழிப்பானேயன்றி தன்னோடுசேர்ந்தவனைத் தானழிக்கமாட்டான். ஆகையால்
விரோதிகளானபாபகர்மங்களை நித்யகருமங்கள் போக்குமேயன்றி விருத்தங்
களாகாத புண்யங்களைப் போக்கமாட்டாவன்றோ. புண்யத்தோடு புண்யம்
விரோதிக்குமோ. ஆகையாலே புண்யஜந்மங்களாலே மோக்ஷந்தடைப்படும்.
இதுவுமன்றி, இந்த ஜந்மத்தில் காம்யகர்மங்களைச் செய்யாமலிருப்பதும் தத்
வஜ்ஞாநமில்லாதவனுக்கு ஸாத்யமன்று. ஏனென்றால் தத்வஜ்ஞாநமில்லாத
போது காம்யகருமங்களைச் செய்வதற்குக் காரணமான காமங்கள் நீங்காமை
யால் காரணமுண்டாயிருக்கக் காரியம் பிறவாதிராமையாலென்க. ஆத்மஜ்
ஞாநமில்லாதவனுக்கு காமங்கள்நீங்குமோ; இனி ஆத்மஜ்ஞாந முடையவர்க
ளுக்கும், காமமிருக்கக்காண்கின்றமையால், தத்வஜ்ஞாநமும் காமநிவ்ருத்தி
க்கு ஹேதுவல்லவென் றையப்படவேண்டாம். தத்வஜ்ஞாநிக்குக் காமிக்க
ப்படும் பொருளேயில்லாமையால் காமமொருபோதுங்கூடாது. ஆத்மாவே
ப்ரம்மமென்று முன்பேசொன்னோம். ஆகையால் ப்ரம்மத்தையடையவேணு
மென்கிற காமமுமில்லையன்றோ. இதுவுமன்றி, நித்யகருமங்களைச் செய்யாம
லிருக்கப்போகாதென்று ஒப்புக்கொண்டபடியால் அந்த நித்யகருமங்களா
லுண்டாகிற புண்யபலத்தை நீக்குவதற்கு உபாயமில்லாமையாலும் மோக்ஷ
த்திற்கு வழியில்லை. புண்யபாபங்களிரண்டும் மோக்ஷத்திற்கு விருத்தங்கள
ன்றோ. நித்யகருமங்கள் புண்யத்திற்கு ஹேதுவல்ல; பாபம்பிறவாம லிருப்
பதற்கு ஹேது என்று முன்சொலலப்பட்டதேயென்றால் அதுபொருந்
தாது; ஏனென்றால், அபாவத்தினால் ஒருவஸ்துவும் பிறவாது என்பது எல்
லோருமங்கீகரித்தவிஷயம். நித்யகருமங்களைச்செய்யாமையினால் பாபமுண்
டாகிறதென்றும் அந்தபாபத்தை நித்யகருமங்கள் நீக்குகின்றனவென்றும்
சொல்லும்போது பாபமென்கிறவஸ்து நித்யகருமங்களைச் செய்யாமையாகிற
அபாவத்தாலுண்டாகிறதென்று ஒப்புக்கொள்ளப்பட்டதாகிறது. அதுவிரு
த்தமன்றோ. "அகுர்வந்விஹிதம்கர்ம" என்கிறவசநத்தில் நித்யகருமங்களைச்
செய்யாமையினால் பாபமுண்டாமென்று சொல்லப்பட்டபடியால் நித்யங்க
ளைச் செய்யாமையாகிற அபாவத்தால் பாபமாகிறவஸ்து பிறக்குமென்று
ஒப்புக்கொள்ளவேணும். அபாவத்தால் ஒருவஸ்துவும் பிறவாதென்பது இக்

தவசாத்திற்கு விருத்தமாகையால் நம்பத்தக்கதல்லவென்றால், இதுதக்கத ன்று. ஏனென்றால் இந்தவசாத்தில் நித்யகருமங்களைச் செய்யாமையினால் பாபமுண்டாமென்று சொல்லப்படவில்லை. நித்யகருமங்களைச் செய்யாதது கொண்டு இவனுக்குப் பாபம்கழிந்ததில்லை என்று அறிவுடையோராகிக்கின் றார்கள் என்று சொல்லுகிறது. பாபம்நீங்கியவனுக்கே நித்யகருமங்களினனு ஷ்டாநத்தி லாசையுடனனுஷ்டிப்பது கூடுமாகையால் நித்யகருமங்களைச்செ ய்யாதவனைப் பாபியென் றாகிக்கலாமன்றோ. ஆகையா லந்தவசாத்திற்குப் பொருளறியாமல் நித்யகருமங்களைச் செய்யாமையாகிற அபாவத்தினால் பாபமென்கிறவஸ்து உண்டாகும்; அந்தபாபமானது நித்யகருமங்களைச்செய் வதினாலுண்டாகாமலிருக்கு மென்பதற்கு யுக்தியில்லை. ஆகையால் நித்யகரு மங்களால் புண்யமேயுண்டாகிறது. அந்தபுண்யத்தால் மோக்ஷவிரோதம்வ ரும். ஆக இப்படி பலவழியாலும், புண்யம் பாபம், என்கிற கருமங்களை நீக் கப்போகாமையால், தத்வஜ்ஞாநமில்லாமலே, காம்யகர்மம் நிஷித்தகர்மம் இவற்றைச்செய்யாமலிருந்தால் தனக்குத்தானே மோக்ஷம் ஸித்திக்குமென் றும் இதற்காக ப்ரம்மவித்யை வேண்டுவதில்லையென்றும் சொல்லுகிறமுதல் பக்ஷம் தள்ளப்பட்டது. இனி, ஸ்வர்கம்போல உத்தமசுகமான மோக்ஷமும் கருமாநுஷ்டாநத்தாலே யுண்டாகுமாகையா லதற்காகப்ரம்மவித்யை வேண் டுவதில்லை என்றுசொல்லுகிற இரண்டாவதுபக்ஷமும் தக்கதன்று. ஏனென் றால், நித்யமாகியது ஒன்றுஉண்டுபண்ணப்படமாட்டாது மோக்ஷமென்பது நித்யமானதாகையால் கருமாநுஷ்டாநத்தா லுண்டாகாதன்றோ. யாதொன்று உண்டாக்கப்படுகின்றதோ அது அநித்யமாயிருப்பது உலகத்தில் காணப்பட் டிருக்கிறது. ஆகையால் நித்யமானமோக்ஷம் கருமாநுஷ்டாநத்தா லுண்டு பண்ணப்படமாட்டாது. வித்யையோடு கூடிய கருமாநுஷ்டாநத்திற்கு நித்ய மான மோக்ஷத்தை யுண்டுபண்ணுகிற சக்தியுண்டென்று, ஒப்புக்கொள்ளு கிறோமென்றால் அதுவிருத்தம். நித்யமாகியது உண்டாகிறது என்பது கூடு மோ. இனி, ஒருபொருளழிந்தால் அதுவே மீண்டும்பிறப்பதில்லையாகையால் அந்த அழிவுக்கு அழிவில்லை. ஆகையால், த்வஸமென்கிற அந்த அழிவு நித் யமாயிருந்தாலும் ஒருகாரணத்தா லுண்டாகின்றதன்றோ. அதுபோல அழி வில்லாமையாலே நித்யமான மோக்ஷமும் கருமாநுஷ்டாநமாகிற காரணத் தாலே யுண்டாகுமென்பதில் விரோதமில்லையென்றால் அதுவும் சேராது. அபாவரூபமாகிய த்வஸமென்கிற அழிவு நித்யமாயிருக்கையில் அதுகாரண த்தாலே யுண்டானது அபாவரூபமாகையாலே; ஆகையால் வஸ்துவாகிய மோக்ஷம் நித்யமாகையால் காரணத்தாலுண்டாகாது. மோக்ஷம் அபாவரூப மல்லவன்றோ. வாஸ்தவத்தில் நிரூபித்துப்பார்த்தால், த்வஸமென்கிற அழி வுகாரணத்தா லுண்டாகிறதென்பதும் ப்ரமமேயாகின்றது. அதற்கொருவி சேஷமுங்கூடாதன்றோ. ஆகையால்த்வஸமும் உண்டாகிறதில்லை. இந்தத்வம் ஸத்திற்கு உத்பத்தியாவது ஸத்தாஸம்பந்தமென்றாவது விகாரஸம்பந்தமெ

ன்றுவது மற்றொருவிதமென்றுவது சொல்லமுடியாது. அவற்றை அப்ராவ த்தி லங்கீகரிக்கவில்லையன்றோ. த்வம்ஸமும் அபாவமேயன்றோ. ஆகையால் நிர்விசேஷமமான இத்தத்வம்ஸத்தை யுண்டாயிற் றென்பது ப்ரமமேயாம். இதுவுமன்றி அபாவரூபமாகியத்வம்ஸத்தில் உத்பத்திமுதலிய விசேஷங்களை யங்கீகரிக்கவழியில்லை. இது ஒருவஸ்துவைப்பற்றி வ்யவஹரிக்கப்படுமேய ன்றி தனியே வ்யவஹரிக்கப்படாது. ஆகையால் சடம் படம் என்று வஸ்து பேதத்தை வ்யவஹரிப்பதுபோல் கடாபாவம், படாபாவம், கடத்வம்ஸம், படத்வம்ஸம், என்றுக்ரியைமுதலியவற்றைச்சேர்த்து த்ரவ்யம்போல வ்யவ ஹரிக்கப்படுகிறது. வாஸ்தவத்தில் நிர்விசேஷமாகையால் இது ப்ரமமேயாகி ன்றது. இதுவுமன்றி, "நீலோத்பலம்" - 'கருநெய்தல்' என்கிற விடத்தில் கருமைபூவுக்கு விசேஷணமாயும் கருமைக்கு பூவிசேஷ்யமாயும் தோற்றுவ துபோல "கடத்வம்ஸம்" என்கிறவிடத்தில் த்வம்ஸத்திற்குகடம் விசேஷண மாயும், கடத்திற்கு த்வம்ஸம் விசேஷ்யமாயும் தோற்றுகிறதன்றோ. த்ருஷ் டாந்தமாகிய "கறுநெய்தல்" என்கிறவிடத்தில் விசேஷ்யமாகிய பூவானது. விசேஷணமாகிய கறுமையோடு கூடியிருப்பதுபோல 'கடத்வம்ஸம்' என் கிறவிடத்தில் த்வம்ஸமென்கிற விசேஷ்யமாகிய அழிவானது விசேஷணமா கிய கடத்தோடு கூடியிருப்பதில்லையன்றோ. அப்படிகூடியிருக்குமாகில் கட த்தோடுகூடியிருக்கிற ஒருதேசம்போல த்வஸமும்ஒருவஸ்துவேயாமன்றோ, ஆகையா லொருவழியாலும் அபாவரூபமாகிய த்வஸ முதலிய வற்றிற்கு விசேஷஸம்பந்தஞ் சொல்லப்போகாமையால், இத்தை உத்பத்தி முதலிய தருமங்களோடு கூடியதாகநினைப்பது ப்ரமமேயாம், ஆகையால் அழிவில்லா மையால் நித்யமான த்வம்ஸம் ஒருகாரணத்தா லுண்டாவதுபோல அழிவில் லாமையால் நித்யமான மோக்ஷமும் கருமாநுஷ்டாநமாகிய காரணத்தால் உண்டாகலாமென்று சொல்லநினைப்பது மிகவுங்கூடாததாயிற்று. ஆகை யால் கருமாநுஷ்டாநத்தினல் மோக்ஷ முண்டாகுமென்பது தகாது. இனி மோக்ஷம் நித்யமானுலும், வித்யை கருமாநுஷ்டாநம் இவைகளுக்கிடமாகிய ஆத்மா நித்யனுகையால் கங்காப்ரவாஹம் அழிவின்றிப் பெருகுவதுபோல் நித்யமான கருமாநுஷ்டாந ப்ரவாஹத்தால் மோக்ஷப்ரவாஹம் நித்யமாயி ருக்கக்கூடுமென்று சொல்லுவதும் யுக்தமல்ல. மோக்ஷத்தை மிகவும் ஸுக ரூபமாக ஒப்புக்கொண்டபடியால் மோக்ஷத்திற்கு கருமாநுஷ்டாந ப்ரவா ஹம் வேணுமென்றால் கருமத்தை யநுஷ்டிப்பது வருத்தமாயிருப்பதுபற்றி துக்கமுண்டாமாகையால் மோக்ஷத்திலும் துக்கத்தை யொப்புக்கொள்ளவே ண்டுகின்றமையாலும் கருமாநுஷ்டாந மில்லையென்றால் காரணமில்லாமை யாலே மோக்ஷத்திற்கு அழிவு வருகின்றமையாலுமென்க. ஆகையால் தத்வ ஜ்ஞாநமின்றி யொருவழியாலும் மோக்ஷம் ஸித்தியாமையால், உலகமெல் லாம்பொய் ஆத்மா ஒருவனே பரமார்த்தபூதனென்று பிறக்கிற தத்வஜ்ஞா நத்தால் காமிக்கத்தகுந்த வஸ்துக்களில்லையென் றுணர்ந்தமையால் வஸ்துக்

களை மெய்யென்றெண்ணியிருந்த அஜ்ஞாநமாகிற அவித்யையும், காமமுங் கழிந்து கருமங்களில் ப்ரவ்ருத்தியின்றி ஆத்மஸுகத்தில் நிலைநிற்கையே மோக்ஷமாகையால்,ப்ரம்மமேயாகிய ஆத்மஸ்வரூபத்தை அறிவதற்கு ப்ரம்ம வித்யையே காரணமாகையால் அந்த ப்ரம்மவித்யையை ப்ரதிபாதிக்கிற உப நிஷத்து ப்ராரம்பிக்கப்படுகிறது. கர்பம் ஜந்மம் ஜரைமுதலிய துக்கங்களை நீக்குவதினுல் ப்ரம்மவித்யைக்கு உபநிஷத்தென்று பெயரா யிருக்கிறது. அந்த ப்ரம்மவித்யையை வெளியிடுகிறபடியால் வேதாந்தபாகத்திற்கும் உப நிஷத்தென்று பெயராயிற்று,

இவ்வுபநிஷத்தின் மத்வபாஷ்யத்திலுள்ள மங்களச்லோகம்.

സത്യംജ്ഞാനമനന്തമാനന്ദംബ്രഹ്മസർവ്വശക്ത്യേകം |
സർവ്വദേവൈരീഡ്യംവിഷ്ണ്വാഖ്യംസർവ്വദൈനമസുപ്രേഷ്ഠം ||

సత్యంజ్ఞానమనన్తమానన్దంబ్రహ్మసర్వశక్త్యేకమ్ ।
సర్వదేవైరీడ్యంవిష్ణ్వాఖ్యంసర్వదైనమసుప్రేష్ఠమ్॥

இதற்குக் கருத்து.

ஸமஸ்ததேவதைகளாலும் ஸ்துதிசெய்யப்படுகிறதாய் மிகவும் ப்ரியமா யிருப்பதாய், ஸத்யஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய் ஆநந்தஸாகரமாய் ஸர்வசக்தி யுடையதாயிருக்கிற விஷ்ணுவென்கிற அத்விதீயப்ரம்மத்தை எப்போதும் வணங்குகின்றே னென்பதாம்.

இவ்வுபநிஷத்தின் மத்வபாஷ்யத்தி லவதாரிகை.

ஸூர்யமண்டலத்தி லிருக்கிற விஷ்ணுமூர்த்தியினிடத்தி லிருந்து வேதா ந்தரஹஸ்யங்களை ப்ரம்மாகேட்டு வருணனுக் குபதேசித்தார். வருணன் ப்ருகுவுக்கு உபதேசித்தான். ப்ருகு அந்தப்படி வேதாந்தரஹஸ்யங்களால் விஷ்ணுவை ஸ்துதிசெய்தார். இந்த உபநிஷத்தால் அவை வெளியிடப்படுகி ன்றன. இதை யஜுஸ்ஸம்ஹிதையில் காண்க.

இல்வுபநிஷத்தின் இராமாநுஜபாஷ்யத்திலுள்ள
மங்களச்லோகங்கள்.

അതസീഗുച്ഛസച്ഛായമഞ്ചിതോരസ്ഥലംശ്രിയാ |
അഞ്ജനാചലശൃംഗാരമഞ്ജലിർമമഗാഹതാം ||

అతసీగుచ్ఛసచ్ఛాయమఞ్చితోరస్థలంశ్రియా ।
అఞ్జనాచలశృంగారమఞ్జలిర్మమగాహతామ్॥

വ്യാസംലക്ഷ്മണയോഗീന്ദ്രംപ്രണമ്യാന്യാൻഗുരൂനപി
തൈത്തിരീയകവേദാന്തവിവൃതിഃക്രിയതേമയാ ||

వ్యాసంలక్ష్మణయోగీన్ద్రంప్రణమ్యాన్యాన్గురూనపి ।
తైత్తిరీయకవేదాన్తవివృతిఙ్క్రియతేమయా॥

இவற்றுள் முதல்சுலோகத்திற்குக் கருத்து.

கறுத்த திருநிறத்தையுடையனும் திருமார்பில் லக்ஷ்மியோடகூடினவனும், திருவேங்கடமலையி லெழுந்தருளியிருக்கிற ஸ்ரீநிவாஸனுக்கு நான்செய்கிற அஞ்சலிப்ரீதியை வளர்க்கவேணும் என்பதாம்.

இரண்டாவது சுலோகத்திற்குக்கருத்து.

ப்ரம்மஸூத்ரம்செய்த வ்யாஸரையும் பாஷ்யகாரரான பகவல்லக்ஷ்மணயோகீந்த்ரரையும் மற்றுமுள்ள ஆசாரியர்களையும் வணங்கி தைத்திரீயோபநிஷத்திற்கு நான் வ்யாக்யாநம் செய்கிறேனென்பதாம்.

இவ்வுபநிஷத்திற்கு இராமாநுஜபாஷ்யத்தி லவதாரிகை.

இந்த தைத்திரீயோபநிஷத்தில் ப்ரம்மப்ராப்திக்கு ஸாதநமான பரவித்யை கூறப்படுகிறது.

ஹரி: ஓம்॥ ஶந்நோ மித்ரஶ்ஶம் வருண: । ஶந்நோ ப⁴வத்வர்யமா । ஶந்ந இந்த்³ரோ ப்³ருஹஸ்பதி: । ஶந்நோ விஷ்ணுருருக்ரம: । நமோ ப்³ரஹ்மணே । நமஸ்தே வாயோ । த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்³ரஹ்மாஸி । த்வாமேவ ப்ரத்யக்ஷம் ப்³ரஹ்ம வதி³ஷ்யாமி । ருதம் வதி³ஷ்யாமி । ஸத்யம் வதி³ஷ்யாமி॥ ௧॥

హరిః ఓమ్॥ శన్నో మిత్రశ్శం వరుణః । శన్నో భవత్వర్యమా । శన్న ఇంద్రో బృహస్పతిః । శన్నో విష్ణురురుక్రమః । నమో బ్రహ్మణే । నమస్తే వాయో । త్వమేవ ప్రత్యక్షం బ్రహ్మాసి । త్వామేవ ప్రత్యక్షం బ్రహ్మ వదిష్యామి । ఋతం వదిష్యామి । సత్యం వదిష్యామి॥ ౧॥

(ப-ம்.) மித்ர: - மித்திரனென்கிற ஸூர்யன், ந: - நமக்கு, ஶம் - ஸுகமாக, ப⁴வது - ஆகவேணும், (ஸூர்யன் ஸுகத்தைத் தரவேணுமென்றவாறு; இவ்வாறே மேலுங்காண்க) வருண: - வருணதேவதை, ந: - நமக்கு, ஶம் - ஸுகமாக, ப⁴வது - ஆகவேணும், அர்யமா - அர்யமா, என்கிறஸூர்யன், ந: - நமக்கு, ஶம் - ஸுகமாக, ப⁴வது - ஆகவேணும், இந்த்³ர: - இந்திரனும், ப்³ருஹஸ்பதி: - இந்திரனுக்கு ஆசாரியராகிய ப்ருஹஸ்பதியும், ந: - நமக்கு, ஶம் - ஸுகமாக, ப⁴வது - ஆகவேணும், உருக்ரம: - உரு - பெரிதான, க்ரம: - அடிவைப்புடைத்தாயிருக்கிற, விஷ்ணு: - விஷ்ணுவானவர், ந: - நமக்கு, ஶம் - ஸுகமாக, ப⁴வது - ஆகவேணும், (த்ரிவிக்கிரமாவதாரத்தில் உலகை அடியிட்டளந்த விஷ்ணு ஸுகத்தைத்தரவேணுமென்றவாறு.) "சங்நோபவத்வர்யமா" என்கிற வாக்யத்தி லிருக்கிற 'பவது' என்கிறபதத்தை மற்றவாக்யங்களிலும் கூட்டிக்கொண்டு பொருளுரைக்கப்பட்டிருக்கிறது. ப்³ரஹ்மணே - (ஶம்) வாயுவுக்கு, (ஶா) வேதத்திற்கு, நம: - நமஸ்காரம் செய்கிறேன், வாயோ - வாயுபகவானே, தே - உனக்கு, நம: - நமஸ்காரம், த்வமேவ - நீயே, ப்ரத்யக்ஷம் - ப்ரத்யக்ஷமான, ப்³ரஹ்ம - ப்ரம்மமாக, அஸி - ஆகிறாய், த்வாமேவ - உன்னையே, ப்ரத்யக்ஷம் - ப்ரத்

த்யக்ஷமான, ப்3ரஹ்ம - பரப்ரம்மமாக, வதி3ஷ்யாமி - சொல்லப்போகிறேன், ருதம் - நிச்சயிக்கப்பட்ட அர்த்தமாகவும், வதி3ஷ்யாமி - சொல்லப்போகிறேன், ஸத்யம் - ஸத்தியமாகவும், வதி3ஷ்யாமி - சொல்லப்போகிறேன், தத் - அந்த வஸ்துவானது, மாம் - என்னை, அவது - இரக்ஷிக்கட்டும், வக்தாரம் - என்னுடைய ஆசாரியனை, அவது - இரக்ஷிக்கட்டும், ஓம் ஶாந்தி: ஓம் ஶாந்தி: ஓம் ஶாந்தி: - சாந்தி.

## விசேஷவிஷயங்கள்.

வேதசாகைகளில் அநுவாகமென்றும் பஞ்சாதி என்றும் சில வ்யவஹாரங்களுண்டு. அநுவாகமாவது ஒரு விஷயத்தை பூர்ணமாகச் சொல்லுகிற வாக்யஸமுதாயம். பத்துவாக்யங்கொண்டது ஒரு பஞ்சாதியாகிறது. இப்படிப்பட்ட பஞ்சாதிகள் ஒரு அநுவாகத்தில் பலவுமிருக்கும் ஒன்றுமிருக்கும். சில அநுவாகங்களில் பஞ்சாதிக் கணக்குக்குமேல் வாக்யங்களிருப்பதுமுண்டு. ஒவ்வோ ரநுவாகத்திலு மித்தனை பஞ்சாதி யடங்கியிருக்கிறதென்றும் அதிக வாக்யங்க ளித்தனையென்றும் கணக்கிடுகிற வாக்கியங்கள் அடிவரவுபோல் முன்னோர்களால் செய்யப்பட்டிருக்கின்றன. "ஸத்யம் வதிஷ்யாமி பஞ்சச" என்கிற வாக்யம் அந்த அடிவரவு வாக்யங்களிற் சேர்ந்தது. இந்த வாக்யத்திற்குப் பொருள், ஸத்யம் வதிஷ்யாமி, என்கிற வாக்கியம் வரையிலு மொரு பஞ்சாதியும்மே அஞ்சுவாக்யங்களு மிந்த அநுவாகத்திலடங்கியிருக்கின்றன வென்பதாம்.

ப்ரதம: முதலாவதான, அநுவாக:-அநுவாகமானது, இதி-முடிந்தது.க.

### இவ்வநுவாகத்திற்கு சங்கரபாஷ்யம்.

இந்த அநுவாகத்தில், ப்ரம்மஜ்ஞானத்தை விரும்பிய முமுக்ஷுவானவன், ப்ரம்மஜ்ஞானத்திற்கு விக்நம் வராமலிருப்பதற்காக வாயுவை யுத்தேசித்து நமஸ்காரம் செய்கிறான். நீயே ப்ரம்மமென்று ஸ்துதிசெய்கிறான். அத்யாத்ம தேவதைகள் ஸுகத்தைத் தரவேணுமென்று வேண்டுகின்றான். ப்ராணவ்ருத்திக்கும் திநத்திற்கு மபிமாநி தேவதையான மித்ரனென்கிறவன் நமக்கு ஸுகந்தந்திடுவானாக. அபானவ்ருத்திக்கும் இரவுக்கு மபிமாநி தேவதையான வருணனும் கண்ணுக்கும் ஸூரியனுக்கும் அபிமாநி தேவதையான அர்யமா என்பவனும், பலத்துக்கு அபிமாநி தேவதையான இந்திரனும் வாக்குக்கும் புத்திக்கு மபிமாநிதேவதையான ப்ருஹஸ்பதியும், பாதங்களுக்கு அபிமாநிதேவதையான த்ரிவிக்ரமரூபங்கொண்ட விஷ்ணுவும் இவ்வாறே ஸுகத்தை யுண்டுபண்ணவேணும். இந்த தேவதைகள் ஸுகத்தைத் தருவார்களாயின், ப்ரம்மவித்யை ப்ரதிபந்தமின்றி க்ரஹிக்கப்படுமென்றோ. ஆகையால் ஸுகத்தை ப்ரார்த்திக்கிறது. ப்ரம்மமாவது - வாயு. அந்த வாயுரூபமான ப்ரம்மத்தை நமஸ்கரிக்கின்றேன். வாயுபகவானே உன்னை வணங்குகின்றேன். ப்ரத்யக்ஷமாயும் பரோக்ஷமாயும் வாயுவையே வணங்குகிறான். நீயே ப்ரத்யக்ஷமாய் க்ரஹிக்சப்படுகிறாயாகையால் உன்னையே ப்ரத்யக்ஷ ப்ரம்மமாகச சொல்லுகின்றேன். என்னெஞ்சில் தோற்றுகிற ஸத்யத்திற்கு நீயே காரணமாகையால் என்னெஞ்சில் தோற்றுகிற ஸத்யம் நீயே என்கிறேன். நினைத்த ஸத்யத்தின்படி ஸத்யமாய் நடப்பதற்கும் நீயே காரணமாகையால் நடத்தையில் ஸத்யமும் நீயே என்கிறேன்

ஸமஸ்தரூபமான வாயுவென்கிற அந்த ப்ரம்மமானது என்னால் இப்படி ஸ்துதிசெய்யப்பட்டதாய்க்கொண்டு ப்ரம்மஜ்ஞானத்தை விரும்புகிற என்னை ப்ரம்மஜ்ஞானத்தைத் தந்து ரக்ஷிக்கவேணும். அந்த வாயுரூபமான ப்ரம்மம் ஆசாரியனுக்கு உபதேசஸாமர்த்யத்தைத் தந்து ரக்ஷிக்கவேணும். 'அவதுமாம்' அவது வக்தாரம், என்று ஆதரத்தால் சொல்லப்பட்டது. ப்ராணரூபியான வாயுவை ப்ரத்யக்ஷமென்றது கண்முதலிய இந்திரியங்கள் ரூபம் முதலியவற்றை யறிவிக்கின்றமையால் அநுமாந ப்ரமாணத்தால் தோற்றுவதுபோலன்றி போக்தாவாகிய ஜீவனுக்கு ஸமீபத்திலிருந்து ஸாக்ஷி சைதந்யத்தால் க்ரகிக்கப்படுவது பற்றி. இந்த ப்ராணனை ப்ரம்மமென்பது சரீரத்தைப் பெருக்கச்செய்வதினாலேயாம். இந்த அநுவாகத்திற்கு மத்வபாஷ்யத்தில் அர்த்த விசேஷங்கள் வ்யாக்யாநம் செய்யப்படவில்லை.

இந்த முதலநுவாகத்திற்கு இராமாநுஜபாஷ்யம்.

ப்ரம்வித்யைக்கு விக்நம்வாராம விருப்பதற்கு இந்த அநுவாகத்தில் தேவதைகளை வேண்டுகிறது. ஸூர்யன், வருணன், அர்யமா என்கிற ஒரு ஸூர்யன், இந்திரன், ப்ருஹஸ்பதி விக்ரமமென்கிற பெரிய பதவிந்யாஸத்தையுடைய விஷ்ணு இவர்கள் ஸுகத்தைத் தருகிறவர்களாகவேணும். வேதத்திற்கு நமஸ்காரம் செய்கிறேன். வேதாக்ஷரங்களை யுச்சரிப்பதற்குக் காரணமாகிய வாயுவை வணங்கி ஸ்துதிசெய்து ப்ரார்த்திக்கின்றேன். ஜகத்துக்கு ப்ராணனாய் ஜகத்து ஜீவித்திருப்பதற்குக் காரணமாயிருப்பது பெருமைபொருந்தி யிருப்பது, இவை முதலிய குணங்கள் பரப்ரம்மத்திற்கும் வாயுவுக்கும் ஸமானங்களாயிருந்தாலும் வாயுவுக்கு ப்ரத்யக்ஷமாயிருப்பது விசேஷமென்று கருத்து. ருதமாவது - சப்தஸத்யத்வம். அதாவது அபப்ரம்சமில்லாமை. அபப்ரம்சமாவது வ்யாகரண விருத்தமான சப்தங்கள். ஆக, வ்யாகரணத்தின்படி நல்ல பதங்களைக்கொண்டு வ்யவஹரிப்பது. சப்தஸத்யத்வ மென்னதரயிற்று ஸத்யமாவது. கண்ட பொருளைக் கண்டபடி சொல்லுவது. ஆகையால் ருதம், என்றாலும் ஸத்யமென்றாலும், ஸத்யத்திற்கே பெயராகையால் ஒன்றை ப்ரயோகிப்பது போக்திருக்க இரண்டு பதங்களையும் ப்ரயோகித்தது புநருக்தி தோஷமாகிறதென்கிற ஸந்தேகத்திற் கிடமில்லை. இப்படி அர்த்தபேதங் கொள்ளுகின்றமையா லென்க. என்று லக்ஷயநம் செய்யப்பட்ட வேதமானது வேதத்தை யோதுகிற என்னை ரக்ஷிக்கவேணும். எனக்கு வேதத்தை யோதுவிக்கிறஉபாத்யாயரையும் ரக்ஷிக்கவேணும். ரக்ஷிக்கையாவது விக்நங்களைப் போக்குவது. "மாமவது, வக்தாரமவது" என்கிற வாக்யங்களால் ப்ரார்த்திக்கப்பட்ட இந்த ரக்ஷணத்தையோ "அவதுமாம், அவது வக்தாரம்" என்கிற வாக்யங்களாலும் ப்ரார்த்திக்கிறது. ஆகராதிசயத்தாலே. முன்னிரண்டு வாக்யங்களுக்கும் பின்னிரண்டு வாக்கியங்களுக்கும் பதங்களை முன்பின்னாக மாற்றியிருப்பது விசேஷம். சாந்தி:, என்கிற மூன்றுபதங்களோடு விக்நாநாம், அஸ்து" என்று இரண்டு பதங்களையும் கூட்டிக்கொண்டு விக்நங்களுக்கு சாந்தியுண்டாக வேணுமென்று பொருள் கொள்க. க.

ஶீக்ஷாம்வ்யாக்யாஸ்யாம: | வர்ண:ஸ்வர: | மாத்ரா பலம் | ஸாமஸந்தாந: | இத்யுக்த: ஶீக்ஷாத்யாய: || ஶீக்ஷாஉ || உ || இதி ஶீக்ஷாவல்யாம் த்விதீயோநுவாக: ||

శీక్షాంవ్యాఖ్యాస్యామః । వర్ణస్స్వరః । మాత్రాబలం ।  సామసంతానః । ఇత్యుక్తశ్శీక్షాధ్యాయః ॥ శీక్షాంపఞ్చ ॥

(ப் - ம்.) ஶீக்ஷாம் - சிக்ஷையே, சிக்ஷையாவது இந்த எழுத்து இன்ன விடத்திலிருந்து பிறக்கின்றது இந்த யத்நமுடையது என்பவை முதலிய வற்றை போதிக்கிற சாஸ்திரத்தாலே சிக்ஷிக்கப்பட்ட எழுத்து, ஸ்வரம் முதலியவை, வ்யாக்யாஸ்யாம꞉ - விவரிக்கின்றோம் அவையாவன, வர்ண꞉ - எழுத்து, ஸ்வர꞉ - உதாத்தம் முதலிய ஸ்வரங்கள், மாத்ரா - ஹ்ரஸ்வம் தீர்க்கம் முதலியவை, பலம் - யத்நம், ஸாம - ஸமோச்சாரணம், ஸந்தான꞉ - ஸம்ஹிதை யென்கிற தொடர்ச்சி, என்கிற இவையாம், இதி - இப்படி, ஶீக்ஷாத்யாய꞉ - எழுத்து முதலியவற்றை போதிக்கிற பாகமானது, உக்த꞉ - சொல்லப்பட்டது, ஶீக்ஷா வல்லீ - இந்த அநுவாகத்தில அஞ்சுவாக்யங்க ளடங்கி யிருக்கின்றன.

௱0-ஹா. ப்ரம்மஜ்ஞாநத்திற்காகவே உபநிஷத்தை யறிவதாகையால் உபநிஷத் திற்கு அர்த்தங்களைத் தெளியவறிவதுபோதும். உபநிஷத்து மூலத்தை சிக்ஷையென் கிற சாஸ்திரப்படி பாடம் செய்யவேண்டியது அநாவச்யகம். என்கிற ஸந்தேஹம் வராம லிருப்பதற்காக சீக்ஷாசாஸ்திர க்ரமப்படி உபநிஷத்தைப் படிக்கவேணுமென் றறிவிப்ப தற்கு சிக்ஷாத்யாயம் சொல்லத் துடங்குகிறது. இங்கு 'சீக்ஷாம், என்கிற பதத்திற்கு சிக்ஷாசாஸ்திரத்தை என்றுவது எழுத்து முதலியவற்றை யென்றுவது பொருள் சொல் லக்கூடும். சிக்ஷா என்பது சீக்ஷா, என்று நீட்டப்பட்டது; இப்படி நீட்டுவது லோகத் தில் கூடாதாயினும் வேதத்தில் கூடும். இந்த சிக்ஷையை நன்றாகச் சொல்லுகிறோம். வ்யாக்யாஸ்யாம꞉, யென்கிற பதம் ச க்ஷிங், என்கிற தாதுவிலிந்து பிறந்தது. வர்ணமா வது அகரம் முதலிய வெழுத்துக்கள். ஸ்வரமாவது உதாத்தம் முதலியவை மாத்ரையா வது ஹ்ரஸ்வம் தீர்க்கம் முதலியவை. பலமாவது ப்ரயத்நம் ஸாமமாவது வர்ணங்களை ஸமாநமாக உச்சரிப்பது. ஸந்தாநமாவது-எழுத்துக்களைச் சேர்த்து உச்சரிப்பது. இவை நன்று யறியவேண்டியவையாம். ஆகையால் இவற்றைச் சொல்லுகிற அத்யாயம் சொல் லப்பட்டது. இது மேலுபயோகப்படுவது.

௨-ஹா. விஷ்ணுவினுடைய ரூபங்கள் வர்ணம் முதலியவற்றை யடைந்து அந்தவர் ண்ம் முதலியவற்றை யுச்சரிப்பது முதலியவற்றை யுண்டு பண்ணுகிறது. அதனுல் புரு ஷர்கள் அந்தந்த காரியங்களைச் செய்கிறார்கள். அந்த ரூபங்களுக்கு அந்தந்த வர்ணம் முதலியவற்றிற்குப் பேராகியவையே பேராகின்றன. இவை வாசகரூபங்களாம்.

௩-ஹா. சீக்ஷை என்கிற வேதாங்கத்திற்கு உபயோகம் சொல்லப்படுகிறது. ஒவ் வொரு வேதங்கத்தினுலும் வேதத்திற்கு உபகாரமுண்டாகையால். வேதாங்களெல்லா வற்றையும் முமுக்ஷுவாய் வேதத்தினலே ப்ரம்மஜ்ஞாநத்தை விரும்புகிறவர் அறிந்துக் கொள்ள வேணுமென்பது கருத்து. சீக்ஷை என்பது சீக்ஷை என நீண்டு கிடக்கிறது. சீக்ஷையில் சொல்லப்படு மவையாவன - வர்ணங்கள் ஸ்வரங்கள், மாத்திரைகள், யத் நங்கள், முதலியவை வர்ணங்களாவன - அறுபத்துமூன்று அல்லது அறுபத்துநான்கு, என்று சிவமதத்தில் சொல்லப்பட்ட அகரம் முதலிய எழுத்துக்கள். ஸ்வரமாவது-உதா த்தம் அநுதாத்தம், முதலியவை. மாத்ரையாவது - ஹ்ரஸ்வம் ஒருமாத்திரை தீர்க்கம் இரண்டுமாத்திரைகள் என்று இவ்வாறு சொல்லப்படுமவை, பலமாவது அற்ப ப்ராணம் மகாப்ராணம் என்று சொல்லப்படுகிற யத்நங்கள். ஸாமமாவது - க்ருஷ்டம் ப்ரதம் முத லிய ஏழு ஸ்வரங்கள், ஸந்தாநமாவது - வர்ணங்கள் பதங்கள் இவற்றின் ஸம்ஹிதை

முதலியவை. இவற்றையெல்லா மறிவது சிக்ஷை என்கிற வேதாங்கத்தினாலேயாம் ஆகவே இவற்றின் ஜ்ஞானம் ப்ரம்ம வித்யைக்குபயோகமானது என்றதாயிற்று. இப்படியே மற்ற வேதாங்களுக்கு முபயோகத்தையறிக. இப்படி சிக்ஷை என்கிற க்ரந்தத்திற்கு உபயோகம் காட்டப்பட்டது. அத்யாய மென்றால் க்ரந்தம். உ.

𑌸𑌹 𑌨𑍌 𑌯𑌶𑌃 | 𑌸𑌹 𑌨𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌰𑍍𑌚𑌸𑌮𑍍 | 𑌅𑌥𑌾𑌤𑌸𑍍𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾 𑌉𑌪𑌨𑌿𑌷𑌦𑌂 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌃 | 𑌪𑌞𑍍𑌚𑌸𑍍𑌵𑌧𑌿𑌕𑌰𑌣𑍇𑌷𑍁 | 𑌅𑌧𑌿𑌲𑍋𑌕𑌮𑌧𑌿𑌜𑍍𑌯𑍌𑌤𑌿𑌷𑌮𑌧𑌿𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌧𑌿𑌪𑍍𑌰𑌜𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑍍 | 𑌤𑌾 𑌮𑌹𑌾𑌸𑌂𑌹𑌿𑌤𑌾 𑌇𑌤𑍍𑌯𑌾𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 | 𑌅𑌥𑌾𑌧𑌿𑌲𑍋𑌕𑌮𑍍 | 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌪𑍂𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍 | 𑌦𑍍𑌯𑍌𑌰𑍁𑌤𑍍𑌤𑌰𑌰𑍂𑌪𑌮𑍍 | 𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑌿𑌃 ||௧||

సహ నౌ యశః । సహ నౌ బ్రహ్మవర్చసం । అథాతస్సగ్ంహితాయా ఉపనిషదం వ్యాఖ్యాస్యామః । పఞ్చస్వధికరణేషు । అధిలోకమధిజ్యౌతిషమధివిద్యమధిప్రజమధ్యాత్మం । తా మహాసగ్ంహితా ఇత్యాచక్షతే । అథాధిలోకం । పృథివీ పూర్వరూపం । ద్యౌరుత్తరరూపం । ఆకాశస్సంధిః ॥ ౧ ॥

(ப - ம்.) 𑌨𑍌 - நமக்கிருவர்க்கும், 𑌯𑌶𑌃 - கீர்த்தியானது, 𑌸𑌹 - கூடிவரவேணும், 𑌨𑍌 - நமக்கிருவர்க்கும், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌰𑍍𑌚𑌸𑌮𑍍 - ப்ரம்மதேஜஸ்ஸானது, 𑌸𑌹 - கூடியுண்டாகவேணும், 𑌅𑌥 - இனி, 𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌃 - ஸம்ஹிதையினுடைய, 𑌉𑌪𑌨𑌿𑌷𑌦𑌮𑍍 - உபநிஷத்தை, 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌃-விவரிக்கிறோம், 𑌪𑌞𑍍𑌚𑌸𑍁 - ஐந்தாயிருக்கிற, 𑌅𑌧𑌿𑌕𑌰𑌣𑍇𑌷𑍁 - இடங்களில் அவையாவன, 𑌅𑌧𑌿𑌲𑍋𑌕𑌮𑍍 - லோகவிஷயமும், 𑌅𑌧𑌿𑌜𑍍𑌯𑍌𑌤𑌿𑌷𑌮𑍍 தேஜோவிஷயமும், 𑌅𑌧𑌿𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑍍 - வித்யாவிஷயமும், 𑌅𑌧𑌿𑌪𑍍𑌰𑌜𑌮𑍍 - ப்ரஜாவிஷயமும், 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑍍 - ஆத்மவிஷயமும், 𑌤𑌾𑌃 - அவைகளை, 𑌮𑌹𑌾𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌃 𑌇𑌤𑌿- சிறந்த ஸம்ஹிதைகளென்று, 𑌆𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 - சொல்லுகின்றார்கள், 𑌅𑌥 - இனி, 𑌅𑌧𑌿𑌲𑍋𑌕𑌮𑍍 - லோகவிஷயத்தைப்பற்றிச் சொல்லப்படுகிறது. 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 - பூமியானது, 𑌪𑍂𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍 - முதல்வடிவு, 𑌦𑍍𑌯𑍌𑌃 - ஸ்வர்க்கலோகமானது, 𑌉𑌤𑍍𑌤𑌰𑌰𑍂𑌪𑌮𑍍 - முடிவிலுள்ளவடிவு, 𑌆𑌕𑌾𑌶𑌃 - ஆகாயமானது, 𑌸𑌨𑍍𑌧𑌿𑌃 - சேர்க்கையாம்.

𑌵𑌾𑌯𑍁𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌮𑍍 | 𑌇𑌤𑍍𑌯𑌧𑌿𑌲𑍋𑌕𑌮𑍍 | 𑌅𑌥𑌾𑌧𑌿𑌜𑍍𑌯𑍌𑌤𑌿𑌷𑌮𑍍 | 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍 | 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌉𑌤𑍍𑌤𑌰𑌰𑍂𑌪𑌮𑍍 | 𑌆𑌪𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑌿𑌃 | 𑌵𑍈𑌦𑍍𑌯𑍁𑌤𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌮𑍍 | 𑌇𑌤𑍍𑌯𑌧𑌿𑌜𑍍𑌯𑍌𑌤𑌿𑌷𑌮𑍍 | 𑌅𑌥𑌾𑌧𑌿𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑍍 | 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌃𑌪𑍂𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑍍 ||௨||

వాయుస్సంధానం । ఇత్యధిలోకం । అథాధిజ్యౌతిషం । అగ్నిః పూర్వరూపం । ఆదిత్య ఉత్తరరూపం । ఆపస్సంధిః । వైద్యుతస్సంధానం । ఇత్యధిజ్యౌతిషం । అథాధివిద్యం । ఆచార్యః పూర్వరూపం ॥ ౨ ॥

(ப - ம்.) 𑌵𑌾𑌯𑍁𑌃 - வாயுவானவன், 𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌮𑍍 - ஸந்தானமாகிறான், 𑌇𑌤𑌿 - இப்படி, 𑌅𑌧𑌿𑌲𑍋𑌕𑌮𑍍 - லோகவிஷயஞ் சொல்லப்பட்டது, 𑌅𑌥 -

இதற்கு மேலே, அதிஜ்யோதிஷம் - தேஜோவிஷயத்தைச் சொல்லுகிறது, அக்நி: - அக்கியானது, பூர்வரூபம் - முதல் ரூபமாகிறது. ஆதித்ய: - ஸூரியன், உத்தரரூபம்- உத்தரமான ரூபம், ஆப:-ஜலமானது, ஸந்தி: - ஸந்தியாகிறது. வைத்யுத: - மின்னலில் ஸம்பந்தப்பட்ட அக்கியானது, ஸந்தானம் - ஸந்தானமாகிறது. இதி - இப்படி, அதிஜ்யோதிஷம்-தேஜோ விஷயஞ் சொல்லப்பட்டது. அத - இனி, அதிவித்யம்-வித்யாவிஷயஞ் சொல்லப்படுகிறது. ஆசார்ய: - ஆசாரியரானவர், பூர்வரூபம் - முதல் ரூபமாகிறார்.

அந்தேவாஸ்யுத்தரரூபம் । வித்யா ஸந்தி: । ப்ரவசனம் ஸந்தானம் । இத்யதிவித்யம் । அதாதிப்ரஜம் । மாதா பூர்வரூபம் । பிதோத்தரரூபம் । ப்ரஜா ஸந்தி: । ப்ரஜனனம் ஸந்தானம் । இத்யதிப்ரஜம் ॥௩॥

అన్తేవాస్యుత్తరరూపం । విద్యాసంధిః ప్రవచనగ్ం సంతానం ఇత్యధివిద్యం । అథాధిప్రజం । మాతాపూర్వరూపం । పితోత్తరరూపం । ప్రజాసంధిః । ప్రజననగ్ం సంధానం । ఇత్యధిప్రజం॥3॥

(ப - ம்.) அந்தேவாஸீ - சிஷ்யனாகியவன், உத்தரரூபம் - மேலரூபம், வித்யா - வித்தையானது, ஸந்தி: - ஸந்தியாகிறது. ப்ரவசனம் - ஓதிவித்தலானது, ஸந்தானம் - ஸந்தானமாகிறது, இதி-இப்படி, அதிவித்யம் வித்யாவிஷயஞ் சொல்லப்பட்டது. அத - இனி, அதிப்ரஜம் - ப்ரஜாவிஷயத்தைச் சொல்லுகிறது. மாதா - தாயானவள், பூர்வரூபம் - முதல் ரூபம், பிதா - தந்தையானவன், உத்தரரூபம் - மேல்ரூபம், ப்ரஜா - ப்ரஜையானது, ஸந்தி: - ஸந்தியாகிறது. ப்ரஜனனம் - ப்ரஜையை உண்டுபண்ணுதல், ஸந்தானம் - ஸந்தானமாகிறது, இதி - இப்படி, அதிப்ரஜம் - ப்ராஜா விஷயஞ் சொல்லப்பட்டது.

அதாத்யாத்மம் । அதராஹனு: பூர்வரூபம் । உத்தராஹனுருத்தரரூபம் । வாக்ஸந்தி: । ஜிஹ்வாஸந்தானம் । இத்யத்யாத்மம் । இதீமா மஹாஸம்ஹிதா: । ய ஏவமேதா மஹாஸம்ஹிதா வ்யாக்யாதா வேத । ஸந்தீயதே ப்ரஜயா பஶுபி: । ப்ரஹ்மவர்சஸேனான்னாத்யேன ஸுவர்க்யேண லோகேன ॥௪॥ ஸம்ஹிதாயா: பூர்வரூபமதிப்ரஜம் லோகேன ॥௩॥

అథాధ్యాత్మం । అధరాహనుః పూర్వరూపం । ఉత్తరాహనురుత్తరరూపం । వాక్సంధిః । జిహ్వాసంధానం । ఇత్యధ్యాత్మం । ఇతీమామహాసగ్ంహితాః । య ఏవమేతా మహాసగ్ంహితా వ్యాఖ్యాతా వేద । సంధీయతే ప్రజయా పశుభిః । బ్రహ్మవర్చసేనాన్నాద్యేన సువర్గ్యేణ లోకేన ॥ 4 ॥ సంధిరాచార్యః పూర్వరూప మిత్యధిప్రజం లోకేన ॥ అను ॥ 3 ॥

(ப - ம்.) அத - இதற்குமேலே, அத்யாத்மம் - ஆத்ம விஷயத்தைச் சொல்லுகிறது. அதரா - கீழிருக்கிற, ஹநு: - கன்னத்தில் சேர்ந்திருக்

கிற எனும்பானது, பூர்வரூபம்-முதல் ரூபம், உத்தரா - மேலிருக்கிற, ஹநு: - கன்னத்தெலும்பானது, உத்தரரூபம் - மேலரூபம், வாக் - வாயானது, ஸந்தி: - ஸந்தியாகிறது. ஜிஹ்வா - நாக்கானது, ஸந்தாநம் - ஸந்தாநமாகிறது. இதி - இப்படி, அத்யாத்மம் - ஆத்மவிஷயஞ் சொல்லப்பட்டது. இதி இமா: - இப்படி சொல்லப்பட்ட இவை, மஹாஸம்ஹிதா: - மஹா ஸம்ஹிதைகளாகின்றன. வ்யாக்யாதா: - வ்யாக்யாநம் செய்த ஏதா: - இந்த, மஹாஸம்ஹிதா: - மஹாஸம்ஹிதைகளை, ஏவம் - இந்தப்படி, வேத - அறிகிறானோ; (அவன்) ப்ரஜயா - ஸந்தாநத்தோடும், பசுபி: - பசுக்களோடும், ப்ரஹ்மவர்சஸேந - ப்ரம்மதேஜஸ்ஸோடும், அந்நாத்யேந - அந்நம் முதலிய வற்றோடும், ஸுவர்க்யேண - சுவர்க்கமென்கிற, லோகேந - லோகத்தோடும், ஸந்தீயதே - சேருகிறான். (அதாவது இவற்றையெல்லா மடைகிறானென்றவாறு.) ஸந்தி: - "ஆகாசஸ்ஸந்தி:" என்கிற வாக்யம் வரையிலொரு பஞ்சாதியும், ஆசார்ய: பூர்வரூபம் - 'ஆசார்ய: பூர்வரூபம்' என்கிற வாக்யம் வரையிலொரு பஞ்சாதியும், இத்யத்யாத்மம் - 'இத்யதிப்ரஜம்' என்கிற வாக்யம் வரையிலொரு பஞ்சாதியும், லோகேந - 'ஸுவர்க்யேணலோகேந' என்கிற வரையிலொரு பஞ்சாதியுமாக இந்த அநுவாகத்தில் நாலு பஞ்சாதிகளடங்கி யிருக்கின்றன.

ஸம்ஹிதோபநிஷத் - இப்போது ஸம்ஹிதோபநிஷத்து சொல்லாரம்பிக்கிறது. இந்த ஸம்ஹிதோபநிஷத்தை யறிவதினால் வருகிற யசஸ்ஸும் ப்ரம்மதேஜஸ்ஸும், எனக்கும் என்னாசாரியனுக்கும் ஸமானமாயுண்டாகவேணும் சிஷ்யன் ப்ரார்த்திக்கின்றான். சிஷ்யனே இந்த பலனையடையாததினால் ப்ரார்த்திப்பான். ஆசாரியனாகில் இந்த பலனை யடைந்தவனாகையால் ப்ரார்த்திக்கமாட்டான். க்ருதார்த்தனா யிருப்பவனன்றோ ஆசாரியனாகிறான்.

யஶ்சந்தஸாம்ருஷபோ விஶ்வரூப: | ச்சந்தோப்யோऽத்யம்ருதாத்ஸம்பபூவ | ஸ மேந்த்ரோ மேதயா ஸ்ப்ருணோது | அம்ருதஸ்ய தேவ தாரணோ பூயாஸம் | ஶரீரம் மே விசர்ஷணம் | ஜிஹ்வா மே மதுமத்தமா | கர்ணாப்யாம் பூரிவிஶ்ருவம் | ப்ரஹ்மண: கோஶோऽஸி மேதயா பிஹித: | ஶ்ருதம் மே கோபாய | ஆவஹந்தீ விதந்வாநா ||க||

குர்வாணாऽசீரமாத்மந: | வாஸாꣳஸி மம காவஶ்ச | அந்நபாநே ச ஸர்வதா | ததோ மே ஶ்ரியமாவஹ | லோமஶாம் பஶுபிஸ்ஸஹ ஸ்வாஹா | ஆமாயந்து ப்ரஹ்மசாரிண: ஸ்வாஹா | விமாऽऽயந்து ப்ரஹ்மசாரிண: ஸ்வாஹா | ப்ரமாऽऽயந்து ப்ரஹ்மசாரிண: ஸ்வாஹா | தமாயந்து ப்ரஹ்மசாரிண: ஸ்வாஹா | ஶமாயந்து ப்ரஹ்மசாரிண: ஸ்வாஹா ||உ||

யஶோ ஜநேऽஸாநி ஸ்வாஹா | ஶ்ரேயாந் வஸ்யஸோऽஸாநி ஸ்வாஹா | தம் த்வா பக ப்ரவிஶாநி ஸ்வாஹா | ஸ மா பக ப்ரவிஶ ஸ்வாஹா | தஸ்மிந் ஸஹஸ்ரஶாகே | நிபகாஹம் த்வயி ம்ருஜே ஸ்வாஹா | யதாऽऽப: ப்ரவதா யந்தி | யதா மாஸா அஹர்ஜரம் | ஏவம் மாம் ப்ரஹ்மசாரிண: |

யா தாராயணஓ°ஹுவ தஹா ஹா | வூதிவெவொரவிவூசாவாஹிவூசாவ ஏூஹு ||க|| விதநா நாவூவிபுரஹாஹா॥ஸவூவ॥

యశ్ఛందసామృషభో విశ్వరూపః । ఛందోభ్యో౽ధ్యమృతాత్సంబభూవ । స మేంద్రో మేధయా స్పృణోతు । అమృతస్య దేవధారణో భూయాసం । శరీరం మే విచర్షణం । జిహ్వా మే మధుమత్తమా । కర్ణాభ్యాం భూరివిశ్రువం । బ్రహ్మణః కోశో౽సి మేధయా పిహితః । శ్రుతం మే గోపాయ । ఆవహన్తీ వితన్వానా ॥ ౧ ॥

కుర్వాణాచీరమాత్మనః । వాసాగ్ంసి మమ గావశ్చ । అన్నపానే చ సర్వదా । తతో మే శ్రియమావహ । లోమశాం పశుభిస్సహ స్వాహా । ఆమాయన్తు బ్రహ్మచారిణస్స్వాహా । యశో జనే౽సాని స్వాహా । శ్రేయాన్వస్యసో౽సాని స్వాహా । తం త్వా భగ ప్రవిశాని స్వాహా । స మా భగ ప్రవిశ స్వాహా ॥ ౨ ॥

తస్మింత్సహస్రశాఖే । నిభగాహం త్వయి మృజే స్వాహా । యథాపః ప్రవతా౽యంతి । యథా మాసా అహర్జరం । ఏవం మాం బ్రహ్మచారిణః । ధాతరాయంతు సర్వతస్స్వాహా । ప్రతివేశో౽సి ప్రమాభాహి ప్రమాపద్యస్వ ॥ 3 ॥ వితన్వానా ప్రవిశ స్వాహా సప్త చ ॥

(ப - ம.) யஃ - யாதொரு ஓம்காரமென்கிற பிரணவமானது, சந்தஸாம் - வேதங்களுக்கு, ருஷபஃ - உயர்ந்ததோ, விஶ்வரூபஃ யெல்லா உருவங்களையுமுடையதோ, அதாவது யெல்லா வாக்குகளுக்கும் முதன்மையானதோ, தத்யதா ஶங்குனா ஸர்வாணி பர்ணானி ஸந்த்ருண்ணான்யேவமோங்காரேண ஸர்வா வாக் ஸந்த்ருண்ணா ஓங்கார ஏவேதம் ஸர்வம்-என்கிறபடியே சகல வாக்குக்களுக்கும் பிரதானமானது என்று கருத்து, சந்தோப்யஃ - வேதங்களாகிற, அம்ருதாத் - அமுதத்தில் நின்றும், ஸம்பபூவ - மேன்மையை யடைந்தது. ஸஃ - அந்த, இந்த்ரஃ - சகலத்திற்கும் முக்யமான ஓங்காரமானது, மேதயா - அறிவினலே, மா - என்னை, ஸ்ப்ருணோது - ப்ரீதி பண்ணி வைக்கட்டும் அல்லது பலத்தையுண்டு பண்ணட்டும், அம்ருதஸ்ய - மோக்ஷத்திற்குக் காரணமான பிரம்மக்யானத்திற்கு, (வா) அம்ருதஸ்ய - பரமாத்மாவுக்கு, தேவ - வாராய் பூஜ்யமாகிய ஓம்காரமே, தாரணஃ - தரிக்கிறவனுக, (வா) - மனதால் தியானிப்பவனுக, பூயாஸம் - ஆகக்கடவேன், மே - யென்னுடைய, ஶரீரம் - உடலானது, விசர்ஷணம் - யோக்யமானதாக (காந்தியுள்ளதாக), (பூயாத் - ஆகட்டும்) மே - என்னுடைய, ஜிஹ்வா - நாக்கு, மதுமத்தமா - மதுரமான வார்த்தை சொல்லுவதாக, (வா) - மதுரமான பிர்ம்மத்தைச் சொல்லுகிறதாக, (பூயாத் - ஆகட்டும்) கர்ணாப்யாம் - காதுகளாலே, பூரி - அதிகமாக, விஶ்ருவம் - கேட்கக் கடவேன், (வா) பிர்ம்மத்தையே சொல்லும்படியான சாஸ்திரங்களைக் கேட்கக்கடவேன், ப்ரஹ்

ணஃ - பிர்மமாகிற கத்திக்கி, கொஶஃ - உறையாக, ௯ஸி - ஆகிறாய், ஜெய யா - உலகத்திலுள்ள பொருள்களின் அறிவினாலே, விஹிக்ஃ - மறைக்கப் பட்டவனாக, (௯ஸி - ஆகிறாய்) அதாவது உறையில் கத்தி யெப்படி தோற் றுகிறதோ அப்படியே பிர்ம்மத்தை யறியவிடமாக யிருக்கிறாய் கேவலம் உலகத்தில் அறிவால் மறைந்து யிருக்கிறாய், (௱ம்) பரமாத்மாவுக்கு பொக் ஷம்போல் இருப்பிடமாக யிருக்கிறாய் அதாவது பிர்ம்மத்தைச் சொல்லும் பதம் என்று கருத்து, ஜெயயாவிஹிக்ஃ - புத்தியினால் நிறைந்திருக்கிறாய் அல்லது புத்தியை யுண்டுபண்ணுகிறாய், ஜெ-என்னுடைய, ஶ்ருதம் - கேள் வியினாலுண்டான வாத்மவின் னறிவை, ஜொவாய - காப்பாற்று அதாவது மறவாமல் யெப்பொழுதும் மனதிலிருக்கும்படி செய், ஆவஹந்தீ - உண்டு பண்ணுவதாயும், விதந்வாநா - விஸ்தாரப்படுத்துவதாயும், ௯வீரம் - சீக்கி ரமும், குர்வாணா-நிறைவேற்றுகிறதாயுமிருக்கிற (எதையென்றால்) ஆத்மநஃ- எனக்கு, வாஸாம்ஸி - வஸ்திரங்களேயும், ஜெ - எனக்கு, மாவஶ்ச - பசுக்களே யும், அந்நபாநெ-சாப்பிடும் வஸ்துக்களேயும் குடிக்கும் வஸ்துக்களேயும், ஸவாதா - எக்காலத்திலும், வா - யாதொரு லட்சுமியானவள். (ஸவதி - இருக்கிறளோ) தாம் - அந்த, ஜொஜஶாம் - ஆடு முதலிய மயிருள்ளவைக ளோடு கூடியதாயும், பஶுபிஸ்ஸஹ-வேறு பசுக்களோடும் கூடியதாயு மிரு க்கிற, ஶ்ரியம் - லட்சுமியை, ததஃ - அந்த வறிவைக்கொடுத்த பிறகு, ஆவ ஹ - உண்டாகச்செய், (ஸ்வாஹா - என்று சொல்லுகிற மந்திரங்கள் ஓமத்தி லுபயோகிப்பதைக் காண்பிவைக்கிறது), (௱ம்) (யதஃ எந்த காரணத்தினால், ௯ம் - நீ), ஆவஹந்தீ - உண்டுபண்ணுகிறவளோ, விதந்வாநா - விருத்தி பண்ணுகிறவளோ, ததஃ - ஆகையால், ஜெ - எனக்கு, ஶ்ரீம் - மரவுரியை வாஸாம்ஸி - வஸ்திரங்களேயும, மாவஶ்ச - பசுக்களேயும், அந்நபாநெ - சாப்பிடும் வஸ்துக்களேயும் குடிக்கும் வஸ்துக்களேயும், ஸர்வதா - யெப் பொழுதும், குர்வாணாஸதீ - செய்கிறவளாய்க்கொண்டு, ஜொஜஶாம் - அதிகமாயிருக்கிற, ஶ்ரியம் - வேதமாகிற சம்பத்தை, பஶுபிஸ்ஸஹ- யக்யத் திற்குபயோகிக்கும் பசுக்களுடன், ஆவஹ - உண்டுபண்ணு, ப்ரஹ்மசாரி ணஃ - பிர்மசர்யவிருதத்தை யனுஷ்டிக்குமவர்கள், ஜா - என்னைக் குறித்து, ஆயந்து - வரட்டும், ஜநெ - ஜனங்களுக்குள், யஶஃ - கீர்த்தியையுடையவ னாக, ௯ஸாநி - ஆகக்கடவேன், வஸ்யஸஃ-பணமுடையவர்களுக்குள், ஶ்ரெ யாந் - உயர்ந்தவனாக, ௯ஸாநி - ஆகக்கடவேன், (ஸ்வாஹா - என்பது முன் போலவே) ஜஹம-வாராய் பூஜிக்கத்தகுந்தவனே, (௱ம்) ஜஹம-வாராய் ஐசுவரியமே; தம் - முன்கூறிய, ஊா - உன்னை, ப்ரவிஶாநி - அடையக் கடவேன், (ஶம்) ப்ரவிஶாநி - அடைந்து உன்னுடன் ஒன்றாகக் கடவேன், (௯ம் - நீ), ஜஹம - வாராய் (ஐசுவரியமே) பூஜ்யனானவனே, ஸஃ - முன்

டது. அதாவது இடத்தாலும் காலத்தாலும் பொருள்களாலும் முடிவில்லாதது. இதில் இடத்தால் முடிவாவது இந்த வஸ்து இந்த விடத்தில்தான் அந்த விடத்திலில்லை என்பது விடத்தால் முடிவு. இந்தகாலத்தில்தான் அந்தகாலத்திவில்லை. என்பது காலத்தினல் முடிவு. இந்தப்பொருள் இதைக்காட்டிலும் தாழ்ந்தது என்பது பொருளினல் முடிவு. பரமாத்மாவோ வென்ருல் எல்லாவிடங்களிலும் வியாபித்திருத்தலாலும் நித்யமானதால் எப்பொழுதும் அழிவில்லாதிருத்தலாலும், ''நாந்தம்குணுநாம்கச்சந்திதேநாநந்தோயமுச்யதே'' என்கிற ஸ்மிருதியின்படியே குணங்களினலும் உருவத்தினலும் எல்லாப்பொருளிலும் உயர்ந்ததாதலாலும் மேற்கூறிய மூவகைப்பட்ட முடிவுகளுமில்லாதவனென்று சொல்லப்படுகிருன். இதினல் ப்ரம்மத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லி ''யோவேதநிஹிதம்குஹாயாம்'' என்கிறதினல் அதின் அறிவையும் சொல்லி மேல்பாகங்களினல் அடையவேண்டிய பயனையும் சொல்லுகிறது.

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌵𑍈𑌪𑍍𑌰𑌜𑌾𑌃𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌯𑌾𑌃𑌕𑌾𑌶𑍍𑌚𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 । 𑌅𑌥𑍋𑌅𑌨𑍍𑌨𑍇𑌨𑍈𑌵𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌅𑌥𑍈𑌨𑌦𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌤𑌃 । 𑌅𑌨𑍍𑌨𑌂𑌹𑌿𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌂 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑌰𑍍𑌵𑌂𑌵𑍈𑌤𑍇𑌽𑌨𑍍𑌨𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌯𑍇𑌽𑌨𑍍𑌨𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌪𑌾𑌸𑌤𑍇 । 𑌅𑌨𑍍𑌨𑌂𑌹𑌿𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌂 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥௧॥

𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌨𑌿𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌜𑌾𑌤𑌾𑌨𑍍𑌯𑌨𑍍𑌨𑍇𑌨𑌵𑌰𑍍𑌧𑌨𑍍𑌤𑍇 । 𑌅𑌦𑍍𑌯𑌤𑍇𑌽𑌤𑍍𑌤𑌿𑌚𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌨𑌂𑌤𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑌇𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌨𑌰𑌸𑌮𑌯𑌾𑌤𑍍 । 𑌅𑌨𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌆𑌤𑍍𑌮𑌾𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌯𑌃 । 𑌤𑍇𑌨𑍈𑌷𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 । 𑌸𑌵𑌾𑌏𑌷𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌏𑌵 । 𑌤𑌸𑍍𑌯𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌤𑌾𑌂 । 𑌅𑌨𑍍𑌵𑌯𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌧𑌃 ॥௨॥

𑌤𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌣𑌏𑌵𑌶𑌿𑌰𑌃 । 𑌵𑍍𑌯𑌾𑌨𑍋𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌃𑌪𑌕𑍍𑌷𑌃 । 𑌅𑌪𑌾𑌨𑌉𑌤𑍍𑌤𑌰𑌃𑌪𑌕𑍍𑌷𑌃 । 𑌆𑌕𑌾𑌶𑌆𑌤𑍍𑌮𑌾 । 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌪𑍁𑌚𑍍𑌛𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 । 𑌤𑌦𑌪𑍍𑌯𑍇𑌷𑌶𑍍𑌲𑍋𑌕𑍋𑌭𑌵𑌤𑌿 । 𑌇𑌤𑌿𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍋𑌽𑌨𑍁𑌵𑌾𑌕𑌃 ॥

అన్నాద్వైప్రజాఃప్రజాయంతే ॥ యాఃకాశ్చపృథివీగ్ంశ్రితాః । అథోఅన్నేనైవజీవంతి । అథైనదపియంత్యంతతః । అన్నగ్ంహిభూతానాంజ్యేష్ఠంతస్మాత్సర్వౌషధముచ్యదే।సర్వంవైతేన్నమాప్నువంతి।యేన్నంబ్రహ్మోపాసతే। అన్నగ్ంహిభూతానాంజ్యేష్ఠం । తస్మాత్సర్వౌషధముచ్యతే ।౧॥

అన్నాద్భూతానిజాయంతే । జాతాన్యన్నేనవర్ధంతే । అద్యతేత్తిచభూతాని । తస్మాదన్నంతదుచ్యతఇతి । తస్మాద్వాఏతస్మాదన్నరసమయాత్ । అన్యోంతరఆత్మాప్రాణమయః । తేనైషపూర్ణః । సవాఏషపురుషవిధఏవ । తస్యపురుషవిధతాం । అన్వయంపురుషవిధః ॥ ౨ ॥

తస్యప్రాణఏవశిరః । వ్యానోదక్షిణఃపక్షః । అపానఉత్తరఃపక్షః । ఆకాశఆత్మా । పృథివీ పుచ్ఛంప్రతిష్ఠా । తదప్యేషశ్లోకోభవతి ॥

(ப் - ம்.) 𑌯𑌾𑌃𑌕𑌾𑌶𑍍𑌚 - எல்லா, 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂 - பூமியை, 𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 - அடைந்திருக்கிற, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 - ஜங்கமம் ஸ்தாவரம் என்று சொல்லப்பட்ட பிரஜைகள், 𑌅𑌨𑍍𑌨𑌾𑌤𑍍 - அன்னத்தில் நின்றன்றோ, 𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 - உண்

டாகிறார்கள், அதோ - அப்படியுண்டான பிறகு, அந்நேநைவ - அன்னத்தினாலே தானே, ஜீவந்தி - ஜீவிக்கிறார்கள், அத - அப்படி ஜீவித்த பிறகு, அந்ததஃ - ஜீவதசையின் முடிவில், ஏநத்-இந்த அன்னத்தை, அபியந்தி - லயிக்குமிடமாகச் சேருகிறார்கள், ஹி யாதொரு காரணத்தால், அந்நம் - அன்னமானது, பூதாநாம் - உலகத்திலுள்ள வஸ்துக்களுக்குள், ஜ்யேஷ்டம் - சிரேஷ்டமானதோ, தஸ்மாத் - ஆதலால், ஸர்வௌஷதம் - எல்லாவற்றிற்கும் மருந்தாக, உச்யதே - சொல்லப்படுகிறது. யே - எவர்கள், அந்நம் - அன்னத்தை, ப்ரஹ்ம - ப்ரம்மமாக, உபாஸதே - தியானம் செய்கிறார்களோ, தே - அவர்கள், ஸர்வம் - எல்லா, அந்நம்வை - போக்ய வஸ்துவைத்தானே, ஆப்நுவந்தி - அடைகிறார்கள், ஹி-யாதொரு காரணத்தாலே, அந்நம் - அன்னமானது, பூதாநாம் - உலகத்திலுள்ள வஸ்துக்களுக்குள், ஜ்யேஷ்டம் - உயர்ந்ததோ, தஸ்மாத் - ஆகையாலே, ஸர்வௌஷதம் - எல்லாவற்றிற்கும் மருந்தாக, உச்யதே - சொல்லப்படுகிறது. (௩) ஹி - யாதொரு காரணத்தினாலே, அந்நம் - அன்னமானது, பூதாநாம் - ஆகாளம் முதலிய பஞ்சபூதங்களுக்குள், ஜ்யேஷ்டம் - உயர்ந்ததோ, தஸ்மாத் - ஆகையாலே, ஸர்வௌஷதம் - சகலமான வோஷதிகளில் நின்றுமுண்டானதாக, உச்யதே - சொல்லப்படுகிறது. அந்நாத் - அன்னத்தில் நின்றும், பூதாநி - பிராணிகள், ஜாயந்தே - உண்டாகிறதுகள், ஜாதாநி - உண்டான வஸ்துக்கள், அந்நேந - அன்னத்தினாலே, வர்தந்தே - விருத்தியடைகிறதுகள், (பூதைஃ - பிராணிகளாலே), அத்யதே - புசிக்கப்படுகிறது, பூதாநி - பிராணிகளை, அத்தி - புசிக்கிறது (அதாவது மாணமடைவிக்கிறது), தஸ்மாத் - ஆகையாலே, தத் - அந்த வன்னமானது, அந்நம்இதி-அன்னம் என்று, உச்யதே - சொல்லப்படுகிறது. தஸ்மாத்வா ஏதஸ்மாத் - அந்த இந்த, அந்நரஸமயாத் - அன்னரஸமயமென்று சொன்ன ப்ரம்மத்திற் காட்டிலும், அந்யஃ - வேறுபட்டும், அந்தரஃ-உள்ளுமிருக்கிற, ப்ராணமயஃ-வாயுரூபியானவன், ஆத்மா - பரமாத்மா, ஏஷஃ - இந்த வன்னமயமானது, தேந - அந்த ப்ராணமயனாலே, பூர்ணஃ - நிறைந்தது. ஸவா ஏஷஃ - அந்த இந்த பிராணமயனானவன், புருஷவித ஏவ - புருடர்களின் ஆகிருதியுள்ளவன்தான், தஸ்ய - அந்த வன்னமயனுடைய, புருஷவிததாம் அநு - புருஷாகிருதியாயிருத்தலை யனுஸரித்து, அயம் - இந்த ப்ராணமயனானவன், புருஷவிதஃ - புருஷர்களின் ஆகிருதியுள்ளவன், தஸ்ய- அந்த ப்ராணமயனுக்கு, ப்ராண ஏவ - பிராணவாயுவே, ஶிரஃ - தலை, வ்யாநஃ - வியானனானவன், தக்ஷிணஃ - வலது, பக்ஷஃ - பார்சுவம், அபாநஃ-அபானனானவன், உத்தரஃ - இடது, பக்ஷஃ-பார்சுவம், ஆகாஶஃ - ஆகாயமானது, ஆத்மா - ஆத்மா, ப்ருதிவீ - பூமியானது, ப்ரதிஷ்டா - ஆதாரமான, பு

அபி - வால், தத் - முன்சொன்னவற்றில், ஏஷ: - இந்த, ஶ்லோக: - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(ஸ௦-ஹா.) அன்னத்தால் ஜனித்தும் அதனால் சீவனத்தை யடைந்தும், அதனால் மரணத்தையுமடைகிறபடியால் அன்னத்தையே ப்ரம்மமென்று சொல்லுகிறது. எவர்கள் அன்னத்தில் பிறந்து வளர்ந்து இறப்பவர்களாகையால் நாமே அன்னம் என்று தியானம் சொல்லுகிறார்களோ அவர்கள் எல்லாப்பொருளிலும் உயர்ந்த வன்னத்தை யடைகிறார்கள். அன்னமயன் முதலாக வானந்தமயனிறுதியாக அதிசூக்ஷ்மமாயுள்ள ஜீவாத்மாவை இனி காண்பிக்கப் புகுகிறதாக அவித்தையாலுண்டாகப்பட்ட இந்த வைம்பூதங்களேயும் நீக்கிசலிப்பதால், உமிதவுடுகளே அரிசியில் நின்றும் பிரிப்பதுபோல் அன்னமயனேக்காட்டிலும் நுட்பமாயும் அன்னமயனிடத்தில் சொன்ன வண்ணமாக பக்ஷபுச்சாத்மாக்களோடும் கூடியிருக்கும் பிராணமயனேக் காட்டுகிறது. இங்கு உயிர்ப்பிப்பதால் பிராணனென்றும், சரீரமெல்லாம் வியாபித்திருக்கும் காற்றுக்கு வியானனென்றும், பிருஷ்டபாகத்திலிருக்கும் காற்றிற்கு அபானனென்றும், ஆகாயம் காற்றிற்கு சஞ்சரிக்குமிடமாதலால் அதைரிடலான ஆத்மாவென்றும், உதானன் என்று சொல்லப்பட்ட உயரநோக்கி வாயுவால் காற்று வெளியில் போசாத வண்ணமாக பூமியின் தேவதையானது தாங்குதலாலும், மேற்கூறிய வாகாயத்திற்கும் பூமியாதாரமாயிருத்தலாலும், பிராணமயனுக்கு பூமியையும் யாதாரமாகச் சொல்லப்பட்டது.

(ரா-ஹா.) அடியில் "ப்ரம்மவிதாப்நோதிபரம்" என்கிற பிராம்மணத்திலும் "ஸத்யம்ஞ்ஞானமநந்தம்ப்ரம்ம" என்கிற மந்திரத்திலும் ப்ரம்மமே சகல ஜகத்திற்கும் காரணமென்றும், சகல சகத்திலும் அந்தர்யாமியாயிருக்கிற தென்றும் ஏற்பட்டது. அந்த ஆத்மாவானது எதுவென்று கேள்வி பிறக்கும் காலத்தில் ஆநந்தமயனே அந்த ஆத்மாவென்று காண்பிவைக்கிறதற்காக, அருந்ததி நக்ஷத்திரத்தைப்பார்க்க விருப்பமுள்ளவனுக்கு அந்த சிறியதான அருந்ததி நக்ஷத்திரத்திற்கு சமீபத்திலிருக்கும், பெரிய நக்ஷத்திரத்தை இதுவே அருந்ததியென்று சொல்லி யவனுக்குமந்த நக்ஷத்திரம், புலப்பட்டவாறே அப்படி புலப்பட்ட நக்ஷத்திறத்திற்கு சமீபத்திலிருக்கும் மெய்யான அருந்ததியை எளிதில் புலப்படுத்தும் வண்ணமாக பெரியதான உடலிலிருக்கும் ப்ராணமயனே ஆத்மாவாக முதலில் சொல்லுகிறது. எவன் அன்னத்தை ப்ரம்மமாகத் தியானம் செய்கிறானே அவன் இச்சித்தபடி யெல்லாம் அன்னத்தை யடைகிறான், ப்ரம்மம் எப்படி படைத்தல் காத்தல் அழித்தல் இவைகளுக்குக் காரணமோ, அப்படியே அன்னமும் மேற்கூறியவைகளுக்குக் காரணமாகையால் ப்ரம்மமென்று தியானிக்கக் குறையில்லை.

ப்ராணம் தேவா அநு ப்ராணந்தி | மநுஷ்யா: பஶவஶ்ச யே | ப்ராணோ ஹி பூதாநாமாயு: | தஸ்மாத் ஸர்வாயுஷமுச்யதே | ஸர்வமேவ த ஆயுர்யந்தி | யே ப்ராணம் ப்ரஹ்மோபாஸதே | ப்ராணோ ஹி பூதாநாமாயு: | தஸ்மாத் ஸர்வாயுஷமுச்யத இதி | தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய ||க||

தஸ்மாத்வா ஏதஸ்மாத் ப்ராணமயாத் | அந்யோऽந்தர ஆத்மா மநோமய: | தேநைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ | தஸ்ய புருஷவிததாம் | அந்வயம் புருஷவித: | தஸ்ய யஜுரேவ ஶிர: | ருக் தக்ஷிண:

पक्षः । सामोत्तरः पक्षः । आदेश आत्मा ॥२॥ अथर्वाङ्गिरसः
पुच्छं प्रतिष्ठा । तदप्येष श्लोको भवति॥ इति तृतीयोऽनुवाकः॥

ప్రాణం దేవా అను ప్రాణంతి । మనుష్యాః పశవశ్చ యే । ప్రాణో హి భూతానామాయుః । తస్మాత్సర్వాయుషముచ్యతే । సర్వమేవత ఆయుర్యంతి । యే ప్రాణం బ్రహ్మోపాసతే । ప్రాణో హి భూతానామాయుః । తస్మాత్సర్వాయుషముచ్యత ఇతి। తస్యైష ఏవ శారీర ఆత్మా । యః పూర్వస్య॥

తస్మాద్వా ఏతస్మాత్ప్రాణమయాత్ । అన్యోఽంతర ఆత్మా మనోమయః । తేనైష పూర్ణః । స వా ఏష పురుషవిధ ఏవ । తస్య పురుషవిధతాం । అన్వయం పురుషవిధః । తస్య యజురేవ శిరః । ఋగ్దక్షిణః పక్షః । సామోత్తరః పక్షః । ఆదేశ ఆత్మా ॥ అథర్వాంగిరసః పుచ్ఛం ప్రతిష్ఠా । తదప్యేష శ్లోకో భవతి॥

(ப - ம்.) देवाः-அக்நிமுதலிய தேவர்களும், ये-எந்த, मनुष्याः-மனிதர்களோ, पशवश्च-பசுக்களுமோ, (ते-அவர்கள்), प्राणं-ப்ராணவாயுவை अनुप्राणन्ति - அனுசரித்து ஜீவிக்கிறார்கள், हि - யாதொரு காரணத்தினாலே, प्राणः - பிராணனானது, भूतानां - பிராணிகளுக்கு, आयुः - ஆயுளோ, तस्मात् - ஆதலால், सर्वायुषं - எல்லார்க்குமாயுளாக, उच्यते - சொல்லப்படுகிறது. ये - எவர், प्राणं - ப்ராணவாயுவை, ब्रह्म - ப்ரம்மமாக, उपासते - தியானம் செய்கிறார்களோ, ते - அவர்கள், सर्वं - பூர்ணமான, आयुरेव - ஆயுளைத்தானே, यन्ति - அடைகிறார்கள், हि - யாதொரு காரணத்தாலே, प्राणः - ப்ராணனானது, भूतानां - ப்ராணிகளுக்கு, आयुः - ஆயுளோ, तस्मात् - ஆதலால், सर्वायुषं - எல்லார்க்குமாயுளென்று, उच्यते - சொல்லப்படுகிறது. इति - என்று, तस्य - அந்த ப்ராணனுக்கு, एषः - இந்த, शारीर एव - சரீரத்திலிருக்கும் ப்ராணன்தானே, आत्मा - ஆத்மா, यः - யாதொரு ஆத்மாவானது, पूर्वस्य - முன்னன்னமய ப்ரம்மத்திற்கோ, तस्माद्वा एतस्मात् प्राणमयात् - அந்த இந்த ப்ராணமயனைக் காட்டிலும், अन्यः - வேறுபட்ட, अन्तरः - உள்ளிருக்கும், आत्मा - ஆத்மாவானது, मनोमयः - மனது ரூபியானது, एषः - இந்த ப்ராணமயமானது, तेन - அந்தமனோமயனாலே, पूर्णः - நிறைந்தது. स वा एषः - அந்த இந்த மனோமயனவன், पुरुषविध एव - புருஷாக்ருதியுள்ளவன்தான், तस्य - அந்த ப்ராணமயனுடைய, पुरुषविधतां - புருஷாக்ருதியாயிருக்கும் தன்மையை, अनु - அனுஸரித்து, अयं - இந்த மனோமயனும், पुरुषविधः - புருஷாக்ருதியுள்ளவன், तस्य - அந்த மனோமயனுக்கு, यजुरेव - யசுர்வேதமே, शिरः - சிரசு, ऋक् - ருக்வேதமானது, दक्षिणः - வலது, पक्षः - பக்கம், साम - சாமவேதமானது, उत्तरः - இடது, पक्षः - பக்கம், आदेशः - வேதத்தின் ப்ராம்மணமென்கிற பாகமானது, आत्मा - ஆத்மா, अथर्वाङ्गिरसः - அதர்வர் என்றும் அங்கிரா என்றும் சொல்

லப்பட்ட இருஷிகளால் கண்டுபிடிக்கப்பட்ட அதர்வணவேதமானது, ப்ரதிஷ்டா - ஆதாரமான, புச்சம் - வால்-ததபி-மேற்கூறிய வர்த்தத்தில், ஏஷ:- இந்த, ஶ்லோக: - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(ஶ0 - ஹா.) இந்த அனுவாகத்தில் மேற்கூறிய ப்ராணமயனைக் காட்டிலும், நுட்பமான மனோமயனை ஆத்மாவாகச் சொல்லுகிறது. இந்த மனோமயனுக்கு சிரசு வலது பக்கம் இடது பக்கங்களை யசுர்வேதமாகவும் ருக்வேதமாகவும் சாமவேதமாகவும் சொல்லப்பட்டது. யசுஸ் முதலிய பெயர்கள் மந்திரங்களுக்கே யாதலாலும், மந்திரங்கள் மனதினாலேயே ஆவர்த்திக்கப்படவேண்டுமாகையாலும் அவைகள் மனோவிருத்திகள் என்பதுகொண்டு, ஆதலால் மனோவிருத்தியிலிருந்துகொண்டும் யசுஸ் முதலிய பெயர்களைப் பெற்றும், ஒருகாலத்திலும் அழிவில்லாமலும் உற்பத்தியில்லாமலும்,இருக்கிறது. ஆத்மா என்கிற சைதந்யம். இப்படி ஆத்மசைதந்யமே மனோவிருத்தியிலிருந்து, யசுஸ்முதலிய மந்திரங்களானதுகொண்டு வேதங்களை நித்தியமென்று சொல்லுகிறது. அப்படி வேதங்களை நித்தியமென்று சொல்லாவிடில், "ஸர்வேவேதாயத்ரைகம்பவந்திஸமாநஸீந ஆத்மா" என்றும் "ருசோஅக்ஷரேபரமேவ்யோமன்யஸ்மின்தேவாஅதிவிஸ்வாநிஷேது:" என்றும் நித்யமான ஆத்மாவோடு வேதங்களை ஒன்றாகச்சொல்லும் சுருதி விரோதிக்கும், இங்கு ஆதேசம் என்று சொல்லுவது கட்டளையிடவேண்டிய காரியங்களை எவுகிற வேதத்தின் ப்ராம்மணமென்கிற பாகத்தை.

(ரா-ஹா.) சிரம் முதலியதாகப் பேசப்பட்ட யசுஸ்முதலிய பதங்களுக்கு இங்கு யசுர்முதலிய வேதங்களின் அறிவுக்குக் காரணமாகிய மனதின் செய்கையைச் சொல்லுகிறது. இல்லாவிடில் யசுர்முதலிய வேதங்களுக்கும், மனதுக்கும் கிஞ்சித்தேனும் சம்பந்தமில்லாததால், மேற்கூறிய வேதங்களை சிரம் முதலியதாக ரூபிக்கவொண்ணாது. "ஆதேஶ:" என்பது இதைச்செய் இதைச்செய்யாதே என்கிற விதிவிலக்குகளுடைய அறிவுக்குக் காரணமான மனதின் செயலைச் சொல்லுகிறது. "அதர்வாங்கிரஸ:" என்கிற விடத்திலும் அதர்வணவேதத்தின் அறிவுக்குக் காரணமான மனதின் செயல் என்பது அர்த்தம்.

யதோ வாசோ நிவர்தந்தே | அப்ராப்ய மநஸா ஸஹ | ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் || ந பிபேதி கதாசநேதி | தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய | தஸ்மாத்வா ஏதஸ்மாந் மநோமயாத் | அந்யோऽந்தர ஆத்மா விஜ்ஞாநமய: | தேநைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ ||௩|| தஸ்ய புருஷவிததாம் | அந்வயம் புருஷவித: | தஸ்ய ஶ்ரத்தைவ ஶிர: | ருதம் தக்ஷிண: பக்ஷ: | ஸத்யமுத்தர: பக்ஷ: | யோக ஆத்மா | மஹ: புச்சம் ப்ரதிஷ்டா | ததப்யேஷ ஶ்லோகோ பவதி | இதி சதுர்தோऽநுவாக:

యతో వాచో నివర్తంతే । అప్రాప్య మనసా సహ । ఆనందం బ్రహ్మణో విద్వాన్ । న బిభేతి కదాచనేతి । తస్యైష ఏవ శారీర ఆత్మా । యః పూర్వస్య । తస్మాద్వా ఏతస్మాన్మనోమయాత్ । అన్యోంతర ఆత్మా విజ్ఞానమయః । తేనైష పూర్ణః । స వా ఏష పురుషవిధ ఏవ ॥ 3 ॥

తస్య పురుషవిధతాం అన్వయం పురుషవిధః । తస్య శ్రద్ధైవ శిరః । ఋతం దక్షిణః పక్షః । సత్య ముత్తరః పక్షః । యోగ ఆత్మా । మహః పుచ్ఛం ప్రతిష్ఠా । తదప్యేష శ్లోకో భవతి ॥ అను ॥ ४ ॥

(ப - ம்.) யத꞉ - யாதொன்றினிடத்தில், வாச꞉ - வாக்குக்களானவை கள், மனஸா ஸஹ - மனதுடன்கூட, அப்ராப்ய - முடிவையடையாமல், நிவர்தந்தே - திரும்புகிறதுகளோ, ப்ரஹ்மண꞉ - ப்ராம்மத்தினுடைய, ஆநந்தம் - ஆனந்தத்தை, வித்வான் - அறிந்தவன், கதாசந - ஒருக்காலும், ந பிபேதி - பயப்படுவதில்லை. இதி - என்று, தஸ்ய - அந்த ப்ராணமயனுக்கும், ஏஷ꞉ - இந்த, சாரீர ஏவ - சரீரத்திலிருக்கிற மனதுதானே, ஆத்மா - ஆத்மா, ய꞉ - யாதொன்றுனது, பூர்வஸ்ய - முன்கூறப்பட்ட பிராணமயனுக்கோ, தஸ்மாத்வா ஏதஸ்மாத் - அந்த இந்த, மனோமயாத்-மனோமயனைக் காட்டிலும், அன்ய꞉ - வேறுபட்ட, அந்தர꞉-உள்ளிருக்கிற, ஆத்மா - ஆத்மாவானது, விஜ்ஞானமய꞉ - நிச்சயரூபமான அறிவு, (ரூ) விஜ்ஞானமய꞉ - அறிவைக்காட்டிலும வேறுபட்ட ஜீவன், தேந-அந்த விஞ்ஞானமயனலே, ஏஷ꞉ - இந்த மனோமயன், பூர்ண꞉ - நிறைந்தவன், ஸவா ஏஷ꞉ - அந்த இந்த விஞ்ஞானமயனனவன், புருஷவித ஏவ - புருஷனுடையவுருவமுள்ளவன்தான், தஸ்ய - அந்த மனோமயனுடைய, புருஷவிததாம் - புருஷனுடைய உருவுள்ள தன்மையை, அநு - அனுஸரித்து, அயம், இந்த விஞ்ஞானமயனும்,புருஷவித꞉ - புருஷனுடைய உருவுள்ளவன்-தஸ்ய-அந்த விஞ்ஞானமயனுக்கு, ச்ரத்தைவ - சிரத்தைதானே, சிர꞉ - சிரம், ருதம் - மெய்யான சப்தமே, தக்ஷிண꞉ - வலது, பக்ஷ꞉ - பக்கம், ஸத்யம் - அர்த்தத்தின் மெய்யானது, உத்தர꞉ - இடது, பக்ஷ꞉ - பக்கம், யோக꞉ - சமாதானமானது, (ரூ) யோக꞉ ஓமித்யாத்மானம் யுஞ்ஜீத - என்று சொல்லப்பட்ட அறிவு, ஆத்மா - ஆத்மா, மஹ꞉ - மகாங் என்று சொல்லப்பட்ட தத்வமானது, (ரூ) மஹ꞉ - மேற்கூறிய யோகத்தின் விரோதிகளைத் தடுக்கும் சாமர்த்தியம், ப்ரதிஷ்டா - ஆதாரமான, புச்சம் - வால், தத் - அந்த வர்த்தத்தில், ஏஷ꞉ - இந்த, ச்லோகோபி - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(ஸ்ரீ - பா.) மனோமயனை ஆத்மாவை அறியவும் சொல்லவும் வேறொருமனது முதலியதில்லை யாதலாலும் தன்னைத்தானறிய நிலமில்லாமையாலும், மேற்கூறிய மனோமயனை வாக்குக்கும் மனதுக்கும் நிலமில்லாதவனென்று சொல்லுகிறது. மேற்கூறிய தியானத்திற்குப் பயனான ஆனந்தத்தை யறிகிறவன் கர்ப்பவாஸம் முதலிய துன்பங்களுக்கு பயப்படான் என்று சொல்லுகிறது. மனோமயனை ஆத்மா வேதங்களின் உருவுமென்று சொல்லப்பட்டதால், அந்தவேதங்களின் உண்மையான அறிவையே விஞ்ஞானமயமென்று சொல்லப்படுகிறது. அது மனதின் செயலானதால் மேல் இந்த விக்யானமே யக்யங்களைச் செய்கிறது என்று சொல்லப்போகிறது. வேதங்களின் பொருள்களை முடிவாக அறிந்து யக்யம்செய்யவேண்டுமென்பதை நினைத்து; இப்படி முடிவான அறிவுள்ளவனுக்கு ஒவ்வொரு காரியத்திலும் சிரத்தை முற்பட்டதாகையால் அதைச் சிரமாகவும் சமாதானமுள்ளவனுக்கு அங்கமாக சிரத்தையிருந்தால், உண்மையான பொருளை யறிய சக்தியுண்டாகுமாதலால், யோகமென்கிற சமாதனத்தை ஆத்மாவாகவும் மகான்

என்கிற தத்வமானது "மஹத்யக்ஷம்ப்ரதமஜம்வேத" என்று சுருதியில் சொல்லியபடி யே எல்லா அறிவுகளுக்கும் காரணமாகையால், தன்னிடத்திலுண்டான செடி மரம் முதலியவைகளுக்கு பூமி எவ்வண்ணமாக வாதாரமோ அவ்வண்ணமாக அதுவே ஆதார மாகையால் மகானே புச்சமாகச்சொல்லப்பட்டது.

(ரா - ஸா.) யாதொரு ப்ரத்தினுடைய ஆனந்தத்தில் நின்றும் வாக்கும் மனதும் இவ்வளவுதான் முடிவு என்கிற கரையை யடையாமல் திரும்பிவிடுகின்றன, அப்ப டிப்பட்ட ப்ரம்மத்தின் ஆனந்தத்தை, "துர்யதேத்வக்ரயயாபுத்தயா; மநஸாதுவிஶுத் தேந" என்கிறபடியே பரிசுத்தமான மனதினால் அறிந்தவன் ஒருகாலத்திலும் பயப்பட மாட்டான். இந்த ப்ரம்மானந்தத்தைப்பற்றியும் புகழ்ந்தபோலும் பரிசுத்தமான மனதா லறியவேண்டுமென்று சொல்லியிருத்தலால், மனோமயனைக் குறித்தும் சொல்லப்பட்ட தென்று கருத்து. அன்னமயன் ப்ராணமயன் மனோமயன் இம்மூன்றுகளுக்கும், ஆத்மா வொருவன் அவன்யார் என்றால் விஞ்ஞானமயன் என்று சொல்லப்பட்ட ஜீவன் (மய) என்கிற விகுதியிருத்தலால் அதின் பகுதியான அறிவையுடைகிறவனைக் காட்டுகிறது. அவன் ஜீவன் இங்கு அன்னமயன் தொடங்கி சொல்லப்பட்ட ஆத்மாக்களுக்கு அவைக ளின் அவயவங்களையே தலைமுதலிய உருப்புகளாக ரூபித்து விஞ்ஞானமயனுக்குமட்டில் அவனில் வேறுபட்ட சிரத்தை முதலியவைகளைச் சொல்வது கூடுமோவென்னில், சிர த்தை முதலிய பதங்களுக்கு அந்தந்த குணங்களையுடைய புருஷனே பொருளாதலால் விரோதமில்லை.

விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே | கர்மாணி தநுதேऽபி ச | விஜ்ஞாநம் தேவா: ஸர்வே | ப்ரஹ்ம ஜ்யேஷ்டமுபாஸதே | விஜ்ஞாநம் ப்ரஹ்ம சேத்வேத | தஸ்மாச்சேந்ந ப்ரமாத்யதி | ஶரீரே பாப்மநோ ஹித்வா | ஸர்வாந்காமாந்த்ஸமஶ்நுத இதி | தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய ||௧||

தஸ்மாத்வா ஏதஸ்மாத்விஜ்ஞாநமயாத் | அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்தமய: | தேநைஷ பூர்ண: | ஸ வா ஏஷ புருஷவித ஏவ | தஸ்ய புருஷவிததாம் | அந்வயம் புருஷவித: | தஸ்ய ப்ரியமேவ ஶிர: | மோதோ தக்ஷிண: பக்ஷ: | ப்ரமோத உத்தர: பக்ஷ: | ஆநந்த ஆத்மா ||௨|| ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா | ததப்யேஷ ஶ்லோகோ பவதி ||

విజ్ఞానం యజ్ఞం తనుతే। కర్మాణి తనుతేపి చ। విజ్ఞానం దేవాస్సర్వే। బ్రహ్మజ్యేష్ఠముపాసతే। విజ్ఞానం బ్రహ్మ చేద్వేద। తస్మాచ్చేన్న ప్రమాద్యతి। శరీరే పాప్మనో హిత్వా। సర్వాన్ కామాన్ సమశ్నుత ఇతి। తస్యైష ఏవ శారీర ఆత్మా। యః పూర్వస్య॥౧॥

తస్మాద్వా ఏతస్మాద్విజ్ఞానమయాత్। అన్యోంతర ఆత్మానందమయః। తేనైష పూర్ణః। స వా ఏష పురుషవిధ ఏవ। తస్య పురుషవిధతాం। అన్వయం పురుషవిధః। తస్య ప్రియమేవ శిరః। మోదో దక్షిణః పక్షః। ప్రమోద ఉత్తరః పక్షః। ఆనంద ఆత్మా॥ ౨॥ బ్రహ్మ పుచ్ఛం ప్రతిష్ఠా। తదప్యేష శ్లోకో భవతి॥

(ப - ம்.) விஜ்ஞாநம்-மேற்கூறிய முடிவான அறிவையுடையவன், (ரு) விஜ்ஞாநம் - ஜீவனானது, யஜ்ஞம் - யக்யத்தை, தநுதே - பண்ணுகிறது

கூ௯ாணி - காரியங்களை, தநுதேவிவ-செய்யவும் செய்கிறது. ஸவெ - எல்லா, ஜெவா - தேவர்களும், ஜெ்ஷ௦ - எல்லாக்காரியங்களுக்கும் முதன்மையான, விஜ்ஞாநம் - மேற்கூறிய அறிவையே, ஬்ரஹ்ம-ப்ரம்மமாக, உவாஸதெ - தியானம் செய்கிறார்கள், (௱௦) ஬்ரஹ்மஜெ்ஷ௦ - ப்ரம்மம் என்று சொல்லப்பட்ட ப்ரக்ருதியைக்காட்டிலும் முயர்ந்ததான, விஜ்ஞாநம் - ஜீவனை, உவாஸதெ - தியானம் செய்கிறார்கள், விஜ்ஞாநம்-விஞ்ஞானத்தை, ஬்ரஹ்ம-ப்ரம்மமாக, வெஜவெகு - அறிவானே யானால், தஸாக - அந்த தியானத்தில் நின்றும், நப்ரமாஷ்ரதிவெக - பிசகாமலிருப்பனேயானால், ஶரீரெ - உடலில், வாவநா - பாவங்களை, ஹிக்வா - விட்டு, (௱௦) ஶரீரெ - உடலானது, (வதந்ரா நவனவ - இருக்கும் காலத்திலேயே), வாவநா - பாவங்களை, ஹிக்வா - விட்டு, ஸவாந் - எல்லா, காராநு - சுகங்களை, ஸமூஙதெ - அனுபவிக்கிறான், உதி - என்று, தஸ் - அந்த விக்யானமயனுக்கு, வஷ - இந்த வானந்தமயன்தானே, ஶாரீர - சரீரத்தினுண்டான, ஆத்மா - ஆத்மா, ய - யாதொருவன், வூவஸ் - முன் விஞ்ஞானமயனுக்கு ஆத்மாவோ, தஸாகவாவன தஸாக - அந்த இந்த, விஜ்ஞாநயாக - விக்யானமயனைக் காட்டிலும், கநா - வேறுபட்ட, கஜர - உள்ளிருக்கிற, ஆத்மா - ஆத்மாவானவன், ஆநந்த - ஆனந்தமயனென்று பெயர் கொண்டவன், தெந - அந்த வானந்தமயனாலே, வஷ - இந்த விக்யானமயன், வூண - நிறைந்தவன், ஸவாவஷ - அந்த இந்த வானந்தமயனும், வுரூஷவிய வனவ - புருஷனுருவமுள்ளவன்தான், தஸ் - அந்த விஞ்ஞானமயனுடைய, வுரூஷவிய தா௦ - புருஷனுருவமுள்ள தன்மையை, கநு - அனுஸரித்து, கய௦-இந்த வானந்தமயனும், வுரூஷவிய - புருஷனுருவமுள்ளவன், தஸ் - அந்த வானந்தமயனுக்கு, ப்ரியமெவ - இஷ்டவஸ்துக்களைப் பார்க்கிறதாலுண்டான சுகமே, ஶிர - தலை, மொஉ-அதை யடைவதாலுண்டான சுகம், உக்ஷிண - வலது, வக்ஷ - பக்கம், ப்ரமொஉ - மேற்கூறியப் பிரியவஸ்துவை இஷ்டப்படி யுபயோகப்படுத்துவதாலுண்டான சுகம், உத்தர - இடது, வக்ஷ - பக்கம், ஆநந்த - மிகுந்த சுகமானது, ஆத்மா - நடுவுடல், ஬்ரஹ்ம - ப்ரம்மமானது, ப்ரதிஷா-ஆதாரமான, வுஹ௦ - வால், தக - அந்த வர்த்தத்தில், வஷ - இந்த, ஶ்லொகொ - சுலோகமும், ஸவதி - இருக்கிறது.

(ஶ௦ - ஹா.) எல்லா மனிதர்களும் எல்லாக் காரியங்களை முற்படவறிந்து சிரத்தையுண்டாய் பிறகு செய்கிறார்களாகையால், எல்லாக் காரியங்களுக்கும் அறிவே முதன்மையான காரணம். ஆகையால் ஞானத்தையே ப்ரம்மமாக எவன் தியானிக்கிறானோ. அந்த அறிவைவிட அன்னமயாதிகளில் ஆத்மாவென்கிற அறிவைச் செலுத்தாமலிருக்கிறானோ அவன் தலையில் பிடித்த குடையை எடுத்தால் அதின் நிழல் தன்னடியே நீங்கு

வதுபோல், சரீரமே ஆத்மாவென்கிற எண்ணம் நீங்கினபடியால் அதிலுண்டான பாவம் தானே நீங்கி அந்த பாவங்களைச் சரீரத்திலேயேவிட்டு ஞானமயமான ப்ரம்மத்தோடொன்றாய் எல்லா சுகங்களையுமனுபவிக்கிறான். அந்த விஞ்ஞானமயனை ஆத்மாவைக் காட்டிலும், உள்ளிருக்கிறவன் ஆனந்தமயன் என்று பெயர்கொண்ட ஆத்மா இங்கு ஆனந்தமயனென்றது ப்ரம்மத்தையன்று. ஏனெனில் (மய) என்கிற விகுதியிருத்தலால் அந்த விகுதியும் ஒன்றிலிருந்து உண்டானதை (அன்னமய) என்கிற இடத்தில் அன்னத்திலிருந்துண்டான சரீரத்தைச் சொல்வதுபோல் சொல்லுமாதலாலும், "ஆநந்தமயமாத்மாநமுபஸம்க்ராமதி" என்று மேல் ஆத்மாவினால் அடையவேண்டியதாகச் சொல்லுகையால் ப்ரம்மம் எல்லாவிடத்திலும் நிறைந்ததாதலால் அடையவேண்டிய ஆத்மாவோடொன்றாகையால் அடையவேண்டியதாகாமையாலும், "அதுஸ்யேஅநாமயேஅநிருக்தே ; அஸ்தூலமநணு" என்கிற சுருதிகளால் அவயவமில்லையென்று ஏற்படுவதால் இங்கு தலை முதலிய உருவங்கள் சொல்லி யிருத்தலாலும், "ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா" என்று ப்ரம்மத்தைத் தனியாக மேற்கூறிய ஆனந்தமயனுக்கு ஆதாரமாகச் சொல்லுதலாலும், இங்கு ஆனந்தமயனென்பது. மேற்கூறிய தியானங்களினாலும் கர்மங்களினாலும் உண்டான பயன்களை அனுபவிக்கும்போது உண்டான சுகத்தைச் சொல்லுகிறது. மேற்கூறிய சுகங்களுக்காகவே கர்மங்களும் தியானங்களும் செய்யப்படுதலால்,மேற்கூறிய விஞ்ஞானமயனுக்கு ஆனந்தமயன் ஆத்மாவென்பது நியாயமே. மேற்கூறிய ஆனந்தங்களுக்கு அவித்தையால் செய்யப்பட்ட பேதங்களுக்கெல்லாம் கடைசியாய் அத்வைதமான ப்ரம்மமே ஆதாரம்.

(ரா-ஹா.) இங்கு விஞ்ஞானமென்று சொன்னது முன்னனுவாகத்தில் விஞ்ஞானமயனென்று சொல்லப்பட்ட ஜீவனையே ஆத்மாவின் ஸ்வரூபம் தனக்குத்தானே விளங்குகிறதாதலால் ஞானமென்றே சொல்லவேண்டியது. மேலும், "அத்யல்லயுடோபஹுளம்" என்கிற வியாகரண சூத்திரத்தின்படியே அறிகிறவன் என்கிற பொருளையும், (விஞ்ஞாநம்) என்கிற பதமானது கொடுக்கும் மேற்கூறிய பதம் அறிவு என்கிற வர்த்தத்தைத் தருமாகில், "யஞ்ஞாம்தநுதே கர்மாணிதநுதேபிச" என்று உலக நடவடிக்கைகளையும் யக்யம் முதலிய வேதத்தில் ஓதப்பட்ட காரியங்களையும் செய்கிறது என்கிறது விரோதிக்கும் அந்தர்யாமி ப்ராம்மணத்தில் மாத்தியந்தின பாடத்தில், "யஆத்மநிதிஷ்டன்" என்று சொல்லியிருக்கிறது. காண்வபாடத்தில் அதேயாத்மாவைச் சொல்லவேண்டிய விடத்தில், "யோவிஞ்ஞாநேதிஷ்டன்" என்று சொல்லியிருக்கிறது. ஆகையால், "விஞ்ஞாந" என்பது ஆத்மாவைச் சொல்லுகிறது. ப்ரகிருதியைக்காட்டிலு முயர்ந்த ஜீவனை எவன் ப்ரசாபதிவாக்யத்தில் சொல்லியிருக்கிறபடி ஜீவனை ப்ரம்மமாக தியானம் செய்கிறானோ,எவன் அந்ததியானத்தில்நின்றும் கடைசிவரையில் நழுவாமலிருக்கிறானோ, அவன் இந்த சரீரமிருக்கிற காலத்திலேயே முன்செய்த பாவங்களை தன்னைவிட்டு நீக்கி பின் செய்யப்புகுகிற பாவங்களையும் தன்னிலொட்டாமற் செய்து எல்லா சுகங்களையுமனுபவிக்கிறான். அந்த ஆத்மாவுக்கு முள்ளிருக்குமது வானந்தமயன் என்று சொல்லப்பட்ட ப்ரம்மம் இங்கு ஆனந்தத்தை நடுவுடலாகவும், ப்ரம்மத்தைப் புச்சமாகவும் பிரித்துச் சொல்லியிருக்கிறபடியால், ஆனந்தமே ப்ரம்மமென்று சொல்லதெப்படியெனில்; ப்ரம்மமும் ஆனந்தமும் ஒன்றாயிருந்தபோதிலும்,ப்ரம்மமே ஆனந்தமென்று பெயர்கொண்டதாய் நடுவுடலாகவும், ப்ரம்மமென்று பெயர்கொண்டதாய் புச்சமாகவுமிருக்கக் குறையில்லை. ப்ரம்மம் ஆனந்தமாகில் ஆனந்தமயனென்று ஆனந்தத்தால் வியாபரிக்கப்பட்டவனென்று சொல்லக் கூடுமோவென்னில், மேல் தலை முதலிய அவயவங்களாக ரூபிக்கப்பட்ட ப்ரியம் முதலிய உட்பிரிவுகளால் வியாபரிக்கப்பட்டவன் என்று சொல்லக் குறையில்லை. மேலும், "ப்ரம்மவிதாப்நோதிபரம்" என்று தொடங்கி கடைசியில்,

''ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா'' என்று ப்ரம்மத்தை அவயவமாக எடுத்தபடியால் ப்ரம்மமே ஆனந்தமயனென்று ஏற்படுகிறது.

அஸந்நேவ ஸ ப⁴வதி | அஸத்³ப்³ரஹ்மேதி வேத³ சேத் | அஸ்தி ப்³ரஹ்மேதி சேத்³வேத³ | ஸந்தமேநம் ததோ விது³ரிதி | தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா | ய: பூர்வஸ்ய | அதா²தோ(அ)நுப்ரஶ்நா: | உதாவித்³வாநமும் லோகம் ப்ரேத்ய | கஶ்சந க³ச்ச²தீ | ஆஹோ வித்³வாநமும் லோகம் ப்ரேத்ய ||க|| கஶ்சித்ஸமஶ்நுதா ||௨||௫||

ஸோ(அ)காமயத | ப³ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி | ஸ தபோ(அ)தப்யத | ஸ தபஸ்தப்த்வா | இத³ம் ஸர்வமஸ்ருஜத | யதி³த³ம் கிஞ்ச | தத்ஸ்ருஷ்ட்வா | ததே³வாநுப்ராவிஶத் | தத³நுப்ரவிஶ்ய |௨|| ஸச்ச த்யச்சாப⁴வத் | நிருக்தம் சாநிருக்தம் ச | நிலயநம் சாநிலயநம் ச | விஜ்ஞாநம் சாவிஜ்ஞாநம் ச | ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமப⁴வத் | யதி³த³ம் கிஞ்ச | தத்ஸத்யமித்யாசக்ஷதே | தத³ப்யேஷ ஶ்லோகோ ப⁴வதி | இதி ஷஷ்டோ(அ)நுவாக: ||

అసన్నేవసభవతి । అసద్బ్రహ్మేతివేదచేత్ । అస్తిబ్రంహేతిచేద్వేద । సంతమేనంతతో విదురితి । తస్యైషఏవశారీరఆత్మా । యఃపూర్వస్య । అథాతోఽనుప్రశ్నాః । ఉతావిద్వానముంలోకం ప్రేత్య । కశ్చనగచ్ఛతి । అహోవిద్వానముంలోకంప్రేత్య ॥౧॥ కశ్చిత్సమశ్నుతా॥ 3॥

౬॥ సోఽకామయత । బహుస్స్యాంప్రజాయేయేతి । సతపోఽతప్యత । సతపస్తప్త్వా । ఇదగ్ సర్వమసృజత । యదిదంకించ । తత్సృష్ట్వా । తదేవానుప్రావిశత్ । తదనుప్రవిశ్య । సచ్చత్యచ్చాభవత్ । నిరుక్తంచానిరుక్తంచ । నిలయనంచానిలయనంచ । విజ్ఞానంచావిజ్ఞానంచ । సత్యంచానృతంచసత్యమభవత్ । యదిదంకించ । తత్సత్యమిత్యాచక్షతే । తదప్యేషశ్లోకోభవతి॥ అను॥ ౬॥

(ப-ம்.) ப்³ரஹ்ம - ப்ரம்மமானது, அஸத் - இல்லை, இதி - என்று, வேத³ சேத் - அறிகிறானேயானல், ஸ: - அவன், அஸந் ஏவ - இல்லாதவனாகத்தானே, ப⁴வதி - ஆகிறான், ப்³ரஹ்ம - ப்ரம்மமானது, அஸ்தி - இருக்கிறது. இதி - என்று, வேத³ சேத் - அறிகிறானேயானல், ஏநம் - இவனை, தத: - அந்தகாரணத்தால், ஸந்தம் - இருக்கிறவனாக, விது³: - அறிகிறார்கள், இதி - என்று, அதை ஶ்லோக: - என்பதில் சேர்க்கவும், தஸ்ய - அந்த விஞ்ஞானமயனுக்கு, ஏஷ ஏவ - இந்த ஆனந்தமயன்தானே, ஶாரீர: - சரீரத்திலிருக்கிற; ஆத்மா - ஆத்மா, ய: - எவன், பூர்வஸ்ய - மேல்கூறிய விஞ்ஞானமயனுக்கோ, அத² - பிறகு, அத: - ப்ரம்மம் எல்லா வியவஹாரத்தையும் தாண்டினதென்கிற காரணத்தால், அநு - ஆசிரியன் சொன்னதற்குப் பிறகு, ப்ரஶ்நா: - சிஷனுடைய கேள்விகள், உத அவித்³வாந் - மேற்கூறிய ப்ரம்மத்தை யறியாதவனும், அமும் - இந்த, லோகம் - ப்ரம்மத்தை, ப்ரேத்ய - இவ்விடத்தில் நின்றும்போய், க³ச்ச²தி - அடைகிறனு; ஆஹோ - இல்லா

விட்டால், விதாந் - அறிந்தவன், ப்ரேத்ய - இவ்விடத்திலும் நின்றும் போய், அமும் - இந்த, லோகம் - ப்ரம்மத்தை, ஸமஶ்நுதம் - அடைகிறுஞு, (வா) விதாந் - மேற்கூறிய ப்ரம்மத்தை தியானம் செய்கிறவன், (உத: - இவ்விடத்தில் நின்றும்), ப்ரேத்ய - போய், அமும் - அந்த, லோகம் - பரம பதத்தை, ஸமஶ்நுதி - அடைகிறுஞு, ஆஹோ - இல்லாவிடில், விதாந் - மேற்கூறிய ப்ரம்மத்தைத் தியானம்செய்கிறவன், (உத: - இவ்விடத்திலிருந்து), ப்ரேத்ய - போய், அமும் - அந்த, லோகம் - ப்ரம்மத்தை, ஸமஶ்நுதாம் - அனுபவிக்கிறுஞு, ஸ: - அந்த பரமாத்மாவானவன், பஹு - அநேகமாக, ஸ்யாம் - ஆகக்கடவேன், ப்ரஜாயேய - உண்டாகக்கடவேன், இதி - என்று, அகாமயத - இச்சித்தது, ஸ: - அந்த பரமாத்மாவானவன், தப: - ஆலோசனையை, அதப்யத - பண்ணிஞன், ஸ: - அந்த பரமாத்மாவானவன், தப: - ஆலோசனையை, தப்த்வா - செய்து, இதம் - இந்த, ஸர்வம் - எல்லாத்தையும், அஸ்ருஜத - ஸ்ருஷ்டித்தான், இதம் - இந்த, யத்கிம்ச - எதுவெதுவோ, தத் - அதை, ஸ்ருஷ்ட்வா - படைத்து, ததேவ - அதையே, அநுப்ராவிஶத் - உள் நுழைந்தது, தத் - அத்தை, அநுப்ரவிஶ்ய - உள் நுழைந்து, ஸத் - உருவமுள்ள வஸ்துக்களாயும், த்யத் - உருவமில்லாத வஸ்துக்களாயும், அபவத் - ஆச்சுது, நிருக்தம் - பெயரிடப்பட்ட வஸ்துக்களாயும், அநிருக்தம் - பெயரில்லாத வஸ்துக்களாயும், நிலயநம் - ஒன்றுக்காதாரமான வஸ்துவாயும், அநிலயநம் - ஒன்றுக்காதாரமில்லாத வஸ்துவாயும், விஜ்ஞானம் - அறிவுள்ள வஸ்துவாகவும், அவிஜ்ஞானம் - அறிவில்லாத வஸ்துவாகவும், ஸத்யம் - வியவகாரதசையில் சத்தியமென்று சொல்லப்பட்ட பொருளாகவும், அந்ருதம் - வியவகாரதசையில் பொய்யான பொருளாகவும் ஸத்யம் சத்தியமான ப்ரம்மமானது, அபவத் - ஆச்சுது, இதம் - இந்த, யத்கிம்ச - எதுவெதுவோ, தத் - அந்தப் பொருள்களை, ஸத்யம் இதி - சத்தியம் ஒன்றே, ஆசக்ஷதே - சொல்லுகிறார்கள், தத் - அந்த வர்த்தத்தில், அபி ஏஷ: - இந்த, ஶ்லோக: - சுலோகமும், பவதி - இருக்கிறது. (வா) ஸத் - எப்பொழுதுமொரேரூபமாயிருக்கிற ஜீவனுகவும், த்யத் - எப்பொழுதும் மாறிமாறிவருகிற வஸ்துவாகவும், நிருக்தம் - அவ்வவைகளின் சாதி தொழில் குணம் இவைகளால் ஏற்பட்ட பெயரையுடைய வஸ்துவாகவும், அநிருக்தம் - மேற்கூறிய சாதி தொழில் குணம் இவைகளில்லாமையால் அப்பெயர்களால் சொல்லப்படா ஆத்மாவாகவும் நிலயநம் - ஒன்றை ஆதாரமாக வடைந்திருக்கிற வஸ்துக்களும், அநிலயநம் - தாஸ்ரிதராத்ரா: ப்ரஜாராத்ரவஷட்கா: - என்று சொல்லியிருக்கிறபடி அறிவில்லாத வஸ்துக்களுக்காதாரமான ஜீவனுகவும், விஜ்ஞா

நஞ்ச - தானே ப்ரகாசிக்கும் தன்மையுடைய வஸ்துவாகவும், சாவிஜ்ஞாநஞ்ச- பிறர்க்கு வேறொன்றினால் தோற்றும் பொருளாகவும், ஸத்யஞ்ச - விகார மில்லாத வஸ்துவாகவும், சாந்ருதஞ்ச - விகாரமுடைய வஸ்துவாகவும், சாப வத் - ஆயிருந்தபோதிலும், ஸத்யம் - தானெப்பொழுதும் விகாரமில்லாத மில்லாத உருவத்தோடு கூடினதாக, சாபவத் - ஆச்சுது, இதம் - இந்த, யத் கிஞ்ச - எதுவெதுவோ, தத் - அதை, ஸத்யம் - ப்ரம்மத்தின் சரீரமென் றே, ஆசக்ஷதே - சொல்லுகிறார்கள்.

(ஸ0 - ஹா.) ப்ரம்மமில்லை யென்றறிந்தவனுக்குப் பயனென்றுமில்லை யாதலால் அவனிருந்து மில்லாததற்குச் சரியானவன் ப்ரம்மமுண்டென்றறிந்தவன் எல்லாப் பய னையுமடைவானாதலால், அவனே இருப்பையுடையவன்மேலும் ப்ரம்த்வமுண்டென்றறிந் தால் ப்ரம்மத்தையுள்ளபடி யறிவதற்குறிய வர்ணம் ஆசிரமம் இவைகளின் கர்மங்களை செய்யாமையால் அவன் கெட்டவன். ப்ரம்மமுண்டென்று அறிந்தவனே அதையுள்ள படி அறிவதற்குறிய மேற்கூறிய வர்ணாதிகளின் கர்மங்களை செய்கிறானதால் அவன் நல்லவன். இதற்குமேல் சிஷ்யனுடைய கேள்விகள்: அவைகளாவன. ப்ரம்மம் அறிந்தவனு க்கும் அதையறியாதவனுக்கும் பொதுவாகையால் இவரிருவர்களும் ப்ரம்மத்தை யடை கிறார்களா? இல்லையா? என்பது இதில், "அஸத்ப்ரம்மேதிவேதசேத்; அஸ்திப்ரம்மேதி சேத்வேத" ப்ரம்மம் இல்லையென்றுணர்ந்தானே யாகில் ப்ரம்மமுண்டென்றுணர்ந்தா னே யாகில் என்றிரண்டையும் சொல்லியிருக்கிறதே அதில் ப்ரம்மம் உண்டென்பது மெய்யா? அல்லது இல்லையென்பது; மெய்யா? என்பது முதன்மையான சந்தேகம் இவற் றில் ப்ரம்மமில்லை யென்பதே மெய். ஏனெனில் எதுவுலகத்திலிருச்கிறதோ அது உலக த்தாருக்கு செம்மையாய்த் தெரிந்திருக்கும் எப்படியெனில் வீடு மரம் குன்று இவைகள் உளதாகையாலுலகத்தாருக்கு செம்மையாய்த் தெரிந்திருக்கிறது. முயலின் கொம்போ வென்றால் அவ்வஸ்து வில்லாமையாலொருவருச்கும் தெரியவில்லை. அப்படியே ப்ரம்ம மும், "யத்ததத்ரேஶ்யமக்ராஹ்ய" மென்கிறபடியே உலகத்தாராலறியக் கூடாமையா லில்லையென்றே சொல்லக்கூடும். என்பதற்குமேல் சமாதானம் சொல்லப்படுகிறது. ப்ரம்மமுண்டென்பதே மெய். ஆகாயம் முதலிய எல்லாப்பொருள்களுக்கும் காரணமா யிருத்தலால், எதுகாரணமோ அதுதானிருந்தே தன்காரியத்தை யுண்டுபண்ணும், அதெ ப்படியெனில், மண் விதை முதலிய வஸ்துக்கள், குடம் மரம் முதலிய காரியங்களைத் தானிருந்தே யுண்டாக்கின்றன. அம்மாதிரியே ப்ரம்மமும் தானிருந்துதான் ஆகாயம் முதலிய காரியங்களைச் செய்திருக்கவேண்டும். ஆதலால் தான், "கதமஸதஸ்ஸஞ்ஞா யேத" என்று சுருதியில் சொல்லியிருக்கிறது. ஆனால் மண் விதை இவைகளைப்போல் ப்ரம்மமும் காரணமென்றுரைத்தால் அவைகளைப்போல அதுக்கு அறியுந்தன்மையில்லா திருக்கவேண்டாவோ வென்னில், "ஸோகாமயத" என்றுரைசைப்படுகிற தென்று சொல் லியிருக்கிறபடியால் ஆசைப்படுவதற்கு அறிவு அவசியமிருக்கவேண்டுமாதலாலும், அப்ர ம்மத்திற்கு அறியுந்தன்மையுண்டென்றே சொல்லவேண்டும் ப்ரம்மம் அவயவமில்லாத தாகையால் தானே அனேகங்களாக ஆய்விட்டதென்று சொல்லுவது கூடுமோவென் னில், ஆகாயம் அவயவமில்லாதிருந்தபோதிலும், குடத்தில் அடங்கிய ஆகாயமென்றும், வீட்டில் அடங்கிய ஆகாயமென்றும், தனித்தனியே பிரிந்து தோன்றி சிறியது பெரியது வென்று எப்படி வியவகாரமுண்டாகிறதோ, அப்படியே ப்ரம்மத்திற்கும் வேறு வஸ்துக் களின் சம்பந்தத்தால் பேதங்கள் புலப்படுகின்றன. ஆகையால் ஒன்றையே பலவாக

யாகப் பிரித்துச்சொல்லுகைகூடும். ப்ரம்மமிவ்வுலகத்திலெல்லா வஸ்துக்களையும் படைத்து அவற்றுள் தானுழைந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறதே, அதெப்படி மண் தானே குடமாயின பிறகு அதற்குள் தானெப்படி நுழையும் தானே தன் வாய்க்குள் கையை நுழைப்பதுபோல் தானான காரியத்தில் தானே நுழைந்ததென்னில், ப்ரம்மத்திற்கு அவயவங்களில்லாமையாலும், ப்ரம்மம் தான் வியாபரிக்காத விடமில்லாமையாலும், அது சரியல்ல ஜலத்தில் சூரியன் ப்ரதிபலிப்பதுபோல் தோற்றுகிறதென்னில், ப்ரம்மம் உலகமெல்லாம் நிறைந்தபொருளாகையாலும், உருவமில்லாததாகையாலும், சூரியனைப் போல் ப்ரதிபலிக்கிறதென்று சொல்லவொண்ணாது. ஆகையால் தன்காரியத்தில் தான் நுழைந்ததென்ப தெப்படியெனில், "ஸத்யம்ஞ்ஞானமநந்தம்ப்ரம்ம ; யோவேதநிஹிதம் குஹாயாம்" என்று அறிவென்கிற குகையிலிருப்பதாகப் பொதுப்படச்சொல்லி பிறகு அன்னமயன் முதலாக உள்ளிருக்கும் ஆத்மாக்களை விஞ்ஞானமயன் அளவாக விவரித்துச்சொல்லி அதன் பிறகு, "ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா" என்று சொல்லி அறிவாகிற விஞ்ஞானமயனுக்குள் ப்ரம்மமிருப்பதாகக் கடைசியாய்ச் சொல்லியிருத்தலால், இங்கும் அந்த அறிவிலிருப்பதையே உள்நுழைந்திருப்பதாகச் சொல்லுகிறது. அதாவது ப்ரம்மமெல்லாவிடத்திலும் நிறைந்திருந்தபோதிலும், அந்த ப்ரம்மத்தை யறியுமிடம் மேற்கூறிய அறிவென்கிற குகையே ஆதலால் அதில் நுழைந்திருப்பதாகச் சொல்லுகிறது.

(ரா - ஹா.) "ப்ரம்மபுச்சம்ப்ரதிஷ்டா" என்று கீழ்ச்சொல்லி பிறகு, "அஸந்நேவஸபவதி" என்கிற விடத்தில் ப்ரம்மத்தையே சொல்லுகிறபடியால் கீழ் அன்னமயன் முதலான விடங்களில், அன்னம் பிராணன் என்று ஆரம்பித்துச் சொல்லுகிற வண்ணமாக இங்கும் ஆநந்தமயனையே ப்ரம்மமாகச் சொல்லியதையே ஆரம்பித்தலால், ஆநந்தமயமே ப்ரம்மமென்று சொன்னதாயிற்று. இந்த ஆநந்தமயனுக்குள் வேறு ஆத்மா கிடையாது. இவனே அன்னமயன் முதலிய ஆத்மாக்களுக்கும் ஆத்மாவாகயிருப்பவன் என்பது ப்ரம்மத்தை இவனவயவமாகச் சொல்லியிருத்தலாலும், முன்னாத்மாக்களைப் போல், "தஸ்மாத்வாஏதஸ்மாதந்யோந்தரஆத்மா" என்று ஆரம்பிக்காமல் முடித்தலாலும் தோற்றுகிறது. இங்கு, "ப்ரம்மவிதாப்னோதிபரம்" என்கிற விடத்தில் சொல்லியிருக்கிற அடைதலை விவரிக்கிறதற்கு கேள்விகள் கேட்கப்படுகின்றன. அவைகளாவன, ப்ரம்மத்தைத் தியானம் செய்கிறவன், இந்த உலகத்திலிருந்தும்போய் பரமபதமென்கிற விடத்தையடைந்து ப்ரம்மத்தையடைகிறானா? அல்லது இவ்விடத்திலேயே அதையடைகிறானா? ப்ரம்மத்தை யனுபவிக்கிறானா? ப்ரம்மத்துடனொன்றாகிறானா என்பவைகள். இவைகளுக்கு விடைகொடுக்க உலகங்களைப் படைப்பதற்குறிய குணங்களோடுகூடிய ப்ரம்மத்தை யடையவேண்டுமென்று சொல்லுவதற்காக முற்படவதின் படைப்பைச் சொல்லுகிறது. மேற்கூறிய பரமாத்மாதேவர் மனிதர் முதலியவர்களாக ஆகவேண்டிய ஆகாயம் முதலிய பூதங்களாக சனிக்கக்கடவேனென்று இச்சித்து அவைகளைப் படைத்து அவைகளுக்குள் தானும் நுழைந்தது. அதாவது, தான் எல்லா விடத்திலும் நிறைந்திருந்தபோதிலும் ஒவ்வொரு பொருள்களின் உள்ளிருக்கும் தன் ஸ்வரூபமே எல்லா குணங்களையும் சக்திகளையு முள்ளதென்றெண்ணும்படி அவைகளுக்குள் பொருந்தியவைகளுக்குள்ள ஆத்மாவாக நின்றது. இத்தால், "ஸத்யம்ஞ்ஞானமநந்தம்ப்ரம்ம ; யோவேதநிஹிதம்குஹாயாம்" என்றதின் பொருள் விவரிக்கப்பட்டது. ஆதலால் எல்லாவற்றிற்கும் ப்ரம்மமே ஆத்மாவாயிருந்தபடியால், அப்படி ஆத்மாவாக விருந்தபோதிலும், அவைகளுக்குள் விகாரங்களால் சம்பந்தப்படாமலிருந்தமையாலும், ஸத்யமென்று பெயர்கொண்டது. ஆதலால் தான் பராசாரமுதலிய விருஷிகள், "ஹரேர்நகிஞ்சித்வ்யதிரிக்தமஸ்தி ; ஜ்யோதிம்ஷிவிஷ்ணுர்புவநாநிவிஷ்ணு:" என்று சொல்லியிருக்கிறார்கள்.

𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍 । 𑌤𑌤𑍋 𑌵𑍈 𑌸𑌦𑌜𑌾𑌯𑌤 । 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌯𑌮𑌕𑍁𑌰𑍁𑌤 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌤𑍍𑌸𑍁𑌕𑍃𑌤𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 𑌇𑌤𑌿 । 𑌯𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 । 𑌰𑌸𑍋 𑌵𑍈 𑌸𑌃 । 𑌰𑌸𑌂 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌯𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾𑌽𑌽𑌨𑌨𑍍𑌦𑍀 𑌭𑌵𑌤𑌿 । 𑌕𑍋 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌯𑌦𑍇𑌷 𑌆𑌕𑌾𑌶 𑌆𑌨𑌨𑍍𑌦𑍋 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌏𑌷 𑌹𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑌾𑌤𑌿 ॥௧॥

𑌯𑌦𑌾 𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷 𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌦𑍃𑌶𑍍𑌯𑍇𑌽𑌨𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑍇𑌽𑌨𑌿𑌰𑍁𑌕𑍍𑌤𑍇𑌽𑌨𑌿𑌲𑌯𑌨𑍇𑌽𑌭𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌂 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇 । 𑌅𑌥 𑌸𑍋𑌽𑌭𑌯𑌂 𑌗𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑌦𑌾 𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷 𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁𑌦𑌰𑌮𑌨𑍍𑌤𑌰𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 । 𑌅𑌥 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌵 𑌭𑌯𑌂 𑌵𑌿𑌦𑍁𑌷𑍋𑌽𑌮𑌨𑍍𑌵𑌾𑌨𑌸𑍍𑌯 । 𑌤𑌦𑌪𑍍𑌯𑍇𑌷 𑌶𑍍𑌲𑍋𑌕𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥

అసద్వా ఇదమగ్ర ఆసీత్ । తతో వై సదజాయత । తదాత్మానగ్ం స్వయమకురుత । తస్మాత్తత్సుకృతముచ్యత ఇతి । యద్వై తత్సుకృతం । రసో వై సః । రసగ్ం హ్యేవాయం లబ్ధ్వాఽఽనందీ భవతి । కో హ్యేవాన్యాత్కః ప్రాణ్యాత్ । యదేష ఆకాశ ఆనందో న స్యాత్ । ఏష హ్యేవానందయాతి ॥౧॥

యదా హ్యేవైష ఏతస్మిన్నదృశ్యేఽనాత్మ్యేఽనిరుక్తేఽనిలయనేఽభయం ప్రతిష్ఠాం విందతే । అథ సోఽభయం గతో భవతి । యదా హ్యేవైష ఏతస్మిన్నుదరమంతరం కురుతే । అథ తస్య భయం భవతి । తత్త్వేవ భయం విదుషోఽమన్వానస్య । తదప్యేష శ్లోకో భవతి ॥

(ப - ம்.) 𑌇𑌦𑌂 - இவ்வுலகமானது, 𑌅𑌗𑍍𑌰𑍇 - படைப்புக்கு முற்காலத்தில், 𑌅𑌸𑌦𑍍 - பெயர் உருவமில்லாததாக, 𑌆𑌸𑍀𑌤𑍍 - இருந்தது, 𑌤𑌤𑍋 𑌵𑍈 - பிறகு தான், 𑌸𑌤𑍍 - பெயர் உருவமுள்ளதாக, 𑌅𑌜𑌾𑌯𑌤 - ஆச்சுது. 𑌤𑌤𑍍 - அந்த ப்ரம்மமானது, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 - தன்னை, 𑌸𑍍𑌵𑌯𑌂 - தான், 𑌅𑌕𑍁𑌰𑍁𑌤 - எண்ணித்து, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - ஆகையால், 𑌤𑌤𑍍 - அந்த ப்ரம்மமானது, 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 - தானே செய்கிறதென்று அல்லது புண்ணியமென்று, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. 𑌇𑌤𑌿 - என்று, இதை (𑌶𑍍𑌲𑍋𑌕𑌃) என்பதுடன் சேர்த்துக்கொள்ளுக, 𑌯𑌦𑍍𑌵𑍈 𑌤𑌤𑍍 - யாதொரு இந்த ப்ரம்மமானது, 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 - சுகுர்தமென்று சொல்லப்பட்டதோ, 𑌸𑌃 - அதுவானது, 𑌰𑌸𑌃 - உருசி, (𑌰𑌂) 𑌰𑌸𑌃 - ஆனந்தம், 𑌅𑌯𑌂 - இந்த ஜீவனானவன், 𑌰𑌸𑌂 𑌹𑍍𑌯𑍇𑌵 - உருசியைத்தானே, (𑌰𑌂) 𑌰𑌸𑌂 𑌹𑍍𑌯𑍇𑌵 - ஆனந்தமான ப்ரம்மத்தைத் தானே, 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 - அடைந்து, 𑌆𑌨𑌨𑍍𑌦𑍀 - ஆனந்தத்தையுடையவனாக, 𑌭𑌵𑌤𑌿 - ஆகிறான், 𑌏𑌷𑌃 - இந்த, 𑌆𑌕𑌾𑌶𑍇 - ஹிருதய குகையிலிருக்கும் ஆகாயத்தில், 𑌆𑌨𑌨𑍍𑌦𑌃 - ஆனந்தமானது, 𑌨 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑍇𑌤𑍍 - இல்லாமற்போய் விடுமேயானால், 𑌕𑌃 𑌹𑍍𑌯𑍇𑌵 - எவன்தான், 𑌅𑌨𑍍𑌯𑌾𑌤𑍍 - அபானவாயுவின் வியாபாரத்தைச் செய்யக்கடவன், 𑌕𑌃 - எவன், 𑌪𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌤𑍍 - பிராணவாயுவின் வியாபாரத்தைச் செய்யக்கடவன், (𑌰𑌂) 𑌏𑌷𑌃 - இந்த பரமாத்மாவானவனே,

ஆகாஶ: - அளவிடக்கூடாத, ஆநந்த: - ஆனந்தமாக, நஸ்யாத் - ஆகாமற்போனானேயானால், க: ஹ்யேவ - எவன்தான், அந்யாத் - சம்சாரத்திலுண்டான சுகத்தையடைவான், க: - எவன், ப்ராண்யாத் - மோக்ஷசுகத்தையடைவான், ஏஷ: ஹ்யேவ - இந்த பரமாத்மாதானே, ஆநந்தயாதி - ஆனந்தத்தை விளைவிக்கிறான், ஏஷ: - இந்த ஜீவன், யதா ஹ்யேவ - எப்பொழுதுதான், ஏதஸ்மிந் - இந்த, அத்ருஶ்யே - பார்க்கமுடியாததாயும், அநாத்ம்யே - சரீரமில்லாததாயும், அநிருக்தே - சாதி குணம் தொழில் இவைகளை முன்னிட்டுச்சொல்லமுடியாததாயும், அநிலயநே - ஆதாரமில்லாததாயுமிருக்கிற ப்ரம்மத்தினிடத்தில், அபயம் - பயமில்லாமலிருக்கிற, ப்ரதிஷ்டாம் - ஒன்றாயிருக்கையை, விந்ததே - அடைகிறானோ, அத - (வா) அபயம் - பயமில்லாமலிருத்தலின் பொருட்டு அல்லது பயமில்லாமைக்குக் காரணமான, ப்ரதிஷ்டாம் - இடைவிடாமல் தியானம் செய்கிறதாகிற விருப்பை, விந்ததே - அடைகிறானோ, ஸ: - அவன், அபயம் - பயமில்லாமையை, கத: - அடைந்தவனாக, பவதி - ஆகிறான், ஏஷ: - இந்த ஜீவன், யதா ஹி - எப்பொழுது, ஏதஸ்மிந் - முன்கூறிய ப்ரம்மத்தினிடத்தில், உதரம் - கொஞ்சமும், அந்தரம் - பேதத்தை, குருதே - பண்ணுகிறானோ, ஏதஸ்மிந் - இந்த மேற்கூறிய தியானத்தில், அரம் - கொஞ்சம், அந்தரம் - தடையை, குருதே - பண்ணுகிறானோ, அத - பிறகு, தஸ்ய - அவனுக்கு, பயம் - பயமானது, பவதி - உண்டாகிறது, (வா) உத்பவதி - உண்டாகிறது. தத் த்வேவ - அந்த ப்ரம்மமே, அமந்வாநஸ்ய - ப்ரம்மமும் நானுமொன்றென்று எண்ணுமலிருக்கிற, விதுஷ: - பேதத்தையறிகிற மனிதனுக்கு, பயம் - பயம், (வா) விதுஷ: - ப்ரம்மத்தைத் தியானம் செய்து, அமந்வாநஸ்ய - பிறகு தடையினால் மேற்கூறிய தியானத்தை விட்டவனுக்கு, தத்வேவ - அந்த தியானத்தை நிறுத்தினதே, பயம் - பயம், தத் - அந்த விஷயத்தில், ஏஷ: - இந்த, ஶ்லோகோபி - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(ஶ௦ - ஸா.) பதார்த்தம் போலவே.

(ரா - ஹா.) இப்பொழுது காணப்படுகிற உருவங்களும், வழங்கப்படுகிற பெயர்களுடன்கூடிய அறிவுள்ள வஸ்துக்கள் அறிவில்லாத வஸ்துக்கள் இவைகளை உடலாகவுடைய பரமாத்மா படைப்புக்கு முற்காலத்தில் மேற்கூறிய பெயர் உருவங்களின்றியே ஒன்றோடொன்று பேதங்களறியப்படாமலிருக்கிற அறிவுள்ள வஸ்துக்களையும் அறிவில்லாத வஸ்துக்களையும் சரீரமாகவுடைத்தாயிருந்தது. கண்களால் காணவரியனாகவும், நம்மைப்போல் சரீரமில்லாதவனாகவும், பெயர்களால் சொல்லப்படாதவனாகவும், தனக்கொரு ஆதாரமில்லாதவனாகவுமிருக்கிற பரமாத்மாவை எவனிடைவிடாமல் தியானம் செய்கிறானோ, அவன் சம்சாரத்தில் நின்றும் நீங்குகிறான். இங்கு கண்களால் காணவரியன் என்றதால், கண்களுக்குப் புலப்படும், மரம் செடி முதலிய உயிரில்லா வஸ்துக்களின் வேறுபாடும், நம்மைப்போல் சரீரமில்லாதவனென்றதால், ஸம்சாரத்தில் கட்டு

ண்டு திரியுமாத்மாக்களின் வேறுபாடும், பெயர்களால் சொல்லப்படாதவனென்றதால், ஸம்சாரத்திலிருக்கும் காலத்தில் அவன் இவன் என்று சொல்லப்பட்ட பெயர்களையுடையவராயும் பிறகு முக்தியை அடைந்தவராயுமுள்ள முக்தர்களின் வேறுபாடும், தனக்கு ஆதாரமில்லாதவனென்றதால், பரமாத்மாவின் ஸ்வரூபத்தாலும், சங்கல்பத்தாலும், ஆதாரமுடையவர்களான நித்திய ஸூரிகளின் வேறுபாடும் தோற்றுகிறது. எவன் மேற்கூறிய தியானத்தை நடுவில் விட்டுவிடுகிறானே அவன் பயத்தையடைகிறான். அதாவது மேற்கூறிய தியானமில்லாமையே பயமென்று மகர்ஷிகளால் சொல்லப்படுகிறது. “யந்முஹூர்தம்க்ஷணம்வாபிவாஸுதேவோநசிந்த்யதே ; ஸாஹாநிஸ்தன்மஹச்சித்ரம்ஸாப்ராந்திஸ்ஸாசவிக்ரியா ; வரம்ஹுதவஹஜ்வாலாபம்ஜராந்தர்வ்யவஸ்திதி: ; நஶௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸவைஶஸம்” என்றும்.

𑌭𑍀𑌷𑌾𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾𑌤𑌃 𑌪𑌵𑌤𑍇 । 𑌭𑍀𑌷𑍋𑌦𑍇𑌤𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 । 𑌭𑍀𑌷𑌾𑌸𑍍𑌮𑌾𑌦𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 । 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑌾𑌵𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌮 𑌇𑌤𑌿 । 𑌸𑍈𑌷𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑍍𑌯 𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑍁𑌵𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌾𑌧𑍁𑌯𑍁𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌕𑌃 । 𑌆𑌶𑌿𑌷𑍍𑌠𑍋 𑌦𑍍𑌰𑌢𑌿𑌷𑍍𑌠𑍋 𑌬𑌲𑌿𑌷𑍍𑌠𑌃 । 𑌤𑌸𑍍𑌯𑍇𑌯𑌂 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌸𑌰𑍍𑌵𑌾 𑌵𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 । 𑌸 𑌏𑌕𑍋 𑌮𑌾𑌨𑍁𑌷 𑌆𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 ॥௧॥

𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌾 𑌆𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑍋 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑍋 𑌦𑍇𑌵𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌦𑍇𑌵𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑌃 𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌂 𑌚𑌿𑌰𑌲𑍋𑌕𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌪𑌿𑌤𑍄𑌣𑌾𑌂 𑌚𑌿𑌰𑌲𑍋𑌕𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 ॥௨॥

𑌸 𑌏𑌕 𑌆𑌜𑌾𑌨𑌜𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌮𑌾𑌜𑌾𑌨𑌜𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑌃 𑌕𑌰𑍍𑌮𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌯𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌦𑍇𑌵𑌾𑌨𑌪𑌿𑌯𑌨𑍍𑌤𑌿 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 ॥௩॥

𑌸 𑌏𑌕 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑍋 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑍇𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑍇𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑍇𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌤𑍇 𑌯𑍇 𑌶𑌤𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑍇𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌃 । 𑌸 𑌏𑌕𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣 𑌆𑌨𑌨𑍍𑌦𑌃 ॥௪॥

𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌚𑌾𑌕𑌾𑌮𑌹𑌤𑌸𑍍𑌯 । 𑌸 𑌯𑌶𑍍𑌚𑌾𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇 । 𑌯𑌶𑍍𑌚𑌾𑌸𑌾𑌵𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇 । 𑌸 𑌏𑌕𑌃 । 𑌸 𑌯 𑌏𑌵𑌂𑌵𑌿𑌤𑍍 । 𑌅𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 । 𑌏𑌤𑌮𑌨𑍍𑌨𑌮𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍁𑌪𑌸𑌙𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑌿 । 𑌏𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍁𑌪𑌸𑌙𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑌿 ।

ஏதம் மநோமயமாத்மாநமுபஸங்க்ராமதி | ஏதம் விஜ்ஞாநமயமாத்மாநமுபஸங்க்ராமதி ||௫|| ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ராமதி | ததப்யேஷ ச்லோகோ பவதி | இத்யஷ்டமோऽநுவாக: ||

భీషాస్మాద్వాతః పవతే । భీషోదేతి సూర్యః । భీషాస్మాదగ్నిశ్చేంద్రశ్చ । మృత్యుర్ధావతి పంచమ ఇతి । సైషానందస్య మీమాగ్ం సా భవతి । యువా స్యాత్సాధుయువాధ్యాయకః । ఆశిష్ఠో ద్రఢిష్ఠో బలిష్ఠః । తస్యేయం పృథివీ సర్వా విత్తస్య పూర్ణా స్యాత్ । స ఏకో మానుష ఆనందః । శ్రోత్రియస్య చాకామహతస్య ॥ ౧ ॥

తే యే శతం మానుష్య ఆనందాః । స ఏకో మనుష్యగంధర్వాణామానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతం మనుష్యగన్ధర్వాణామానందాః । స ఏకో దేవగంధర్వాణామానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతం దేవగంధర్వాణామానందాః । స ఏకః పితృణాం చిరలోకలోకానామానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతం పితృణాం చిరలోకలోకానామానందాః ॥ ౨ ॥

స ఏక ఆజానజానాం దేవానామానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతమాజానజానాం దేవానామానందాః । స ఏకః కర్మదేవానాం దేవానామానందః । యే కర్మణా దేవానపియంతి శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతం కర్మదేవానాం దేవానామానందాః । స ఏకో దేవానామానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతం దేవానామానందాః ॥ ౩ ॥

స ఏక ఇంద్రస్యానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతమింద్రస్యానన్దాః । స ఏకో బృహస్పతేరానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతం బృహస్పతేరానందాః । స ఏకః ప్రజాపతేరానందః । శ్రోత్రియస్య చాకామహతస్య । తే యే శతం ప్రజాపతేరానందాః । స ఏకో బ్రహ్మణ ఆనందః ॥ ౪ ॥

శ్రోత్రియస్య చాకామహతస్య । స యశ్చాయం పురుషే । యశ్చాసావాదిత్యే । స ఏకః । స య ఏవంవిత్ । అస్మాల్లోకాత్ప్రేత్య । ఏతమన్నమయమాత్మానముపసంక్రామతి । ఏతం ప్రాణమయమాత్మానముపసంక్రామతి । ఏతం మనోమయమాత్మానముపసంక్రామతి । ఏతం విజ్ఞానమయమాత్మానముపసంక్రామతి ॥ ౫ ॥ ఏతమానన్దమయమాత్మానముపసంక్రామతి । తదప్యేష శ్లోకో భవతి ॥

(ப - ம்.) அஸ்மாத் இந்த பரப்ரம்மத்தினிடத்தில் நின்றும், பீஷா - பயத்தினலே, வாத: - வாயுவானவன், பவதே - வீசுகிறான், பீஷா - பயத்தினலே, ஸூர்ய: - சூரியனானவன், உதேதி - உதிக்கிறான். அஸ்மாத் - இந்த ப்ரம்மத்தினிடத்திலிருந்தும், பீஷா - பயத்தினலே, அக்நிஶ்ச - அக்நியும், இந்த்ரஶ்ச - இந்திரனும், (தாவத: - ஓடுகிறார்கள்), பஞ்சம: - ஐந்தாவதான, ம்ருத்யு: - யமனும், தாவதி - ஓடுகிறானே, இதி - என்று, இதை ச்லோக: - என்பதில் சேர்த்துக்கொள்ளுக. ஆநந்தஸ்ய - அந்த ஆனந்தமயமான ப்ரம்

மத்தினனந்தத்துக்கு, ஸைஷா - அந்த இந்த, மீமாம்ஸா - விசாரமானது, பவதி - இருக்கிறது. யுவா - யவ்வனவயதுடையவன், ஸாதுயுவா - நல்ல யவ்வனத்தையுடையவனுகவும், அத்யாயக: - வேதங்களை யோதினவனுக வும், (ஸ) ஸாது - நன்ருக, யுவாத்யாயக: - தன்வயதுப்பிள்ளைகளுக்கு ஓதுவிக்கும் திறமையுள்ளவனுகவும், ஆஸிஷ்ட: - சீக்கிறம் காரியம் செய் யும் திறமையுள்ளவனுகவும் அல்லது சாப்பிடும் திறமையுள்ளவனுகவும், த்ருடிஷ்ட: - மனதில் தைரியமுள்ளவனுகவும், பலிஷ்ட:- சரீரத்தில் பலமுள் ளவனுகவும், ஸ்யாத் - இருந்தால், தஸ்ய-அந்த மனிதனுக்கு, இயம்-இந்த, ஸர்வா - எல்லா, ப்ருதிவீ - பூமி, வித்தஸ்ய - பணத்தினுல், பூர்ணா - நிறைந்ததாக, ஸ்யாத் - இருந்தால், ஸ: - அது, ஏக: - ஒரு, மாநுஷ:- மனிதனுடையதான, ஆநந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய -ஸம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுக்கும், இதை மேற்கூறிய ஆநந்த: - என்கிற பதத்துடன் கூட் டிக்கொள்க. தேயேஶதம் - யாதொரு அந்தவனேகமான, மாநுஷா: - மனிதர்களுடையதான, ஆநந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு, மநுஷ்யகந்தர்வாணாம் - மனிதர்களாயிருந்து தவம் முதலியதால் கந்தருவராய்ப் போனவர்களுடைய, ஆநந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - ஸம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய- ப்ரம் மத்தியானம் செய்கிறவனுக்கும் இதைமேல் ஆனந்தம் என்கிற பதத்துடன் கூட்டிக்கொள்க. தேயேஶதம் - யாதொரு அந்தவனேகமான, மநுஷ்ய கந்தர்வாணாம் - மனிதர்களாயிருந்து தவம் முதலியதால் கந்தருவர்களாய்ப் போனவர்களுடைய, ஆநந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக:-ஒரு தேவகந்தர்வாணாம் - சாதியினுல் கந்தருவர்களாயிருக்கிறவர்களுடைய, ஆநந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - சம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுக்கும், அதை முன், ஆநந்த: - என்கிற பதத்துடன் சேர்த்துக்கொள்க. தேயேஶ தம் - யாதொரு அந்தவனேகங்களான, தேவகந்தர்வாணாம் - ஜாதியினுல் கந்தருவர்களாயிருக்கிறவர்களுடைய, ஆநந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு, சிரலோகலோகாநாம் - அனேககாலம் ஸ்திரமாயிரு க்கு மூலகங்களை இருப்பிடமாகவுடைய, பித்ரூணாம்-பிதுர்க்களுடைய, ஆநந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - ஸம்சாரத்தின் சுகத்தாசையினுல் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுக்கும் இதை, ஆநந்த: - என்கிற மேற்கூறிய பதத்துடன் சேர்த்துக்கொள்க. தே யேஶதம் - யாதொரு அந்தவனேகங்களான, பித்ரூணாம் சிரலோகலோகாநாம்

அனேககாலம் ஸ்திரமாயிருக்கு முலகங்களை இருப்பிடமாகவுடைய, பித்ரூணாம் - பிதுர்க்களுடைய, ஆனந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு, ஆஜானஜானாம் - ஸ்மிருதியில் சொல்லியிருக்கிற கர்மங்களைச் செய்ததால் தெய்வவுலகத்தில் பிறந்திருக்கிற, தேவானாம் - தேவதைகளுடைய ஆனந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - சம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுக்கும், இதை மேற்கூறிய ஆனந்த: - என்கிற பதத்துடன் சேர்த்துக்கொள்ளுக. தே யே ஶதம் - யாதொரு அந்த அனேகமான, ஆஜானஜானாம் - ஸ்ம்ருதியில் சொல்லியிருக்கிற கர்மங்களை செய்ததால் தெய்வவுலகத்தில் பிறந்திருக்கிற, தேவானாம் - தேவதைகளுடைய, ஆனந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு, யே - எவர்கள், கர்மணா - யக்யம்முதலிய வைதிக கர்மங்களால், தேவானபி - தேவர்களையும், யந்தி - அடைகிறார்களோ, கர்மதேவானாம்தேவானாம் - அப்படிப்பட்ட கர்மதேவர்களுடைய, ஆனந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - சம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுடையவும், இதை மேற்கூறிய ஆனந்த: - என்கிற பதத்தோடு சேர்த்துக்கொள்ளுக. தே யே ஶதம் - யாதொரு அந்த அனேகமான கர்மதேவானாம். மேற்கூறிய கர்மங்களால் தேவர்களானவர்களுடைய, ஆனந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு தேவானாம் - ஸ்வபாவமான தேவர்களுடைய, ஆனந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - சம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுடையவும், இதை மேற்கூறிய ஆனந்த: - என்கிற பதத்துடன் சேர்த்துக்கொள்ளுக. தே யே ஶதம் - யாதொரு அந்த அனேகமான, தேவானாம் - ஸ்வபாவ தேவர்களுடைய, ஆனந்த: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு, இந்த்ரஸ்ய - இந்திரனுடைய, ஆனந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - சம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுடையவும், இதை மேற்கூறிய ஆனந்த: - என்கிற பதத்துடன் சேர்த்துக்கொள்ளுக. தே யே ஶதம் - யாதொரு அந்த அனேகமான, இந்த்ரஸ்ய - இந்திரனுடைய, ஆனந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு, ப்ருஹஸ்பதே: - ப்ருகஸ்பதியினுடைய, ஆனந்த: - ஆனந்தம், அகாமஹதஸ்ய - சம்சாரத்தின் சுகத்தாசையால் கெடுக்கப்படாத, ஶ்ரோத்ரியஸ்ய - ப்ரம்மத்தியானம் செய்கிறவனுடையவும், இதை மேற்கூறிய, ஆனந்த: - என்கிற பதத்துடன் சேர்த்துக்கொள்ளுக. தே யே ஶதம் - யாதொரு அந்த அனேகமான, ப்ருஹஸ்பதே: - ப்ருகஸ்பதியினுடைய, ஆனந்தா: - ஆனந்தங்களோ, ஸ: - அது, ஏக: - ஒரு, ப்ரஜாபதே: - மூன்று

உலகத்தையும் சரீரமாகவுடைய விராட்புருஷனுக்கு, ஆநந்த: - ஆனந்தம், தே யே ஶதம் - யாதொரு அந்த அனேகமான, ப்ரஜாபதே: - மூன்றுலகத்தையும் சரீரமாகவுடைய விராட்புருஷனுடைய, ஆநந்தா: - ஆனந்தங்களோ, (௨ம்) ப்ரஜாபதே: -(இரண்டிடத்திலும்) சதுர்முகனுக்கு, (உடைய) ஸ: - அது, ஏக: - ஒரு, ப்ரஹ்மண: - சதுர்முகனுடைய, (௨ம்) ப்ரஹ்மண: - ப்ரம்மத்தினுடைய, ஆநந்த: - ஆனந்தம், ஸ யஶ்சாயம் - யாதொரு இவன், புருஷே - ஜீவனிடத்திலோ, யஶ்சாஸௌ - யாதொரு இவன் ஆதித்யே - சூரியனிடத்திலேயோ, ஸ: - அந்தப் பரமாத்மா, ஏக: - ஒருவன், ய: - எவன், ஏவம்வித் - இப்படி யறிந்தவனோ, ஸ: - அவன், அஸ்மாத் - இந்த, லோகாத் - உலகத்தில் நின்றும், ப்ரேத்ய - போய், ஏதம் - இந்த அந்நமயம் - அன்னமயமான, ஆத்மாநம் - ஆத்மாவை, உபஸங்க்ராமதி - அடைகிறான், ஏதம் - இந்த, ப்ராணமயம் - ப்ராணமயமான, ஆத்மாநம் - ஆத்மவை, உபஸங்க்ராமதி - அடைகிறான். ஏதம் - இந்த, மநோமயம் - மனோமயமான, ஆத்மாநம் - ஆத்மாவை, உபஸங்க்ராமதி - அடைகிறான். ஏதம் - இந்த, விஜ்ஞாநமயம் - விஞ்ஞானமயமான, ஆத்மாநம் - ஆத்மாவை, உபஸங்க்ராமதி - அடைகிறான். ஏதம் - இந்த, ஆநந்தமயம் - ஆனந்தமயமான, ஆத்மாநம் - ஆத்மாவை, உபஸங்க்ராமதி - அடைகிறான். தத் - அந்த விஷயத்தில், ஏஷ: - இந்த, ஶ்லோகோபி - சுலோகமும், பவதி - இருக்கிறது.

(ஸ० - ஹா.) அக்நி வாயு முதலிய வஸ்துக்கள் மிகவும் வருத்தப்படவேண்டிய காரியங்களில் எப்பொழுதும் நிலைநிற்கின்றனவாகையால், ஒருவனிடத்தில் பயமுண்டானால் தான் அவ்வண்ணம் வருந்தவேண்டும். அப்படி அவ்வஸ்துக்களுக்குப் பயத்தை விளைவிப்பது ப்ரம்மம். மேற்கூறிய ப்ரம்மம் அன்னமயன் முதலிய ஆத்மாக்களைப் படைத்ததற்குள் நிறைந்திருக்கிறது; சூரியனிடத்திலேயுமிருக்கிறது. ஆனால் குடத்திலுகாயமும் வீட்டிலுகாயமும் பெயர்களால் வேறுபட்டிருந்தாலும் எப்படி ஒன்றோ, அவ்விதமாகவே ப்ரம்மமுமொன்று. மேற்கூறிய கேள்விகளில் ப்ரம்மத்தை யறிந்தவன் அதையடைகிறானா இல்லையா என்பதற்கு மேல் சமாதானம் சொல்லப்படுகிறது. இங்கு ப்ரம்மத்தையடைகிறவன் ப்ரம்மத்துடன் ஒன்றா? வேறுபட்டவனா? வேறென்றால், "தத் ஸ்ருஷ்ட்வா; ததேவாநுப்ராவிஶத்; அந்யோஸாவந்யோஹமஸ்மீதி நஸவேத; ஏகமேவாத்வீயம்; தத்வமஸி" என்கிற சுருதிகளுக்கு விரோதிக்கிறது. ஒன்றென்றால் ஆனந்தமயமான ஆத்மாவை யடைகிறானென் றெப்படிச் சொல்லக்கூடும்? தன்னைத்தானடைகிறதென்று சொல்வது கூடுமோ வென்னில், இங்கு ஆரம்பத்தில் "ப்ரம்மவிதாப்நோதிபரம்" என்று ப்ரம்மத்தை யறிந்தவன் ப்ரம்மமாகிறானென்று சொல்லியிருக்கிறது. அதுவே இப்பொழுதும் சொல்லப்படுகிறது. வேறு வஸ்து வேறொரு வஸ்துவாக ஆகமாட்டாதன்றோ? ஆனாலும் தான் தானாகவே ஆகிறதென்றால், அதுதானெப்படிக்கூடும்? அவித்தையினாலுண்டாக்கப்பட்ட அன்னமயன் முதலிய ஆத்மாக்களை நீக்கி ப்ரம்மமும் தானுமொன்றென்கிற அறிவே ப்ரம்மமாகை. இங்கு, "உபஸங்க்ராமதி" என்றால் அதுவாக அறிகிறானென்பது பொருள். ஆதலால் அவித்தை நீங்கி ஆந்த ப்ரம்மமும் தானும் ஒன்றென்றறிகிறானென்பதே, அடைகிறானென்பதின் பொருளாதலால் விரோதமில்லை.

(ரா - ஹா.) அக்நி சூரியன் முதலிய தேவர்களெல்லோரும் பரமாத்மாவின் ஆக்ஞைக்குப் பயந்து நடக்கிறவர்களாதலாலும், அவர்களுடைய ஸ்தானங்களும் துக்கத்தைத் தரத்தக்கவைகளாதலாலும் அவைகளின் ஆசையால் மேற்கூறிய பரமாத்மாவின் தியானத்திற்கு ஏதாகிலும் தடைநேரிட்டால் அதினுலேயே முக்யமான பயமுண்டாகிறதென்கிற மேற்கூறிய அர்த்தத்தை விவரிக்கிறது. இந்தச் சுலோகம் மேற்கூறிய பரமாத்மாவை "யஏஷோந்தராதித்யேஹிரண்மய:புருஷோத்ருச்யதேஹிரண்யச்மச்ருர்ஹிரண்யகேச ஆப்ரணகாத்ஸர்வஏவஸுவர்ண:தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ தஸ்யோதிதிநாமா" என்று சூரியமண்டலத்தின் நடுவிலிருக்கிற அழகியதான சரீரத்தோடே கூடினவனாகவும், தாமரைபோன்ற கண்களையுடையவனாகவும், அறிவுள்ள வஸ்துக்களையும் அறிவில்லாத வஸ்துக்களையும் சரீரமாகவுடையவனாகவும், இந்தச் சரீரங்களில்லாமல் "ஸத்யம்ஞ்ஞாநம்" என்று சொல்லப்பட்ட ஸ்வரூபத்தோடு கூடினவனாகவும் தியானம் செய்கிறவன், அர்ச்சராதிமார்க்கமென்று சொல்லப்பட்ட வழியால் ப்ரம்மத்தையடைகிறான். இதனால் ப்ரம்மத்தைத் தியானம் செய்கிறவன் ப்ரம்மத்தையடைகிறானு? ப்ரம்மத்தோடொன்றாகிறானு என்கிற கேள்விக்கு உத்தரமளிக்கப்பட்டது. இங்கு அன்னமயன் முதலிய விடங்களில் அவைகளைச் சரீரமாகவுடைய பரமாத்மாவை என்பது பொருள்.

யதோவாசோநிவர்த்தந்தே | அப்ராப்யமநஸாஸஹ | ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந் | நபிபேதிகுதச்சநேதி | ஏதம்ஹவாவநதபதி | கிமஹம்ஸாதுநாகரவம் | கிமஹம்பாபமகரவமிதி | ஸயஏவம்வித்வாநேதேஆத்மாநம்ஸ்ப்ருணுதே | உபேஹ்யேவைஷஏதேஆத்மாநம்ஸ்ப்ருணுதே | யஏவம்வேத | ௧|| இத்யுபநிஷத் | இதிநவமோநுவாக:||

యతోవాచోనివర్తంతే । అప్రాప్యమనసాసహ । ఆనందంబ్రహ్మణోవిద్వాన్ । నభిభేతి కుతశ్చనేతి । ఏతగ్ంహవావనతపతి । కిమహగ్ంసాధునాకరవం । కిమహంపాపమకరవమితి । సయఏవంవిద్వానేతేఆత్మానగ్ంస్పృణుతే । ఉభేహ్యేవైషఏతేఆత్మానగ్ంస్పృణుతే॥యఏవంవేద ॥ ౧॥ ఇత్యుపనిషత్ ॥ అను ॥ ౯ ॥

(ப - ம்) யத: - யாதொரு ப்ரம்மத்தினிடத்தில் நின்றும், (ரா) - யாதொரு ப்ரம்மானந்தத்தில் நின்றும், வாச: - வாக்குக்கள், மநஸாஸஹ - அறிவுடன் கூட, (ரா) மநஸா - மனதுடன்கூட, அப்ராப்ய - சொல்லமுடியாமலும் அறியமுடியாமலும், (ரா) அப்ராப்ய - அதின்முடிவை நினைக்கக்கூடாமலும் சொல்லக்கூடாமலும், நிவர்த்தந்தே - திரும்புகின்றனவோ, ப்ரஹ்மண: - ப்ரம்மத்தின் ஸ்வரூபமான, (ரா) ப்ரஹ்மண: - பரமாத்மாவினுடைய, ஆநந்தம் - ஆனந்தத்தை, வித்வாந் - தியானம் செய்கிறவன், குதச்சந - ஒரு வஸ்துவிடத்தில் நின்றும், நபிபேதி-பயப்படுகிறானில்லை, இதி - என்று,(முன்)ச்லோக: - என்பதுட னிதைக்கூட்டிக்கொள்க. ஏதம்ஹவாவ - இப்படித்தியானம் செய்கிறவனை, அஹம் - நான், கிம் - ஏன், ஸாது - நல்லகாரியமான புண்ணியத்தை, நாகரவம் - செய்யவில்லை, அஹம் - நான், கிம் - ஏன், பாபம் - பாவத்தை, அகரவம் செய்தேன், இதி-

என்கிற எண்ணமானது, நதபதி - துன்பப்படுத்துகிறதில்லை, ய꞉-எவன், ஏவம் - இந்த ப்ரகாரம், வித்வாந் - அறிந்தானோ, ஸ꞉ - அவன், ஏதே - இந்தப் பாபபுண்ணியங்களை, ஆத்மாநம் - ப்ரம்மமாக, ஸ்ப்ருணுதே - பலப்படுத்துகிறானோ அதாவது அறிகிறான், ய꞉-எவன், ஏவம் - இந்த ப்ரகாரம், வேத - அறிகிறானோ, ஏஷ꞉-இவன், உபே - இரண்டான, ஏதே-இந்தப் பாபபுண்ணியங்களை, ஆத்மாநம் - ப்ரம்மமாக, ஸ்ப்ருணுதே - பலப்படுத்துகிறானோ, அதாவது அறிகிறானோ, (ரூ) ஏதே - இந்தப் பாபபுண்ணியங்களில் நின்றும். ஆத்மாநம் - தன்னை, ஸ்ப்ருணுதே-காப்பாற்றுகிறானோ, இப்படியே இரண்டிடத்திலும் இவைகளை, ஏதம் ஹவாவ நதபதி - என்கிறதுடன் சேர்த்துக்கொள்ளுக. இதி - என்று, உபநிஷத் - ப்ரம்மவித்தையைச் சொல்லும் வேதத்தின் பாகம்.

(ரு0-ஷா.) அறியுமறிவினாலும் சொல்லும் பெயர்களாலும் அறியவும் சொல்லவும் முடியாததான ஆனந்தமயமான ப்ரம்மமே ஆத்மாவென்று அறிந்தவன் ஒரு வஸ்துவிடத்தில் நின்றும் பயப்படமாட்டான். ப்ரம்மம் தவிர வேறுவஸ்து வில்லாமையாலும் அவ்வித ப்ரம்மமே தானானபடியாலும் பயப்படுத்தும் வஸ்துவில்லை. புண்ணியபாவங்களிரண்டில் நின்றும் பயப்படவேண்டாவோவென்னில் அவைகளில் நின்றும் பயப்படவேண்டியதில்லை.

(ரா-ஹா.) வாக்கு மனது இவைகள் எந்தப் பரமாத்மாவின் ஆனந்தத்தை அளவிடக்கூடாமல் திரும்புகின்றனவோ அப்படிப்பட்ட பரமாத்மாவின் ஆனந்தத்தைத் தியானம் செய்கிறவன் ஒன்றிலிருந்தும் பயப்படான். மேற்கூறிய தியானத்தினால் புண்ணியபாபங்களின் பயன்களும் தன்னை யடையவொட்டாமல் காப்பாற்றிக்கொண்டானாகையால் அவைகளில் நின்றும் பயப்படான். இங்கு ஆனந்தமயனென்று சொன்னது பரமாத்மாவையே. ஏனெனில், "தேயேஶதம்" என்று ஆனந்தங்களைப் பெருக்கிக்கொண்டு வந்து ஆனந்தமயனைக் காட்டிலும் மேல் ஆனந்தமில்லையென்று முடித்தலால், ஜீவாத்ம ஸ்வல்ப ஆனந்தமுள்ளவனாதலால் இவனுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் மேலான ஆனந்தமில்லையென்று முடிக்கவொண்ணாது. ஆகலாலிங்கு ஆனந்தமயனென்றது பரமாத்மாவையே. ஆனால் (மய) என்கிற விகுதியானது பெரும்பாலும் விகாரத்தைச் சொல்லுமாதலால் விகாரமில்லாத பரமாத்மாவை ஆனந்தமய என்கிறமதம் சொல்லாதெனில், இங்கு (மய) என்கிற விகுதி விகாரத்தைச் சொல்லுகிறதில்லை. "மயட்வைதயோர்பாஷாயாம்" என்கிற சூத்திரத்திலிருந்து, "பாஷாயாம்" என்கிற பதத்துடன் சேர்ந்து, "நித்யம்வ்ருத்தஶராதிப்ய꞉" என்கிற சூத்திரத்தினால் உலகவார்த்தையில் மாத்திரம் (மய) என்கிற விகுதி விகாரத்தைச் சொல்லுமே ஒழிய வேதத்தில் விகாரார்த்தத்தைச் சொல்லாது. "தத்ப்ரக்ருதவசநேமயட்" என்கிற சூத்திரத்தினால் நிறைந்தவனென்றே ஏற்படும். ஆகலால், ஸ்வல்பானந்தமுடைய ஜீவனன்று. மேலும், "ஏஷஹ்யேவாநந்தயாதி" என்றும், "ரஸꣳஹ்யேவாயம்லப்த்வாநந்தீபவதி" என்றும் ஜீவர்களுக்கு ஆனந்தத்தை விளைக்கிறவனாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், "ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரம்ம" என்கிற மந்திரத்தையே மேல்பாகங்கள் விவரிக்கின்றனவாதலாலும் ஆனந்தமயனென்பது ப்ரம்மமே.

ஆனந்தவல்லி முற்றிற்று.

---

னும் முதல் இரண்டத்தியாயங்களை விட்டு மேலுள்ள அத்யாயங்கள் உரைக்கப்படுகின்றன. அதில் இந்த உஷாவா என்கிற வாக்கியங்களும் அச்வமேத கர்மத்தைச் சார்ந்ததாயிருக்கினும் ப்ரஹ்மோபக்ரமமாயிருக்கச் சொல்லுகையால் ப்ரஹ்மஜ்ஞானத்தைச் சேர்ந்ததென்று அதற்குப் பொருளுரைப்பது உசிதமாயிருக்கிறது.

ஹரி꞉ ஓம்.

உஷா வா அச்வஸ்ய மேத்யஸ்ய சிர꞉ | ஸூர்யச்சக்ஷுர்வாத꞉ ப்ராணோ வ்யாத்தமக்நிர்வைச்வாநர꞉ ஸம்வத்ஸர ஆத்மாச்வஸ்ய மேத்யஸ்ய த்யௌ꞉ ப்ருஷ்டமந்தரிக்ஷமுதரம் ப்ருதிவீ பாஜஸ்யம் திச꞉ பார்ச்வே அவாந்தரதிச꞉ பர்சவ ருதவோ(அ)ங்காநி மாஸாச்சார்தமாஸாச்ச பர்வாண்யஹோராத்ராணி ப்ரதிஷ்டா நக்ஷத்ராண்யஸ்தீநி நபோ மாம்ஸாநி | ஊவத்யம் ஸிகதா꞉ ஸிந்தவோ குதா யக்ருச்ச க்லோமாநச்ச பர்வதா ஓஷதயச்ச வநஸ்பதயச்ச லோமாந்யுத்யந் பூர்வார்தோ நிம்லோசந் ஜகநார்தோ யத்விஜ்ரும்பதே தத்வித்யோததே யத்விதூநுதே தத்ஸ்தநயதி யந்மேஹதி தத்வர்ஷதி வாகேவாஸ்ய வாக் ||

(ப - ம்.) மேத்யஸ்ய - யாகத்துக்குரிய, அச்வஸ்ய - குதிரையினுடைய, சிர꞉ - தலை, உஷாவா - விடியற்காலம், சக்ஷு꞉ - கண், ஸூர்ய꞉ - சூரியன், ப்ராண꞉ - உயிர்காற்று. வாத꞉ - வாயு, வ்யாத்தம் - திறக்கப்பட்ட வாய் வைச்வாநர꞉ - வைசுவாநரனென்கிற பெயருள்ள அக்நி꞉ - நெருப்பு, ஆத்மா - சரீரம், ஸம்வத்ஸர꞉ - வருஷம், மேத்யஸ்ய - யாகத்துக்குரிய, அச்வஸ்ய - குதிரையினுடைய, ப்ருஷ்டம் - முதுவு, த்யௌ꞉ - சுவர்க்கம், உதரம் - வயிறு, அந்தரிக்ஷம் - ஆகாயம், பாஜஸ்யம் - மார்பு, ப்ருதிவீ - பூமி, பார்ச்வம் - பக்கம், திச꞉ - திசைகள், பர்சவ꞉ - பக்க எலும்புகள், அவாந்தரதிச꞉ - மூலைத்திசைகள், அங்காநி - அவயவங்கள், ருதவ꞉ - ருதுக்கள், பர்வாணி - கணுக்கள், மாஸா꞉-ச-அர்தமாஸா꞉-ச - மாஸங்களும் பக்ஷங்களும், ப்ரதிஷ்டா - கால்கள், அஹோராத்ராணி - பகலிரவுகள், அஸ்தீநி - எலும்புகள், நக்ஷத்ராணி - நக்ஷத்திரங்கள், மாம்ஸாநி மாம்ஸங்கள், நப꞉ - மேகம், ஊவத்யம் - பாதிஜரித்திருக்கிற ஆகாரம், ஸிகதா꞉ - மணல்கள், குதா꞉ - நரம்புகள், ஸிந்தவ꞉ - ஆறுகள், யக்ருத்-க்லோமாந꞉-ச-மார்பின் கீழிருக்கிற இரண்டு மாம்ஸ உண்டைகள், பர்வதா꞉-மலைகள், லோமாநி-மயிர்கள், ஓஷதய꞉-ச-சிறுசெடிகளும், வநஸ்பதய꞉ச-மரங்களும், உத்யந்-உதயமாகிற, ஸூர்ய꞉ - சூரியன், பூர்வார்த꞉ - உடம்பின் முன்பாதி, நிம்லோசந் - அஸ்தமனத்தை அடைகிற, ஸூர்ய꞉-சூரியன், ஜகநார்த꞉-உடம்பின் பின்பாதி - விஜ்ரும்பதே-யத்-கொட்டாவி விடுகிறது என்று யாதொன்றோ, தத் - அது, வித்யோததே - மின்னல் மின்னுகிறது அதாவது கொட்டாவி விடுகிறதே மின்னல் என்று பொருள், விதூநுதே-யத்-மயிர்களை உதறுகிறதென்கிற யாதொன்றுண்டோ, தத் - அது, ஸ்த

யதி - கர்ஜனம்பண்ணுகிறது அதாவது மயிர்களை உதறுகிறதே மேகங்களின் இடி முழக்கம் என்று பொருள், மேஹதி யத் - மூத்திரம் விடுகிறதென்கிற யாதொன்றுண்டோ, தத் - அது, வர்ஷதி - மழைபெய்கிறது, அஸ்ய - அந்தக் குதிரையின், வாகேவ - சப்தம்தானே - வாக் - வாக் தேவதை.

(ஸம - ஸா.) அஶ்வமேதத்தில் பண்ணும் ஞானத்தைக் குறித்துச் சொல்லுவதற்காக அஶ்வமேதம் என்று பெயராதலால் குதிரையே முக்கியமான அங்கமாதலால் குதிரையிடத்தில் பண்ணும் புத்தியைச் சொல்லுகிறது.

(ரா - ஸா.) 'தாத்பரியபேதம்'யதேவவித்யயாகரோதிஶ்ரத்தயோபநிஷதா''ததேவ வீர்யபத்தரம்பவதி'' என்று சொல்லியிருக்கையால் கர்மங்களுக்கு அதிக பலத்தை அதாவது சீக்கிரம் பயனைக் கொடுக்கத்தக்க சக்தியை உண்டுபண்ணுவதான தியானத்தைச் சொல்லுகிறது.

அஹர்வா அஶ்வம் புரஸ்தாந்மஹிமாऽந்வஜாயத தஸ்ய பூர்வே ஸமுத்ரே யோநீ ராத்ரிரேநம் பஶ்சாந்மஹிமாऽந்வஜாயத தஸ்யாபரே ஸமுத்ரே யோநிரேதௌ வா அஶ்வம் மஹிமாநாவபித: ஸம்பபூவது: ஹயோ பூத்வா தேவாநவஹத்வாஜீ கந்தர்வாநர்வாऽஸுராநஶ்வோ மநுஷ்யாந்ஸமுத்ர ஏவாஸ்ய பந்து: ஸமுத்ரோ யோநி: ॥௨॥

(ப் - ம்.) அஶ்வம் புரஸ்தாத் - குதிரைக்கு முன்பக்கத்தில், அஹஹ்வா - அஹ்ஸ்ப, மஹிமா - மஹிமா என்கிற பெயருடைய தங்கத்தால் செய்த ஹோமம் செய்யவேண்டிய பதார்த்தம் வைத்திருக்கிற பாத்திரமாக, அந்வஜாயத-ஆய் விட்டது, தஸ்ய - அந்த பாத்திரத்துக்கு, பூர்வே - கிழக்குத் திசையில் இருக்கிற, ஸமுத்ரே - சமுத்திரம், யோநி: - வைக்கும் இடம், ஏநம் பஶ்சாத் - குதிரைக்குப் பின்பாகத்தில், மஹிமா - மஹிமா என்று பெயர் கொண்ட வெள்ளியால் செய்யப்பட்ட மேற்கூறிய பாத்திரம், ராத்ரி: - இரவாக, அந்வஜாயத - ஆய்விட்டது, தஸ்ய - அதற்கு, அபரே - மேலைத்திசையிலிருக்கிற, ஸமுத்ர: - சமுத்திரம், யோநி: - வைக்கும் இடம், ஏதௌ - இந்த, மஹிமாநௌ - மஹிமா என்ற பெயருள்ள மேற்கூறிய பாத்திரங்கள், அஶ்வமபித: - குதிரைக்கு இரண்டு பக்கத்திலும், ஸம்பபூவது: - உண்டாய் விட்டன அதாவது இரண்டு பக்கத்திலும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஹய: - அயமென்கிற ஜாதியுள்ள குதிரையாக, பூத்வா - ஆய்விட்டு, தேவாந் - தேவர்களை, அவஹத் - சுமந்தது, வாஜீ - வாஜி என்கிற ஜாதியுள்ளதாய், கந்தர்வாந் - கந்தர்வர்களை, அவஹத்-சுமந்தது, அர்வா-அர்வா என்கிற ஜாதியுள்ளதாய், அஸுராந் - அசுரர்களை, அவஹத் - சுமந்தது, அஶ்வ: - அசுவமென்கிற ஜாதியுள்ளதாய், மநுஷ்யாந் - மனிதர்களை, அவஹத் - சுமந்தது, அவஹத் - என்கிறதை மூன்று இடங்களிலும் இழுத்துக் கொள்ள, அஸ்ய - இந்தக் குதிரைக்கு, ஸமுத்ர ஏவ - சமுத்திரம் தானே அல்லது பரப்ரம்மம் தானே, பந்து: - கட்டும் இடம், ஸமுத்ர: - சமுத்திரம், யோநி: - உண்டாகும் இடம்.

(ஸம - ஸா - ரா - ஸா.) குதிரைக்கு முன் பின் இரண்டு பக்கங்களிலும் வைக்கப்பட்ட பொன்னினாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்ட இரண்டு பாத்திரங்களில்

பண்ணப்படுவதான தியானத்தை சொல்லுகிறது. இதித்ரதீயாத்யாதேப்ரதமம் ப்ராம்மணம்.

नैवेह किंचनाग्र आसीन्मृत्युनैवेदमावृतमासीदशनाययाऽशनाया हि मृत्युस्तन्मनोऽकुरुतात्मन्वी स्यामिति सोऽर्चन्नचरत्तस्यार्चत आपोऽजायन्तार्चते वै मे कमभूदिति तदेवार्कस्यार्कत्वं | कं ह वा अस्मै भवति य एवमेतदर्कस्यार्कत्वं वेद ||१||

(ப - ம்.) इह - இந்த ஜகத்தில், अग्रे - ஆதிகாலத்தில், किंचन - ஒருபொருளும், नैवासीत् - இல்லை, इदं - இந்த ஜகத்தானது, अशनायया - சுருக்கவேணுமென்கிற எண்ணம் கொண்ட, मृत्युना - ப்ரகிருதியை உடம்பாகவுடைய ப்ரம்மத்தினுலே, आवृतं - சூழப்பட்டதாக, आसीत् - இருந்தது, हि - யாதொரு காரணத்தால், अशनाया - சம்ஹரிக்க எண்ணமானது, मृत्युः - மிருத்யு என்று கூறப்பட்டதோ, तत् - அந்த ப்ரம்மமானது, आत्मन्वी - சரீரத்தையுடையவனாக, स्यां - ஆகக்கடவேன், इति - என்று, मनः - மனதை, अकुरुत - பண்ணிற்று, सः - அந்த ப்ரம்மமானது, अर्चन् - தனக்கு ஆனந்தம் உண்டுபண்ணும் பொருட்டு, अचरत् - சஞ்சரித்து, अर्चतः - ஆனந்திக்கிற, तस्य - அந்தப் பரமாத்மாவினிடத்திலிருந்து, आपः - ஜலங்களானவை, अजायन्त - உண்டாயின, अर्चते - ஆனந்தப்படுவதின் பொருட்டு எத்தனித்த, मे वै - என்பொருட்டுதானே, कं - ஜலமானது, अभूत् - உண்டாயிற்று, इति - என்று, (अचिन्तयत् - எண்ணிற்று), तदेव - ஆகையினாலே தானே, अर्कस्य - அர்க்கனென்னும் பெயர்கொண்ட ப்ரம்மத்துக்கு, अर्कत्वं - அர்க்கனென்னும் பெயருடைமை, यः - யாதொருவன், अर्कस्य - அர்க்கனென்னும் ப்ரம்மத்தினுடைய, अर्कत्वं - அர்க்கனென்னும் பெயருடைய, एवं - இப்படி, वेद - அறிகிறானோ, अस्मै - இவன்பொருட்டு, कं ह वै - கம்மென்று பெயர்கொண்ட சுகம் தானே, भवति - உண்டாகிறது.

(सं - ஸா.) அசுவமேதமென்கிற யாகத்துக்கு வேண்டிய கருவியாகிய அக்கினியின் உற்பத்தி சொல்லப்படுகிறது. இந்த சம்சாரமண்டலத்தில் ஒன்று பெயர் உருவங்களால் வகுக்கப்பட்ட ஒரு பேதங்களும் உலகத்தின் உற்பத்திக்கு முந்தி இல்லை. ஆனல் இங்கு ஒன்றுமில்லை என்றதற்கு சூன்யமென்று அர்த்தமன்று. ஏனென்றால் காரியம் உண்டாவதற்கு முந்தி காரணம் அவசியம் இருக்கவேண்டியது. உலகத்தில் குடம் உண்டாவதற்கு முந்தி மண் முதலான காரணங்கள் இருக்கிறதைக் கண்டிக்கிறோம். இல்லாவிடில் முயல்கொம்பு உண்டாகலாம். ஆகலால் காரணமுந்தியே இருக்கவேண்டியது. அப்படியே காரியமும் மண் உருண்டையில் இல்லாத குடம் உண்டாகில் முன்னிருந்த மண்ணுருண்டையைக் காட்டிலும் அதிக நிறை இருக்கவேண்டும். மேலும் கடவுளின் பிரத்தியக்ஷம் எல்லா வஸ்துக்களையும் அறிகிறதென்று சித்தமாயிருக்கிறதாதலால் குடம் உண்டாகப்போகிறதென்று அறிகையில் குடமில்லாவிடில் என்னமாய்ப் பிரத்தியக்ஷத்தால் அறியலாம். ஆனல் குடம் உண்டாகிறது, குடம் உடைந்தது என்கிற வார்த்தைகளில் குடம் உண்டானதாக ஏற்படுகிறதென்றால் குடத்தின் தோற்றத்தைச் சொல்லுகிறது. சுவர் முதலானதுகளால் குடம் மறைக்கப்பட்டால் குடம் நாசமடைந்ததென்றும் மறைவு நீங்கினல் குடம் உண்டாயிற்றென்றும் புத்தி உண்டாகிறதில்லையே என்னில் சுவர் முதலானவைகள் குடமிருக்கும் இடத்திற்கு வெளியில் இருந்து மறைக்கின்

றன, மண்ணுருண்டையில் இருக்கும் மறைவோ அப்படியல்ல, குடமிருக்கும் மண்ணுருண்டையிலேயே இருந்து மறைக்கின்றன. ஆகையால் சுவர் மறைக்குமிடத்தில் மறைத்ததென்றும் மறைவு நீங்கினால் தெரிகிறதென்றும் மண்ணுருண்டையில் குடம் மறைந்திருக்கும் காலத்தில் குடம் இல்லையென்றும் குடம் உண்டாயிற்றென்றும் புத்தி உண்டாகின்றது. மேலும் மேல்வாக்கியத்தில் "ஆவ்ர்தமாஸீத்" என்று மறைக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லுகையால் முயல்கொம்பு மறைக்கப்பட்டிருக்கிறதென்று உலகத்தில் சொல்லக்காணமையால் வஸ்து இருக்கிறதென்றே ஏற்படுகிறது. "அஶநாத்" என்றால் சாப்பிடவேணுமென்கிற ஆசை அதனாலன்றோ ஜந்துக்களைக் கொல்லுகிறது. ஆதலால் அது "ம்ருத்யு" வென்று சொல்லப்படுகிறது. நான்முகனுக்கு மேற்கூறிய சாப்பிடவேணுமென்கிற ஆசை இருக்கிறபடியால் அவரை "ம்ருத்யு" வென்று சொல்லப்படுகிறது. அவனால் இந்தக் காரியங்கள் மறைக்கப்பட்டிருந்தது. அந்த நான்முகன் காரியங்களை உண்டுபண்ணவேணுமென்று ஆலோசனைக்கு உரியமனதை நான் நல்லமனதை உடையவனாகக்கடவேன் என்ற எண்ணத்தால் உண்டுபண்ணினார். அந்த நான்முகன் தன்னைப் புகழ்ந்துகொண்டிருந்தார். அப்பொழுது ஜலங்கள் உண்டாயின. இந்த ஜலங்களை சொன்னது வேறு உபநிடதங்களுடைய ஒற்றுமையால் ஆகாயம், வாயு, அனல் இவைகளையும் சொல்லுகிறது. புகழ்ந்துகொண்டிருக்கிற என்னிடத்திலேயே ஜலமுண்டாயிற்று என்று எண்ணிற்றாதலால் அசுவமேத யாகத்துக்குரிய நெருப்புக்கு அர்க்கனென்று பெயர் உண்டாயிற்று.

(ரா - ஹா.) அசுவமேதத்துக்குரிய குண்டத்திலிருக்கும் நெருப்பில் அசுவமேதத்துக்குக் காலமான ஒருவருஷகாலத்திலும் ப்ரம்மமாகத் தியானிக்கச் சொல்லப்போகிறதாய் நெருப்பின் உற்பத்தியைச் சொல்லுகிறது. அல்லது அக்னி ப்ரம்மத்தின் சரீரமாதலால் அப்படி நினைந்து அக்னியில் ஹோமம் பண்ணும்பொருட்டு ப்ரம்மத்தினிடத்தில் அக்னிக்கு உற்பத்தியைச் சொல்லுகிறது. ப்ரத்யக்ஷமாய்த் தெரிகிற உலகங்கள் உற்பத்திகாலத்துக்கு முன் இல்லையென்றால் குடம் உற்பத்திகாலத்துக்கு முந்தி இருந்ததென்றால் மண்ணுருண்டை இருந்ததென்று அர்த்தம் ஆகிறதுபோல் காரணமாகிய வஸ்து இருந்ததென்று அர்த்தம் அதாவது "யஸ்யாக்ஷரம்ஶரீரம் யஸ்யம்ருத்யுஶ்ஶரீரம் ஏஷஸர்வபூதாந்தராத்மாஅபஹதபாப்மாதிவ்யோதேவஏகோநாராயண:" என்று சொல்லியிருக்கையால் "ஸூக்ஷ்மமாந" மூலப்பிரகிருதியைச் சரீரமாகவுடைய ப்ரம்மம் இருந்தது. அந்த ப்ரம்மம் உலகங்களை உடம்பாக உடையவனாய் ஆகக்கடவேனென்று யோசித்து மனஸ் என்கிற இந்திரியத்தைச் சிருஷ்டித்தது. மனஸ் என்றது எல்லா இந்திரியங்களையும் அதற்கு முன்னிட்ட ப்ரகிருதி மஹாந் அஹங்காரம் இவைகளையும் சொல்லுகிறது. இந்த ப்ரம்மம் தன்னைச் சந்தோஷப்படுத்தவேணுமென்று இச்சையுடையதாய் இருந்தது. அப்படி இச்சித்த ப்ரம்மத்தினிடத்தில் ஜலங்கள் உண்டாயின. சந்தோஷப்படுத்துவதில் எத்தனித்த என்னிடத்தில் ஜலம் உண்டாயிற்று என்று எண்ணிற்று. ஆகையால் அந்த ப்ரம்மத்துக்கு அர்க்கனென்ற பெயர் உண்டாயிற்று. அப்படியே "அர்கோவாஜஸாக்ரம்ஹீ" என்று ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருக்கிறது.

ஆபொவா அர்கஸ்தத்யதபாம் ஶர ஆஸீத்தத்ஸமஹந்யத ஸா ப்ருதிவ்யபவத்
தஸ்யாமஶ்ராம்யத்தஸ்ய ஶ்ராந்தஸ்ய தப்தஸ்ய தேஜோரஸோ நிரவர்ததாக்நி:॥

(ப - ம்.) ஆப: - ஜலங்கள், அர்க: - அக்நி, தத் - ஆதலால், யத் - யாதொரு, அபாம் - ஜலங்களுடைய, ஶர: - ஸாரமான பாகம், ஆஸீத் - இருந்ததோ, தத் - அது, ஸமஹந்யத - சேர்ந்தது, ஸா - அது, ப்ருதிவீ - பூமியாக, அபவத் - ஆச்சுது, தஸ்யாம் - அதில், அஶ்ராம்யத் - ப்ரயத்தனம் பண்ணினார், ஶ்ராந்தஸ்ய - ப்ரயத்தனம் பண்ணிக்கொண்டிருக்கிற, தப்தஸ்ய - ஆலோசித்துக்கொண்டிருக்கிற, தஸ்ய - அந்த பரமாத்மாவுக்கு, தேஜோரஸ: - தேஜஸ் என்கிற வஸ்துவின் ஸாரமான, அக்நி: - அக்நியானது, நிரவர்தத - உண்டாயிற்று.

(ஶம் - ஹா.) முன் அர்க்கனென்று சொல்லப்பட்டது. இப்பொழுது பின் வருமாறு வரிக்கப்படுகிறது. ஜலங்களே அர்க்கனென்று சொல்லப்படுகிறது. அதாவது

அர்க்கனென்று சொல்லப்பட்ட "அப்ஸுசாக்ரிஃப்ரதிஷ்டித:" அக்நியிடத்தில் உண்டாகிறது. அந்த ஜலங்களின் சாரமான பாகம் சேர்ந்து அண்டமுண்டாயிற்று. அந்த அண்டத்தில் ப்ரம்மன் இளைப்புடன் இருந்தான். அப்படி இளைப்புடைய அதினால் வேர்வையடைந்த ப்ரம்மனுக்கு தேஜஸ்ஸாகிற சாரம் உடம்பில் நின்றும் வெளியில் கிளம்பிற்று, அதுதான் அக்நி.

(ரா - ஹா.) அண்டம் விஷ்ணுவுக்குச் சரீரமான ஐம்பூதங்களினால் உண்டாக்கப்பட்ட தென்பதைச்சொல்லுவதற்காக ஐம்பூதங்களில் ஒன்றான ஜலம் விஷ்ணுவுக்கு உடலென்று சொல்லுகிறது. ஜலங்கள் அர்க்கனென்று சொல்லப்பட்ட விஷ்ணுவுக்கு உடல். அந்த ஜலங்களின் சாரம்சம் சேர்ந்து அதில் நின்றும் அண்டமுண்டாயிற்று. "தாஆபஸ்தத்தரண்மயமண்டமபவத்" என்று மஹோபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. அண்டமுண்டான பிறகு பரமாத்மாவானவர் ப்ரயத்தனம் பண்ணினார். அப்படி ப்ரயத்தனப்பட்ட ஆலோசனை பண்ணிக்கொண்டிருக்கிற பரமாத்மாவினுடைய உடம்பில் நின்றும் தேஜஸ்ஸுகளின் சாரமான அக்நி உண்டாயிற்று.

ஸத்ரேதாத்மானம்வ்யகுருதாதித்யம்த்ருதீயம்வாயும்த்ருதீயம்ஸ ஏஷப்ராணஸ்த்ரேதாவிஹித: தஸ்ய ப்ராசீதிக்சிரோஸௌசாஸௌ சேர்மௌ அதாஸ்ய ப்ரதீசீதிக் புச்சமஸௌசாஸௌசஸக்த்யௌதக்ஷிணாசோதீசீசபார்ஸ்வே த்யௌ: ப்ருஷ்டமந்தரிக்ஷமுதரமியமுரஸ்ஸஏஷோப்ஸுப்ரதிஷ்டிதோயத்ரக்வசைதிததேவப்ரதிதிஷ்டத்யேவம்வித்வாந் ॥௩॥

(ப - ம்.) ஸ: - அந்த அக்நி, ஆத்மாநம் - தன்னை, த்ரேதா - மூன்று விதமாக, ஆதித்யம் - சூரியனை, த்ருதீயம்-மூன்றாவதாக, வாயும் - காற்றை, த்ருதீயம் - மூன்றாவதாக, வ்யகுருத - பண்ணிற்று, ய: - யாதொரு அக்நியானது, த்ரேதா - அக்நி வாயு சூரியன் என்று மூன்றுவிதமாக, விஹித: - செய்யப்பட்டதோ, ஸஏஷ: - மேற்கூறிய இந்த அக்நியானது, ப்ராண: - ப்ரம்மம், தஸ்ய - அந்த அக்நிக்கு, சிர: - சிரஸானது, ப்ராசீதிக் - கிழக்குத் திக்கு, அஸௌசாஸௌச - வடகிழக்கு தென்கிழக்கு மூலைகள், ஈர்மௌ - கைகள், அஸ்ய - இந்த அக்நியினுடைய, புச்சம் - வால், ப்ரதீசீதிக் - மேற்குத்திசை, அஸௌசாஸௌச - வடமேற்குத் தென்மேற்கு மூலைகள், ஸக்த்யௌ - தொடைகள், தக்ஷிணாசோதீசீச - தென்திசை வடதிசைகளும், பார்ஸ்வே - பக்கங்கள், ப்ருஷ்டம் - முதுகு, த்யௌ: - சுவர்க்கம், உதரம் - வயிறு. அந்தரிக்ஷம் - ஆகாசம், உர: - மார்பு, இயம் - இந்தப் பூமி, ஸஏஷ: - மேற்கூறிய இந்த அக்நி, அப்ஸு - ஜலங்களில், ப்ரதிஷ்டித: - ஸ்தாபிக்கப்பட்டது, ஏவம் - இம்மாதிரி, வித்வாந்-அறிந்தவன், யத்ரக்வச - எந்த இடத்தில், ஏதி - போகிறானோ, ததேவ - அவ்விடத்திலே தானே, ப்ரதிதிஷ்டதி - இருப்பை அடைகிறான்.

(ஶம் - ஹா.) மேற்கூறிய சதுர்முக ப்ரம்மாவானவன் தன்னை மூன்று விதமாகப் பிரித்தான். அக்நி வாயு சூரியன் என்று அதில் முதன்மையான அசுவமேத யாகத்தில் உபயோகிக்கத்தக்க அக்நியிடத்தில் குதிரையிடத்திற்போலத் தியானம்பண்ணவேண்டியதைச்சொல்லுகிறது. முன்கூறிய அக்நியின் உற்பத்தி அதின் மேன்மையைச் சொல்ல வந்தது. அந்த அக்நிக்கு கிழககுத்திக்குத் தலை, வடகிழக்கு தென்மேற்கு மூலைகள் கைகள், மேற்குத்திக்குப் பின்பாசம், வடமேர்குத் தென்மேற்கு மூலைகள் தொடைகள், தெற்கு வடக்குத்திசைகள் பக்கங்கள், சுவர்க்கம் முதுகு, ஆகாசம் வயிறு, இந்தபூமி மார்புமேற்கூறிய உலகரூபமான அக்நி ஜலத்தில் நிலமையுடையது. "எமமிமேலோகா: அப்ஸ்வ

ந்த:'' என்று சொல்லியிருக்கிறபடியால் இம்மாதிரி அறிந்தவன் எந்த இடத்தில் போகிறானோ அவ்விடத்திலேயே நிலைமையை அடைகிறான் என்று மேற்கூறிய தியானத்திற்குரிய பயன்.

(௩ - ஹா.) மேற்கூறிய அக்நி மூன்றுவிதமாகப் பிரிக்கப்பட்டது. அக்நி வாயு சூரியன் என்ற இந்த மூன்றில் அக்நி முக்யம் அப்படிப் பிரிக்கப்பட்ட அக்நியே பரப்ரம்மம் என்று தியானிக்கவேண்டியது. ''ஏஷோऽக்நிரர்க'' என்று மேல்சொல்லப்போகிறபடியால் அந்த அக்நி தலை முதலிய அங்கங்களாக கிழக்குத்திசை முதலிய திசைகளாகத் தியானிக்கவேண்டும். அந்த அக்நி ஜலத்தில் இருப்பையுடையது. அதாவது அக்நியிடத்திலிருந்து ஜலம் உண்டாகிறதாதலால்.

ஸோகாமயத த்விதீயோ ம ஆத்மா ஜாயேதேதி ஸ மநஸா வாசம் மிதுநம் ஸமபவதஶநாயா ம்ருத்யுஸ்தத்யத்ரேத ஆஸீத் ஸ ஸம்வத்ஸரோऽபவத் ந ஹ புரா தத: ஸம்வத்ஸர ஆஸ தமேதாவந்தம் காலமபிப: யாவாந்ஸம்வத்ஸரஸ்தமேதாவத: காலஸ்ய பரஸ்தாதஸ்ருஜத | தம் ஜாதமபிவ்யாததாத்ஸ பாணகரோத்ஸைவ வாகபவத் ||௪||

(ப - ம்.) ஸ: - அந்த ம்ருத்யுவானது, மே - என்னுடைய, த்விதீய: - இரண்டாவதான, ஆத்மா - உடம்பு, ஜாயேத - உண்டாகக்கடவது, இதி - என்று, அகாமயத - ஆசைப்பட்டது, ஸ: அஶநாயா ம்ருத்யு: - மேற்கூறிய பசியுடன்கூடிய ம்ருத்யுவானது, மநஸா - மனதுடன், வாசம் - வேதமென்கிற வாக்கை, மிதுநம் - இரண்டாயிருக்கவை, ஸமபவத் - உண்டாக்கிற்று, தத் - அந்த இரட்டையில், யத் - யாதொரு, ரேத: - காரணம், ஆஸீத் - உண்டாயிற்றோ, ஸ: - அது, ஸம்வத்ஸர: - ஒருவருஷகாலத்திற்கு எஜமான தேவதையான ப்ரம்மமாவாக, அபவத் - உண்டாயிற்று, தத: புரா - அதற்குமுன், ஸம்வத்ஸர: - ஒருவருஷமென்கிற காலமானது, ந ஆஸ - இருக்கவில்லை, தம் - அந்தக் காரணவஸ்துவை, ஸம்வத்ஸர: - ஒருவருஷமானது, யாவாந் - எவ்வளவு காலமோ, ஏதாவந்தம் காலம் - இவ்வளவுகாலமாக, அபிப: - பரித்தது, தம் - மேற்கூறிய ப்ரம்மாவை, ஏதாவத: காலஸ்ய - இவ்வளவுகாலத்துக்கு, பரஸ்தாத் - பிறகு, அஸ்ருஜத - உண்டாக்கிற்று, ஜாதம் - பிறந்திருக்கிற, தமபி - அந்த ப்ரம்மாவைக் குறித்து, வ்யாததாத் - பிள்ளையாக எடுத்துக்கொண்டது, ஸ: - அந்த ப்ரம்மா, பாணகரோத் - பாண் என்கிற ஓசையை உண்டுபண்ணிற்று, ஸைவ - அந்த ஓசைதானே, வாக் - வியாகிருதி என்று சொல்லப்பட்ட வார்த்தையாக, அபவத் - ஆயிற்று.

(௪ - ஹா.) மிருத்யுவென்று சொல்லப்பட்ட ப்ரஜாபதி தன்னை மூன்றுவிதமாக பிரித்ததென்றும், அக்நியை உண்டுபண்ணிற்றென்றும் சொல்லியிருக்கிறதே அது இன்னகாரியம் செய்து உண்டாக்கிற்றென்கிறதை விவரிக்கிறது. மேற்கூறிய மிருத்யுவானது இரண்டாவது உடம்பு உண்டாகவேணுமென்று ஆசைப்பட்டு மனதினால் வேதங்களை ஆலோசித்து அதினால் முன் சிருஷ்டிகாலத்தில் நடந்ததைதெரிந்து ஒருவருஷகாலத்தை உண்டுபண்ணுகிறவரான ப்ரஜாபதியாக ஆனார். அதற்கு முன் ஒருவருஷகாலம் என்கிறதில்லை மேற்கூறிய அறிவை ஒருவருஷகாலம் தரித்து பிறகு மேற்கூறிய ப்ரஜாபதியை உண்டாக்கினார். மேற்கூறிய பிள்ளையைக் குறித்து பசியோடேகூடின ப்ரம்மாவானவர் வாயைத்திறந்தார். அந்தப் பிள்ளை மாண் என்கிற ஓசையைபண்ணினான் அதுவே சப்தமாக ஆச்சுது.

(ரா-பூ.) மேற்சொல்லியபடி அசுவமேத யாகத்திற்குரிய அக்நியைப் பரமாத்மாவாகத் தியானம் பண்ணவேண்டுமென்று சொல்லி அதின் பிறப்பையும் சொல்லி அசுவமேதயாகத்திற்கு உபயோகமுள்ள ஒருவருஷகாலத்தைப் பரமாத்மாவாகத் தியானம் பண்ணவேண்டுமென்று சொல்லுகிறது. மேற்கூறிய பரமாத்மாவானவர் முன் உண்டாக்கப்பட்ட அக்நியைக் காட்டிலும் இரண்டாவது சரீரம் உண்டாகவேண்டுமென்று நினைத்து மனதினால் வேதங்களை ஆலோசித்து, 'நாமரூபம்சபூதாநாம்ஆத்யாநாம்சப்ரபம்சநம்வேதஶப்தேப்யஏவாதௌதேவாதீநாம்சகாரஸ:' என்று சொல்லியிருக்கிறபடியே வேதங்களால் சிருஷ்டிக்கவேண்டிய வஸ்துக்களை அறிந்து, 'ஸம்வஸ்தரோவிஶ்வகர்மாஸம்வஸ்தர:ப்ரஜாபதி' என்று சொல்லியிருக்கிறபடியே ஒருவருஷகாலத்துக்குத் தேவதையான ப்ரம்மாவை உண்டாக்கினர். அதற்கு முன் மேற்கூறிய காலமில்லை. ஒருவருஷகாலத்திற்குப் பிறகு உண்டாக்கினர். அவனைப் பிள்ளையாக எடுத்துக்கொண்டார். மேற்கூறிய ப்ரஜாபதி மாண் என்கிற சப்தத்தைப் பண்ணினர். அதுவே வியாகிருதிகளாக ஆயிற்று.

ஸஐக்ஷதயதிவாஇமமபிமꣳஸ்யேகநீயோऽந்நங்கரிஷ்யஇதிஸதயா வாசாதேநாத்மநேதꣳஸர்வமஸ்ருஜதயதிதங்கிஞ்சர்சோயஜூꣳஷிஸாமாநி சந்தாꣳஸியஜ்ஞாந்ப்ரஜா:பஶூந்|ஸயத்யதேவாஸ்ருஜததத்தத்த்து மத்ரியதஸர்வம்வாஅத்தீதிததிதேரதிதித்வꣳஸர்வஸ்யைதஸ்யாத்தா பவதிஸர்வமஸ்யாந்நம்பவதியஏவமேததிதேரதிதித்வம்வேத||

(ப - ம்.) இமம்-இந்தப் பிள்ளையைச் சிருஷ்டித்து, அபிமꣳஸ்யே - செய்யவேண்டிய காரியத்தைச்செய்து முடித்தவனாக எண்ணப்போகிறேனே யானால், அந்நம் - சாப்பிடவேண்டிய வஸ்துவை, கநீய: - கொஞ்சமாக, கரிஷ்யே - பண்ணப்போகிறேன், இதி - என்று, ஸ: - அந்தப் பரமாத்மாவானவர், ஐக்ஷத - அறிந்தார், ஸ:-அந்தப் பரமாத்மாவானவர், தயா-மேற்கூறிய, வாசா - வாக்கினாலே, தேந - மேற்கூறிய, ஆத்மநா - ப்ரஜாபதியாகிற சரீரத்தினாலே, இதம் - இந்த, யத்கிஞ்ச - யாதொன்றுண்டோ, இதம்-இந்த, ஸர்வம் - எல்லாவற்றையும், அஸ்ருஜத - சிருஷ்டித்தார். ருச: - ருக்வேதங்களையும், யஜூꣳஷி - யஜுர்வேதங்களையும், ஸாமாநி - ஸாமவேதங்களையும், சந்தாꣳஸி - காயத்திரி முதலான சந்தஸ்ஸுகளையும், யஜ்ஞாந்-யாகங்களையும், ப்ரஜா: - ஜனங்களையும், பஶூந் - மிருகங்களையும், அஸ்ருஜத - உண்டாக்கினர், ஸ: - அந்தப் பரமாத்மாவானவர், யத்யத் - எந்த எந்த வஸ்துவை, அஸ்ருஜத - உண்டாக்கினரோ, தத்தத் - அந்தந்த வஸ்துவை, அத்தும் - சாப்பிடுகிறதற்கு, அத்ரியத-மனதைப் பண்ணிற்று, யத்-யாதொரு காரணத்தினால், ஸர்வம் - எல்லாவற்றையும், அத்தி - சாப்பிடுகிறதோ, தத் - ஆதலால், அதிதே: - அதிதி என்று சொல்லப்பட்ட மேற்கூறிய மிருத்யுவுக்கு, அதிதித்வம்-அதிதி என்று சொல்லப்படுகை, ய:-எவன், ஏவம் - மேற்கூறியபடி, அதிதே: - அதிதி என்று சொல்லப்பட்ட மேற்கூறிய மிருத்யுவுக்கு, அதிதித்வம் - அதிதி என்று சொல்லப்படுகையை, வேத - அறிந்தானோ, ஸ: - அவன், ஏதஸ்ய-இந்த, ஸர்வஸ்ய - எல்லா வஸ்துவுக்கும், அத்தா - சாப்பிடுகிறவனாக, பவதி - ஆகிறான், அஸ்ய - இவனுக்கு, ஸர்வம் - எல்லா வஸ்துவும், அந்நம் - சாப்பிடத்தகுந்ததாக, பவதி-ஆகிறது.

(ஶ௦ - ஷா.) மேற்கூறிய பிள்ளையை சாப்பிட எத்தனம் பண்ணியிருந்தபோதி லும் ப்ரம்மாவானவர் இந்த ப்ரஜாபதியைச் சொல்லப்போகிறேமேயானால் சாப்பிடத் தக்க வஸ்து சுகல்பமாய்விடும் என்று நினைத்து மனதினால் வேதங்களை ஆலோசித்து எல்லாவஸ்துக்களையும் ஸிருஷ்டித்தார். தன்னால் ஸிருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களைச் சாப் பிடவேண்டுமென்று மனது பண்ணினார். ஆதலால் எல்லாவற்றையும் சாப்பிடுகிறபடி யால் அதிதி என்று பெயருண்டாயிற்று. எவன் மேற்கூறியபடி அதிதி என்கிற பெயரை அறிகிறானோ அவனுக்கு எல்லாம் சாப்பிடத்தகுந்ததாய் விடுகிறது என்று இந்த அறிவுக் குப் பயன் சொல்லுகிறது.

(ரா - ஊா) பரமாத்மாவானவர் இந்த ப்ரம்மாவைச் ஸிருஷ்டித்துக் காரியம் முடிந் ததாக எண்ணுவேனேயானால் சாப்பிடத்தகுந்த வஸ்து சொற்பமாய் விடுமென்று நினை த்து, 'ஸபூரிதிப்பாஹாத்மூதெளவேதமயீ ஸ்ப்யாயதன்ஸர்வாஃப்ரஜாஃஅஸ்ருஜத' என்று சொ ல்லுகிறபடியே மேற்கூறிய வியாகிருதி என்று சொல்லப்பட்ட வாக்குடன் அந்த ப்ரஜா பதி என்கிற ஆத்மாவினாலே எல்லா வஸ்துக்களையும் ஸிருஷ்டித்தான ஸிருஷ்டித்த வஸ் துக்களை ஸம்ஹரிக்கைக்கு மனதைப்பண்ணிற்று. ஸர்வ வஸ்துக்களையும் ஸம்ஹரிக்கிறபடி யால் அதிதி என்று பெயருண்டாயிற்று. எவன் மேற்கூறியபடி அதிதி என்ற பெயரை அறிகிறானோ, அவனுக்கு எல்லா வஸ்துவும் அனுபவிக்கத்தகுந்ததாய் ஆய்விடுகிறது என்று இந்த அறிவுக்குப் பயன் சொல்லுகிறது.

ஸோகாமயத பூயஸா யஜ்ஞேந பூயோயஜேயேதி ஸோஶ்ராம்யத்ஸ தபோதப்யத தஸ்ய ஶ்ராந்தஸ்ய தப்தஸ்ய யஶோவீர்யமுதக்ராமத்। ப்ராணாவை யஶோவீர்யம் தத்ப்ராணேஷூத்க்ராந்தேஷு ஶரீரம் ஶ்வயிதுமத்ரியத தஸ்ய ஶரீர ஏவ மந ஆஸீத்॥ ௬॥

(ப - ம்.) ஸஃ - அந்த ப்ரம்மாவானவன், பூயஸா - பெரிதான, யஜ்ஞேந - யாகத்தினாலே, பூயஃ - பரமாத்மாவை, யஜேய - யாகம் பண் ணக்கடவேன், இதி - என்று, அகாமயத - எண்ணினான், ஸஃ - அந்த ப்ரம் மனானவன், அஶ்ராம்யத் - ஸிரமத்தையடைந்தான், ஶ்ராந்தஸ்ய - ஸிரமத்தை யடைந்தும், தப்தஸ்ய - தவம் புரிந்துகொண்டும் இருக்கிற, தஸ்ய - அந்த ப்ரம்மனுடைய, யஶோவீர்யம் - யசோவீர்யம் என்றும் பெயர்கொண்ட இந்திரியங்கள், உதக்ராமத் - வெளிக்கிளம்பின, ப்ராணாவை - இந்திரிய ங்களே, யஶோவீர்யம் - கீர்த்திக்கும் பலத்துக்கும் காரணமாகையால் யசோ வீர்யம் என்று சொல்லப்பட்டது; ப்ராணேஷு - இந்திரியங்கள், உத்க்ரா ந்தேஷு - மேற்கிளம்பின வளவில், தத் - மேற்கூறிய, ஶரீரம் - சரீர மானது, ஶ்வயிதும் - வீங்குகைக்கு, அத்ரியத - தலைப்பட்டது, தஸ்ய - அந்த ப்ரம்மனுக்கு, ஶரீர ஏவ - சரீரத்திலேயே தானே, மநஃ - மனதா னது, ஆஸீத் - இருந்தது,

(ஶ௦ - ஷா.) அசுவமேதமென்கிற பெயருக்கும் அர்த்தத்தை விளக்கிறேது.

(ரா - ஊா.) அசுவமேத யாகத்திற்குரிய அக்நியினுடையவும் ஒருவருஷ காலத்தி னுடையவும் பிறப்பைச் சொல்லிக் குதிரையின் பிறப்பையும் அசுவமேதமென்கிற பெய ரின் பொருளையும் அசுவமேத யாகத்தைச் சூரியனைத் தியானிக்கவேண்டுமென்பதை யும் சொல்லுகிறது.

ஸோகாமயத மேத்யம் ம இதஂ ஸ்யாதாத்மந்வ்யநேந ஸ்யாமிதி। ததோஶ்வஃ ஸமபவத்யதஶ்வத்தந்மேத்யமபூதிதி ததேவாஶ்வமேதஸ்யாஶ்வமேதத்வம்॥ ஏஷ

ஷ ஹவா அஸ்வமேதம் வேத | ய ஏநமேவம் வேத| தமநவருத்த்யைவாமந்யத| தம் ஸம்வத்ஸரஸ்ய பரஸ்தாதாத்மந ஆலபத|பஸூந்தேவதாப்ய: ப்ரத்யௌஹத்| தஸ்மாத்ஸர்வதேவத்யம்ப்ரோக்ஷிதம்ப்ராஜாபத்யமாலபந்தே | ஏஷவா அஸ்வமேதோய ஏஷ தபதி தஸ்ய ஸம்வத்ஸர ஆத்மாயமக்நிரர்கஸ்தஸ்யேமேலோகா ஆத்மாநஸ்தாவேதாவர்காஸ்வமேதௌ ஸோபுநரேகைவதேவதாபவதிம்ருத்யுரேவாபபுநர்ம்ருத்யும் ஜயதிநைநம்ம்ருத்யுராப்நோதி ம்ருத்யுரஸ்யாத்மாபவத்யேதாஸாம் தேவதாநாமேகோபவதி ||எ||

(ப - ம்) ஸ: - அந்த ப்ரம்மனைவன், மே-என்னுடைய, இதம்-இந்தச் சரீரமானது, மேத்யம் - யாகத்திற்குரியதாக, ஸ்யாத் - ஆகட்டும், அநேந-இந்த உடம்பினால், ஆத்மந்வீ - சரீரத்தையுடையவனாக, ஸ்யாம் - ஆகக்கடவேன், இதி - என்று, அகாமயத - பண்ணினான், தத: -அந்தச் சரீரத்தினிடத்தில், அஸ்வ: - குதிரையாக, ஸமபவத் - உண்டானார், யத் - யாதொரு காரணத்தினால், அஸ்வயத் - வீங்கிற்றோ, தத் - அதுவே, மேத்யம் - யாகத்திற்குரியதாக, அபூத் - ஆயிற்றோ, இதி - என்று, ததேவ - அந்தக் காரணத்தினாலேயே, அஸ்வமேதஸ்ய-குதிரையின் ரூபமான ப்ராஜாபதிக்கு, அஸ்வமேதத்வம் - அசுவமேதமென்கிற பெயருடைய, ய: - எவன், ஏநம் - இந்த அசுவமேதக் குதிரையை, ஏவம் - இந்த ப்ரகாரமாக, வேத - அறிகிறானோ, ஏஷ:-ஹவா - இவனே, அஸ்வமேதம் - அசுவமேதத்தை, வேத-அறிகிறான், தம்-அந்தக் குதிரையை, அநவருத்த்யைவ-கட்டாமலே, அமந்யத - (இதினால் யாகம்பண்ணுவோமென்று) எண்ணினார், தம் - அந்தக் குதிரையை, ஸம்வத்ஸரஸ்ய பரஸ்தாத் - ஒருவருஷத்துக்குமேல், ஆத்மநே - தன்பொருட்டு, ஆலபத - சொன்னார், பஸூந் - வேறு பசுக்களை, தேவதாப்ய: - தேவர்களின் பொருட்டு, ப்ரத்யௌஹத்-பிரித்துக் கொடுத்தார், தஸ்மாத்-ஆகையால், ஸர்வதேவத்யம் - எல்லாத் தேவர்களுக்கும் தலைவரான ப்ரம்மாவுக்குரிய, ப்ரோக்ஷிதம் - புரோக்ஷம் செய்யப்பட்ட, ப்ராஜாபத்யம் - ப்ரம்மாவுக்குரிய குதிரையை, ஆலபந்தே - சொல்லுகிறார்கள், ய ஏஷ: - யாதொரு இந்தச் சூரியன், தபதி - ப்ரகாசிக்கிறானோ, ஏஷவா - இந்தச் சூரியனே, அஸ்வமேத: - அசுவமேதயாகம், தஸ்ய - அசுவமேதமென்று பெயர்கொண்ட குதிரைக்கு, ஸம்வத்ஸர: - வருஷமானது, ஆத்மா - உடம்பு, அயம் - இந்த, அக்நி: - அசுவமேத யாகத்திற்குரிய அக்நியானது, அர்க: - அர்க்கனென்று சொல்லப்பட்ட பரமாத்மா, தஸ்ய - இந்த அக்நிக்கு, இமே-இந்த, லோகா: - மூன்று லோகங்களும், ஆத்மாந: -சரீரங்கள், ஏதௌ-இந்த, அர்காஸ்வமேதௌ - அக்நிக் குதிரை இதுகள், தௌ - மேற்கூறிய பெருமையுடையதுகள், ஸா தேவதா-அந்தத் தேவதையானது, ம்ருத்யு:-ம்ருத்யுவென்று சொல்லப்பட்ட பரப்ரம்மம், ஏகைவ - ஒன்றாகவே

ஹவதி - ஆகிறது (எவன் இப்படி அறிகிறனே) அவன், புநஃ - திரும்ப வும், ம்ருத்யும் - மரணத்தை, ஜயதி - ஜயிக்கிறன், ஏநம் - இவனை, ம்ருத்யுஃ - ஸம்ஸாரமானது, நாப்நோதி - அடைகிறதில்லை. அஸ்ய - இவனுக்கு, ம்ருத்யுஃ - பரமாத்மாவானவர், ஆத்மா - அந்தர்யாமியாக, பவதி - ஆகிறார், ஏதாஸாம் - இந்த, தேவதாநாம் - தேவதைகளுக்குள், ஏகஃ - ஒருவனாக, பவதி - ஆகிறன்.

ஏதாநயாயந்தேஷு இங்கு, ஆத்மநே - தன்பொருட்டென்றும், ஏஷோவா அச்வமேதஃ என்கிற இடத்தில் சூரியனை அசுமேதத்துக்குப் பலமாகவும் பலத்துக்கும் யாகத்துக்கும், அபேதம்-சொல்லுகிற தென்றும், அயமக்நி ரர்க்கஃ-என்கிற விடத்தில் அக்நி காரணமென்றும், ஸோபுநஃ-என்கிற வாக்கியத்தில் முன் மிருத்யுஸ்வரூபமாய் ஒன்றுயிருந்ததுவே யாகம்முடிவின் பொருட்டு, ஸத்ரேதா ஆத்மாநம் வ்யகுருத - என்கிறபடியே மூன்றுவிதமாகப்பிரிக்கப்பட்டதென்றும் திரும்பவும் ஒன்ருக இருக்கிறதென்றும், ம்ருத்யுர் அஸ்ய-என்கிற இடத்தில் மிருத்யுவும் இவனும் ஒன்ருக ஆகிறரென்றும் சங்கரபாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆத்மநே-என்ற இடத்தில் அந்தர்யாமியான பரமாத்மாவுக்கு என்றும், ஏஷோவா-என்ற இடத்தில் அசுவமேதத்தைச் சூரியனுகத் தியானிக்கவேண்டுமென்றும், ஸோபுநஃ-என்கிற இடத்தில் இந்த யாகத்தினுல் திருப்தி செய்விக்கவேண்டிய தேவதை பரமாத்மா ஒன்றே என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. ராமாநுஜபாஷ்யத்தில்

அத த்ருதீயாத்யாயே த்ருதீயம் ப்ராஹ்மணம்.

த்வயா ஹ ப்ராஜாபத்யா தேவாச்சாஸுராச்ச | ததஃ காநீயஸா ஏவ தேவா ஜ்யாயஸா அஸுரா: த ஏஷு லோகேஷ்வஸ்பர்தந்த தே ஹ தேவா ஊசுர் ஹந்தாஸுராந் யஜ்ஞ உத்கீதேநாத்யயாமேதி ||க||

(ப - ம்.) ப்ராஜாபத்யாஃ - ப்ரஜாபதியின் பிள்ளைகள் கைப்பட்டவர்கள், தேவாஃ - தேவர்களென்ன, அஸுராஃ - அசுரர்களென்றும், த்வயாஃ - இருவகைப்பட்டவர்கள், ததஃ - அவர்களுக்குள், தேவாஃ-தேவர்கள், காநீயஸாஃ - குறைந்தவர்கள், அஸுராஃ - அசுரர்கள், ஜ்யாயஸாஃ-பெருத்தவர்கள், தே - அவர்கள், ஏஷு - இந்த, லோகேஷு - லோகங்கள் விஷயத்தில், அஸ்பர்தந்த - சண்டையிட்டார்கள், தே - அந்த, தேவாஃ ஹ - தேவர்களோ வென்றால், அஸுராந் - அசுரர்களை, யஜ்ஞே - யாகத்தைச் சேர்ந்த, உத்கீதேந-உத்கானத்தைச் செய்யும் உத்காதாவினுலே, அத்யயாம- ஜெயிப்போம், இதி - என்று, ஊசுஃ - சொன்னுர்கள்.

(ஸ - ஸா.) முற்கூறிய ஞானத்தோடேகூடிய கர்மங்களுக்கு ப்ரம்மத்தோடு ஒன்ருவதே பயனென்று சொல்லி அதை விவரிக்க 'உத்கீயப்ராம்மண மென்கிற மூன்ருவது 'ப்ராம்மணம்' ஆரம்பிக்கப்படுகிறது. ஆனல் 'மிருத்யுமதிக்ராந்த' என்று மிருத்யுவை தாண்டியிருக்கிறதாகச் சொல்லி யிருக்கிறது. விரோதிக்காதே என்னில் விரோதிக்காது. அந்த வாக்கியத்துக்குப் பாபத்தைத் தாண்டி யிருக்கிறனென்று பொருளானதால் பரப

மாவது எது, அதின் உற்பத்தி எதனிடத்திலிருந்து அதைத் தாண்டுவது எத்தால் என்கிற கேள்விகளின பதில்களை விவரமாக சொல்லி 'ஆப்யாயிகை' ஆரம்பிக்கப்படுகிறது. ப்ரம்மாவின் பிள்ளைகள் தேவதைகள் அசுரர்கள் இரண்டு பேர்கள் அதாவது ப்ரம்மாவின் அவயவங்களான வாயு முதலான உறுப்புகளே சாஸ்திரத்தில் சொல்லிய அறிவு கர்மங்கள் இவைகளோடே கூடியவைகள் தேவர்களென்றும் அதல்லாமல் லோகத்தில் காண்கையாலும் ஊகத்தினுலும் உண்டாக்கப்பட்ட இஹலோகசத்திய பலன்களைக் கொடுக்கத்தக்க கர்மங்கள் அறிவுகள் இவைகளோடே கூடியவைகள் அசுரர்களென்று சொல்லப்படுகின்றன. இதில் உலகத்தில் சாஸ்திரத்தினுலுண்டாக்கப்பட்ட அறிவு கர்மம் இவைகளைப் பார்க்கிலும் இஹலோகத்திய பயன்களைக் கொடுக்கத்தக்க அறிவுகளும் கர்மங்களும் அதிகமாதலால் தேவதைகள் கொஞ்சமென்றும் அசுரர்கள் அதிகமென்றும் சொல்லியிருக்கின்றன. இவை ஒன்றுக்கொன்று இந்த உலகங்களில் சண்டைப் போட்டுக்கொண்டன. அதாவது மேற்கூறிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட அறிவுகளும் கர்மங்களும் அதிகரிக்கின்றன. அப்பொழுது தேவர்களுக்கு ஜெயமும் அசுரர்களுக்குத் தோல்வியும் உண்டாகின்றன. அதல்லாமல் எப்பொழுது இஹலோகத்திய பலன்களைக் கொடுக்கத்தக்க அறிவுகளும் கர்மங்களும் அதிகரிக்கின்றனவோ அப்பொழுது தேவர்களுக்குத் தோல்வியும் உண்டாகிறது. தேவர்களுக்கு ஜெயமுண்டாகையில் ப்ரம்மாவாக ஆய்விடுகிற வரையில் உயர்ந்த பதவி உண்டாகிறது. அசுரர்களுக்கு ஜெயமுண்டாகையில் ஸ்தாவரமாக ஆய்விடுகிற வரையில் தாழ்ந்த பதவி உண்டாகிறது. இரண்டும் சரியாயிருக்கையில் மனுஷ்யனாயிருக்கை உண்டாகிறது. இப்படி அசுரர்கள் அதிகமாகையால் அவமானமடைந்த தேவர்கள ஜ்யோதிஷ்டோம யாகத்தில் உத்கீதத்தைப் பாடுகிற உத்காதாவையடைந்து அசுரர்களை ஜெயிப்போமென்று சொல்லிக்கொண்டார்கள். உத்காதாவை அடைதலாவது மேல் சொல்லப்போகிற மந்திரங்களை ஜெபிக்கிறதாகிற கர்மங்களினுலும் மேல் சொல்லப்போகிற அறிவுகளினுலும்.

(ரா - ஹா.) அசுமேதயாகத்திற்கு அங்கமாகிய உத்காதாவினிடத்தில் முக்கிய ப்ராணனைத் தியானம் பண்ணவேண்டியதைச் சொல்லவேண்டியதற்காக 'ஆக்யாயிகை' சொல்லப்படுகிறது. ப்ரஜாபதிக்குப் பிள்ளைகளான தேவர்கள் அசுரர்கள் இவர்களில் தேவர்கள் கொஞ்சமாயும் அசுரர்கள் அதிகமாயுமிருந்ததால் மூன்று உலகங்களின் அரசாளுகைக்காக இரண்டு பேர்களும் சண்டைபோட்டுக்கொண்டார்கள். அப்பொழுது தேவர்கள் எக்ஞத்துக்கு அங்கமான உத்காதாவை ப்ராணனைத் தியானம்பண்ணி அதனுல் அசுரர்களை ஜெயிப்போம் என்று சொன்னார்கள். இங்கு 'உத்கீதேந' என்றதற்கு உத்கீதத்தைப் பாடுகிற உத்காதாவினுலே என்று அர்த்தம் சொள்ளவும்.

தே ஹ வாசமூசு꞉ த்வம் ந உத்³கா³யேதி ததே²தி தேப்⁴யோ வாகு³த³கா³யத்³ யோ வாசி போ⁴க³ஸ்தம் தே³வேப்⁴ய ஆகா³யத்³ யத்கல்யாணம் வத³தி ததா³த்மநே தே விது³ரநேந வை ந உத்³கா³த்ராத்யேஷ்யந்தீதி தமபி⁴த்³ருத்ய பாப்மநாவித்⁴யந் ஸ ய꞉ ஸ பாப்மா யதே³வேத³மப்ரதிரூபம் வத³தி ஸ ஏவ ஸ பாப்மா ||

(ப - ம்.) தே ஹ - அந்தத் தேவதைகள், வாசம் - வாக்குக்கு எஜமானத் தேவதையை, த்வம் - நீ, ந꞉ - எங்களுக்கு, உத்³கா³ய - உத்காதா செய்கிற வேலையைச் செய், இதி - என்று. ஊசு꞉ - சொன்னார்கள், ததே²தி - அப்படி யென்று, தேப்⁴ய꞉ - அந்தத் தேவதைகளின் பொருட்டு, வாக் - வாக் தேவதையானது, உத³கா³யத் - பாடிற்று, வாசி - வார்த்தையில், ய꞉ - யாதொரு, போ⁴க³꞉ - சுகமோ, தம் - அத்தை, தே³வேப்⁴ய꞉ - தேவர்களின் பொருட்டு, ஆகா³யத் - பாடிற்று, யத் - யாதொரு, கல்யாணம் - நல்ல வார்த்தையை, வத³தி - சொல்லுகிறதோ, தத் - அதனை, ஆத்மநே - தன்பொருட்டு, ஆகா³யத் - பாடிற்று, தே - அந்த அசுரர்கள், அநேந - இந்த, உத்³கா³த்ரா - உத்காதாவினுலே, ந꞉ - நம்பளை, அத்யேஷ்யந்தி - ஜெயிக்கப்போகி

னார்கள், இதி - என்று, விது: - அறிந்தார்கள், தம் - அந்த உத்காதாவை, அபித்ருத்ய - சீக்கிரமாக அடைந்து, பாப்மனா - பாபத்தோடே, அவித்யன் - சேர்த்தார்கள், ய: - யாதொரு உத்காதாவானவன், ஸ பாப்மா - பாபத்தோடு கூடினானே, ஸ: - அந்த உத்காதா, யத் ஏவ இதம் - யாதொரு இந்த அப்ரதிரூபம் - தகாத வார்த்தையை, வததி - சொல்லுகிறானே, ஸ ஏவ - அப்படிப்பட்டவன்தானே, ஸ பாப்மா - பாபத்தோடே கூடினவன்.

(ஶா - பா.) சாஸ்திரத்தினலுண்டான அறிவுகளினலும் கர்மங்களினலுண்டான நல்ல வார்த்தை சொல்லுகிறதாகிற செயலையுடைய வாக்கை இந்த உலகத்தின் பயனையுண்டாக்கத்தக்க அறிவுகளும் கர்மங்களும் சேர்ந்து பாபத்தை உண்டெண்ணி, அதினல் பொய் கோள் முதலான தகாத வார்த்தையைச் சொல்லும்படி செய்தது.

(ரா - பா.) தேவதைகள் எக்ஞத்துக்குரிய உத்காதாவை வாக்தேவன் த்யாகத் தியானம் பண்ணினர்கள். அப்பொழுது தேவர்களுக்குப் பாட்டினலுண்டான சுகமுண்டாயிற்று அதை அசுரர்களறிந்து வாக்கைப் பாபத்தோடே கூட்டினர்கள். அப்பொழுது வாக்குப் பொய் முதலாயின சொல்லிற்று. ஆகையால் ஒவ்வொரு இந்திரியங்களுக்கும் கெட்ட செய்கையில் எத்தனிர்தல் அசுரத்தன்மையைச் சேர்ந்ததென்று கருத்து.

அத ஹ ப்ராணமூசுஸ்த்வம் ந உத்காயேதி ததேதி தேப்ய ஏஷ ப்ராண உதகாயத்யோ ப்ராணே போகஸ்தம் தேவேப்ய ஆகாயத்யத்கல்யாணம் ஜிக்ரதி ததாத்மனே தே விதுரனேன வை ந உத்காத்ராத்யேஷ்யந்தீதி தமபித்ருத்ய பாப்மனாவித்யன்ஸ யஸ்ஸ பாப்மா யதேவேதமப்ரதிரூபம் ஜிக்ரதி ஸ ஏவ ஸ பாப்மா ||௪||

(ப - ம.) அத ஹ - அதற்குப் பிறகு, ப்ராணம் - மூக்குக்கு அபிமானித் தேவதையை, த்வம் - நீ, ந: - எங்களுக்கு, உத்காய - உத்காதாவின் வேலையைச் செய், இதி - என்று, ஊசு: - சொன்னார்கள், ததேதி - அப்படி என்று, தேப்ய: - அந்தத் தேவர்களின் பொருட்டு, ப்ராண: மூக்கானது, உதகாயத் - பாடிற்று, ப்ராணே - மூக்கில், ய: - யாதொரு, போக: - சுகமோ, தம் - அதை, தேவேப்ய: - தேவர்களின் பொருட்டு, ஆகாயத் - பாடிற்று, யத் - யாதொரு, கல்யாணம் - நல்ல வஸ்துவை, ஜிக்ரதி - மோருகிறதோ, தத் - அதை, ஆத்மனே - தன்பொருட்டு, ஆகாயத் - பாடிற்று, தே - அந்த அசுரர்கள், அனேன - இந்த, உத்காத்ரா - உத்காதாவினலே, ந: - நம்மை, அத்யேஷ்யந்தி - ஜெயிக்கப்போகிறார்கள், இதி - என்று, விது: - அறிந்தார்கள், தம் - அந்த உத்காதாவை, அபித்ருத்ய - சீக்கிரமாக அடைந்து, பாப்மனா - பாபத்தோடே, அவித்யன் - சேர்த்தார்கள், ய: - யாதொரு உத்காதாவானவன், ஸ பாப்மா - பாபத்தோடு கூடினானே, ஸ: - அந்த உத்காதா, யத் ஏவ இதம் - யாதொரு இந்த, அப்ரதிரூபம் - தகாத வஸ்துவை, ஜிக்ரதி - மோருகிறானே, ஸ ஏவ - அப்படிப்பட்டவன் தானே, ஸ பாப்மா - பாபத்தோடே கூடினவன், சங்கர ராமானுஜ பாஷ்யம் முன்போலவே.

அத ஹ சக்ஷுரூசுஸ்த்வம் ந உத்காயேதி ததேதி தேப்யஶ்சக்ஷுருதகா-
யத் யஶ்சக்ஷுஷி போகஸ்தம் தேவேப்ய ஆகாயத் யத்கல்யாணம் பஶ்யதி தத்
ஆத்மநே தே விதுரநேந வை ந உத்காத்ராத்யேஷ்யந்தீதி தமபித்ருத்ய
பாப்மநாவித்யன் ஸ யஸ்ஸ பாப்மா யதேவேதமப்ரதிரூபம் பஶ்யதி ஸ ஏவ
ஸ பாப்மா ||கங||

(ப் - ம.) அத ஹ-அதற்குப் பிற்பாடு, சக்ஷு:-கண்ணுக்கபிமான தேவ
தையை, த்வம் - நீ, ந: - எங்களுக்கு, உத்காய - உத்காதாவின் வேலை செய்,
இதி - என்று, ஊசு: - சொன்னார்கள், ததேதி - அப்படி யென்று, தே
ப்ய: - அந்தத் தேவர்களின் பொருட்டு, சக்ஷு:-கண்ணனது, உதகாயத்-
பாடிற்று, சக்ஷுஷி - கண்ணில், ய: - யாதொரு, போக: - சுகமோ, தம்-
அதை, தேவேப்ய: - தேவர்களின் பொருட்டு, ஆகாயத் - பாடிற்று, யத்-
யாதொரு, கல்யாணம் - நல்ல வஸ்துவை, பஶ்யதி - பார்க்கிறதோ, தத் -
அதை, ஆத்மநே - தன்பொருட்டு, ஆகாயத் - பாடிற்று, தே - அந்த அசு
ரர்கள், அநேந - இந்த, உத்காத்ரா - உத்காதாவினலே, ந: - நம்மை,
அத்யேஷ்யந்தி - ஜெயிக்கப்போகிறார்கள், இதி - என்று, விது: - அறிந்தார்
கள், தம் - அந்த உத்காதாவை, அபித்ருத்ய-சீக்ரமாக அடைந்து, பாப்மநா-
பாபத்தோடே, அவித்யன் - சேர்த்தார்கள், ய: - யாதொரு உத்காதாவான
வன், பாப்மா - பாபத்தோடு கூடினனே, ஸ: - அந்த உத்காதா, யத்-
ஏவ-இதம் - யாதொரு இந்த, அப்ரதிரூபம்-தகாத வஸ்துவை, பஶ்யதி-
பார்க்கிறானே, ஸ:-ஏவ - அப்படிப்பட்டவன் தானே, பாப்மா - பாபத்
தோடு கூடினவன், சங்கர ராமாநுஜபாஷ்யம் முன்போலவே.

அத ஹ ஶ்ரோத்ரமூசுஸ்த்வம் ந உத்காயேதி ததேதி தேப்ய: ஶ்ரோத்ர
முதகாயத் ய: ஶ்ரோத்ரே போகஸ்தம் தேவேப்ய ஆகாயத்யத்கல்யாணம்
ஶ்ருணோதி தத் ஆத்மநே தே விதுரநேந வை ந உத்காத்ராத்யேஷ்யந்
தீதி தமபித்ருத்ய பாப்மநாவித்யன் ஸ யஸ்ஸ பாப்மா யதேவேதமப்ரதிரூபம்
ஶ்ருணோதி ஸ ஏவ ஸ பாப்மா ||கச||

(ப் - ம.) அத ஹ-அதற்குப் பிற்பாடு, ஶ்ரோத்ரம் - காதுக்கபிமான
தேவதையை, த்வம் - நீ, ந: - எங்களுக்கு, உத்காய - உத்காதாவின் வேலை
யைச் செய், இதி - என்று, ஊசு: - சொன்னார்கள், ததேதி - அப்படி
யென்று, தேப்ய: - அந்தத் தேவர்களின் பொருட்டு, ஶ்ரோத்ரம்-காதானது,
உதகாயத் - பாடிற்று, ஶ்ரோத்ரே - காதில், ய: - யாதொரு, போக: -
சுகமோ, தம் - அதை, தேவேப்ய: - தேவர்களின் பொருட்டு, ஆகாயத்-
பாடிற்று, யத் - யாதொரு, கல்யாணம் - நல்ல வஸ்துவை, ஶ்ருணோதி -
கேட்கிறதோ, தத் - அதை, ஆத்மநே-தன்பொருட்டு, ஆகாயத்-பாடிற்று,

தே - அந்த அசுரர்கள், அநேந - இந்த, உத்காத்ரா - உத்காதாவினலே, ந: - நம்மை, அதிஷ்யந்தி - ஜெயிக்கப்போகிருர்கள், இதி - என்று, விது: - அறிந்தார்கள், தம் - அந்த உத்காதாவை, அபித்ருத்ய - சீக்ரமாக அடைந்து, பாப்மநா - பாபத்தோடே, அவித்யந் - சேர்த்தார்கள், ய: - யாதொரு உத்காதாவானவன், ஸபாப்மா - பாபத்தோடு கூடினனே, ஸ: - அந்த உத்காதா, யதேவேதம் யாதொரு இந்த, அப்ரதிரூபம்- தகாத வஸ்துவை, ஶ்ருணோதி - கேட்கிறதோ, ஸஏவ - அப்படிப்பட்டவன் தானே, ஸபாப்மா - பாபத்தோடு கூடினவன், சங்கர ராமாநுஜபாஷ்யம் முன்போலவே.

அத ஹைநந்மந ஊசுஸ்த்வந உத்காயேதி ததேதி தேப்யோ மந உதகாயத்ய: மநஸி போகஸ்தந்தேவேப்ய ஆகாயத்யத்கல்யாணம் ஸங்கல்பயதி தத் ஆத்மநே தேவிதுரநேந வைந உத்காத்ராதேஷ்யந்தீதி தமபித்ருத்ய பாப்மநாவித்யந் ஸயஸ்ஸபாப்மாயதேவேதமப்ரதிரூபம் ஸங்கல்பயதிஸ ஏவஸபாப்மைவமு கல்வேதா தேவதா: பாப்மபிருபாஸ்ருஜந்நேவமேநா: பாப்மநாவித்யந் ‖கரு‖

(ப - ம்.) அத ஹ - அதற்குப் பிற்பாடு, மந: - மனதுக்கபிமான தேவதையை, த்வம் - நீ, ந: - எங்களுக்கு, உத்காய - உத்காதாவின் வேலையைச் செய், இதி - என்று, ஊசு: - சொன்னர்கள், ததேதி-அப்படி யென்று, தேப்ய: - அந்தத் தேவர்களின் பொருட்டு, மந: - மனது, உதகாயது - பாடிற்று, மநஸி - மனதில், ய: - யாதொரு, போக: - சுகமோ, தம் - அதை, தேவேப்ய: - தேவர்களின் பொருட்டு, ஆகாயத் - பாடிற்று, யத்- யாதொரு, கல்யாணம் - நல்ல வஸ்துவை, ஸங்கல்பயதி - எண்ணுகிறதோ, தத் - அதை, ஆத்மநே - தன்பொருட்டு, ஆகாயத் - பாடிற்று, தே-அந்த அசுரர்கள், அநேந - இந்த, உத்காத்ரா - உதகாதாவினலே, ந: - நம்மை, அதிஷ்யந்தி - ஜெயிக்கப்போகிருர்கள், இதி - என்று, விது: - அறிந்தார்கள், தம் - அந்த உத்காதாவை, அபித்ருத்ய - சீக்ரமாய அடைந்து, பாப்மநா - பாபத்தோடே, அவித்யந் - சேர்த்தார்கள், ய: - யாதொரு உத்காதாவானவன், ஸபாப்மா - பாபத்தோடு கூடினனே, ஸ: - அந்த உத்காதா யதேவேதம் - யாதொரு இந்த, அப்ரதிரூபம் - தகாத வஸ்துவை, ஸங்கல்பயதி - எண்ணுகிறனே, ஸஏவ - அப்படிப்பட்டவன் தானே, ஸபாப்மா - பாபத்தோடு கூடினவன், ஏவம்-உ-கலு - இவ்வாறுதானே, ஏதா: - இந்த, தேவதா: - தேவதைகள், பாப்மபி: - பாபங்களோடு, உபாஸ்ருஜந் - சேர்ந்ததுகள், ஏவம் - இந்த விகாரம், ஏதா: - இந்தத் தேவதைகளை, பாப்மநா - பாபத்தோடு, அவித்யந் - சேர்த்தார்கள், சங்கர ராமாநுஜபாஷ்யம் முன்போலே.

அத² ஹேமமாஸந்யம் ப்ராணமூசுஸ்த்வம் ந உத்³கா³யேதி ததே²தி தேப்⁴ய ஏஷ ப்ராண உத³கா³யத்தே விது³ரநேந வை ந உத்³கா³த்ராத்யேஷ்யந்தீதி தமபி⁴த்³ருத்ய பாப்மநாவிவித்ஸந்ஸ யதா²ஶ்மாநம்ருத்வா லோஷ்டோ வித்⁴வம்ஸேதைவம் ஹைவ வித்⁴வம்ஸமாநா விஷ்வஞ்சோ விநேஶுஸ்ததோ தே³வா அப⁴வந்பராஸுரா ப⁴வத்யாத்மநா பராஸ்ய த்³விஷந்ப்⁴ராத்ருவ்யோ ப⁴வதி ய ஏவம் வேத³ ||கக||

(ப - ம்.) அத² - அதற்குப் பிற்பாடு, இமம் - இந்த, ஆஸந்யம் - முகத்திலிருக்கிற, ப்ராணம் - ப்ராணவாயுவை, த்வம் - நீ, ந꞉ - எங்களுக்கு, உத்³கா³ய - உத்காதாவின் வேலையைச் செய், இதி - என்று, ஊசு꞉ - சொன்னார்கள், ததா²இதி - அப்படி என்று, தேப்⁴ய꞉ - அந்தத் தேவர்களின் பொருட்டு, ஏஷ꞉ - இந்த, ப்ராண꞉ - ப்ராணனானது, உத³கா³யத் - பாடிற்று, தே - அந்த அசுரர்கள், அநேந வை - இந்த, உத்³கா³த்ரா - உத்காதாவினாலே, ந꞉ - நம்மை, அத்யேஷ்யந்தி - ஜெயிக்கப்போகிறார்கள், இதி - என்று, விது³꞉ - அறிந்தார்கள், தம் - அந்த உத்காதாவை, அபி⁴த்³ருத்ய - சீக்ரமாக அடைந்த, பாப்மநா - பாபத்தோடே, அவிவித்ஸந் - சேர்க்க ஆசைப்பட்டார்கள், ஸ꞉ - அது, யதா² - எப்படி, அஶ்மாநம் - கல்லை, ருத்வா - அடைந்து, லோஷ்ட꞉ - மண்ணுருண்டையானது, வித்⁴வம்ஸேத - நாசத்தையடையுமோ, ஏவம் - இந்த ப்ரகாரம், ஏவம் ஹைவ - இப்படித்தானே, வித்⁴வம்ஸமாநா꞉ - பொடியாக ஆகான்கொண்டு, விஷ்வஞ்ச꞉ - அநேகவிதமாக போகாநின்றுகொண்டு, விநேஶு꞉ - நாசமடைந்ததுகள், தத꞉ - அதற்குப் பிறகு, தே³வா꞉ - தேவர்கள், அப⁴வந் - ஜெயித்தவர்களாக ஆனார்கள், அஸுரா꞉ - அசுரர்கள், பராப⁴வந் - தோல்வியடைந்தார்கள், ய꞉ - எவன், ஏவம் - இந்த ப்ரகாரம், வேத³ - அறிகிறானோ, ஸ꞉ - அவன், ஆத்மநா - நல்ல மனதோடு, (ப்ராஜ்ஞ꞉ கூடினவனாக), ப⁴வதி - ஆகிறான், அஸ்ய - இவனுடைய, த்³விஷந் - த்வேஷம் பண்ணுகிற, ப்⁴ராத்ருவ்ய꞉ - சத்துருவானவனும், பாப்மா - பாபமும், பராப⁴வதி - தோல்வியடைகிறது.

(ஸம் - ஸா.) தேவர்கள் ப்ராணவாயுவுக்கபிமான தேவதையை உத்காதாவாக நியமித்து அதினால் சாஸ்த்ரத்தினாலுண்டான கர்மங்களும் ஞானங்களும் மேலிட்டு இந்த லோகத்தின் பயனைக் கொடுக்கத்தக்க அறிவுகளும் கர்மங்களும் குறைந்து தேவர்களாகவிருக்கையை அடைந்தார்கள். எவன் இதை அறிகிறானோ அவனுடைய பாபங்களும் சத்துருக்களும் ஒழிந்து ப்ரஜாபதி சுவரூபியாய் ஆய்விடுகிறான்.

(ஸா - ஸா.) தேவதைகள் உத்காதாவை ப்ராணவாயுவாகத் தியானம்பண்ணி அதனால் அசுரர்களை ஜெயித்துத் தாங்கள் வெற்றி யடைந்தார்கள். எவன் இப்படி அறிகிறானோ அவன் நல்ல மனதுடையவனாவன அவனுடைய சத்துருக்களும் பாபங்களும் ஒழிந்து விடுகின்றன.

தே ஹோசு꞉ க்வ நு ஸோ(அ)பூ⁴த்³யோ ந இத்த²மஸக்தேத்யயமாஸ்யே(அ)ந்தரிதி ஸோ(அ)யாஸ்ய ஆங்கி³ரஸோ(அ)ங்கா³நாம் ஹி ரஸ꞉ ||கஉ||

(ப் - ம்.) தே - அந்தத் தேவர்கள், (ஸம்) தே - ப்ரம்மாவின் இந்திரியங்கள், (ஹம்-ஊசு:) யம்-எந்த முக்யப்ராணனுனது, ந: - நம்மை, இத்தம்-இந்த ப்ரகாரம், ஸக்த - சத்துருஜயத்தோடே சேர்த்ததோ, (ஸம்) - தேவதையாயிருக்குகையோடே சேர்த்ததோ, ஸ: - அந்த முக்யப்ராணனுனது, க்வநு-எந்த இடத்தில், அபூத் - இருந்தது, இதி - என்று, ஹ-ஊசு:- சொன்னூர்கள், அயம் - இந்த ப்ராணனுனது, ஆஸ்யே - முகத்தில், அந்த: - உள்ளே, இதி - என்று பார்க்கப்பட்ட, ஸ: - அந்த ப்ராணன், அயாஸ்ய:- அயாஸ்யனென்று பேர்கொண்டவன், ஆங்கிரஸ: - ஆங்கிரஸனென்று பெயர்கொண்டவன், ஹி - யாதொரு காரணத்தினுலே, அங்காநாம் - அங்கங்களுக்கு, ரஸ: - உயர்ந்தவனே,

(ஸம - ரா - ஸா.) அந்தத் தேவதைகள் நமக்குச் சத்துருஜயத்தைக் கொத்தமுக்ய ப்ராணன் எங்கே இருக்கிருன் என்று சொல்லி முகத்துக்குள்ளே பார்த்தார்கள். ஆகையால் அயாஸ்யனென்றும் அங்கங்களுக்கெல்லாம் உயர்ந்தவனுதலால் ஆங்கிரஸனென்றும் பேசப்படுகிறது.

ஸாவாஏஷாதேவதாதூர்நாமதூரம் ஹ்யஸ்யாம்ருத்யுர்தூரம்ஹவா அஸ்மாந்ம்ருத்யுர்பவதிய ஏவம் வேத || கஅ ||

(ப் - ம.) ஸா-வா ஏஷா - மேற்கூறிய இந்த, தேவதா - ப்ராணதேவதையானது, தூர்நாம - தூ ரென்று பெயர் பெற்றது, அஸ்யா: - இந்தத் தேவதைக்கு, ம்ருத்யு: - பாவமானது, தூரம்ஹி - வெகுதூரத்திலிருக்கிறதன்றே, ய: - எவன், ஏவம் - இந்த ப்ரகாரம, வேத - அறிகிருனே, அஸ்மாத் - இவனிடத்திலிருந்தும் ம்ருத்யு: - பாவமானது, தூரம் ஹ-வா-பவதி - தூரத்திலிருப்பதாக ஆய்விக்கிறது.

(ஸம - ஸா.) முக்யப்ராணன் எவ்விதமாய்ச் சுத்தமாயிருக்கும் வாக் முதலிய இந்திரியங்களுக்குப் பாபத்தோடு சம்பந்தம் சொல்லி ப்ராணனுக்குச் சொல்லாமையாலேயே இது சுத்தமென்று ஏற்படவில்லையோவெனில் வாக் முதலான இந்திரியங்களுக்கு ஆத்மாவாயிருக்கையால் அதின் வழியாய் இதற்குப் பாபசம்பந்தம் வரக்கூடுமே என்கிற ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் சொல்லப்படுகிறது.யாதொரு ப்ராணனை அடைந்து கல்லையடைந்த மண்ணுண்டைபோல் அசுரர்கள் நாசமடைந்தார்களோ, அந்த ப்ராணதேவதைக்குத் தூர் என்கிற பெயர் ப்ரசித்தமாதலாலும் ஒட்டும் தன்மை யில்லாமையாலும் வாக் முதலான இந்திரியங்கள் வழியாய்ப் பாபங்கள் கிட்டினுலும் ப்ராணதேவதைக்குத் தூரத்திலேதான் இருக்கிறது என்று கருத்து.

(ரா - ஸா.) பதார்த்தம்போலே கருத்து.

ஸாவாஏஷாதேவதைதாஸாம்தேவதாநாம்பாப்மாநம்ம்ருத்யும் அபஹத்ய யத்ராஸாம் திஸாமந்தஸ்தத்கமயாஞ்சகார ததாஸாம் பாப்மநோவிந்யதாத் | தஸ்மாந்ந ஜநமியாந்நாந்தமியாத் | நேத்பாப்மாநம்ம்ருத்யுமந்வவாயாநீதி || கக ||

(ப் - ம.) ஸா-வா-ஏஷா - மேற்கூறிய இந்த, தேவதா - ப்ராணதேவதையானது, ஏதாஸாம் - இந்த, தேவதாநாம் - வாக் முதலான தேவதைகளுடைய, பாப்மாநம் - பாபமாகிற, ம்ருத்யும் - ம்ருத்துவை, அப

ஊதந் - நீக்கி, யத்ர - எவ்விடத்தில், ஆஸாம் - இந்த, திஶாம் - திக்குக்களுடைய, அந்த: - முடிவோ, தத் - அந்த இடத்தை, கமயாம்சகார - அடைவித்தது, ஆஸாம் - இந்தத் தேவதைகளுடைய, பாப்மந: - பாபங்களை, தத் - அவ்விடத்தில், விந்யதாத் - விசேஷித்து வைத்தது, தஸ்மாத் - ஆதலால், (தத்ர - அவ்விடத்தில்) ஜநம் - பிறப்பை, ந இயாத் - அடையக்கூடாது, அந்தம் - மரணத்தை, ந இயாத் - அடையக்கூடாது, (ஸம்) ஜநம் - அந்தப் பாவத்துக்கு ஆதாரமான ஜநத்தை, ந இயாத் - சேரக்கூடாது, அந்தம் - அவர்களிருக்குமிடத்தை, ந இயாத் - சேரக்கூடாது, பாப்மாநம் - பாபமாகிற, ம்ருத்யும் - மிருத்துவை, அந்வவாயாநி - அடையக்கடவேன் அன்று, இதி - என்கிற எண்ணத்தினாலே, (ஸம்) (அந்வவாயாநி - அடைந்து விடுவேன், இதி - என்கிற, நேத் - பயத்தினாலே) ஜநம் என்கிறதோடு சேர்த்துக்கொள்க.

(ஸ - ரா - ஹா.) தா என்று பெயர்கொண்ட முக்யப்ராணனென்கிற தேவதையானது வாக் முதலான தேவதைகளின் அசுரர்களாலே சேர்க்கப்பட்ட மேற்கூறிய பொய் முதலான பாபங்களை நீக்கித் திக்கோடிகளில் வைத்து விட்டது. ஆகையால் பாவத்தை யடையக்கூடாதென்கிற எண்ணத்தினால் அந்த இடங்களில் பிறப்பு மரணம் இவைகளை அடையாமலிருக்கவேண்டிய ப்ரயத்தனத்தைச் செய்யவேண்டியது.

ஸாவா ஏஷா தேவதைதாஸாம் தேவதாநாம் பாப்மாநம் ம்ருத்யுமபஹத்ய அதைநா ம்ருத்யுமத்யவஹத் ||௨௰||

(ப - ம்.) ஸாவா ஏஷா - அந்த இந்த, தேவதா - ப்ராணதேவதையானது, ஏதாஸாம் - இந்த, தேவதாநாம் - வாக் முதலான தேவதைகளுடைய, பாப்மாநம் - பாபமாகிற, ம்ருத்யும் - மிருத்துவை, அபஹத்ய - நீக்கி, அத - பிறகு, ஏநா:- இந்த வாக் முதலான தேவதைகளை, ம்ருத்யும் அத்யவஹத் - மிருத்துவைத்தாண்ட அடைவித்தது. அதாவது பாவத்தை நீங்கின தங்கள் தன்மையை யடைவித்தது.

(ஸ - ரா - ஹா.) பதார்த்தம் போலவே இரண்டு பாஷ்யமும்.

ஸவை வாசமேவ ப்ரதமாமத்யவஹத் | ஸா யதா ம்ருத்யுமத்யமுச்யத ஸோ அக்நிரபவத் | ஸோயமக்நி: பரேண ம்ருத்யுமதிக்ராந்தோ தீப்யதே ||

(ப - ம்.) ஸவை - அந்த ப்ராணனானது, ப்ரதமாம் - முதன்மையான, வாசமேவ - வாக்கைத்தானே, அத்யவஹத் - தாண்டி வைத்தது, ஸா - அந்த வாக்கானது, யதா - எக்காலத்திலும், ம்ருத்யும் - பாபத்தை, அத்யமுச்யத - விடுவிக்கப்பட்டதோ, ஸ: - அந்த வாக்கானது, அக்நி: - அக்நியாக, அபவத் - ஆய்விட்டது, ஸோயம் - அந்த இந்த, அதிக்ராந்த: - தாண்டியிருக்கிற, அக்நி: - அக்நியானது, ம்ருத்யும் பரேண - மிருத்யுவுக்கு மேலே, தீப்யதே - ப்ரகாசிக்கிறது.

(ஸ - ரா - ஹா.) பாபத்தில் நின்றும் விடுவிக்கப்பட்ட வாக்கானது அக்நியாயிருந்தது. (அதாவது) எப்பொழுதும் வாக்குக்கு அபிமானிதேவதை அக்நியாயிருந்தபோதி

னும் பாபம் நீங்கினபடியால், 'அத்யராமஸ்யராமத்வம்' என்கிறதுபோல பாபத்தை நீங்கிப் ப்ரகாசிக்கிறது என்று கருத்து.

𑌅𑌥 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍 । 𑌸 𑌯𑌦𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 । 𑌸 𑌵𑌾𑌯𑍁𑌰𑌭𑌵𑌤𑍍 । 𑌸𑍋𑌽𑌯𑌂 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌪𑌰𑍇𑌣 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌃 𑌪𑌵𑌤𑍇 ॥௨௨॥

(ப - ம்.) 𑌅𑌥 - பிறகு, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 - மூக்கை, 𑌅𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍 - தாண்டிவைத்தது, 𑌸𑌃 - அந்த மூக்கானது, 𑌯𑌦𑌾 - எந்தக் காலத்தில், 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 - பாபத்திலிருந்து, 𑌅𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 - விடுவிக்கப்பட்டதோ, 𑌸𑌃 - அதுவானது, 𑌵𑌾𑌯𑍁𑌃 - வாயுவாக, 𑌅𑌭𑌵𑌤𑍍 - ஆயிற்று, 𑌸𑍋𑌽𑌯𑌂 - அந்த இந்த, 𑌵𑌾𑌯𑍁𑌃 - வாயுவானது, 𑌅𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌃 - தாண்டினதாக, 𑌪𑌰𑍇𑌣 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 - மிருத்துவுக்குமேலே, 𑌪𑌵𑌤𑍇 - வீசுகிறது.

(𑌶𑌂 - 𑌰𑌾 - 𑌹𑌾.) பதார்த்தம்போலே இரண்டு பாஷ்யக் கருத்தும்.

𑌅𑌥 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍𑌤𑌦𑍍𑌯𑌦𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 । 𑌸 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯 𑌅𑌭𑌵𑌤𑍍 । 𑌸𑍋𑌽𑌸𑌾𑌵𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 𑌪𑌰𑍇𑌣 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌪𑌤𑌿 ॥௨௩॥

(ப - ம்.) 𑌅𑌥 - பிறகு, 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 - கண்ணை, 𑌅𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍 - தாண்டிவைத்தது, 𑌤𑌤𑍍 - அந்தக் கண்ணானது, 𑌯𑌦𑌾 - எந்தக் காலத்தில், 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 - மிருத்துவிலிருந்து, 𑌅𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 - விடுவிக்கப்பட்டதோ, 𑌸𑌃 - அதுவானது, 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 - சூரியனாக, 𑌅𑌭𑌵𑌤𑍍 - ஆயிற்று, 𑌸𑍋𑌽𑌸𑍌 - அந்த இந்த, 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 - சூரியனானவன் 𑌅𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌃 - தாண்டினவனாக, 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂𑌪𑌰𑍇𑌣 - மிருத்துவுக்குமேலே, 𑌤𑌪𑌤𑌿 - காய்கிறான்.

(𑌶𑌂 - 𑌰𑌾 - 𑌹𑌾.) பதார்த்தம்போலே இரண்டு பாஷ்யமும்.

𑌅𑌥 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍 । 𑌤𑌦𑍍𑌯𑌦𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 𑌤𑌾 𑌦𑌿𑌶𑍋𑌽𑌭𑌵𑌂𑌸𑍍𑌤𑌾 𑌇𑌮𑌾 𑌦𑌿𑌶𑌃 𑌪𑌰𑍇𑌣 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 ॥௨௪॥

(ப - ம்.) 𑌅𑌥 - பிறகு, 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 - காதை, 𑌅𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍 - தாண்டிவைத்தது, 𑌤𑌤𑍍 - அந்தக் காதானது, 𑌯𑌦𑌾 - எந்தக் காலத்தில், 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 - மிருத்துவிலிருந்து, 𑌅𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 - விடுவிக்கப்பட்டதோ, 𑌤𑌾𑌃 - அவைகளே, 𑌦𑌿𑌶𑌃 - திக்தேவதைகளாக, 𑌅𑌭𑌵𑌨𑍍 - ஆயின, 𑌤𑌾 𑌇𑌮𑌾𑌃 - அந்த இந்த, 𑌦𑌿𑌶𑌃 - திக்தேவதைகள், 𑌅𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 - தாண்டினவைகளாக, 𑌪𑌰𑍇𑌣 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 - மிருத்துவுக்குமேலே, (𑌸𑌨𑍍𑌤𑌿) ப்ரகாசிக்கின்றன.

(𑌶𑌂 - 𑌰𑌾 - 𑌹𑌾.) பதார்த்தம்போலே இரண்டு பாஷ்யமும்.

𑌅𑌥 𑌮𑌨𑍋𑌽𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍 । 𑌤𑌦𑍍𑌯𑌦𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 । 𑌸 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾 𑌅𑌭𑌵𑌤𑍍 । 𑌸𑍋𑌽𑌸𑍌 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌪𑌰𑍇𑌣 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍋 𑌭𑌾𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌹 𑌵𑌾 𑌏𑌨𑌮𑍇𑌷𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑌿𑌵𑌹𑌤𑌿 𑌯 𑌏𑌵𑌂 𑌵𑍇𑌦 ॥௨௫॥

(ப - ம்.) 𑌅𑌥 - பிறகு, 𑌮𑌨𑌃 - மனதை, 𑌅𑌤𑍍𑌯𑌵𑌹𑌤𑍍 - தாண்டிவைத்தது, 𑌤𑌤𑍍 - அந்த மனதானது, 𑌯𑌦𑌾 - எந்த காலத்தில், 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 - மிருத்துவில் நின்றும், 𑌅𑌤𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤 - விடுவிக்கப்பட்டதோ, 𑌸𑌃 - அதுவானது,

அன்னேந - ப்ராணனாலே, அத்தி - சாப்பிடுகிறானோ, தேந - அந்த அன்னத்தினாலே, ஏதா: - இந்த வாக் முதலான தேவதைகள், த்ருப்யந்தி - திருப்தி அடைகிறார்கள். ய: - எவன், ஏவம் - இந்த ப்ரகாரம், வேத - அறிகிறானோ, ஏநம் - இவனை, ஏவம்ஸ்வா - இந்த ப்ரகாரம், ஸ்வா: - பந்து ஜநங்கள், அபிஸம்விசந்தி - சூழ்ந்து உட்காருகிறார்கள், ஸ்வாநாம்-பந்து ஜநங்களுக்கு, பர்த்தா - ரக்ஷிக்கிறவனாகவும், ச்ரேஷ்ட:-உயர்ந்தவனாகவும், புரஏதா - முன் சொல்லுகிறவனாகவும், அன்னாத:-அன்னத்தைச் சாப்பிடுகிறவனாகவும், அதிபதி: - யஜமானனாகவும், பவதி - ஆகிறான், ய-உ-ஹ - எவன், ஸ்வேஷு - பந்து ஜனங்களுக்குள், ஏவம்விதம் - இப்படித் தியானம் செய்கிறவனைக் குறித்து, ப்ரதிப்ரதி: சத்ருநவாச,புபூஷதி - ஆகவேண்டுமென்று இச்சிக்கிறானோ, ஸ: - அவன், பார்ய்யேப்ய: - தன்னால் காப்பாற்றக் கூடிய பத்நி பிள்ளைகள் முதலியவர்களுக்கு, அலம் - போதுமானவனாக, நஹைவ-பவதி - ஆகிறானில்லை அதாவது அவர்களைக் காப்பாற்றச் சக்தியற்றவனாகிறான், அத - பிறகு, யோவா - எவன் தானே, ஏதம் - இப்படி அறிபுகிறவனை, அநுபவதி - அநுஸரித்திருக்கிறானோ, யோவா - எவன் தான், ஏதமநு - இவனை அநுஸரித்து, பார்ய்யாந் - தன்னால் காப்பாற்றக் கூடிய பத்நி பிள்ளைகள் முதலியவர்களை, புபூஷதி - காப்பாற்ற இச்சிக்கிறானோ, ஸஹைவ - அவன்தானே, பார்ய்யேப்ய: - தன்னால் காப்பாற்றக்கூடிய பத்நி பிள்ளைகள் முதலியவர்களின் பொருட்டு, அலம் - போதுமானவனாக, பவதி - ஆகிறான் அதாவது அவர்களைக் காப்பாற்றப் போதுமான சக்தியுள்ளவனாகிறான்.

(ரம - ரா - ஹா.) பதார்த்தம்போலவே இரண்டு பாஷ்யமும்.

ஸோயாஸ்ய ஆங்கிரஸோங்காநாம் ஹிரஸ:ப்ராணோவாஅங்காநா ம்ரஸ: ப்ராணோஹிவாஅங்காநாம் ரஸஸ்தஸ்மாத்யஸ்மாத்கஸ்மாச்சாங்காத் ப்ராண உத்க்ராமதி ததேவ தச்சுஷ்யத்யேஷஹிவாஅங்காநாம்ரஸ: ||

(ப - ம்.) ஸ: - அந்த ப்ராணன், அயாஸ்ய:-அயாஸ்யன் என்கிற பெயர்கொண்டவன், ஆங்கிரஸ: - ஆங்கிரஸனென்கிற பெயர்கொண்டவன், அங்காநாம் - அவயவங்களுக்கு, ரஸோஹி - ஸாரமன்றோ, ப்ராணோவா - ப்ராணன்தானே, அங்காநாம் - அவயவங்களுக்கு, ஸார: - சாரம், ஹி - யாதொரு காரணத்தாலே, ப்ராணோவா - ப்ராணன்தானே, அங்காநாம் - அவயவங்களுக்கு, ரஸ: - சாரமோ, தஸ்மாத் - ஆகையாலே, யஸ்மாத்-கஸ்மாத்-ச - எந்த ஒரு, அங்காத் - அவயவத்தில் நின்றும், ப்ராண: - ப்ராணனானது, உத்க்ராமதி - உயரக்கிளம்புகிறதோ, ததேவ-அப்பொழுது தானே, தத் - அந்த அங்கமானது, சுஷ்யதி-உலர்ந்துபோகிறது, ஏஷஹிவா-இந்த ப்ராணன்தானே, அங்காநாம்-அவயவங்களுக்கு, ரஸ:-ஸாரம்.

(ஶ்ரீ - ரங்க - பா.) முன்கூறிய அயாஸ்யத்வாங்கிரஸத்வங்களையே அதற்குரியக் காரணங்களால் ஸ்தாபிக்கிறது. ப்ராணன் எந்த அங்கத்தை விடுகிறதோ அந்த அவயவம் உலர்ந்துபோகிறபடியால் ப்ராணனே அவயவங்களுக்கு ஸாரம் ஆகையால் ஆங்கிரஸன் என்கிற பெயர் உண்டாயிற்று.

ஏஷ உ ஏவ ப்³ருஹஸ்பதிர்வாக்³வை ப்³ருஹதீ தஸ்யா ஏஷ பதிஸ்தஸ்மாது³ ப்³ருஹஸ்பதி: ||௨௰||

(ப் - ம்.) ஏஷ:-உ-ஏவ - இந்த ப்ராணன்தானே, ப்³ருஹஸ்பதி: - பிருகஸ்பதியென்று பெயர்கொண்டது, வாக்³வை - வாக்தானே, ப்³ருஹதீ - பிருகதீ யென்று பெயர்கொண்டது, தஸ்யா: - அந்த வாக்குக்கு, ஏஷ: - இந்த ப்ராணனுனது, பதி: - காப்பாற்றுகிறவன், தஸ்மாது³ - ஆகையால் தான், ப்³ருஹஸ்பதி: - பிருகஸ்பதியென்று பெயர் கொண்டவன்.

(ஶ்ரீ - ரங்க - பா.) அவயவங்களுக்கு ஆத்மா என்கிறதுடன் ருக் யஜுஸ் ஸாம என்கிற மூன்று வேதங்களுக்கும் ஆத்மாவென்று ப்ராணனை ஸ்தோத்திரம் பண்ணுகிறது. பிருகதீ யென்கிற சந்தஸ்ஸில் அடங்கின ஸர்வ ருக்குக்களும் வாக் ரூபமாகையாலேயும் வாக்கும் ப்ராணாதீனமாகையாலும் அந்தப் பிருகதீ ரூபமான வாக்கைக் காப்பாற்றுகையாலே பிருகஸ்பதியென்று ப்ராணனைச் சொல்லப்பட்டது.

ஏஷ உ ஏவ ப்³ரஹ்மணஸ்பதிர்வாக்³வை ப்³ரஹ்ம தஸ்யா ஏஷ பதிஸ்தஸ்மாது³ ப்³ரஹ்மணஸ்பதி: ||௨௧||

(ப் - ம்.) ஏஷ:-உ-ஏவ - இந்த ப்ராணன்தானே, ப்³ரஹ்மணஸ்பதி: - ப்ரம்மணஸ்பதியென்று பெயர் கொண்டவன், வாக்³வை - வாக்தானே, ப்³ரஹ்ம - வேதம், தஸ்யா: - அந்த வேதரூபமான வாக்குக்கு, ஏஷ: - இந்த ப்ராணனுனது, பதி: - காப்பாற்றுகிறவன், தஸ்மாது³ - ஆகையால் தான், ப்³ரஹ்மணஸ்பதி: - ப்ரம்மணஸ்பதியென்று பெயர் பெற்றவர்.

(ஶ்ரீ - ரங்க - பா.) ப்ரம்மாவென்று சொல்லப்பட்ட யஜுர்வேத ரூபமான வாக்குக்குப் பதியாகையாலே ப்ராணனை ப்ரம்மணஸ்பதியென்று சொல்லப்பட்டது. இங்கு பிருகதீ யென்றும் ப்ரம்மமென்றும் பொதுவாகப் பேசப்பட்ட பதங்களால் மேல் ப்ராம்மணத்தில் ஸாமரூபமான வாக்கை யெடுத்துச் சொன்னபடியால் மிகுதியாக வாக் ரூபமான ருக்கும் யஜுஸ்ஸும் எடுத்துக்கொள்ளப்படுகிறது.

(ரங்க - பா.) ப்ரம்ம என்கிற பதத்தால் வேதத்தைப் பேசி வேதரூபமான வாக்குக்குப் பதியாகையால் ப்ராணனை ப்ரம்மணஸ்பதியென்று பேசப்பட்டது.

ஏஷ உ ஏவ ஸாம | வாக்³வை ஸாமைஷ ஸா சாமஶ்சேதி தத்ஸாம்ந: ஸாமத்வம் | யத்³வேவ ஸம: ப்லுஷிணா ஸமோ மஶகேந ஸமோ நாகே³ந ஸம ஏபி⁴ஸ்த்ரிபி⁴ர்லோகை: ஸமோ(அ)நேந ஸர்வேண தஸ்மாத்³வேவ ஸாமாஶ்நுதே ஸாம்ந: ஸாயுஜ்யꣳ ஸலோகதாம் ய ஏவமேதத்ஸாம வேத³ ||௨௨||

(ப் - ம்.) ஏஷ:-உ-ஏவ - இந்த ப்ராணன்தானே, ஸாம - ஸாமவேதரூபம், வாக்³வை - வாக்குத்தானே, ஸா - ஸ்த்ரீலிங்கத்தால் அறியத்தகுந்தது, அம: - புல்லிங்கத்தால் அறியத்தகுந்தது, ஏஷ: - இந்த ப்ராணன், (ஸ) ஸா - சர்வநாமமென்று எல்லாப் பொருளுக்கும் பெயரான சப்தத்தால் சொல்லுகையாலும் ஸ்த்ரீலிங்கத்தால் சொல்லுகையாலும் வாக்கைச்

சொல்லுகிறது, கஃஃ - சொல்லத் தகுந்த வஸ்துவைச் சொல்லுகிற அமஎன்கிறது. இங்கு ப்ராணனைச் சொல்லுகிறது, ஸாவ் அந்த வாக்கும், அமஃ- ப்ராணனும், ஊதி - என்று சேர்க்கப்பட்டு, ஸாஃ-(ஸாமம் என்னப்பட்டது), தஸ் - ஆகையாலே, ஸாஃஃ - ப்ராணனாலே ப்ரயோகிக்கப்பட்ட ஸ்வாக்கூட்டமான ஸாமத்திற்கு, ஸாஃஃவ - ஸாமமென்கிற பெயர், யஃஉ-வனவ - யாதொரு காரணத்தினாலேதான், ஹூஷிணா - எறும்பினோடும், ஸஃஃ - துல்யமனோ, ஃஸகெந - கொசுவோடு, ஸஃஃ - துல்யனோ, நாகெந - யானையோடு, ஸஃஃ - துல்யனோ, வனஃஃ - இந்த, த்ரிஃஃ-மூன்றுகளான, லோகெஃஃ - உலகங்களோடு, ஸஃஃ - துல்யனோ, கெநந - இந்த, ஸவெ-ணை-சகல வஸ்துக்களோடும், ஸஃஃ - துல்யனோ, தஸஃ-உ-வனவ- ஆகையாலேதான், ஸாஃ-ஸாமமென்றுபெயர்பெற்றது, யஃ - யாதொருவன், வனதஸ - இந்த, ஸாஃ - ஸாமமென்று பெயர்கொண்ட ப்ராணனை, வனவம் - இந்த ப்ரகாரம், வெஜ-தியானம் பண்ணுகிறானோ,(ஸஃ - அவன்), கஃஃ-தெ- வியாபரித்திருக்கிறான், ஸாஃஃ - ஸாமமென்று சொல்லப்பட்ட ப்ராணதேவதையினுடைய, ஸாயஃஜ்யம் - சமான போகத்தையும், ஸலொகதாம் - சமான உலகத்தையும், ஜயதி - ஜயிக்கிறான் அதாவது அடைகிறான், (ருo) ஸாஃஃ - ஸாமரூபியான ப்ராணதேவதைக்கு, ஸாயஃஜ்யம் - ஸமானபோகத்தை, கஃஃ-தெ - அனுபவிக்கிறான், ஸலொகதாம் - ஸமான உலகத்தை, ஜயதி - ஜயிக்கிறான் அதாவது அடைகிறான்.

(ஸo - ரா - ஸூ.) ஸ்வர்ணங்களின் கூட்டமாகிய ஸாமவேதமும் ப்ராணனாலேயே சொல்லப்படுதலாலும் எறும்பு முதலான சகல சிறிய பெரிய உருக்களிலும் பசு முதலியவத்தில் கோத்வம் முதலிய ஜாதிகள்போல் வியாபரித்துச் சமமாயிருத்தலாலும் ப்ராணனானது ஸாமமென்று சொல்லப்பட்டது. யாதொருவன் இந்த ப்ராணனை இவ்விதமான உருவத்தோடு தியானம் செய்கிறானோ அவன் அந்தத் தேவதையோடு சமானபோகத்தையும் அத்தேவதையினுடைய உலகத்தையும் அடைவன்.

வனஷஉவாஉத்கீயஃப்ராணொவாஉத்ப்ராணெநஹீஃஇஃஸவஃஉத்தப்யம்
வாஃமெவகீயொவாக்கீயாவெதிஸஉத்கீயஃ ||கூஉ||

(ப் - ம்.) வனஷஃ-உ-வா - இந்த ப்ராணனும், உத்கீயஃ - ஸாமத்தினுடைய ஒருபாகமான உத்கீதம் என்று சொல்லப்பட்டது, ப்ராணொவா - ப்ராணன் தானே, உஸ் - உத் என்கிற பெயர் பெற்றது, ஹி - யாதொரு காரணத்தால், ஊஃம் - இந்த, ஸவஃம் - சகல ஜகத்தும். ப்ராணெந - ப்ராணனாலே, உத்தப்யம் - தரிக்கப்பட்டதோ. வாஃமெவ - வாக்குத்தானே, கீயா- காநத்தைச் சொல்லும் கிதா சப்தத்தால் சொல்லப்பட்டது, உஸ்வ - உத் என்று சொல்லப்பட்ட ப்ராணனும், கீயாவ கீதை என்று சொல்லப்பட்ட ப்ராணனுக்கு வசமான வாக்கும், ஊதி - என்கிற இரண்டும் சேர்ந்து சொல்லப்படும், ஸஃ - அந்த ப்ராணனனது, உத்கீயஃ - உத்கீதமென்று சொல்லப்பட்டது.

